# சேதன் பகத்

# அறை எண் 105ல் ஒரு பெண்

இது ஒரு காதல் கதை அல்ல

தமிழில்: மீரா ரவிசங்கர்

# அறை எண் 105ல் ஒரு பெண்

சேதன் பகத் எட்டு பிரபல நாவல்களை எழுதிய எழுத்தாளர். இவர் புத்தகங்கள் பனிரெண்டு லட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகியுள்ளன. இருபதுக்கும் மேற்பட்ட உலக மொழிகளில் மொழிபெயர்பாகியுள்ளன.

‘இந்திய வரலாற்றிலயே அதிக விற்பனையான எழுத்தாளர்,’ என்று நியூயார்க் டைம்ஸ் கூறுகிறது. உலகில் அதிக செல்வாக்கு உள்ள நூறு நபர்களில் இவரும் ஒருவர் என்று டைம் பத்திரிகை கூறுகிறது. தங்கள் வர்த்தகத்தில், உலகிலயே, படைப்புத்தன்மை அதிகம் கொண்ட 100 நபர்களில் இவரும் ஒருவர் என்று பாஸ்ட் கம்பெனி, யு எஸ் ஏ கூறுகிறது.

இவருடைய பல புத்தகங்கள், பாலிவுட்டில் படமாக்கப்பட்டு, பிளாக் பஸ்டர்களாகி இருக்கின்றன. திரைக்கதைக்காக ஃபிலிம் ஃபேர் விருதைப் பெற்றவர்.

**‘**தைனிக் பாஸ்கர்**’** மற்றும் ‘டைம்ஸ் ஆப் இந்தியா,’ போன்ற நாடு தழுவிய பிரபல மற்றும் தாக்கத்தை ஏற்படுத்திய பத்திரிகைகளில் கட்டுரையாளராகவும் சேதன் இருக்கிறார். ஊக்கம் மற்றும் உற்சாகம் அளிக்கும் பேச்சாளராகவும் விளங்குகிறார்.

இவர் படித்தது ஐஐடி டெல்லி மற்றும் ஐஐஎம் ஆமதாபாத்; பத்தாண்டுகள் வங்கி முதலீட்டில் வேலை செய்துவிட்டு, பிறகு முழு நேர எழுத்தாளராக மாறிவிட்டார்.

விடாமுயற்சி கொண்டவர்களுக்கு
மற்றும்
என்னைப் போல், காதலிலிருந்து விலகாமல்
இருப்பவர்களுக்கும்

# ஒப்புதல் மற்றும் வாசகர்களுக்கான குறிப்பு

**ஹாய்,**

நன்றி!

முகநூல், இன்ஸ்டாக்ராம், ட்விட்டர் காலத்தில் இந்த புத்தகத்தை எடுத்ததற்கு, குறிப்பாக என் புத்தகத்தை எடுத்ததற்கு நன்றி!

எந்தப் புத்தகமும் ஒரு தனியாளின் முயற்சி அல்ல. இந்த புத்தகத்திற்காகவும் நான் நிறைய பேருக்கு நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன்.

என் வாசகர்களுக்கு, தொடர்ந்து என் புத்தகங்களைப் படித்துவிட்டு எனக்கு உற்சாகமும் ஊக்கமும் அளிப்பதற்காக. உங்கள் அன்பு என் கவலைகளிலிருந்து என்னை மீட்டு உங்களுக்குப் புது கதைகள் சொல்ல என்னைத் தூண்டுகிறது.

ஷைனி அந்தோனி, என் புத்தகத்தின் பதிப்பாசிரியர், என் தோழி, என் புத்தகங்களின் முதல் வாசகி --- உன் ஈடு இணையற்ற உதவிக்கு நன்றி.

கைப்பிரதியைப் படித்துவிட்டு தங்கள் எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டவர்கள்: (ஆங்கில அகர வரிசையில்) ஆமீர் ஜைபுரி, அனுஷா பகத், ஆயிஷா ராவல், பக்தி பட், குஷான் பாரிக், மான்சி இஷான்ஷா, மிஷேல் ஷெட்டி, பிரதீக் தாவன் மற்றும் ஜிதின் தாவன்உங்கள் உதவிக்கும், கருத்துகளுக்கும் நன்றி.

மோஹித் சூரி, விக்ராந்த் மாசி, கஷ்மிரா இரானி, சங்கல்ப் சாதனா, அன்ஷுல் உப்பல், மற்றும் சித்தார்த் அதா, உங்கள் நட்புக்கும் இந்த புத்தகத்தை ஆதரித்ததுக்கும்.

வெஸ்ட்லாந்து பதிப்பகத்தாருக்கும், அவர்களின் உதவி ஆசிரியர்கள் குழுவுக்கும், இந்த புத்தகத்தை மெருகேற்ற அவர்கள் எடுத்த முயற்சிக்கும்.

விற்பனை மற்றும் தயாரிப்பு வேலைகளில் முழுமையாகவும் மும்முரமாகவும் இறங்கிய அமேசான் மற்றும் வெஸ்ட்லாந்து

நிறுவனத்துக்கும்.

என் புத்தகத்தை வாசகர் கைகளில் கொண்டு சேர்த்த ஆன்லைன் பசங்களுக்கும், பெண்களுக்கும்.

என் விமர்சகர்கள். நான் வளர்வதற்கும், மேன்மை அடைவதற்கும், பணிவாக இருப்பதற்கும் உதவுபவர்கள். நான் நேர்த்தியானவன் கிடையாது. நான் எப்பொழுதும் திருத்தமானவற்றைத் தான் சொல்வேன் என்றும் கூற முடியாது. கடின உழைப்போடு மேலும் சிறப்பிப்பேன். என்னுடன் எப்பொழுதும் ஒத்துப்போகாதவர்களின் கருத்துகளையும் நான் மதிக்கிறேன். நான் சொல்ல விரும்புவதெல்லாம், நம் வேற்றுமைகளை ஒதுக்கிவிட்டு, வாசகர்களைப் படிக்க வைக்கும் முயற்சியில் ஈடுபடுவோம். அது தான் முக்கியமான அவசியம்.

என் குடும்பம்-என் வாழ்க்கைக்குத் தூண் போன்ற ஆதரவு. என் அம்மா ரேகா பகத், என் மனைவி அனுஷா பகத், என் குழந்தைகள் ஷ்யாம் மற்றும் இஷான். எனக்குப் பக்கபலமாகக் கூட நின்றதற்கு நன்றி.

நாம் அன்பைக் கொண்டாடுபவர்கள். சிலசமயம் நாம் அன்பிலிருந்து விலகியும் இருக்கவேண்டும்.

இதுபோதும். அறை எண் 105ல் வசிக்கும் பெண்ணைச் சந்திக்கும் நேரம் வந்துவிட்டது.

# முன்னுரை

இண்டிகோ விமானம் உள்ளே - *6E 766* ஹைதராபாத் - டெல்லி

‘இருக்கை பெல்ட்டுகளைக் கட்டிக் கொள்ளுங்கள். ஒரு காற்றுக் கொந்தளிப்பைக் கடந்து செல்கிறோம்,’ என்று விமானப் பணிப்பெண் அறிவித்தாள்.

கண்களை மூடி பெல்ட்டைத் துழாவினேன். கிடைக்கவில்லை.

‘பெல்ட்டை அணியுங்கள், ஸார்,’ என்று பணிப்பெண் என்னைத் தனிப்பட்ட முறையில் நினைவுபடுத்தினாள். சொல்லும் அறிவுறுத்தல்களைப் புரிந்து கொள்ளாத மடசாம்பிராணியைப் பார்ப்பது போல் பார்த்தாள்.

‘மன்னித்து விடுங்கள்,’ என்றேன். பெல்ட்டின் மறுமுனை எங்கே*?* தூக்கம் இல்லாததால் தலைவலி மண்டையைப் பிளந்தது.

நாள் முழுவதையும் ஹைதராபாத்தில் ஒரு கல்வி மாநாட்டில் செலவழித்துவிட்டேன். நள்ளிரவு விமானம் பிடித்து டெல்லி விரைந்தேன்.

அடச்சே*!* இந்தப் பாழாப் போன பெல்ட்டின் முனை தான் எங்கே*?*

‘பெல்ட்டின் மீது அமர்ந்து கொண்டிருக்கிறீர்கள்,’ என்று அருகில் அமர்ந்திருந்த பயணி கூறினான்.

‘என்ன ஒரு மடத்தனம்*!*’ என்று கூறி ஒருவழியாக என் பெல்ட்டை அணிந்து கொண்டேன். என் கண்களைத் திறக்கவே முடியவில்லை.

‘கடினமான பயணம், இல்லையா*?*’ என்றான் பிரயாணி.

‘எதுவும் சொல்லாதே,’ என்றேன். ‘எனக்கு ஒரு காபி குடிக்கணும்.’

‘இப்பொழுது கொடுக்க மாட்டார்கள் - கொந்தளிப்பு இல்லையா*?*’ என்றான். ‘ஏதேனும் விசேஷத்துக்குச் செல்கிறீர்களா*?*’

‘விழாவிலிருந்து திரும்புகிறேன்,’ என்றேன் வியந்தபடி. இவனுக்கு எப்படித் தெரிந்தது?

‘மன்னிக்கவும். உங்கள் போர்டிங் பாஸைப் பார்த்தேன். ‘சேதன் பகத். எழுத்தாளர் தானே?’

‘ஆமாம். இப்பொழுது ஒரு பிரேதம்.’

அவன் சிரித்தான்.

‘ஹை! நான் கேஷவ் ராஜ்புரோஹித்.’

கொஞ்சம் சிரமப்பட்டு கைகுலுக்கிக் கொண்டோம்.

கோபமான மேகங்களைக் கடந்தோம். இந்த கடினமான உலோகம் இவற்றைப் பிளந்து போவதை அவை ஏற்கவில்லை. தகரத்தில் போட்டக் கூழாங்கல்லைப் போல் விமானம் சத்தமிட்டது. கைப்பிடிகளைப் பற்றிக் கொண்டேன். ஆடாமல் இருக்க அபத்தமான முயற்சி. முப்பத்தி எட்டாயிரம் அடி உயரத்தில் அசங்காமல் இருக்க முடியுமா?

‘கொடுமை, இல்லை?’ என்றான் கேஷவ்.

வாயால் ஆழமாக மூச்சை இழுத்தேன். தலையசைத்தேன். சமாதானமாக இரு, எல்லாம் சரியாகிவிடும் என்று தேற்றிக் கொண்டேன்.

‘ஆச்சரியமாக இல்லை? இந்த உலோகப் பெட்டியில் ஆகாயத்தில் மிதந்து கொண்டிருக்கிறோம். வானிலை மீது நமக்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லை. ஒரு ஆவேசமான காற்று இந்த விமானத்தைப் பிளந்துவிடும்,’ என்றான் நிதானமான குரலில்.

‘ரொம்ப தெம்பு தருகிறது உன் பேச்சு, கேஷவ்,’ என்றேன்.

அவன் பலமாகச் சிரித்தான்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு, வானிலை அமைதியானது. விமானப் பணிப்பெண் பரிமாறத் தொடங்கினர். இரண்டு காபி சொன்னேன்.

‘உனக்கும் ஒன்று வேண்டுமா?’ என்றேன்.

‘எனக்கு காபி வேண்டாம். வெறும் பால் கிடைக்குமா?’ என்று பணிப்பெண்ணைக் கேட்டான்.

‘இல்லை ஸார்; வெறும் டீ, காபி, கூல் டிரிங்க்ஸ் மட்டும் தான்,’ என்றாள்.

எங்கே இருப்பதாக நினைக்கிறான்? பால் பண்ணையிலா? மேலும் என்ன வயதிருக்கும் இவனுக்கு? பன்னிரெண்டா?

‘சரி! டீ கொடுங்கள்,’ என்றான், ‘கூடுதல் பால் பாக்கெட்டுகள் வேண்டும்.’

நான் என் முதல் கப் காபியை மடக்கென்று விழுங்கினேன். சார்ஜ் இல்லாத போன் தன் சார்ஜரைச் சந்தித்தது போல் உணர்ந்தேன். சில மணித்துளிகளில் சார்ஜ் அடைந்து செயல்படத் தொடங்கினேன். வெளியே இருளடைந்த வானத்தைப் பார்த்தேன். நட்சத்திரக் குவியல் தெரிந்தன.

‘சற்று தெம்படைந்து விட்டீர்கள் போன்ற தோற்றம்,’ என்றான் கேஷவ்.

வாகாகத் திரும்பிக் கொண்டு அவனைக் கவனித்தேன். அழகான, களையான முகம். பளீரென்ற கண்கள், ஆழ்ந்த பழுப்பு வண்ணத்தில் மின்னின. அவன் வயதை மீறிய அனுபவங்களைச் சந்தித்த கண்கள் போன்ற தோற்றம். மிஞ்சிப்போனால் இருபதுகளில் இருப்பான். இருட்டிலும் கண்கள் பளபளத்தன.

‘நான் இதற்கு அடிமை,’ என்று கப்பைச் சுட்டிக் காட்டினேன். ‘அவ்வளவாக நல்லது கிடையாது.’

‘இதைக்காட்டிலும் மோசமான விஷயங்களுக்கும் அடிமைப்படலாம்,’ என்றான் கேஷவ்.

‘சிகரெட்டு, குடி?’ என்றேன்.

‘அதைவிட மோசம்.’

‘என்ன?’ என்றேன்.

‘காதல்’ இந்தமுறை கிசுகிசுத்தான்.

நான் பலமாகச் சிரித்ததில் காபி மூக்கு வழியாகப் புரைக்கேறியது.

‘ரொம்ப ஆழ்ந்த கருத்து,’ என்றேன். கைப்பிடியிலிருந்த அவன் கைகளைத் தட்டிக்கொடுத்தேன். ‘ரொம்ப ஆழ்ந்த சிந்தனை தோழா. அப்போ காபி அவ்வளவு மோசமில்லை தானே?’

தலைமுடியைக் கோதினான் - ஒட்ட வெட்டியிருந்தான், ராணுவவீரனைப் போல் - இடது காதில் மின்னிய தங்கத்தோட்டைத் தொட்டுத் தடவினான்.

‘எங்கே வேலை, கேஷவ்?’ என்றேன்.

‘நான் பாடம் சொல்லி கொடுக்கும் ஆசிரியர்.’

‘ஓ, அப்படியா! நல்லது. என்ன...?’

‘நான் உங்கள் கல்லூரியில் தான் படித்தேன்.’

‘நிஜமாகவா?’

‘ஐஐடி டெல்லி. *2013* வகுப்பு.’

‘எனக்கு எவ்வளவு வயதாகிவிட்டது என்பதைச் சுட்டிக்காட்டி விட்டாய்,’ என்றேன். இருவருமே சிரித்தோம்.

‘உங்களுக்குச் சொல்ல என்னிடம் ஒரு கதை உள்ளது,’ என்றான்.

‘மறுபடியுமா? முதலிலிருந்தா?’ என்றேன் பதற்றமாக. பிறகு முகத்திலடித்தார் போல் பேசியதற்கு வருந்தினேன். உடல் அசதியினால் என் மரியாதையை மறந்துவிட்டேன்.

‘ஸாரி! அப்படி அப்பட்டமாகச் சொல்ல நினைக்கவில்லை,’ என்றேன்.

‘பரவாயில்லை,’ என்று கைகளைத் தேய்த்துக் கொண்டான். ‘நீங்கள் கேட்பீர்கள் என்று நினைத்துக் கொண்டது என் தவறு தான். அடிக்கடி யாராவது உங்களிடம் இப்படிச் சொல்லி அணுகுவார்கள் தானே?

‘சில சமயம் அப்படி நடக்கும். ஆனால் நான் மரியாதையின்றி நடந்திருக்க வேண்டாம். ஸாரி.’

‘பரவாயில்லை,’ என்றான். தன் எதிரே இருந்த இருக்கையை வெறித்தான்,

‘எனக்குச் சோர்வாக இருக்கு. நான் சற்றே கண் அயரலாமா?’ என்று கேட்டேன். அவன் பதிலளிக்கவில்லை.

நான் கண்களை மூடினேன். தூங்க நினைத்தேன், முடியவில்லை. காபியும் மன உறுத்தலும் தூங்கவிடாமலடித்தன.

இருபது நிமிடங்களுக்குப் பின்னர் கண்களைத் திறந்தேன். கேஷவ் இருக்கையை வெறித்தபடியே தான் அமர்ந்திருந்தான்.

‘கதைச் சுருக்கத்தை வேண்டுமானால் சொல்லேன்,’ என்றேன்.

‘நீங்கள் சிரமப்பட வேண்டாம்,’ என்று முன்னால் வெறித்தான்.

கண்டிப்பாகச் சிரமம் தான் சகோ! அதுவும் என் கண்களை நேராக சந்திக்காமல் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டால்.

‘இங்கே பார்,’ என்றேன், ‘விஷயம் இதுதான். காதலுக்கு வசப்படும் போதை என்றாய். அதனால் இது காதல் கதையாக இருக்கலாம். எனக்குக் காதல் கதைகள் சலித்துவிட்டன. மறுபடியும் ஒரு சேதன் பகத் காதல் கதையா? என்ன ஒரு இத்துப்போன பொழப்பு? எனக்கு வேறு ஏதாவது எழுத ஆசை.

இரண்டு பேர் விரகத்தில் தவிப்பது அல்ல. இந்தக் காலத்தில் யார் அப்படிச் செய்கிறார்கள்? இப்பொழுதெல்லாம் மக்கள் காதல் வசப்படுவதே இல்லை. வலது, இடது என்று ஸ்வைப் (தேயப்பதோடு) சரி...'

'இது காதல் கதை இல்லை,' என்று என் உளறலை வெட்டிப் பேசினான்.

'உண்மையாவா?' ஒரு புருவம் உயர்ந்தது. 'மேலும், பேசும் பொழுது என் முகம் பார்த்துப் பேசுகிறாயா?'

என்னைப் பார்த்தான்.

'இது மாஜி காதலைப் பற்றியது. ஆனால் காதல் கதை அல்ல,' என்றான்.

'மாஜி காதலனா? புட்டுக்குச்சா?'

'ஆமாம்.'

'இரு நான் சொல்றேன். அவள் வேண்டாம் என்றாள். நீ தொடர்ந்து உருகிக் காதலிச்சே? அவளுடன் மீண்டும் இணையத் துடித்தாய். சரியா?'

'ஆமாம்' என்றான். உதடுகள் இறுகின.

'சேர்ந்தாயா?'

அவன் இல்லை என்று தலையசைத்து மறுத்தான்.

'என்னால் முடியவில்லை,' என்றான்.

'ஏன்?'

'விட்டுவிடுங்கள். கேட்கணும் என்ற கட்டாயம் ஏதும் இல்லை.'

'சும்மா தான் கேட்கிறேன்.'

'சோர்வாக இருக்கு. நான் சற்று இளைப்பாறட்டுமா?' என்றான். இருக்கையில் சாய்ந்து சௌகரியமாக அமர்ந்தான். கண் இமைகள் மூடின. அடக்கடவுளே! அவன் தூங்கியே விட்டான். என்ன கொடுமைடா இது! இப்படியா ஒரு எழுத்தாளனைப் பழிவாங்குவது! இது ஆவறது இல்லை. நள்ளிரவு விமானத்தைப் பிடித்து, காபியைப் பம்ப் அடித்து, கதை சொல்கிறேன் பேர்வழி என்று உசுப்பேற்றி, சரியான கட்டத்தில் கும்பகர்ணனைப் போல் தூங்குவதா?

அவன் தோளைப் பிடித்து உலுக்கினேன்.

'என்ன?' என்று அதிர்ந்தான்.

'அவளுக்கும் உனக்கும் இடையே என்ன நடந்தது?'

‘யாரு*?* எனக்கும் ஸராவுக்குமா*?’ (Zara)*

‘அதுதான் அவள் பெயரா*?* ஸரா*?* ஸரா என்ன*?’*

‘ஸரா லோன்,*’* என்றான்.

‘சரி. என்ன நடந்தது*?* சொல்லு.*’*

கேஷவ் கடகடவென்று சிரித்தான்.

‘என்ன*?’* என்று வியந்தேன்.

‘அதற்கு என் முழு கதையையும் சொல்லணுமே, சேதன்.*’*

‘சரி, சொல்லு. ஒரு வேளை நான் கதை எழுதலாம்*!’*

‘அப்படியெல்லாம் செய்யணும் என்று நிர்பந்தம் இல்லை. நான் தான் ஏற்கனவே சொன்னேனே. இது காதல் கதை இல்லை. நீங்கள் திரும்பவும் க்யூட் பையன் - பெண் காதலைப் பற்றி எழுதலாம். அரையோ, காலோ, காலே அரைக்கால் கேர்ள்-பிரெண்டோ*!’*

நான் அவன் நக்கலை உதாசீனம் செய்தேன். ‘கதையைச் சொல்லு. ஸரா லோனுக்கும் உனக்கும் இடையே என்ன தான் நடந்தது என்று எனக்குத் தெரியணும்*!’*

# அத்தியாயம் 1

## ஆறு மாதங்களுக்கு முன்பு

‘நிறுத்து, தம்பி, நிறுத்து’ என்று கத்தியபடி ஸௌரப் என் கையிலிருந்து விஸ்கி கிளாஸைப் பிடுங்கினான்.

‘நான் இன்னும் முடிக்கவில்லை. மட்டையாகவில்லை,’ என்றேன். ஹால் ஓரத்தில் ஒரு ‘நடமாடும் பார்’ ஏற்பாடு செய்திருந்தனர். மற்ற ஆசிரியர்கள் அரோரா ஸாரைச் சூழ்ந்திருந்தனர். அவருக்குக் கூழைக் கும்பிடு போடும் வாய்ப்பைத் தவற விட மாட்டார்கள்.

சந்தன் அரோராவின் மாளவியா நகர் வீட்டிற்கு வந்திருந்தோம். சந்தன் கிளாஸஸ் நடத்தும் எங்கள் கோச்சிங் சென்டர் தலைவர். பாஸ்.

‘என் மீது சத்தியம் பண்ணி இரண்டு கிளாஸுக்கு மேல் இல்லை என்றாயே?’ என்றான் ஸௌரப்.

நான் அவனைப் பார்த்துப் புன்னகைத்தேன்.

‘அளவைப் பற்றி சொன்னேனா? எவ்வளவு மிடறு விஸ்கி என்று சொன்னேனா? அரை பாட்டில்?’ என் பேச்சு குழறியது. சரியாக நிற்க முடியவில்லை.

‘வெளியே வா. நல்ல காற்றை சுவாசிக்கலாம். பால்கனி போகலாமா?’ என்றான் ஸௌரப்.

‘எனக்குப் புதிதாக விஸ்கி வேண்டும்,’ என்றேன்.

ஸௌரப் என் கையைப் பற்றித் தரதரவென்று பால்கனிக்கு இழுத்துச் சென்றான். இந்த குண்டன் எப்பொழுது இவ்வளவு பலசாலியாக மாறினான்?

‘இங்கே குளிர்கிறது.’ என்று நடுங்கினேன். என் கையைத் தேய்த்து சூடு கிளப்பப் பார்த்தேன்.

‘நீ இவ்வளவு குடிக்கக்கூடாது, மச்சி.’

‘இது புத்தாண்டை வரவேற்கும் இரவு. என்னை இது என்ன பாடுபடுத்தும் என்று உனக்குத் தெரியும் தானே.’

‘இது வரலாறாக மாறிவிட்டது. நான்கு ஆண்டுகள் கடந்துவிட்டன. இது 2018.’

‘நான்கு நொடிகள் போலிருக்கு,’ என்றேன்.

நான் ஒரு சிகரெட்டு பாக்கெட்டை எடுத்தேன். ஸௌரப். பாய்ந்து பிடுங்கி தன் பாக்கெட்டில் பத்திரப்படுத்தினான். என் மொபைலை எடுத்தேன். என்னுடைய அடுத்த போதை வஸ்துவை எடுத்தேன், ஸரா.

‘அன்றிரவு என்ன கூறினாள்?’ என்றேன், அவளுடைய வாட்ஸ்அப் ப்ரொஃபைல் படத்தைப் பார்த்தபடி. ‘முடிந்துவிட்டது, என்றாள். முடிந்தது என்றால் என்ன? நமக்கு முடிந்துவிட்டது என்றால் என்ன அர்த்தம்? எனக்கு முடியவில்லை.’

‘மொபைலை நோண்டாதே, மச்சி. தவறிப்போய் அவளைக் கூப்பிடப் போகிறாய்,’ என்றான் ஸௌரப். என் மொபைலைப் பறிக்கத் தாவினான். நான் தவிர்த்தேன்.

‘அவளைப்பார்,’ என்று ஸ்க்ரீனை ஸௌரப்புக்குக் காட்டினேன். அவள் தன் ஸெல்ஃபியை ‘டிபி’ யாகப் போட்டிருந்தாள் - உதடுகளைக் குவித்து, கைகளை இடுப்பில் ஏந்தி ஒரு கருப்புப் புடவை அணிந்து; அவளுடைய வெண்மையான முகம் - சற்றே ‘பிங்க்’ கலவையுடன் பளிச்சென்று அழகாகத் தெரிந்தது.

எப்பொழுதும் ‘டிபி’யில் அவள் தன் புகைப்படத்தைப் போடமாட்டாள். ஏதாவது மேற்கோள் - ‘வாழ்க்கை உன்னைப் பிடித்து நிறுத்த அனுமதிக்காதே’ போன்ற வாசகங்கள். படிக்கும் பொழுது ஆழ்ந்த சிந்தனை போல் தோன்றும் ஆனால் எந்தப் பொருளும் இல்லை.

அவள் வாட்ஸ்அப் புகைப்படங்கள் மட்டுமே என்னை அவளுடன் தொடர்பில் வைப்பவை. அதன் மூலம் தான் அவள் வாழ்வில் என்ன நடக்கிறது என்பதை அறிவேன்.

‘யாரு கருப்பு புடவை அணிவார்கள்? அவள் ஒன்றும் அவ்வளவு பெரிய அழகி கிடையாது,’ என்றான் ஸௌரப். தன்னால் இயன்றவரை அவளை மறக்கடிக்க முயல்வான். எனக்கு ஸௌரப்பை ரொம்ப பிடிக்கும் - என் உயிர்த் தோழன், கூட வேலை செய்யும் சக தொழிலாளி, என்னைப் போலவே வாழ்க்கையின் போக்குக்கு ஈடு கொடுக்கத் தெரியாத கிறுக்கன். என்னுடைய ஊர் ஆல்வாருக்கு அருகே ஜெய்பூரைச் சேர்ந்தவன். அவன் அப்பா பிடபிள்யூடீயில் ஜுனியர் என்ஜினியர். என்னைப் போலவே அவனுக்கு கேம்பஸில் வேலை கிடைக்கவில்லை.

இருவரும் முதுகொடிய சந்தன் கிளாஸஸ்ஸில் ஆசிரியப்பணி செய்கிறோம். வேறு வேலை கிடைத்தால் பிய்த்துக் கொண்டு ஓடத் தயாராக இருக்கிறோம்.

‘இது ஸராடா. எப்பொழுதுமே அழகு தான்,’ என்றேன்.

ஸௌரப் தோள் குலுக்கினான்.

‘அதுதான் பிரச்சினையே.’

‘நான் அவள் அழகில் மயங்கி தான் பைத்தியமானேன் என்று நினைக்கிறாயா?’

‘உன் மொபைலை உள்ளே வைக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.’

‘மூன்று வருடங்களுக்கு மேல் மச்சி. மூன்று கிறுகிறுக்கும் வருடங்கள்.’

‘தெரியும் மச்சி. நீ இனி குடிக்கமாட்டேன் என்று சத்தியம் செய்தால் உள்ளே போகலாம். இங்கே குளிராக இருக்கு.’

‘உனக்கு என்ன தெரியும்?’

‘நீ ஸராவை மூன்று ஆண்டுகள் ‘டேட்’ செய்தாய். சாப்பிடலாமா?’

‘சாப்பாட்டை உடப்பில் போடு! மூன்று ஆண்டுகளுக்கும் மேல். மூன்று ஆண்டுகள், இரண்டு மாதம் மற்றும் மூன்று வாரங்கள் என்று துல்லியமாகச் சொல்லலாம்.’

‘நீ ஏற்கனவே சொன்னாய். ராண்தேவூ (Rendezvous) 2010, முதல் புத்தாண்டு இரவு 2014 வரை.’

‘ஆமாம் ராண்தேவூ தான். அங்கே தான் சந்தித்தோம். எப்படிச் சந்தித்தோம் என்று சொன்னேனா?’ என்றேன். என் கால்களுக்குத் தரையைக் கண்டுபிடிப்பது சிரமமாக இருந்தது. ஸௌரப் நான் கீழே விழாமல் இருக்க கெட்டியாகத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

‘ஆமாம். ஐம்பது முறை சொல்லிவிட்டாய்,’ என்று ஸௌரப் முணுமுணுத்தான்.

‘ஒரு விவாத அரங்கம். விவாதப் போட்டியின் இறுதிச்சுற்றில் அவள் தேர்வானாள்.’

‘மச்சி, லட்சம் முறை சொல்லிவிட்டாய்,’ என்றான். எனக்கு அக்கறை இல்லை. லட்சத்தி ஓராவது முறை தான் கேட்கட்டுமே!’

# அத்தியாயம் 2

**ஏழு வருடம் சொச்சம் காலத்திற்கு முன்.**

கிளாஷ் ஆஃப் தி டைடன்ஸ் - விவாதத்தின் இறுதிச்சுற்று

ராண்தேவூ ஃபெஸ்ட், ஐஐடி டெல்லி

அக்டோபர் ***2010.***

மேடையின் இடதுபக்கம் அவள் நின்றிருந்தாள். நிமிர்ந்த நேர் கொண்ட பார்வையினால் அவள் 5 அடி மூன்றங்குலத்தைவிட உயரமாகத் தென்பட்டாள். வெள்ளை சல்வார் - கமீஸ், மிட்டாய் 'பிங்க்' துப்பட்டா - ஓரத்தில் வெள்ளி ஜரிகை என்று ஜொலித்தாள். அவளுடைய வாதத் திறமையைப் பற்றி யோசிக்காமல் அவள் அணிந்திருந்த ஆடைகளை ரசித்தேன். அவளுடன் எதிர்வாதம் செய்பவன் கூட அவளுடைய பூனை நடை அழகி போன்ற தோற்றத்தைக் கண்டு சற்று தடுமாறித்தான் போனான்.

செமினார் அறையில் ஒரு பேனர் தொங்கியது. பகிரங்கமாக மதத்தைப் பின்பற்றுவதைத் தடுக்க வேண்டுமா? (பொது இடங்களில்)

ஹிந்து காலேஜ் வெற்றியாளன் இந்தர் தாஸக்கு எதிராக மேடையில் ஆஜரானாள் ஸரா லோன். இருவரும் இறுதிச்சுற்றில் இருந்தனர் - கிளாஸ் ஆஃப் தி டைடன்ஸ். பெருந்தலைகளுக்கு எதிரான மோதல்.

கூட்டம் அலைமோதியது. இருவரின் வாதத் தொகுப்பைக் கேட்கக் கூட்டம் காத்திருந்தது.

தொள தொள குர்த்தா, சுருட்டைமுடி, காந்தி கண்ணாடி - இந்தர் ஏதோ பெங்காலி ஆர்ட் திரைப்படக் கதாபாத்திரம் போல் காட்சியளித்தான்.

ஒரு உரையாடலுக்கும் மற்றதுக்கும் போதிய இடைவெளியாக ஐந்து நீண்ட நிமிடங்கள் இருக்குமே - அந்தப் படம் தான்.

‘நான் கடைசியாகக் கேட்டவரை நாம் சுதந்திர நாடு,’ என்றான் இந்தர். ‘நம் அரசியலமைப்பின் முன்னுரையில் ‘மதச்சார்பற்ற’ என்ற வார்த்தை உள்ளது. 25 - 28 உள்ளிட்ட நிபந்தனைகளில் (Article) அரசியல் சாசனம் எந்த மதத்தையும் பின்பற்றலாம் என்ற உரிமையை வழங்குகிறது.

ஐயோ! அரசியல் சாசனம் பற்றியெல்லாம் மக்களுக்குத் தெரியுமா? அதில் நிபந்தனைகள் உண்டு என்ற தகவலே எனக்குத் தெரியாது. இரு பக்கத்து வாதம் பற்றியும் எனக்கு எந்த முன்னறிவும் இல்லை. ஸரா வெற்றி பெற வேண்டும் என்பது மட்டுமே என் ஆசை. அவள் சிரிப்பதைப் பார்க்க வேண்டும். அவ்வளவு தான்.

ஸரா மறுப்பதற்காகக் கையைத் தூக்கினாள். ஆனால் இந்தர் தொடர்ந்து பேசியதால் தன் முறை வரும் வரை காத்திருந்தாள்.

‘நிபந்தனை 25 சொல்வது, மேற்கோள் கூறுகிறேன்,’ என்றான் இந்தர். நிறுத்தினான். எழுதி வைத்திருந்த குறிப்புகளில் தேடினான். தடுமாறினான்.

மேற்கோள் சொல்வதாக நிறுத்தினாலே, அவர்கள் அசுரத்தனமான அறிவு கொண்டவர்கள் என்றே நம்பத் தோன்றும். யாரும் அவர்களிடம் எதுவும் வைத்துக்கொள்ள மாட்டார்கள்.

இந்தர் பேசத் தொடங்கினான். அதாவது மேற்கோள் சொன்னான். ‘அனைவருக்கும் சமமான சுதந்திரம் உள்ளது. யோசிப்பதற்கு, மற்றும் ஒரு மதத்தைப் பற்றி பிரச்சாரம் செய்ய, பேச, சார்ந்து வாழ.’ எங்களுக்குப் புரிவதற்காகச் சற்று நிறுத்தினான். ‘மிஸ் ஸரா லோன், நம் கலாச்சாரத்திற்கு எதிராக வாதம் செய்கிறார். அரசியல் சாசனத்தையும் எதிர்க்கிறார். எங்கள் தீபாவளி கொண்டாட்டத்தை மட்டும் அபகரிக்கவில்லை. சட்டத்தையும் உடைக்கிறாய்.’

பேச்சை முடித்துவிட்டுக் குறிப்புகளை தூர எறிந்தான். கேவலமாகப் பார்த்தான்; நான் அமர்ந்திருந்த இடத்திலிருந்தே அவன் அகம்பாவம் புரிந்தது. தலையை ஆட்டி நாம் இதைப்பற்றி ஏன் விவாதிக்கிறோம் என்பது போல் பார்த்தான்.

கூட்டம் கைதட்டி ஆர்ப்பரித்தது. எனக்குள் ஒரு பதற்றம் பள்ளம் பறித்தது. ஸரா தோற்றுவிடுவாளோ?

அனைத்துக் கண்களும் ஸரா மீதிருந்தன. கைதட்டல் நிற்கும் வரை காத்திருந்தாள்.

‘என் எதிரிக்கு அரசியல் சாசனத்தைப் பற்றிய நல்ல அறிவு. நான் பாராட்டுகிறேன்,’ என்றாள் ஸரா. இந்தர் புன்னகைத்தான்.

‘ஆனாலும் சபையோர்களே, நாம் எதைச் செய்தால் சரி என்பதைப் பற்றிப் பேச வந்துள்ளோம். அரசியல் சாசனத்தை மேற்கோள் காட்ட வரவில்லை. இரண்டே நிமிடங்களில் யார் வேண்டுமானாலும் கூகுள் செய்துவிடலாம்.’

அவை நிமிர்ந்து அமர்ந்தது. இந்தச் சிறிய அனல் குஞ்சு அவ்வளவு எளிதில் விட்டுத் தராது.

அவள் தொடர்ந்தாள். ‘அரசியல் சாசனம் தான் நம் குடியரசுக்கே ஆதாரம். ஆனால் அதை மாற்றலாம். இதுவரை நாம் சட்டங்களை மாற்றி எழுத வில்லையா, என்ன?’

‘ஆமாம், சரிதான், சபாஷ்!’ என்று உரக்கக் கூச்சலிட்டேன்.

அமைதியான அந்த அவையில் என் குரல் எதிரொலித்தது. அடச்சே! நிறைய பேர் கைத்தட்டுவார்கள் என்றல்லவா எதிர்பார்த்தேன். மொத்தக் கூட்டமும், ஸரா உட்பட என்னை உற்றுப் பார்த்தனர்.

‘நன்றி! ஆனால் இதை வேறொரு தருணத்திற்குச் சேமித்து வை’ என்று என்னைப் பார்த்து நகைத்தாள்.

ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட மக்கள் இருந்த கூட்டம் ‘கொல்’லென்று சிரித்தது. அங்கிருந்த இறுக்கம் சற்றே தளர்ந்தது. ஆனால் நான் இறுகிப் போனேன். மின்தடங்கல் ஏற்பட்டு அரங்கமே இருட்டாகிவிடாதா? யாரும் பார்க்காத பொழுது நான் அங்கிருந்து ஓடிவிடலாமே. ஸரா தன் வாதத்தைத் தொடர்ந்தாள்.

‘என் நண்பன் நிபந்தனை 25ஐ பாதி தான் மேற்கோள் காட்டினான். அவன் சொன்னது சரிதான். அனைவருக்கும் சொந்த நம்பிக்கையின் பேரில் எந்த மதத்தைச் சார்ந்தும், பின்பற்றியும், பேசவும், பிரச்சாரம் செய்யவும் அடிப்படை சுதந்திரம் உள்ளது; ஆனால் அது மேலும் கூறுவது, ‘அது பொதுமக்களுக்குக் கேடு விளைவிக்கக் கூடாது. அவர்களின் அமைதி, உடல்நலம் மற்றும் தார்மீக உணர்வுக்குப் பங்கம் விளைவிக்கக் கூடாது. இதை எப்படி என் மாண்புமிகு எதிரி மறந்தான்?’

‘அப்பொழுது, மற்றவர்களுக்குப் பாதிப்பு ஏற்பட்டால்,’ என்று இந்தர் இடைமறித்தான். ‘நீ ஒரு இஸ்லாமியப் பெண். உங்கள் தொழுகை முறையை நிறுத்துவாயா? ஐந்து முறை மக்களைப் பாதிக்கும் மசூதி மைக்ஸெட்டை நிறுத்துவாயா?’

‘ஆமாம், நிச்சயம் செய்வேன்.’

அரங்கம் பெருமூச்சு விட்டு ஒரு நிமிடம் அசந்தது. ஒரு இஸ்லாமியப் பெண் மேடையில் இவ்வளவு தைரியமாகப் பேசியது அனைவரின் கவனத்தையும் ஈர்த்தது. கொஞ்சமும் பதறாமல் தொடர்ந்தாள். ‘இன்னமும் ஐந்து முறை தொழுகை நடத்தலாம், மொபைலில், நினைவூட்ட ஒரு ‘ஆப்’ வைத்துக் கொள்ளலாம். ஹெட் ஃபோன் போட்டுக் கொண்டு தொழுகையை நடத்தலாம். சுற்று வட்டாரத்தில் எல்லாம் அதைத் திணிக்க வேண்டாமே! மேலும் ‘நீ இஸ்லாமியப் பெண்’ போன்ற பேச்செல்லாம் இங்கே எடுபடாது. நான் இங்கே இஸ்லாமியப் பெண்ணாக வரவில்லை. நான் இங்கே கிளாஸ் ஆஃப் தி டைடன்ஸில் இறுதிச்சுற்றில் பங்கேற்க வந்த பங்காளராகத் தான் வந்திருக்கேன்.’

கைத்தட்டலும், ஆரவாரமும் நிற்கவே இல்லை. காது ஜவ்வு கிழிந்துவிடும் அபாயம். சில நிமிடங்கள் கடந்தன. நீதிபதிகளில் ஒருவர் மேடையேறி முடிவுகளை அறிவித்தார்.

‘இன்றைய வாதம் அபாரம். ஆனாலும் உலகம் பூராவுமே மதத்தையும் அதன் பழக்கவழக்கங்களையும் வெளிப்படையாகக் காட்டக் கூடாது என்று விவாதிப்பது மிகவும் கடினமானது. இந்தியா மட்டும் என்ன விதிவிலக்கா? மிஸ் ஸரா, உங்களுக்குக் கடினமானத் தலைப்பு கொடுக்கப்பட்டது. அதை நிதானமாகவும், ஆர்ப்பாட்டம் இல்லாமலும் அழகாகக் கையாண்டார். அதனால் இந்த வருட வெற்றியாளர் மிஸ் ஸரா லோன்.’

எல்லோரும் எழுந்து நின்று கைதட்டினர். ஸரா மேடையேறி வந்து பரிசைப் பெற்றுக் கொண்டாள். நான் பித்துப்பிடித்தவன் போல் விடாமல் கைதட்டினேன். என்கூட இருந்த சக ஹாஸ்டல் தோழன் விசிலடிக்கும்படித் தூண்டினான். ஐஐடி டெல்லியிலேயே என்னுடையது தான் மிகவும் சுத்தமான விசில் என்று உங்களுக்கு சொன்னேனா? என் வலது கட்டை விரலையும், ஆள்காட்டி விரலையும் மடக்கி என் வாயருகே கொண்டு சென்றேன்.

ட்வீவீவீவீட்***...!*** என் உச்சஸ்தாயி சீட்டி, கால்பந்தாட்ட அரங்கத்திற்கு உகந்தது. விவாத அரங்கத்துக்கு இல்லை. அறிவுஜீவிகள் என்னைத் திரும்பப் பார்த்தனர். என்னைப் போன்ற மரியாதை தெரியாத அறிவிலியை யார் உள்ளே விட்டது என்பது போலப் பார்த்தார்கள்.

என் விசில் ஸராவின் கவனத்தை ஈர்த்தது. என்னைப் பார்த்தாள். கையில் கோப்பையுடன் சிரித்தாள். என் விரல்களை

வாயிலிருந்து எடுத்தேன்.

‘மச்சி, நிதானம். அவள் என்ன உன் கேர்ள் பிரெண்டா?’ என்று என் அருகிலிருந்தவன் கேட்டான்.

இல்லை. இப்பொழுது இல்லை. ஆனால் ஆகிவிடுவாள், என்று சொல்லத் தோன்றியது. ஏற்கனவே கடவுளால் நிச்சயிக்கப்பட்டது.

நான் அரங்கிலிருந்து வெளியேறினேன். உணவு கூடத்திற்கு சென்றேன்.

‘என் வெற்றியைக் கொண்டாடியதற்கு நன்றி,’ என்ற குரல் கேட்டு உறைந்தேன்.

‘ஸரா?’ என்றபடி திரும்பினேன்.

‘ஆமாம். நல்ல காலேஜ். இங்கேயா படிக்கிறாய்?’

‘ஆமாம். நீ?’ என்றேன்.

‘டெல்லி காலேஜ் ஆஃப் என்ஜினீயரிங். ஐஐடியை ஒரு சில மதிப்பெண்களில் கோட்டை விட்டுவிட்டேன். அவ்வளவு அறிவு பத்தாது.’

‘அவனை அழிச்சுட்டே. நீ என்னைவிட சாமர்த்தியமானவள்.’

நாங்கள் பிரதான சாலையில் நடக்கத் தொடங்கினோம். விழாவுக்காக அங்கே நிறைய உணவு ஸ்டால்கள் ஏற்பாடாகியிருந்தன.

❖

‘நீங்கள் இருவரும் நடக்கத் தொடங்கினீர்கள், ஸரா உனக்கு பசிக்கிறதா என்று கேட்டாள். நீங்கள் இருவரும் சேர்ந்து சாப்பிட்டீர்கள். மொபைல் எண்களைப் பரிமாறிக் கொண்டீர்கள்...’ ஸௌரப் என் கதையின் போக்கை இடைமறித்தான்.

‘என்ன? உனக்கு எப்படித் தெரியும்?’ என்றேன். நாங்கள் பால்கனியில் இருப்பதை ஒரு சிப்பந்தி கவனித்தான். தட்டில் சரக்குடன் எங்களை அணுகினான். ஸௌரப் என்னைத் தடுத்து நிறுத்தப் பார்த்தும் நான் ஒரு கிளாஸ் விஸ்கியை எடுத்துக் கொண்டேன்.

‘அடடா, மச்சி, தயவு செய்து நிறுத்து. ஒரு சாதா தோசை ஆர்டர் செய்தாய். அவள் பரோட்டா சொன்னாள். பரோட்டா நன்றாக இல்லை. உன் தோசையை அவளுக்கு கொடுத்தே,

மற்றது வரலாறு. உள்ளே போகலாம் வா. நான் ஐஸ் கட்டியாகி விடுவேன்.’

அவன் தன்னையே அணைத்துக் கொண்டான். ஒரு பெரிய மிடறு விஸ்கி அருந்தினேன். என் தொண்டைக்குள் ஒரு பெரிய நெருப்புப் பந்து இறங்கியது.

‘பெக் அடி,’ என்றேன், ‘உனக்கு அவ்வளவு குளிராது.’

‘அப்படியில்லை, சரக்கடித்தால் சூடு குறையும். வெளியே வரும் சூடு தான் உன் தோலைச் சூடாக்குகிறது.’

‘கோலு, நிஜம்மாத்தான் சொல்றேன். உன் ஜோஃ ரசாயனப் பாடத்தை நிறுத்து. இது புத்தாண்டு இரவு,’ என்றேன். அவன் வாயருகே கிளாஸைக் கொண்டு சென்றேன். என்னை உற்றுப் பார்த்துவிட்டு வேண்டா வெறுப்பாக உறிஞ்சினான்.

‘நல்ல வேலை செஞ்சே, என் கோலு,’ என்றேன். ‘உனக்கு தோசை கதையும் தெரியுமா? எங்கள் அடுத்த சந்திப்பைப் பற்றி தெரியணுமா? முதல் உண்மையான டேட்டு (சந்திப்பு)?’

வேண்டாம் மச்சி. உள்ளே மற்ற ஆசிரியர்களுடன் நேரம் செலவழிக்கலாம். ஏற்கனவே நாம் அவர்களுடன் பழகுவதில்லை என்ற குற்றச்சாட்டு இருக்கு.’

‘அவர்களை விட்டுத் தள்ளு. நமக்குத்தான் அந்த வேலையே பிடிக்கவில்லையே,’ என்றேன். ‘எப்படி அவர்களுடன் பழகுவது?’

‘கொஞ்சமாவது பேசலாம்.’

‘ஒரு நிமிஷம், நான் ஒரு ‘போன் கால்’ செய்துவிட்டு வருகிறேன்.’

நான் என் மொபைலை வெளியே இழுத்தேன். ஸராவின் எண்ணைத் தேடினேன். ஸௌரப் அவள் படத்தைப் பார்த்துவிட்டான்.

‘வேண்டாம், மச்சி, வேண்டாம்.’ அவன் என் மொபைலைப் பிடித்தான். நான் அவனுக்கு முன்னால் ஓடினேன். என்னைப் பிடிக்கக் கன்னாபின்னாவென்று ஓடி வந்தான். ஆனால் பிடிக்க முடியவில்லை.

‘மச்சி, என் மீது சத்தியம்! அவளைக் கண்டிப்பாகக் கூப்பிடக்கூடாது.’

‘இது புத்தாண்டு தினம். நான் அவளுக்கு வாழ்த்து கூடவா சொல்லக்கூடாது?’

‘வேண்டாம் மச்சி,’ என்று பதறியவனை அடக்கினேன்.

‘உஷ்ஷ்! அடிக்கிறது,’ என்றேன். என் இடது கையால்

ஸௌரப்பை தள்ளி நிறுத்தினேன். வலது கையில் தொலைபேசி.

ஒன்று, இரண்டு, ஐந்து முறை, ஏழு - என்று மணி அடித்தவண்ணம் இருந்தது.

‘ஹலோ?’ என்றேன் குரல் கேட்டவுடன். ‘ஹலோ ஸரா. வைத்துவிடாதே. சரியா?’

‘நீங்கள் தொடர்பு கொள்ளும் வாடிக்கையாளர் தொடர்பு எல்லைக்கு அப்பால் இருக்கிறார். தயவு செய்து பிறகு முயற்சிக்கவும்.’ ஏர்டெல் பெண், உணர்வுகளற்ற மரக்கட்டை. அவளுக்கு மட்டும் எனக்கு இது எவ்வளவு முக்கியம் என்று புரிந்தால்…

‘பேச முடியவில்லையா? நல்லது. விட்டுவிடு,’ என்றான் ஸௌரப்.

திரும்பவும் கூப்பிட்டேன். அதே ஏழு முறை மணி அடித்தது. அதே உணர்வுகளற்ற ஏர்டெல் மரக்கட்டை.

‘நிறுத்து. அவ்வளவு மிஸ்டு கால்களைப் பார்த்து கவலைப்படப் போகிறாள்.’

‘எனக்கு அதைப்பற்றி கவலை இல்லை,’ என்றேன். ஒரு முறை மிஸ்டு கால்கள் அவமானத்தைப் பட்டபின் அது இரண்டா, மூன்றா, ஏழா என்பதைப் பற்றி அக்கறை இல்லை.

அதனால் தான் அவளைப் பத்தாவது முறையாக அழைத்தேன். இம்முறை அது ஏர்டெல் பெண் இல்லை.

‘ஹலோ,’ ஸராவின் குரல். அவளுடைய ஒற்றை வார்த்தைக்கே எந்த விஸ்கிக்கும் இல்லாத போதை இருந்தது.

‘ஹே ஸரா,’ என்று என் தொண்டையைச் செருமினேன். தேவைக்கதிகமாக அந்த ‘ஹேவில்’ ஒரு இழுவல் இருந்ததை உணர்ந்தேன். ஸௌரப் ஒரு ஏமாற்றப் பெருமூச்செறிந்தான். அவனிடமிருந்து விலகி நின்றேன்.

‘சொல்லு, கேஷவ்,’ என்று அளந்து பேசினாள். உணர்ச்சிகளே இல்லாத குரலாகப்பட்டது. ஏர்டெல் பெண்ணைக் காட்டிலும் கம்மி. அடுத்து என்ன சொல்வது என்று யோசித்தேன். ‘நான் உன்னைக் கூப்பிட முயற்சி செய்தேன்,’ என்று சமாளித்தேன்.

‘தெரியும். பத்துமுறை கூப்பிட்டும் ஒருவர் எடுக்கவில்லை என்றால் அவர்களுக்குப் பேசமுடியாத சூழ்நிலை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.’

‘ஒன்பது முறை. பத்து இல்லை. சரி நீ பிஸியா?’ என்றேன்.

‘நான் பிறகு கூப்பிடுகிறேன்,’ அவள் குரலை மறுபடியும் கேட்க எனக்கு ஒரு காரணம் தேவைப்பட்டது. பின்னால் இசைச்சத்தம் கேட்டது. அவளும் ஒரு பார்ட்டியில் இருக்கிறாள். கருப்புப் புடவையில் இருப்பாளோ? அவளுடைய மட பாய் ஃபிரெண்டும் கூட இருப்பானோ?

‘என்ன வேணும் கேஷவ்? எதற்குக் கூப்பிட்டாய்?’ என்றாள்.

நான் பால்கனி ஓரத்திற்கு நகர்ந்தேன். ஸௌரப் என்னைத் தொடரவில்லை. ஆனால் என்னையே பார்த்துக் கொண்டிருந்தான், தூரத்திலிருந்து.

‘புத்தாண்டு வாழ்த்துக்கள் சொல்லத்தான். ஏன் இவ்வளவு கேள்வி?’ என்றேன்.

‘ஒரு நிமிஷம் இரு,’ என்றாள். கவனம் பார்ட்டியில் உள்ள யார் மீதோ திரும்பியது. ‘ஹை! நீயும் அழகாக இருக்கே!’ என்றாள்.

‘ஸரா, இருக்கியா?’ என்றேன். அவளிடமிருந்து சற்று நேரத்திற்கு எந்தச் சத்தமும் இல்லை.

‘இங்கே நிறைய பேர் இருக்கிறார்கள். சரி, நாம் என்ன தீர்மானம் செய்தோம் என்பதை மறந்துவிட்டாயா?’

‘சேர்ந்து இருப்போம் பல காலம், அதுதானே?’ என்றேன். அடச்சனியனே! அப்படி ஏன் சொன்னேன்.

‘என்ன?’

‘நாம் அந்த ட்ரிப்பில் அப்படிச் சொல்லவில்லையா? கோவாவில் ஒரு புத்தாண்டைக் கொண்டாடினோமே?’

‘அது ரொம்ப நாட்களுக்கு முன்னர், கேஷவ்.’

‘ஆறு ஆண்டுகளுக்கு முன்னர், 2011, புத்தாண்டு இரவன்று,’ என்றேன். இதயம் நொறுங்கினால், மூளையில் பதிந்த பழைய நினைவுகள் தெளிவாக இருக்கும்.

‘நாம் பிரிந்த போது இனி தொடர்பில் இருக்க வேண்டாம் என்று தீர்மானித்தோம். நீ அதைக் கடைபிடிப்பதில்லை. நாம் பிரிந்து வருடக்கணக்காகி விட்டது.’

‘சரி, என்னைக் கொன்றுவிடு. உன்னை வாழ்த்தக் கூப்பிட்டதற்காக என்னைக் கொலை செய்துவிடு. புத்தாண்டு தினம் எனக்கு உன்னை நினைவுபடுத்துவதால் என்னைக் கொன்றுவிடு. நாம் முதல் முதலாக உடலுறவில் ஈடுபட்ட தினம் என்பதால் என்னைக் கொன்றுவிடு.’

‘கேஷவ், நிறுத்து.’

‘எதை நிறுத்துவது? உன்னை நினைப்பதையா? என்னால் முடிந்தால் செய்வேன்,’ என்று கத்தினேன். ‘நினைக்காமல் இருக்கத்தான் விரும்புகிறேன்.’

ஸௌரப் என்னை நோக்கி ஓடி வந்தான் என்ன என்று சைகை செய்தான், நான் தலையசைத்து மறுத்தேன். போன் காலை ஸ்பீக்கரில் போடச் சொன்னான். நானும் அப்படியே செய்தேன்.

‘நீ குடிச்சிருக்கியா?’ என்றாள் ஸரா. குரல் தாழ்த்தி அக்கறையுடன் கேட்டாள்.

‘அதனால் என்ன? குடி போதையோ, இல்லையோ, நான் உன்னை மிஸ் பண்ணுறேன், ஸரா. அந்த மொக்கை ரகு கூட உனக்கு என்ன வேலை?’

‘அவனை அப்படிப் பேசாதே கேஷவ். நான் போகணும்.’

ஸௌரப் அந்த குளிர்ந்த காற்றில் சைகை செய்தான் - பேச்சை முடி என்று. ஆனால் அவன் சொன்ன நல்ல அறிவுரையை நான் மதிப்பதாக இல்லை.

‘ஓ! உன் ரகுவைச் சொன்னதால் பொத்துக் கொண்டு வருதோ?’ என்று நக்கலடித்தேன். ‘மக்கு ரகு’ என்று தான் அவனை ஹாஸ்டலில் கூப்பிடுவோம். உனக்குத் தெரியும் தானே? மக்-கு ர-கு.’

‘நீ சொல்வதைக் கேட்கும் தலையெழுத்து எனக்கில்லை, கேஷவ்,’ ஸரா சொன்னாள். ‘நான் வைக்கிறேன். என்னை மறுபடியும் கூப்பிட்டுத் தொந்தரவு செய்யாதே.’

‘அந்த அறிவு ஜீவிக்காக நீ கோபப்படாதே. உன்னைவிட அந்த அறிவுஜீவிக்கு அவனுடைய டாட்காம் கம்பெனி மீது தான் பற்றுதல் அதிகம். என்னைப் போல் அவனால் உன்னைக் காதலிக்க முடியாது.’

‘அந்த டாட்காம் கம்பெனி இந்தியாவிலேயே முதன்மையான ஸ்டார்ட்-அப் கம்பெனி - ரகு உருவாக்கியது. அதன் மதிப்பு தெரியுமா? உனக்கு நான் ஏன் விளக்கம் கொடுக்கணும்?’ ஸராவின் குரலில் எரிச்சல் எட்டிப் பார்த்தது.

‘அதற்காகத்தான் அவன் கிட்டே போனாயா? அவன் பணத்துக்காகவா?’ என்றேன்.

‘அவனிடம் சென்றது அவனுடன் இருக்கத்தான். எனக்கு ஒரு குடும்பம் தேவைப்பட்டது. நீ பயந்து ஓடினே. நீ ஆண்பிள்ளையாக நடக்காமல் என் குடும்பத்தை அவமானப்படுத்தினே.’

‘உன் குடும்பம் மட்டும் என்ன வாழ்ந்து தாம்?’

‘நீ இதே போலப் பேசி முயற்சி செய்யாதே! இது வேலைக்காகாது. என்னைக் கோபப்படுத்தவோ, தூண்டவோ முடியாது. பை! என்னை மறுபடி கூப்பிடாதே. கூப்பிட்டால் உன் நம்பரை பிளாக் செய்துவிடுவேன்.’

‘பிளாக்கா? என்னையா? என்னை பிளாக் செய்வேன் என்றா பயமுறுத்துகிறாய்---’

பாதி வாக்கியத்தில் நிறுத்த வேண்டியதாகி விட்டது. அவள் இணைப்பைத் துண்டித்து விட்டாள்.

‘நானும் தான் போகணும்,’ என்று யாருமில்லாத மொபைல் போனில் கத்தினேன்.

‘அவள் துண்டித்துவிட்டாள், மச்சி,’ என்றான் ஸௌரப். சரி வைத்துவிட்டாள். இல்லை என்று ஏமாறுவானேன்?

நான் ஸௌரப்பைப் பார்த்தேன். என் முகத்தில் ஒரு அறை விடுவான் என்று எதிர்பார்த்தேன். அவன் முன்னால் வந்து என்னை அணைத்துக் கொண்டான். விஸ்கி, ஒதுக்கப்பட்ட உணர்வு அவனுடைய அணைப்பு எல்லாமாகச் சேர்ந்து, ‘ஓ’ வென்று அழுதேன்.

‘அரக்கி! ‘உன்னை பிளாக் செய்வேன்’ ----- நான் ஒவ்வொரு நிமிடமும் அவளைக் காதலிக்கிறேன். ஆனால் அதற்கு அவள் எனக்குத் தரும் பரிசு இதுதான்,’ என்றேன் கேவல்களினூடே.

‘மச்சி, நீ இந்தப் பெண்ணை விட்டுவிடு. இது நீண்ட கால விட்டுப்போன உறவு,’ என்றான் ஸௌரப்.

‘சரி. நான் இனி அவளைப்பற்றி நினைக்கமாட்டேன். முடிந்துவிட்டது,’ என்றேன். இந்த நூற்றாண்டின் பெருத்த பொய்.

‘சரி! உள்ளே போகலாமா?’

‘இரு. இன்னும் ஒருமுறை அவளுடன் பேச வேண்டும். நான் அனைத்தையும் முடித்துவிட்டேன் என்று கூறணும்.’

‘வேண்டாம்...’

ஸௌரப் ஏதும் செய்வதற்கு முன்பு நான் அவள் நம்பரை மறுபடியும் அழைத்தேன். மணி அடித்தது. அவள் போன் கால் துண்டிப்பாள் என்று எண்ணினேன். ஆனால் யாரோ எடுத்தார்கள்.

‘யெஸ்?’ என்றது ஆண்குரல். நூற்றாண்டின் காதலன் ரகுவின் குரல்.

‘ஓ!’ என்றேன். ‘புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்.’

‘கேஷவ்! நான் மரியாதையாக நடந்து கொள்ளப்

பார்க்கிறேன். ஸராவைத் தொந்தரவு செய்வதை நிறுத்து.'

தே... பையன்! யாரிவன்? அவள் அப்பனா? காவலாளியா? 'நான் மரியாதைக்காகப் பார்க்கிறேன்,' யார் இப்படி எல்லாம் பேசுவார்கள்? அதற்கு அர்த்தம் தான் என்ன?

'நான் அவளைத் தொந்தரவு செய்யவில்லை,' என்றேன். வாய் குழறாமல் பேச முயற்சித்தேன்.

'நீ அப்படித்தான் செய்யறே. அடிக்கடி வேறு செய்யறே.'

'இல்லை.'

'என் முன்னாலேயே அடிக்கடி நடந்திருக்கிறது. தயவு செய்து நிறுத்து. உன்னைக் கெஞ்சிக் கேட்கிறேன்.' ரகுவின் குரலில் அமைதியும், நிதானமும் தெறித்தது. புத்தாண்டுக்கு இளநீர் மட்டுமே குடிப்பானோ?

'இங்கே பாரு சகோதரா,' என்று தொடங்கி அடுத்து என்ன சொல்வது என்று யோசித்தேன். விஸ்கி என்னைத் தர்க்கரீதியாக யோசிக்க விடவில்லை. ஒரு நல்ல வாக்கியமும் உருவாகவில்லை.

'ஸரா என்னுடையவள். நீ போடா,' என்று சொல்லத்தான் ஆசை. ஆனால் என்னுடைய மட்டையான நிலையில், அது சரியான யோசனையாக எனக்குத் தோன்றவில்லை.

'போன் காலை கட் பண்ணு,' என்று ஸரா பின்னாலிருந்து சொல்வது கேட்டது. சனியன்.

'சொல்லு, கேஷவ்?' ரகுவின் குரலில் அநியாயத்திற்கு பொறுமை.

'இங்கே பாரு சகோ,' என்று திரும்பவும் சொன்னேன். 'நான் ஸராவுடன் பேச முடியுமா?'

'அவளுக்கு உன்னுடன் பேச விருப்பமில்லை.'

'உனக்கு எப்படித் தெரியும்? அவளிடம் மொபைலைக் குடு.'

'அவள் தான் என்னிடம் சொன்னாள். எங்களைத் தொந்தரவு செய்யாதே. புத்தாண்டு வாழ்த்துக்கள். பை!'

'கேளு, ரகு!' என்றேன். என் குரல் தாழ்ந்தது.

'என்ன?'

'கேளு ரகு, நான் வந்து...' நான் சொன்ன விஷயங்களை இங்கே பகிர விரும்பவில்லை. முக்கியமாக எனக்கு நினைவில்லை. சொல்லமுடியாத விஷயங்களை ரகுவின் அம்மாவுக்கும், சகோதரிக்கும், ஏன் பாட்டிக்குக்கூடச் செய்வதாக மிரட்டினேன். இவற்றை சுத்தமான ஹிந்தியில்

ஸ்பஷ்டமாகக் கூறினேன். ராஜஸ்தானில் லாரி ஓட்டுனர்கள் கூட கேட்டால் முகம் சிவக்கும் வார்த்தைகளைப் பயன்படுத்தினேன்.

‘நான் ஒரு கம்பை எடுத்து...’ ஸௌரப் தொலைபேசியை என் கையிலிருந்து பிடுங்கிவிட்டான். அவன் தொடர்பைத் துண்டித்து மொபைலை பாக்கெட்டில் பத்திரப்படுத்தினான்.

‘என்ன கேவலமான செயல்?’ ஸௌரப் என்னைத் திட்டினான். அவன் அப்படிச் செய்யவே மாட்டான். நான் அவன் கண்களைச் சந்திக்கவில்லை. நான் என்ன செய்தேன் என்று எனக்குப் புரிந்தது.

‘நீ ஸராவைத் திட்டி சாபமிட்டாய்,’ என்றான்.

‘இல்லை. ரகுவை மட்டும் தான்,’ என்றேன்.

‘உனக்கு என்ன மானம், ரோஷம் எல்லாம் செத்துவிட்டதா?’ என்றான்.

‘நான் ஸராவுடன் பேச ஆசைப்பட்டேன். அந்த முண்டை எடுத்தான்.’

‘உன்னுடன் பேச அவளுக்கு விருப்பமில்லை,’ என்றான் ஸௌரப்.

‘இனி அவளை ஜென்மத்துக்கும் கூப்பிட மாட்டேன்.’

ஸௌரப் தலையசைத்து சோகமாகச் சிரித்தான்.

‘நான் நிஜமாகத்தான் சொல்கிறேன்,’ என்றேன்.

‘உனக்கு ஏன் இந்தப்பெண் மேல் இவ்வளவு பித்து?’

‘என் மொபைலைத் தருவியா?’ என்றேன் மிதமாக.

ஸௌரப் பாக்கெட்டைத் தட்டினான்.

‘நான் வைத்துக் கொள்கிறேன். உள்ளே உடனே வரவில்லையென்றால் உன் கண் எதிரே உன் மொபைலைச் சுக்கு நூறாகப போட்டு உடைப்பேன். இப்பவே.’

❖

சந்தன் ஹாலுக்குள் சென்றோம். ரசாயன ஆசிரியர், கமல் ஸார் எங்களருகே வந்தார்.

‘நல்வாழ்த்துக்கள் ஜி! மற்றொரு ஆண்டு, மற்றொரு ஜேஈஈ ஜி! மற்றுமொரு மாணவர் கூட்டம் ஜி,’ என்று ஹாஸ்யமாகப் பேசிய திருப்தியில் சிரித்தார்.

நான் என் கிளாஸை அவருடைய கிளாஸுடன் இடித்தேன்.

‘நீங்கள் இருவரும் எங்கே என்று அரோராஜி கேட்டார்,’

என்றார்.

‘எங்களுக்குக் கொஞ்சம் இயற்கையான காற்று தேவைபட்டது,’ என்றான் ஸௌரப்.

‘இப்போ கொஞ்சம் விஸ்கி,’ என்று கண்ணடித்தேன். ‘கமல்ஜி, எனக்கொரு கிளாஸ் கொண்டு வருவீர்களா?’

‘கண்டிப்பாக’ என்றார். ‘உடனே வருகிறேன்.’

அவர் சென்றபின் ஸௌரப் என்னை முறைத்தான்.

‘நில்லு,’ என்றான்.

‘கடைசி டிரிங்க். என் மொபைலைக் குடு.’

‘எப்பொழுதுமே தரமாட்டேன். நீ செய்தது சரி கிடையாது கேஷவ். அப்படிக் கத்தினே.’

‘கோலுஜி. நீ என்னைத் திட்டும் பொழுது பார்க்க கியூட்டாக இருக்கே. உன் வட்ட முகம் தக்காளி போல் சிவக்கிறது ஜி,’ என்றேன்.

‘நிறுத்து,’ என்றான்.

நான் அவனருகே நடந்தேன்.

‘புத்தாண்டு வாழ்த்துக்கள் ஜி. அடுத்த வருஷம், அடுத்த ஜோ௱’ என்று கூறி அவன் தொப்பையைக் கிச்சு கிச்சு மூட்டினேன்.

‘நிறுத்து.’

அவன் பாக்கெட்டுக்குள் கைவிட்டு என் மொபைலை எடுத்தேன்.

‘முடியாது,’ என்றான். சிரித்தபடி என் கையைத் தட்டி விட்டான்.

‘நீ இன்னமும் குண்டாகி விட்டாய், கோலு,’ என்றேன் அவன் தொப்பையை தடவியபடி. ‘உனக்கு இனிப்புகளைத் தவிர்க்க முடிவதில்லை, அப்படித்தானே?’

‘அடைய முடியாததை விரும்புவதைவிட இது தேவலை,’ என்று ஸௌரப் என் கையைத் தள்ளி விட்டான்.

# அத்தியாயம் 3

வாருங்கள். மிகச்சிறந்த ராஜ்புரோஹித் ஸார்,' என்றார் சந்தன் அரோரா. வாய் நிறைய உணவு இருந்ததால் பேச்சு குழறிக் கேட்டது.

மொத்த அறையிலும் பான் மசாலாவின் நெடி பரவியது. அதன் துவக்கம் சந்தனின் தடியான உதடுகள் தான். அவர் குட்கா சுவைத்தபடியே எனக்கு அமர ஒரு இருக்கையைக் கை காட்டினார். நான் அவர் வாயிலிருந்த குட்கா மென்று தீரும்வரைக் காத்திருந்தேன். அவர் பின்னால் தொங்கிய படங்களை வேடிக்கை பார்த்தேன். சிலவற்றில் முன்னாள் சிறந்த மாணவர்களின், ஐஐடி அனுமதிக் கடிதங்களுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்தார். ஒரு போலி சான்றிதழ் - கொட்டை எழுத்தில், 'சந்தன் ஸார், ஜேஈஈ ரசாயனத்தின் முதன்மை அரசர்!' ஒரு முன்னாள் மாணவன் செய்து கொடுத்திருந்தான். மற்றொரு புகைப்படத்தில் சந்தன் குளிர்கண்ணாடியை அணிந்து கைகளைக் கட்டிக்கொண்டு ஐஐடி டெல்லி கட்டிடத்தின் முன் நின்றார். அவர் ஐஐடி அனுமதித் தேர்வை வென்றுவிட்டார் என்பதை உணர்த்துவது போல எடுக்கப்பட்ட படம். அவர் ஐஐடி தேர்வில் தேர்வடையவில்லை. டெல்லி பல்கலைக்கழகத்தில் ரசாயனப் பேராசிரியர் (வெங்கடேஸ்வரா கல்லூரியில்) தன்னுடைய மாளவியா நகர் வீட்டில் அவர் பத்து வருடங்களுக்கு முன் கார் நிறுத்தும் இடத்தில் ரசாயன பாடத்திற்கு டியூஷன் கிளாஸ் நடத்தினார். சூடு பிடித்தது. அது சந்தன் கிளாஸாக மாறியது. இப்பொழுது அவர் அதே தெருவில் மூன்றுமாடிக் கட்டிடம் ஒன்றை வாடகைக்கு எடுத்து, பதினைந்து முழுநேர ஆசிரியர்களுடன் செயல்படுகிறார். ஏழு பேர் ஐஐடியில் படித்தவர்கள். அதில் அவருக்குப் பெருமை. 'நான் ஐஐடிக்குச் செல்லவில்லை. இப்பொழுது, பாருங்கள்... ஐஐடியில் படித்தவர்கள் எனக்கடியில் வேலை செய்கிறார்கள்,' என்று பீற்றிக் கொள்வார்... குழந்தைகளை கிளாஸில் சேர்க்க வரும் பெற்றோர்களிடம் அரோராவைப் பற்றி விசாரித்தால் இந்தப் பல்லவியைத்தான் பாடுவார். சில நேரங்களில் என்னைக் காட்சிப் பொருளாகப் பயன்படுத்திக் கொள்வார்.

‘இவனைப் பாருங்கள். ஐஐடி டெல்லி 2013 பேட்ச். இப்பொழுது எனக்கு வேலை செய்கிறான்,’ என்று கூறும் பொழுது ‘எனக்கு’ என்பதில் ஒரு கூடுதல் அழுத்தம் இருக்கும். ஒரு முறை அவர் இப்படிக் கூறினார், ‘இவனிடம் ஏதாவது தனித்தன்மை இருக்கா? இவன் ஐஐடியில் படிக்கலாம் என்றால், உங்கள் குழந்தையும் படிக்கலாம்.’ ‘புளிச்!’ ஒரு வாய் குட்கா குப்பைத்தொட்டியில் துப்பும் சத்தம் கேட்டு என் நினைவலைகளில் இருந்து மீண்டு வந்தேன்.

‘அப்புறம், ராஜ்புரோஹித் ஸார், உங்க கிளாஸஸ் எப்படிப் போகுது?’

நான் ஐஐடி காட்சிப் பொருள் என்பதைத் தவிர சந்தன் கிளாஸஸில் கணக்குப் பாடம் கற்றுக் கொடுத்தேன். சந்தன் அரோரா இன்று என்னை கூப்பிட்டதே அதை விசாரிக்கத்தான்.

‘நல்லா போகுது சந்தன் ஸார்,’ என்றேன் போலிப் புன்னகையுடன். ‘இப்பொழுது தான் ‘கால்குலஸ்’ முடித்தோம்.’

என் முன் ஒரு ஃபைலைத் தள்ளினார்.

‘ராஜ்புரோஹித் ஜி?’ என்றார், ‘இது தான் உங்களைப் பற்றி உங்கள் மாணவர்கள் அளித்த ஃபீட்பேக். சிலர் நீங்கள் அவர்களை ஐஐடியில் சேர வேண்டாம் என்று கூறுவதாகப் புகார் கூறுகிறார்கள்.’

‘இல்லை ஸார்.’

அவர் ஃபைலை மூடினார்.

‘பிறகு ஏன் அப்படிக் கூறுகிறார்கள்?’

‘ஸார், அவர்கள் படிக்காத மாணவர்கள். ஒவ்வொரு மாக்-டெஸ்டிலும் கடைசியாக வருபவர்கள். அறிவியல் ஆற்றல் துளியும் அற்றவர்கள். பெற்றோர்கள் அழுத்தம் தருகிறார்கள். அவர்கள் ஐஐடி பயிற்சியில் நேரத்தை வீணடிக்கவே வேண்டாம்.’

சந்தன் சாய்ந்து அமர்ந்தார். அவருடைய பருத்த சரீரத்தினால் அந்த நாற்காலி கிறீச்சிட்டது.

‘நாம் வேலை வாய்ப்பைப் பற்றி அறிவுரை கூற இங்கே இல்லை, ராஜ்புரோஹித் ஜி!’

‘ஆனால் அவர்களுக்கு ஐஐடியில் சேர விருப்பமில்லையே. பெற்றோர்கள் வற்புறுத்தலில் தான் இங்கு உள்ளனர்.’

‘நாம் எதற்கு அவர்கள் குடும்ப விவகாரத்தில் தலையிட வேண்டும்? நம் வேலை பாடம் எடுப்பது மட்டுமே.’

‘ஸார், ஆனால் ---’ என்றேன், அவர் என்னை வெட்டிப்

பேசுவதற்கு முன்பு.

‘நீங்கள் புது மாணவர்கள் யாரையும் சேர்க்கவில்லையே?’

‘ஸார், நான் வகுப்பிலேயே பிஸியாக இருக்கேன்.’

‘ஆனால் மார்க்கெட்டிங்கும் சேர்ந்து பார்க்க வேண்டும். செண்டருக்கு புது ஆட்கள் வந்தால் அவர்களைச் சந்தித்துப் பேசி சம்மதிக்க வைக்க வேண்டும். நீங்கள் அதைச் செய்வதே இல்லை.’

எனக்கு வெறுப்பாக இருந்தது. பெற்றோர்களைச் சந்திப்பது எனக்கு பிடிக்காத காரியம். ஐஐடிக்கு லாயக்கற்ற குழந்தைகளின் பெற்றோர்களைச் சந்திப்பது தீரப் பிடிக்காது. ஜேஈஈ தேர்வு கடினம். தேர்ச்சி பெறுபவர்கள் 2% மட்டுமே. அதனால் முயற்சிக்கும் முக்கால்வாசிப்பேர் வெற்றியடைவதில்லை. ஆனால் கோச்சிங் கிளாஸில் ஆள் பிடிக்கும் போது அப்படியெல்லாம் உண்மையை உடைக்கக்கூடாது. அவர்களைக் கனவு காண வைக்க வேண்டும் --- உங்கள் மகனோ மகளோ கண்டிப்பாக ஐஐடியில் சேருவார்கள் என்ற கனவு.

‘ராஜ்புரோஹித் ஜி, மன்னிக்கவும், நீங்கள் இன்னும் அதிகமான முயற்சியில் இறங்க வேண்டும்.’

‘நிச்சயமாக.’ நான் இப்படிப்பட்ட செயல்வீரன் இல்லை தான். செயல்வீரனுக்கு என்ன இழவு அர்த்தம் என்றே விளங்கவில்லை.

‘முயற்சி செய்கிறேன், ஸார்,’ என்றேன். என்னுடைய ரெஸ்யூமேவை லிங்க்டு-இன் இல் சரிபார்க்கணும். எனக்கு இதைவிடச் சிறந்த வேலைக்கான தகுதி இருக்கு. சொல்லப்போனால் சிறந்த வாழ்க்கைக்கே தகுதி இருக்கு.

❖

‘என்ன ஆச்சு? குட்கா சுவைக்கும் முண்டை என்ன தான் சொன்னான்?’ ஸௌரப் கேட்டான். சின்ன நாற்காலி, சின்ன ஹாலில், எங்கள் மிகச்சிறிய இரண்டு பெட்ரூம் ஃபிளாட்டில் அமர்ந்திருந்தோம். நான் பெரிய இரண்டு விரக்கடை விஸ்கியை ஊற்றிக் கொண்டிருந்தேன். புத்தாண்டு வீழ்ச்சிக்குப் பிறகு குடிப்பதில்லை என்று சத்தியம் செய்திருந்தேன். குடிக்கவில்லை. ஒரு மாதம் என்ற தடையையும் தாண்டி, மேலும் ஒரு வாரம் ஆகிவிட்டது.

‘மறந்துவிடு,’ என்று கூறி அவனுக்கும் ஒரு கிளாஸ்

கொடுத்தேன்.

‘ஏதோ நடந்திருக்கு. நீ பாட்டிலைத் திறந்து நாளாகிறது. அந்த காஷ்மீரி பெண்ணா?’

‘ஸரா? இல்லை.’

‘அவள் பெயரைச் சொல்லவே எனக்குப் பிடிக்கலை. நிஜமாகவா சொல்றே?’ என்றான் ஸௌரப்.

இல்லை என்று மறுத்தேன். அவன் கேட்பதில் தவறில்லை. ஸராவின் எண்ணம் எப்பொழுதும் என் மனதில் ஓடிக்கொண்டே இருந்தது. நாங்கள் இருவரும் சேர்ந்து சுற்றிய டிடிசி பஸ்ஸைப் பார்த்தால் கூட நினைவுகள் துரத்தும். அந்த நாள் பூரா அவள் நினைவுகளிலேயே லயித்துவிடுவேன். சிக்கன்காரி ஸல்வார் அணிந்த பெண்ணைப் பார்த்தால் போதும் - ஸராவுக்குப் பிடித்த உடை - அடுத்த ஐந்து மணி நேரம் வீண் தான். என் மூளையின் ‘வயர்கள்’ இடம் மாறிக் கொடுக்கப்பட்டுள்ளன. அனைத்து நரம்புகளும் ஸராவை நோக்கியே இயங்கின. என் விஸ்கி கிளாஸில் உள்ள ஐஸ்கட்டிகளைப் பார்த்தேன். ஐஸ் என்றால் பனி தான் நினைவு வரும். பனி என்றால் காஷ்மீர். காஷ்மீர் என்றால் ஸரா. எங்கள் காபி மேஜை மரத்தாலானது. மரம் என்றால் இயற்கை. ஸராவுக்கு இயற்கையில் ஈடுபாடு அதிகம். என் மூளை எதையும் ஸராவுடன் இணைக்கும்.

ஆனாலும் இன்று ஸராவுக்காகக் குடிக்கவில்லை.

ஸௌரப் அமைதியாக இருந்தான். நான் ஒரு பெரிய மிடறு விழுங்கினேன். எப்பொழுது தோண்டிக் கேட்கக்கூடாது என்ற இங்கிதம் ஆண்களுக்குத் தெரியும். என் முதல் கிளாஸை முடித்து அடுத்ததை ஊற்றிக் கொண்டேன். அவனுக்கும் கொடுத்தேன்.

‘நீ லிமிட்டுக்குள் இருந்தால் நானும் உன்னுடன் சேர்ந்து குடிக்கிறேன்,’ என்றான் ஸௌரப்.

‘இன்றிரவு எனக்குத் தேவைப்படுகிறது.’

‘என்ன விஷயம் என்று என்னிடம் சொல்லலாம். சொல்ல விருப்பமிருந்தால்.’

‘என் வேலை பிடிக்கவில்லை.’

‘எனக்கும் தான். புதிதாக ஏதாவது சொல்,’ என்று நக்கலாகச் சிரித்தான்.

‘சந்தன் கிளாசிலேயே முடங்கிவிட முடியாது. நாம் ஐஐடிக்கு சென்றோம்! கடவுளே!’

‘நீ போன மச்சி. நான் வெறும் ஒரு என்ஜடி - காரன். நாக்பூரில் படித்தவன்.’

‘நீ எந்த விதத்திலும் குறைந்தவன் இல்லை. இந்த முட்டாள் கோச்சிங் செண்டரில் எப்படி சிக்கினோம்?’

‘அந்த சந்தன் முண்டை ஏதாவது சொன்னானா?’

‘ஆமாம். ஆனால் அது மட்டுமல்ல.’

‘என்ன?’

‘நான் இரண்டு இன்டர்வியூவில் சொதப்பினேன்.’

‘என்ன இன்டர்வியூ?’ ஸௌரப் நிமிர்ந்து அமர்ந்தான்.

‘ஓகே! ஸாரி! நான் சில கம்பெனிகளுக்கு விண்ணப்பித்திருந்தேன். லிங்க்டு-இன்ல் விளம்பரம் பார்த்தேன்.’

‘என்னிடம் சொல்லவே இல்லை!’

‘ஸாரி. சொல்லத்தான் நினைத்தேன். ஏதாவது நடக்கட்டுமே என்று காத்திருந்தேன். பத்து இடங்களுக்கு விண்ணப்பித்ததில் இரண்டு அழைப்பு தான் வந்தது. இருவருமே வேலையில்லை என்று ஒரே நாளில் தகவல் தந்தனர்.

‘யாரு?’

‘இன்ஃபோஸிஸ் மற்றும் ஃப்ளோ டெக் - ஒரு சிறிய மென்பொருள் கம்பெனி. குர்காவோனில் இருக்கிறார்கள். நான் நன்றாகச் செய்ததாக நினைத்தேன். என்ன இழவுடா! பாடி ஷாப் துபாய்க்கு இந்திய ப்ரோகிராமர்களை தேர்வு செய்தனர். எனக்கு வேலை கிடைக்கவில்லை.’

ஒரே மடக்கில் விஸ்கியை விழுங்கினேன்.

‘விட்டுத்தள்ளு,’ என்றான் ஸௌரப் சற்று நேரத்திற்குப் பிறகு.

‘ஐஐடிக்கு பிறகு நான் ஏன் கோச்சிங் செண்டரில் சேர்ந்தேன் என்று கேட்டார்கள்.’

‘அதில் ஒரு களங்கம் மறைந்திருக்கு. ரெஸ்யூமேவில் கோச்சிங் கிளாஸ் பெயர் இருந்தால் கார்ப்பரேட் தகுதி மறைந்துவிடும்,’ என்றான் ஸௌரப்.

‘லிங்க்டு-இன் அப்டேட் செய்தாயா?’

‘அப்டேட் செய்ய என்ன இருக்கு?’

என் மொபைலில் ஸௌரப்பின் லிங்க்டு-இன் அக்கௌண்டைத் திறந்தேன்.

‘ஒரு நல்ல புகைப்படமாவது ஏத்து. குழந்தைகளைப்

பலாத்காரம் செய்பவன் போல் தெரிகிறாய்,' என்றேன்.

'காட்டு,' என்று ஸௌரப் மொபைலை என் கையிலிருந்து வாங்கினான். 'நீ கூத்தாடி மாதிரி இருக்கே. உன் தோடு ஏன் தெளிவாகத் தெரிகிறது? இது வேலை கிடைக்க உதவுமா?'

நான் மொபைலை வாங்கி என் படத்தைப் பார்த்தேன்.

'என் ராஜஸ்தானி கலாச்சாரம்.'

'எந்த டெக் கம்பெனியிலும் நகைகள் அணியும் ஆளை வேலைக்கு எடுக்க மாட்டார்கள்.'

நான் மொபைலை மேஜை மீது வைத்தேன்.

'நாம சுத்தமா வீணாப் போனவங்க. ஒரு நல்ல ப்ரொஃபைல் படம் போடக்கூட லாயக்கில்லை.'

'ஸார், அதனால் தான் சொல்கிறேன். குட்கா சாப்பிடு. சந்தன் கிளாஸை ஜாலியாக எடு. அர்த்தமற்ற உன் வாழ்வை ரசி.'

நான் ஸௌரப்பை முறைத்தேன்.

'ஸாரி, ஸாரி. சரி. நாம் எதையும் கைவிட வேண்டாம்.'

ஸௌரப் டிவியைப் போட்டான். செய்திகள் சேனலுக்கு மாறினான். பனாரஸ் ஹிந்து பல்கலைக்கழக கேம்பஸில் காவலர்கள் பெண்கள் மீது லத்தி-சார்ஜ் செய்யும் செய்தி ஓடிக் கொண்டிருந்தது. பெண்கள் தவறா? பலாத்காரத்துக்கு எதிராகக் குரல் கொடுத்து புரட்சியில் இறங்கினர்.

'நிஜமாகவா? அது உ.பி. போலீஸ். அமைதியான, வன்முறையற்ற போராட்டத்தில் போலீஸ் அடிதடியா?' என்றான் ஸௌரப்.

ஸராவுக்குப் போராட்டங்களில் பங்கேற்கப் பிடிக்கும். என் மூளை ஒரு நினைவலையைப் பளிச்சிட்டது. என் நரம்பு மண்டலம் வேலையில் இறங்கியது. பல ஆண்டுகளுக்கு முன்னர் பயணம் செய்தேன். எங்களுக்குள் ஒரு போராட்ட - டேட்டு நடைபெற்றது.

# அத்தியாயம் 4

**ஏழு ஆண்டுகளுக்கு முன்னர்.**

‘ஜந்தர் மந்தருக்குப் போராட்டத்திற்குப் போவது எப்படி ஒரு டேட் ஆகும்?’ என்றேன். கன்னாட் ப்ளேஸ், பாரகம்பா ரோடு மெட்ரோ ஸ்டேஷன் வழியாக நடந்து பார்லிமெண்ட் தெருவை அடைந்தோம்.

அவள் தன் முடியை ஒரு கொண்டையாகக் கட்டியிருந்தாள். வாயில் ஹேர்பின் கடித்தபடி, ‘என்னுடன் சேர்ந்து கொண்டதற்கு நன்றி. இது எனக்கு ஒரு பெரிய விஷயம்.’

‘எதற்கான போராட்டம் இது?’ என்றேன். காஷ்மீர் சம்பந்தப்பட்டது என்று போனில் கூறியிருந்தாள். ரான்தேவூ-வுக்கு பின், வரவழைத்துக் கொண்ட தைரியத்தில் அவளைப் போனில் அழைத்தேன். வெளியே போகலாமா என்றேன். என்னை டேட்டுக்கு அழைக்கிறாயா என்று கிண்டலடித்தாள். நான் ‘ஆமாம்,’ என்றேன் சூதாடுபவனைப் போல். வருமோ, வராதோ! அவளுக்கு எங்கே செல்ல விருப்பமோ அங்கே போகலாம், அதுவும் எப்பொழுது வேண்டுமோ என்றேன். அவள் போராட்டத்தைத் தேர்ந்தெடுத்தாள்.

‘இந்திய ராணுவம் காஷ்மீர் பொதுமக்கள் மீது அராஜகமாக நடக்கிறது. அதற்கு மறுப்பு தெரிவிக்கும் போராட்டம்.’

என்னைச் சுற்றியிருக்கும் நிறைய பேரைப் போல் எனக்கும் காஷ்மீர் பிரச்சினைப் பற்றி தெளிவாக எதுவும் தெரியாது. பாகிஸ்தானுக்கு இது தேவை என்று தெரியும். இந்தியா விட்டுத்தராது. சில காஷ்மீர் மக்கள் இரண்டு நாட்டுடனும் இணைவதில் விருப்பம் இல்லை என்ற நிலைப்பாட்டில் உள்ளனர். எனக்குக் கொஞ்சமும் அக்கறை இல்லை. கிளாஸ் கட்டடித்து விட்டு ஸராவுடன் இருக்க ஒரு சந்தர்ப்பம். ஸரா-மிகவும் அழகான, சாமர்த்தியமான, உலகிலேயே கூடுதல் பேச்சுத்திறன் வாய்ந்த பெண். நாங்கள் ஜந்தர் மந்தரை அடைந்தோம். ஐம்பது மாணவர்கள் அந்த நினைவுச் சின்னத்தின் முன்னால் கூடியிருந்தனர். கையில் கோஷங்கள் எழுதிய

அட்டைகள்.

‘காஷ்மீர் அப்பாவிகளைக் கொல்வதை நிறுத்துங்கள்.’

‘துப்பாக்கிச் சுடுதல் போராளிகளைக் குருடாக்கும் அபாயம். நிறுத்துங்கள்.’

‘காஷ்மீரில் வன்முறைகளை நிறுத்துங்கள் - இந்திய ராணுவம் கவனிக்க!’

ஸரா எனக்கு முன்னால் நடந்தாள். ஒரு சிறு கூட்டத்திடம் சென்றாள். அவர்கள் எழுந்து அவளை அணைத்துக் கொண்டனர். என்னை அவர்களுக்கு அறிமுகப்படுத்தினாள்.

‘அஃப்ஸானா, ஜஹீர் மற்றும் கரீம்,’ என்றாள் ஸரா, ‘இது என் நண்பன் கேஷவ்.’

அவர்களுடன் கை குலுக்கினேன். நான் மதச்சார்பற்றவன் தான். எனினும் இதைச் சொல்ல வேண்டும். இந்த நிலை எனக்குப் பழக்கப்பட்டது இல்லை. என் பிறந்த ஊரான ஆல்வாரில் நாங்கள் வேற்று மதத்தினருடன் பழக்கம் வைத்துக் கொண்டதில்லை. இஸ்லாமியக் கூட்டத்தில் என்னைப் பார்த்தால் என் அம்மா மயக்கமே போட்டுவிடுவாள். என் அப்பாவின் நண்பர்கள் கூட்டமும் மொத்தமும் ஆர்.எஸ்.எஸ். அதனால் எங்களுக்கு இஸ்லாமியர்கள் பழக்கம் இல்லை.

‘ரஜாக், சலீம், இஸ்மாயில்,’ என்று ஸரா வேறு சிலரை அறிமுகப்படுத்தினாள். நான் கை குலுக்கிப் புன்னகைத்தேன். என் பெயரைக் கேட்டு அவர்கள் வியந்ததைக் கவனித்தேன். என் தோடும் அவர்களை பாதித்திருக்கும். ஒருவர் எனக்கும் போராட்ட அட்டையை வழங்கினார். நான் சற்று ஜாக்கிரதையாக, ‘பள்ளத்தாக்கில் அமைதி வேண்டும்,’ என்ற அட்டையை எடுத்துக் கொண்டேன். கையில் பிடித்தபடி அனைவரும் தரையில் அமர்ந்தோம். ஸரா என்னைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

‘என்ன?’ என்றேன்.

‘இங்கே வந்து எனக்கு ஆதரவு தந்ததற்கு நன்றி.’

ஆமாம். அவளை ஆதரிக்கிறேன். அவளுடன் இருக்க விரும்புகிறேன். ஆனால் போராட்டத்தை ஆதரிக்கிறேனா? எனக்குத் தெரியாது.

‘என்ன நடக்கிறது இங்கே?’ என்றேன்.

‘சென்ற வாரம், காஷ்மீரில் போராளிகளை விரட்ட இந்திய ராணுவம் துப்பாக்கிச் சூட்டைப் பயன்படுத்தினர். ஒரு போராளியின் கண்பார்வை போய்விட்டது.’

‘அட கஷ்டமே,’ என்று அதிர்ந்தேன்.

‘ஆமாம்! இது நிற்க வேண்டும். காஷ்மீரில் அமைதி வேண்டும்.’

‘ஆனால் ராணுவம் ஏன் துப்பாக்கியைத் தூக்கினர்?’

‘ஏன் என்றால் அவர்கள் அதைத்தான் செய்வார்கள்,’ என்றான் இஸ்மாயில். அவன் நண்பர்களுடன் எழுந்து நின்று கோஷமிட்டான். யாரும் இல்லாத போது ஸரா என்னிடம் பேசினாள்.

‘அது அவ்வளவு எளிதல்ல. போராளிகள் ராணுவத்தின் மீது கல்லெறிந்தனர்.’

‘ஏன்?’ என்றேன் குழப்பமாக.

‘ராணுவம் தீவிரவாதிகளை காஷ்மீரில் தேடுகிறது. தீவிரவாதிகள் பொதுமக்களில் ஒருவராக மறைகின்றனர். அவர்களைத் தேடும் பொழுது பொதுமக்களுக்கும் துன்பம் நேருகிறது. அதனால் பொதுமக்களுக்கு இந்திய ராணுவத்தைப் பிடிப்பதில்லை.’

‘ராணுவம் வேறு என்ன தான் செய்ய முடியும்?’

‘அப்பாவிகளைத் துன்புறுத்தக் கூடாது, கண்டிப்பாக. எதற்குத் துப்பாக்கிச் சூடு?’

‘உன் மீது கல்லெறிந்தால் நீ என்ன செய்வே?’

‘உனக்குப் புரியவில்லை,’ என்றாள் ஸரா. ‘இது ரொம்பக் குழப்பமானது. காஷ்மீர் விவகாரம் லேசல்ல.’

எனக்குப் புரியத்தான் இல்லை. ஸராவுடன் விவாதிக்கலாம். ஆனால் எனக்கு விவகாரத்தைப் பற்றி அதிகம் தெரியாது, ஸரா ஒரு விவாத நிபுணி, முக்கியமாக எனக்கு அவளைப் பற்றிய புரிதல் தேவைப்பட்டது. மட்டமான அரசியல் அலசலில் அவளை இழக்க விரும்பவில்லை.

‘நீ சொல்வது முற்றும் சரி. நீ எனக்கு காஷ்மீரைப் பற்றிய தகவல்களைக் கூறு. திரும்பவும் சந்தித்தால்,’ என்றேன்.

‘சந்திப்போம்,’ என்று என் கையை இதமாக அழுத்தினாள். அவளே என்னைத் தொடுவது நல்ல விஷயம் என்று நினைத்தேன்.

கோஷங்கள் ஓங்கி ஒலித்தன. ஸரா என் பக்கம் சாய்ந்து என் காதில் கிசுகிசுத்தாள், ‘இங்கே பார். எனக்குத் தேவை அமைதி. வன்முறை இருதரப்புக்கும் நல்லதில்லை. எனக்கு இந்தியாவும் பிடிக்கும், காஷ்மீரும் பிடிக்கும்.’

நான் தலையசைத்து அவளைப் பார்த்துப் புன்னகைத்தேன்.

‘காஷ்மீருக்கு முன்னேற்றம் தேவை. அதனால் தான் என் படிப்பை முடித்துவிட்டு இங்கே ஆசிரியப் பணிக்குச் செல்ல எனக்கு விருப்பம். கல்வி அமைதியைக் கொண்டு வரும். வேறு எதுவும் அதைச் சாதிக்க முடியாது.’

‘அமைதியான டின்னர் சாப்பிடலாமா, இன்றிரவு?’ என்றேன். அவள் சிரித்தாள். நான் அதை ஒப்புதலாகக் கருதினேன்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு

‘நாம் ஏன் ஐந்து மணிக்கு எழுந்து கொள்ள வேண்டும்? எனக்கு போதை தெளியவில்லை. இந்த இடம் எவ்வளவு தூரம்?’ என்று கேட்டேன். மூச்சு வாங்கியது.

‘உஷ்ஷ்! மலை மேல் போனா பாலா சிலை தெரிகிறதா? அங்கே தான் போகிறோம். மேலும் பத்து நிமிடம் தான்,’ என்றாள் ஸரா.

மிகவும் ஜாக்கிரதையாக ஒவ்வொரு அடியாக அந்தக் கருப்புக் கற்கள் மீது நடந்தேன். அந்த வருட ஆரம்பத்தின் முதல் சூரிய உதயத்தை அந்த இடத்திலிருந்து பார்க்க வேண்டும் என்று ஸரா விரும்பினாள்.

‘நாம் கோவாவுக்கு ஜாலியாக இருக்கத்தானே வந்தோம்? இவ்வளவு காலையிலே எழுந்திருப்பது சட்டப்படி அனுமதிக்கப்பட்ட விஷயம் தானா?’ என்றேன்.

ஸரா சிரித்தாள்.

‘நினைத்துப் பார். என்ன ஒரு அற்புதமான இரவைக் கழித்தோம்,’ என்றேன். ‘இப்போ இது என்ன தண்டனையா?’

எங்கள் முதல் விடுமுறைக்கு கோவா வந்தோம். புத்தாண்டு இரவை ஒன்றாகக் கொண்டாடும் திட்டம். முந்தைய இரவு நானும், ஸராவும் உடலுறவில் ஈடுபட்டோம். நாள் பூராவும் அவளை அணைத்துக் கொண்டு, கட்டிலில் சுருண்டு கிடப்பது. அவளை எவ்வளவு காதலிக்கிறேன் என்று சொல்வது என்று கற்பனை செய்திருந்தேன். ஆனால் 4 மணிக்கு அலாரம் வைத்து, அடித்தெழுப்பும் ஒருவரிடம் மாறாக் காதலை எப்படி உரைப்பது?

‘உனக்கு இதன் அருமை புரியும், மிஸ்டர்,’ என்றாள் ஸரா. எனக்கு பத்தடி முன்னால் சென்று கொண்டிருந்தாள்.

கோவாவில், பனாஜியில் கடற்கரை ஓரமாக இருந்தது. டோனா பாலா, மாண்டவி மற்றும் ஜுவாரி நதிகள் அரபிக்கடலை சேரும் இடத்தில் இந்த கல்பாதை இருந்தது. திரைப்படங்கள்

மூலம் பிரபலமடைந்த அந்த ‘இருவர் சிலை,’ எங்கள் ஓட்டலிலிருந்து நாற்பத்து-ஐந்து நிமிடங்கள் நடை தூரத்தில் இருந்தது.

பெரிய பாறையின் மீது அமர்ந்தோம். வானம் இன்னமும் இருட்டாக இருந்தது. விடியவில்லை.

‘நாம் மேற்கு நோக்கி அமர்ந்திருக்கிறோம். கிழக்கே தான் சூரியன் உதிக்கும்,’ என்றேன்.

‘எனக்குத் தெரியும்,’ என்றாள் ஸரா. ‘இது புத்தாண்டின் தொடக்கம். விடியும் முதல் கிரணங்களை உன்னுடன் கை கோர்த்துக் கொண்டு பார்க்க வேண்டும்.’

என் கை விரல்களைப் பற்றிக் கொண்டாள். நாங்கள் இருட்டான வெற்றிடத்தை வெறித்தோம். இருண்ட வானம், தொலை தூரக்கடல். என் வாழ்விலேயே சிறந்த இரவு என்று குறிப்பிடும் முந்தைய இரவை நினைத்துப் பார்த்தேன். வானம் லேசாகச் சிவந்தது.

‘புத்தாண்டு வாழ்த்துக்கள், என் கண்ணா!’ என்றாள் ஸரா. என் கைகளை உதட்டருகே கொண்டுச் சென்றாள்.

‘என் கண்ணே, புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்,’ என்றேன். முத்தமிட்டோம். வானம் வெளுக்கும் வரை நிறுத்தவில்லை.

அவள் முகத்தைப் பார்த்தேன். இவ்வளவு அழகுக்கு என்னால் பழகிக் கொள்ள முடியுமா?

‘நீ ஏன் என்னை காதலிக்கிறாய்?’

‘என்ன?’ ஸரா உரக்கச் சிரித்தாள். ‘நல்லது சொல்லணும்னு எதிர்பார்க்கிறாயா?’

‘இல்லை. நிஜமாகத்தான் கேட்கிறேன். ஏன்? நீ ரொம்ப அழகு, புத்திசாலி, உன்னுடன் இருப்பதே மகிழ்ச்சி தரும் விஷயம்; சாமர்த்தியமாகப் பேசும் திறன் கொண்டவள். உனக்கு யார் வேண்டுமானாலும் கிடைப்பார்கள். என்னை ஏன் தேர்ந்தெடுத்தாய்?’

‘நீ அழகானவன் என்று நினைக்கிறேன்.’

‘நான் அவசியம் தெரிந்து கொள்வதற்காகக் கேட்கிறேன், ஸரா.’ தமாஷ் செய்து கழண்டுக் கொள்ள அனுமதிக்கப் போவதில்லை. ஸரா ஆழமாக மூச்சை இழுத்து நிறுத்தினாள். பிறகு பேசினாள்.

‘ஒரு பெண்ணின் புத்திசாலித்தனத்தைப் புரிந்து கொண்டு அதை ஆமோதிக்கும் ஆணைச் சந்திப்பது, மிகவும் கஷ்டம்.’

‘என்ன?’

‘நானும் நிஜமாகத்தான் சொல்கிறேன். உனக்கு அரசியல் அறிவு இல்லை. அந்த அப்பாவித்தனம் பிடிச்சிருக்கு.’

‘எனக்கு அரசியலே பிடிக்காது.’

‘எனக்குத் தெரியும். நீ இடது சாரியோ, வலது சாரியோ, எந்த சித்தாந்தமும் இல்லாதவன். ஆனாலும் இயற்கையிலேயே நல்லவன். பெண்களை பேதமோ, இழிவோ படுத்துவதில்லை. மதச்சார்பற்றவன். நல்லவன்.’

நான் தலையசைத்துச் சிரித்தேன்.

‘ஆனால் முக்கியமான காரணம் இந்தத் தோடு தான்.’

‘என்ன?’

‘ஏதோ ----- காரணம் குறிப்பிட முடியாத, இனம் தெரியாத கவர்ச்சி. இங்கே வா,’ ஸரா என்னை இழுத்து அணைத்தாள். டோனா பாலா சிலை என்னைப் பார்த்துக் கண்ணடித்தது என்று நான் சத்தியமே செய்வேன்.

❖

‘மச்சி, எங்கே இருக்கே?’ ஸௌரப் விரல் சொடுக்கினான். என் கண்முன் விரலை ஆட்டினான். நான் மறுமுறை டி.வி.யைப் பார்த்தேன். மனம் என்னவோ ஜந்தர் மந்தர் காட்சிகளை ஓட்டிக் கொண்டிருந்தது.

‘ஆகா’ என்றேன். ‘நான் இங்கே தான் இருக்கேன். என்ன சொன்னே?’

‘இந்த நாடே பைத்தியமாகிவிட்டது என்றேன். அந்தக் கல்லூரிப் பொறுப்பாளர் கூறுவதைக் கேள். ஒவ்வொரு பெண் சொல்லும் புகாரையும் கணக்கில் எடுத்துக் கொள்ள முடியாது என்கிறார்.’

‘முட்டாள்,’ என்றேன். மனம் என்னவோ டோனா பாலாவில் இருந்தது.

‘அவள் நினைவில் தொலைந்துவிட்டாய்,’ ஸௌரப் கண் விழிகளை உருட்டினான். ‘உன் முகத்தைப் பார்த்தே என்னால் சொல்ல முடியும்.’ நான் அவளைப் பற்றித்தான் எப்பொழுதுமே யோசித்துக் கொண்டிருக்கிறேன் என்று சொல்ல வேண்டும் போலிருந்தது.

‘அது வெறும் விஸ்கி.’

‘விஸ்கி மட்டுமல்ல. இன்று என்ன தேதி என்று எனக்கு

தெரியும், மச்சி,' ஸௌரப் சொல்லியபடி சோபாவில் சாய்ந்தான்.

'என்ன தேதி?' என்றேன்.

நான் என் மொபைலை எடுத்துத் தேதியைப் பார்த்தேன். வியாழன், பிப்ரவரி 8. சில மணி நேரங்களில் பிப்ரவரி 9; ஸராவின் பிறந்தநாள்.

'அட, ஆமாம். வாவ்! நான் இன்று அதைப்பற்றி சிந்திக்கவே இல்லை,' என்றேன்.

'இதுதான் முதல் முறை,' என்றான் ஸௌரப். 'வாழ்த்துக்கள். உன்னை நீ நொந்து கொள்வது இதற்காக இல்லை. மற்ற காரணங்களுக்காகத் தான்.'

'நான் இரண்டு நாட்களுக்கு முன்பு யோசித்தேன்,' என்றேன். அவளுக்கு வயது இருபத்தி ஏழு. நான் கிளாஸைக் கீழே வைத்தேன். என் கைகளால் தலையைப் பற்றிக் கொண்டேன். அவள் நினைவுகளைப் பிழிந்து வெளியே எறிய நினைத்தேன். அவளை நினைக்க விருப்பம் இல்லை. எப்படிக் கொண்டாடினோம், அவளுடைய பிறந்த நாட்களை. எப்படி மாமரம் ஏறி, ஜன்னல் வழியாக அவள் ஹாஸ்டல் அறைக்குள் சென்றேன். கையில் கேக்கும், பூச்செண்டும் ஏந்திக் கொண்டு சென்றேன். அந்த இரவு முழுவதையும் எப்படிக் கழித்தோம். படுக்கையில், கால்கள் பின்னி, ஒன்றாகச் சேர்ந்து வாழும் கற்பனையில் வாழ்ந்தோம். நான் அப்படித்தான் நினைத்தேன்.

'ஸாரி, நான் அவள் பேச்சை எடுத்திருக்கக்கூடாது. உன் நினைவில் இல்லை என்பது எனக்குத் தெரியாது,' என்றான் ஸௌரப்.

நான் தலையசைத்தேன். நெற்றியைப் பிடித்துக் கொண்டேன்.

'விடு. என்னால் இதைச் சமாளிக்க முடியும்.'

'அவளைக் கூப்பிடாதே. போன முறை நடந்தது நினைவிருக்கிறதா?'

என் கைகள் என் தலையை விட்டன. எனக்கு விஸ்கியை வாயிற்குள் எடுத்துச் செல்ல கைகள் தேவைப்பட்டன.

'நான் இனி அவளை எப்பவுமே கூப்பிட மாட்டேன். எனக்கு அவமானப்பட சக்தியில்லை,' என்றேன். ஒரு மனம் அவள் டிபியை வாட்ஸப்பில் பார்க்கத் துடித்தது. பிறந்தநாளுக்காகப் புதிதாக ஏதாவது வைத்திருப்பாளோ? போன வாரம் அவளும், ரகுவும் எடுத்துக்கொண்ட ஸெல்ஃபி. ஒருவர் மீது ஒருவர் கை போட்டுக் கொண்டு அணைத்துக் கொண்டிருந்தனர். அவள்

அதை மாற்றினால் நன்றாக இருக்குமே என்று நினைத்தேன். சரி! நான் எதுவுமே நினைக்காமல் இருப்பதே நல்லது. நான் பார்க்கவே போவதில்லை.

ஸௌரப் நான் சொல்வதை நம்பாமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தான்.

'என் போனை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்,' என்றேன்.

'இல்லை மச்சி, உன்னை நம்புகிறேன்,' என்றான் ஸௌரப். 'உன் இந்த வலிமையைக் கொண்டாட இன்னொரு டிரிங்க் அடிக்கலாமா?' எங்கள் கிளாஸை நிரப்பினான். விஸ்கி பாட்டில் பாதியாகக் குறைந்துவிட்டது. மணி பார்த்தேன். பதினொன்றரை. சரி! என்னால் இதைச் செய்ய முடியும்.

என் நண்பனுடன் வியாழன் இரவு தண்ணியடித்து ஜாலியாக இருக்க முடியும், அவளைக் கூப்பிடாமல். அதுவும் அவள் பிறந்தநாளன்று. வருடங்களுக்குப் பிறகு முதன்முறையாக இந்த உறுதியை உணர்ந்தேன். நாங்கள் பிரிந்தபின் வந்த நான்கு பிறந்தநாட்களின் போதும் நள்ளிரவில் முதல் ஆளாக அவளை அழைத்தேன். ஆனால் நான்கில் மூன்று முறை அவள் என் அழைப்பை ஏற்கவில்லை. ஒரு முறை பேசிய பொழுது 'என் குடும்பம் என்னைச் சுற்றியிருக்கு என்னால் பேசமுடியாது,' என்றாள். நான் வாழ்த்துக்கள் கூறத்தான் கூப்பிட்டேன் என்றேன். ஒரு உப்பு பெறாத நன்றியை உணர்ச்சியின்றி உதிர்த்தாள். ராங் நம்பருக்குக்கூட கொஞ்சம் உணர்ச்சியுடன் பதிலளிப்போம். அவ்வளவு எளிதா என்ன, ஒருவரைத் தூக்கி எறிவது? டி.வி. சேனல் மாற்றுவது போல் ஒருவரை மாற்ற முடியுமா? சரி - பிரிந்ததற்கு நான் தான் காரணம் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் என்னை மறப்பது அவ்வளவு எளிதா? என்னால் மட்டும் ஏன் முடியவில்லை? என் மூளையில் கோளாறா? விடவே மாட்டேன் என்று படுத்துகிறதே? ஏன் திரும்பத் திரும்ப நினைக்கிறேன்? மணி பார்த்தேன். நள்ளிரவு. என் உடல் இறுகியது, தன்னிச்சையாக இயங்கும் என் போக்கைக் கட்டுப்படுத்தினேன். மொபைலை எடுத்து அவளைக் கூப்பிடு என்று மனம் ஆர்ப்பரித்தது. நான் இன்னும் உன்னைக் காதலிக்கிறேன். தயவு செய்து எனக்கு ஒரு வாய்ப்பு கொடு... ப்ளீஸ்... ப்ளீஸ்...

என் நினைவலைகளை மறுபடியும் இன்றைய தேதிக்குத் திருப்ப சிரமப்பட்டேன். டிரிங்க் முடிந்துவிட்டது. மேஜையில் ஐஸ் இல்லை. எழுந்து செல்ல ஒரு சாக்கு கிடைத்தது. கிச்சனுக்கு சென்று பிரிட்ஜிலிருந்து ஐஸை எடுத்தேன். திரும்ப வந்து இன்னொரு பெக் ஊற்றிக் கொண்டேன். நள்ளிரவு கடந்து

பத்து நிமிடம் ஆகிவிட்டது. வாவ்! தப்பித்துவிட்டேன். நல்லவேளை ஸௌரப் பேச்சை மாற்றினான்.

‘சந்தன் கள்ளக்காதலில் ஈடுபட்டிருக்கிறார்.’

‘இல்லை. இருக்க முடியாது. யார் அவருடன் உறவு வைத்துக் கொள்வாள்?’ என்றேன்.

‘அவருடைய செகரெட்டரி தான்.’

‘ஷீலா ஆன்ட்டியா?’ என்று இளித்தேன். ‘நிஜமாகவா சொல்றே? அவளுக்கு ஒரு ஐம்பது வயது இருக்காது. என்ன ஒரு நூறு கிலோ இருப்பாளா?’

‘நம்மாளுக்கு ஏற்றவள் தான். பெரிதாக இருந்தால் சந்தோஷம் தான்,’ என்று ஸௌரப் சிரித்தான்.

‘ஷீலா ஆன்ட்டியும் சந்தனுமா? என்ன ஒரு கொடூரமான கற்பனை!’

‘உன்னை யார் கற்பனை செய்து பார்க்கச் சொன்னது,’ என்றான் ஸௌரப்.

நாங்கள் இளித்தோம். சந்தன் கிளாஸஸ் சேர்ந்ததிலிருந்து எனக்கு ஷீலா ஆன்ட்டியைத் தெரியும். அவள் அடிக்கடி என்னுடன் டிபனைப் பகிர்ந்து கொள்வாள். நான் கடைசியாகக் கேள்விப்பட்ட வரை அவளின் திருமணமான மகனுக்குக் குழந்தை பிறக்கப் போகிறது.

‘நேற்று எனக்கு அவள் வெண்டைக்காய் கொடுத்தாள்,’ என்றேன். ‘அப்படித்தான் என்னால் அவளைப் பார்க்க முடிகிறது. சுவையான உணவைப் படைக்கும் பெண். இப்போது நீ சொல்வது, இரு கேவலமாக ----- உனக்கு எப்படித் தெரியும்?’

‘அவளிடம் வாரத்துக்கான வருகைப் பதிவேட்டைக் கொடுக்கச் சென்றேன். அவள் மொபைல் திறந்து கிடந்தது. சந்தன் வாட்ஸப் மெஸேஜ் அனுப்பியிருந்தார்.

‘என்ன செய்தி?’

‘முத்தமிடும் இமோஜி. சில சிவப்பு உதடுகள்.’

‘இமோஜிக்கு அர்த்தம் தெரியாத மடையனோ?’

‘ஷீலாஜி, நீ கொள்ளை அழகு,’ என்று அனுப்பியிருந்தார்.

‘என்னது!’ என்று அலறினேன். இருக்கவே முடியாது! அவர் வெறும்...’

‘அடுத்தது, “ஷீலாஜி, இன்றிரவுக்காகக் காத்திருக்க முடியவில்லை” என்றான் ஸௌரப். ‘நான் பார்த்தேன் மச்சி. தலைகீழாகத் தான் தெரிந்தது. ஆனாலும் பார்த்தேன்.’

‘வாவ். எங்கே செய்வார்கள்?’

‘வேறு எங்கே? ஆபீஸ் சோபாவைப் பார்த்ததில்லை?’

‘ஐயோ. நான் பலமுறை அதன் மீது அமர்ந்திருக்கிறேன்.’

‘அவர்கள் பிறகு துடைத்து விடுவார்கள் என்று நினைக்கிறேன்,’ என்றான் ஸௌரப்.

‘வாயை மூடு,’ என்றேன். இனி அந்த ஆபீஸில் அமரவே மாட்டேன்.’

‘அவன் முடித்த பிறகு ஷீலாவைத் துடைக்கச் சொல்வானோ? அவள் செகரெட்டரி தானே?’

குடி அனைத்தையும் கூடுதல் ஹாஸ்யமாகக் காட்டியது. ஸௌரப்பும் நானும் சிரிப்பை அடக்க முடியாமல் குபீரென்று சிரித்தோம். இந்தச் சிறிய புரளி எங்களுடைய போரடிக்கும் வாழ்வில் ஒரு பொறியைக் கிளப்பியது. ஸௌரப் ரொம்ப வேகமாகச் சிரித்ததில் எங்கள் சோபாவிலிருந்து கீழே சரிந்தான். ஏற்கனவே வழுக்கும் சோபா அது. போலித் தோலால் ஆனது. குட்காவைத் துப்பிவிட்டு முத்தமிடுவாரா என்று ஸௌரப் கேட்டான். இம்முறை அதிகமாகச் சிரித்ததில் நான் வயிற்றைப் பிடித்துக்கொண்டு சரிந்தேன்.

‘மச்சி, இங்கே பார்,’ ஸௌரப் காலி விஸ்கி பாட்டிலைக் காண்பித்தான்.

‘ஓ.கே. நிறைய குடிச்சுட்டோம். என்ன மணி?’

‘இரண்டு.’

‘வாவ். செக்ஸி ஷீலாவையும் சந்தன் காளையையும் பற்றி பேசியே இவ்வளவு நேரம் ஆகிவிட்டதா?’

‘இப்பொழுது கோச்சிங் சென்டரில் செய்வார்களோ?’ என்றான் ஸௌரப்.

‘நாம் போய் பார்க்கலாமா? நாம் உள்ளே நடந்து சென்றால் என்ன நடக்கும் என்று நினைத்துப் பாரேன். ஏதோ நோட்ஸ் எடுக்க வந்தோம் என்று சொல்வோம்.’

‘சரி போகலாம்’ என்றான் ஸௌரப். எங்கள் வீட்டிலிருந்து கோச்சிங் சென்டர் செல்ல ஐந்து நிமிடங்கள் தான் ஆகும். குடிபோதையில் தைரியம் வந்தது. சந்தனை வேவு பார்ப்பது அபாரமான எண்ணமாகத் தோன்றியது.

‘சரி போகலாம்,’ என்றேன்.

என் போன் ‘பீப்’ என்றது. எனக்கு ஒரு செய்தி. அடுத்த சில நொடிகளில் அடுத்த ‘பீப்.’ சற்று நேரத்தில் மெஸேஜ்கள்

குவிந்தன.

‘யார் இவ்வளவு தாமதமாக மெஸேஜ் அனுப்புவது?’

‘போன் கம்பெனியாக இருக்கலாம். இன்னும் கூடுதல் டேட்டா வேணுமா போன்ற கண்றாவியாக இருக்கலாம்,’ என்றான். தூங்கி வழிந்து கொண்டே என் தோளில் சாய்ந்தான்.

‘ஏன் இவ்வளவு நேரம் கழித்து அனுப்புகிறார்கள்?’ என் கண் இமைகள் அழுத்தின.

போன் ‘பீப்’ என்றது.

‘சனியனே!’ என்றபடி எடுத்தேன்.

வலது கண்ணைக் கீற்றைப் போல் திறந்தேன். என் பூட்டிய ஸ்கிரீனில்.

***5*** புதிய வாட்ஸப் மெஸேஜ்கள்**,** ஸரா லோன்

நம்ப முடியாமல் தலையசைத்தேன். அவ்வளவு குடித்து விட்டேனா? என் கண்களைத் தேய்த்தபடி திரும்பப் படித்தேன். சரியாகத்தான் படித்திருக்கிறேன்.

ஸௌரப்பின் தோளை உலுக்கி எழுப்பினேன்.

‘கோலு, எழுந்திரு,’ என்றேன். ‘இதைப் பாரேன்.’

‘என்ன? எனக்குக் கூடுதல் 5 ஜிபி வேண்டாம் மச்சி. என்னைத் தூங்கவிடு.’

‘ஸௌரப், ஸ்கிரீனைப் பாரேன்.’

ஸௌரப் புலம்பியபடி தலையை நிமிர்த்தினான்.

‘ஸரா மெஸேஜ் அனுப்பினாளா?’

‘ஆமாம்.’

‘நீ அவளுக்கு முதலில் மெஸேஜ் அனுப்பினியா?’

‘இல்லை. நிச்சயமாக இல்லை. நான் குடிச்சிருக்கேன், ஆனால் செய்யலை. நாம் சந்தன், ஷீலாவைப் பற்றி பேசிக் கொண்டிருந்தோம். நான் என் போனைத் தொடவே இல்லை.’

‘ஓ!’ என்றபடி அமைதியானான்.

‘நான் மெஸேஜைத் திறந்து பார்க்கட்டா?’

ஸௌரப் மேஜை மீதிருந்த பிஸ்லரி பாட்டிலை எடுத்தான். கடகடவென்று எரிச்சலூட்டும் சத்தத்துடன் குடித்தான்.

‘சொல்லு, கோலு,’ என்றேன்.

‘நிச்சயமா, மச்சி,’ என்றான் ஸௌரப், வாயைத் துடைத்துக் கொண்டே.

‘என்ன கேள்வி இது? உன் போனை நீயே பார்க்கக்கூடாதா என்ன?’

நான் வாட்ஸப்பைத் திறந்து மெஸேஜ்களைப் பார்த்தேன்.

‘அப்போ எனக்கு வாழ்த்துக்கள் கூட கூற மாட்டாயா?’ என்றது முதல் மெஸேஜ். மற்றவை தொடர்ந்தன.

‘இன்று என் பிறந்தநாள். உனக்கு நினைவிருக்கா?’

‘நீ எனக்கு வாழ்த்துக் கூறாதது ஆச்சரியமாக இருக்கு.’

‘பரவாயில்லை. நான் ஏன் உன்னைப்பற்றி நினைத்தேன் என்று புரியவில்லை.’

‘நீ பிஸியாக இருக்கே போலிருக்கு.’

புதிய டிபி. கருப்பு, வெள்ளை ஸெல்ஃபி. வழக்கம் போல் அசத்தலான அழகு. அவளுடைய சாட் ஸ்டேடஸ் ‘ஆன்லைன்’ என்றது.

‘கோலு, என்ன இது?’

ஸௌரப் மெஸேஜ்களைப் படித்தான்.

‘உன் மதிப்பு புரிந்திருக்கும் அல்லது உன்னை மிஸ் செய்கிறாள். உன் கவனத்திற்கு ஏங்குகிறாள்,’ என்றான்.

‘நான் பதில் போடட்டுமா?’ என்றேன்.

‘எனக்குத் தெரியவில்லை,’ ஸௌரப் கொட்டாவி விட்டான். ‘எனக்குத் தூக்கம் வருகிறது.’

‘இது முக்கியம் கோலு. உன்னுடைய தெளிவான சிந்தனை எனக்குத் தேவை. நான் ரொம்ப ஈடுபட்டிருக்கேன். போதை வேற.’

‘இரு,’ என்றான் ஸௌரப். ‘முகத்தைக் கழுவிக் கொண்டால், நம் போதை தெளியும்.’

நாங்கள் பாத்ரூமை அடைவதற்கே சிரமப்பட்டோம். ஜில்லென்ற தண்ணீரை முகத்தில் அடித்துக் கொண்டோம்.

‘நீ இருக்கியா?’ அடுத்த டெக்ஸ்டை அனுப்பினாள். நான் படிப்பதற்கான அடையாளமாக இரண்டு நீல டிக்குகளைப் பார்த்திருப்பாள்.

‘கோலு, என்ன பதில் போடுவது?’ என்றேன்.

‘என்ன வேணுமானாலும் சொல்லு. யதார்த்தமான பேச்சாக இருக்கட்டும்.’ ரொம்ப நல்ல யோசனை. கேடு கெட்டவன்!

‘ஆமாம்’ என்றேன்.

ஒரு சில வினாடிகளுக்கு பதில் ஏதும் இல்லை. ‘டைப்பிங்...’ என்ற மெஸேஜைப் பார்த்தேன். அது விட்டு விட்டு வந்தது. அடித்ததைத் திருத்தம் செய்கிறாள்.

‘ஐ மிஸ் யூ,’ என்றாள்.

எனக்குள் ஒரு சிறிய நடுக்கம். ஸௌரப் மெஸேஜைப் பார்த்தான். நான் அவனிடமிருந்து விலகி நின்றேன். அவன் யோசனை தேவை தான். அதற்காக அவன் அனைத்து டெக்ஸ்டையும் படிக்க வேண்டியதில்லை. இது என்னுடைய தனிப்பட்ட உரையாடல்.

‘வாவ், அப்படியா?’ என்று பதிலளித்தேன்.

‘ஆமாம். நீயின்றி வாழ்க்கை முழுமை பெறவில்லை.’

என் பின்னால் வாந்தி எடுக்கும் சத்தம்; காபி மேஜையில் ஸௌரப் வாந்தி எடுத்திருந்தான். என்ன ஒரு அற்புதமான சூழல் காதல் ரசம் சொட்டப் பேசுவதற்கு.

‘ஸாரி,’ ஸௌரப் சொன்னான். ‘நான் சுத்தம் செய்து விடுகிறேன்.’ கிச்சனுக்குச் சென்றான். நான் என் மொபைலைப் பார்த்தேன்.

‘நிஜமாவா, ஸரா? இது எனக்கு எவ்வளவு முக்கியம் என்று தெரியுமா?’

‘தெரியும். உன்னை விலக்க வேண்டும் என்றும் நான் ஒரு வலிமையான பெண் என்று உணர்த்த வேண்டும் என்றும் போராடிப் பார்த்தேன். வேலைக்கு ஆகவில்லை. ஐ மிஸ் யூ.’

‘ரகு என்ன ஆனான்?’

ஸௌரப் ஒரு கந்தல் துணியால் சுத்தம் செய்தான்.

‘எல்லாம் ஓ.கே. தானே?’ என்றான்.

என் கட்டை விரலை உயர்த்திக் காட்டினேன்.

‘ரகு நல்லவன் தான். ரொம்ப நல்லவன். ஆனால் அவன் அந்த ஒருவன் இல்லை,’ என்று ஸரா பதிலளித்தாள். அந்த மெஸேஜைப் படிக்கும் பொழுது தொண்டை அடைத்தது. கடவுளே, எனக்கு இன்னும் வாய்ப்பிருக்கு. நன்றி கடவுளே.

‘நானும் உன்னை ரொம்ப மிஸ் செய்கிறேன்,’ என்றேன்.

‘ஆமா. அதுதான் என் பிறந்தநாளை மறந்தாயா?,’ ஒரு சோக இமோஜியைப் போட்டாள்.

‘இல்லை பேபி. உனக்கு வாழ்த்துத் தெரிவிக்காமல் இருக்க என்னை நானே கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. கவலைப்படாதே.’

‘சும்மா கிண்டலடிக்கிறேன்,’ என்று அவளுக்குப் பிடித்த அழுதபடி சிரிக்கும் இமோஜியைப் போட்டாள்.

‘லோல்! உன்னைக் கூப்பிட்டு வாழ்த்துத் தெரிவிக்கட்டுமா?’

‘ஏன் கூப்பிடணும்? என்னை நேரில் சந்தித்து வாழ்த்துத் தெரிவிக்க மாட்டாயா?’

நான் என் போனை பக்கத்தில் வைத்தேன். கைகளை உயர்த்தி வான்நோக்கிக் கும்பிட்டேன். கடவுளின் அனுக்கிரகம் ஏற்பட்டிருக்கு, அவளே என்னைப் பார்க்க வேண்டும் என்கிறாள்.

‘நிச்சயமா, எனக்கும் சந்திக்கணும். எப்போ? காலையா?’

‘இப்பொழுதே வந்தால் என்ன?’

நான் மணி பார்த்தேன்.

‘என்ன? இப்பொழுது மணி 3.00. எங்கே இருக்கே?

‘என் அறை. ஹிமாத்ரி.’

‘ஹாஸ்டலிலா? பிறந்தநாள் அன்றா? வீட்டிற்குப் போகவில்லையா?’

‘நாளை செல்வேன். அங்கே ஒரு பார்ட்டி. குடும்பத்தாருக்கு மட்டும் அழைப்பு.’

‘ரகு எங்கே?’

‘ஹைதராபாத்.’

‘ஓ! வெளியே வருகிறாயா? உன்னால் முடியுமா?’

‘ஹாஸ்டலை விட்டு இந்த சமயம் வெளியே வருவது கஷ்டம். ஆனால் நீ வரலாம். உனக்கு வேண்டுமானால்.’

‘எப்படி?’

‘ஓ! யாரோ மறந்துவிட்டார்கள்; எனக்கு வாழ்த்துக்கூற மரம் ஏறிய கதை எல்லாம் மறந்துவிட்டார்கள்.’

‘ஹா, ஹா. அது பல ஆண்டுகளுக்கு முன்.’

‘நான் அந்த நாட்களை மிஸ் செய்கிறேன்.’

‘நானும் தான்.’

‘இப்போ அதெல்லாம் உன்னால் செய்ய முடியாது இல்லையா? காலேஜை விட்டுச் சென்றுவிட்டாயே.’

‘உன் அறை இப்பொழுதும் 105? மாமரத்துக்கு எதிரே?’

‘பரவாயில்லை, கே. நாம் பிறகு சந்திக்கலாம்.’

பல வருடங்களுக்குப் பிறகு அவள் என்னை ‘கே’ என்று அழைத்திருக்கிறாள். அவள் என்னைச் சுருக்கிக்

கூப்பிடுவதைக்கூட மிஸ் செய்கிறேன்.

‘உன் அறை எண்ணைச் சொல்லு, ஸரா?’

‘நிச்சயம், அது இன்னமும் 105 தான். எனக்கு என் அறையைப் பிடிக்கும். ஏன்?’

‘ஒன்றும் இல்லை. அரை மணியில் பார்க்கலாம்.’

அவள் இளிக்கும் ஸ்மைலியை அனுப்பினாள். என்னை நன்கு அறிந்து வைத்திருந்தாள். அவளைச் சந்திக்கும் சந்தர்ப்பத்தையோ, சவாலையோ நான் தவறவிட மாட்டேன்.

நான் போனை பாக்கெட்டில் செருகினேன். ஸௌரப் சோபாவில் மட்டையாக சாய்ந்து கிடந்தான்.

‘எழுந்திரு, நாம் போகணும்,’ அவன் காதுகளில் உரக்கக் கத்தித் தோள்களை உலுக்கினேன்.

# அத்தியாயம் 5

‘இது மடத்தனம். சுத்தமான மடத்தனம்,’ என்று ஸௌரப் சொல்லிக் கொண்டே இருந்தான். அவன் பற்கள் கிடுகிடுத்தன. என் பைக்கில் பின்னால் அமர்ந்திருந்தான்.

‘ரெடியா?’ என்றேன் என் ஹெல்மெட்டை அணிந்தபடி.

‘குளிர்ந்து விறைக்கிறது.’

‘ஜாக்கெட் ஜிப்பைப் போடு.’

‘ரொம்ப லேட்டு. நாம் குடித்திருக்கோம். இப்போ ஏன் போகணும்?’

‘இது ஸரா, கோலு. அவளே அழைத்தாள். அதுவும் அவள் பிறந்தநாளன்று.’

‘காலை சந்தித்துக் கொள்ளேன். எனக்கு தூக்கம் வருகிறது மச்சி,’ அவன் தன் தலையை என் முதுகில் சாயத்தான்.

நான் பைக்கை உதைத்துக் கிளம்பினேன். என்ஃபீல்டின் அதிர்வு அவனை விழிக்க வைத்தது.

‘நீ இப்பொழுது மாணவன் கூடக் கிடையாது. கேம்பஸுக்குள் எப்படிப் போவே?’ ஸௌரப் கேட்டான். அவன் குரலும் பைக்குக்கு ஏற்ப நடுங்கியது.

‘என்னுடைய பழைய ‘ஐடி’ இருக்கு.’

எங்கள் வீட்டுக் காம்பவுண்டைக் கடந்து நேராக அவுட்டர் ரிங் ரோடைப் பிடித்து ஐஐடி மெயின் கேட்டை அடைந்தோம்.

‘மெதுவாக மச்சி,’ என்றான் ஸௌரப். என் தோள்களை இறுகப் பிடித்துக் கொண்டான். ‘என் வயிறு சரியில்லை,’ என்றான்.

‘என் மீது வாந்தி எடுக்காதே, சரியா? உனக்கு நிறுத்த வேண்டும் என்றால் சொல்லு.’

‘மெதுவாகப் போ. போலீஸ் இருப்பார்கள்.’

ஸௌரப் சொல்வது சரிதான். எங்கள் உடலிலிருந்த விஸ்கிக்குப் போலீஸ் செக்கிங் செய்தால் மெஷின் எகிறிவிடும்.

சற்று தூரத்தில் ஒரு போலீஸ் செக்போஸ்ட் வந்தது. ஐஐடி கேட்டுக்கு இருநூறு யார்டு தள்ளி. ஒரு போலீஸ் எங்களை நிறுத்தச் சொன்னார்.

'அடக்கடவுளே! செத்தோம்!' என்றான் ஸௌரப்.

'இரு,' என்றேன். நான் பைக்கை நிதானித்தேன். போலீஸ் சொல்வதைக் கேட்டது போல் பாவ்லா காட்டினேன். அவருக்குச் சில அடிகளுக்கு முன்னால் பைக்கை நிறுத்தினேன். ஆனால் இன்ஜினை அணைக்கவில்லை. இரண்டு போலீஸ் என்னருகே வந்தனர். அடுத்தநொடி நான் பைக்கை முதல் கியரில் போட்டு வேகமாகப் பறந்தேன். என் பின்னால் போலீஸ் கத்துவது காதில் விழுந்தது.

'என்ன நடந்தது?' என்றான் ஸௌரப் திரும்பிப் பார்த்தபடி. 'அவர்களிடமும் பைக் உள்ளது. நம்மைத் துரத்துவார்கள்.'

'என் 'ஐடி'யை எடு. என் ஜாக்கெட் பாக்கெட்டில் இருக்கு. சீக்கிரம்.' ஸௌரப் துழாவினான். என் பழைய ஐஐடி மாணவன் அட்டையை எடுத்தான். நான் கேட்டை அடைந்தேன்.

'கேஷவ் ராஜ்புரோஹித், குமாவோன் ஹாஸ்டல்,' என்றேன். நான் மாணவனாக இருந்த போது உபயோகித்த அதே தைரியத்துடன். என் ஹெல்மெட்டைக் கழட்டவில்லை.

'ஐடி?' என்றார் காவலாளி.

ஸௌரப் என் பழைய 'ஐடி'யைக் காட்டினான். எவ்வளவு நாளுக்கு செல்லுபடியாகும் என்ற தேதியைக் கையால் மறைத்துக் கொண்டான். குடி போதையிலும் தன்னை அதிகாரிகளிடமிருந்து எப்படிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்று மூளைக்குத் தெரிந்திருந்தது.

ஐஐடி காவலாளி எங்களை உள்ளே அனுமதித்தான்.

நான் காம்பவுண்டுக்குள் விரைந்தேன். ஹிமாத்ரி ஹாஸ்டலை நோக்கிப் பறந்தேன்.

'போலீஸ் தொடர்கிறார்களா?' என்று கேட்டேன்.

ஸௌரப் பின்னால் திரும்பினான்.

'இல்லை. மெயின்கேட்டு வாசலில் நின்றுவிட்டனர்.'

'அவர்கள் கேம்பஸுக்குள் வருவது இல்லை,' என்று சிரித்தேன். ஐஐடி பசங்க ஒவ்வொரு சமயத்தில் கன்னாபின்னாவென்று பைக்கில் அலைவார்கள் என்பது போலீஸுக்கு தெரியும். முக்கால்வாசி நேரம் எங்களைத் தனித்து விடுவார்கள்.

‘கேவலமான திட்டம். போலீஸ் உன் பைக் நம்பரை நோட் பண்ணியிருப்பார்கள்.’

‘கண்டு கொள்ள மாட்டார்கள்.’

‘ஹிமாத்ரிக்குள் எப்படி போகப் போறே?’ என்றான் ஸௌரப்.

‘முதலில் செய்தாற் போல். மாமரம் வழியே தான்.’

‘நிஜமாகவா, மச்சி? நீ மாணவன் இல்லை. நீ இப்பொழுது பேராசிரியர்களிடம் மாட்ட மாட்டே. ஜெயில் நிச்சயம்.’

‘ரிலாக்ஸ்.’

ஹிமாத்ரிக்கு ஐம்பதடி தள்ளி வண்டியை நிறுத்தினேன். பெண்கள் ஹாஸ்டலுக்கு இருபத்தி நான்கு மணி நேர செக்யூரிட்டி. ஒரு பாட்ரோல் ஜீப் ஒரு மணி நேரத்திற்கு ஒரு முறை ரோந்து வரும். காவலாளி தூங்கிவிட்டானா, இல்லையா என்பதைப் பார்க்க. பின்னாலிருக்கும் மாமரம் மட்டுமே ஒரே வழி.

அறை 105 ஹிமாத்ரி ஹாஸ்டலின் கடைசி அறை. ஓரமாக இருந்தது. மற்ற அறைகளிலிருந்து தள்ளி ஒதுக்குப்புறமாக இருந்தது. ஐஐடியில் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு சேர்ந்ததிலிருந்து அங்கே தான் தங்குகிறாள். பெரிய ஜன்னல். அழகான மாமரம்.

ஸரா பிஹெச்டி மாணவியாக ஐஐடியில் சேர்ந்த பொழுது அதிர்ஷ்டவசமாக இந்த அறை கிடைத்தது. ஆனால் இந்த அறைக்கு ஏக டிமாண்டு. 105 எண் ‘சின்னஞ்சிறிய வீடு’ என்றே அழைப்போம். இங்கே தான் பலமுறை சந்தித்தோம்.

நான் ஸராவை என் ஹாஸ்டலுக்கு அழைத்துச் சென்றதே இல்லை. விதிமுறைகளை விட்டுத் தள்ளுங்கள். அது பெண்களை உள்ளே அனுமதிக்காது. ஆனால் எங்க பசங்க பெண்களுக்காக எப்படிக் காஞ்சு போனவங்க என்று எனக்கு தெரியும். ஸராவுடன் நடந்து வந்து என் அறையைப் பூட்டிக் கொண்டால் ----- அவர்களின் காயங்களில் உப்பைத் தேய்த்தது போலிருக்கும்.

என்னையும் ஹிமாத்ரியில் அனுமதிக்க மாட்டார்கள் தான். அது பெண்களுக்காக மட்டுமே நடத்தப்படும் ஹாஸ்டல். ஆனாலும் ஓரளவுக்கு உடல் ஃபிட்டாக இருந்தால் 105 அறைக்கு வாசலிலிருந்த மாமரத்தினால் ஒரு பலன் உண்டு; ருசியான மாங்காய்களை வருடா வருடம் தருவதோடு சேர்த்து ஒரு பலன் உண்டு. வாரத்தில் ஒரு இரவாவது நான் அதை ஏறிவிடுவேன். முதல்மாடியை அடைந்ததும் பெரிய ஜன்னல் வழியாக 105க்குள் சென்றுவிடுவேன். விடிவதற்குள் வெளியேறி

விடுவேன். ஸராவுக்கு ஆண் விருந்தினன் வருவான் என்ற விஷயம் யாருக்குமே தெரியாது. இது நன்றாக வேலை செய்தது - நாங்கள் பிரியும் வரை.

ஸௌரப்பும் நானும் ஹிமாத்ரிக்குப் பின்னால் சென்றோம். மாமரத்தை அடைந்தோம். நான் என் ஜாக்கெட்டைக் கழட்டினேன். ‘இப்படித்தான் நீ ----’ ஸௌரப் தொடங்கினான். நான் அவனைத் தடுத்து நிறுத்தினேன்.

‘உஷ்ஷ்... மெதுவாகப் பேசு, பிளீஸ்.’

‘அவள் அறை எங்கே?’ என்று ஸௌரப் கிசுகிசுத்தான்.

அவளுடைய ஜன்னலைக் காட்டினேன்.

‘கீழே விழுந்தால்?’

‘நிறைய முறை ஏறியிருக்கேன்,’ என்று கைகளைக் காற்றில் ஆட்டினேன்.

‘உன் ரத்தத்தில் விஸ்கியுடனா?’

‘ரிலாக்ஸ். எல்லாம் சரியாக இருக்கு.’ என் உடலை அப்படி இப்படித் திரும்பி ஏறுவதற்குத் தயாரானேன். மரத்தை என் கைகளால் பிடித்தபடி ஒரு காலைத் தூக்கி முதல் கிளையில் வைத்தேன். இதைப் பலமுறை செய்ததால் தன்னிச்சையாக ஏற முடிந்தது. மரத்தின் மேலே சென்றதும் கீழே நின்ற ஸௌரப்பைப் பார்த்தேன். இருவரும் கிசுகிசுத்துக் கொண்டோம்.

‘நீ இங்கேயே இரு. யாராவது வந்தால் இருமி சிக்னல் கொடு,’ என்றேன்.

‘அது எப்படி உதவும்?’

‘உண்மை தான். உதவாது தான். சரி. யாராவது வந்தால் கவனத்தைத் திருப்பு. நீ ஏன் இங்கே நிற்கிறாய் என்பதற்கு ஏதாவது காரணம் சொல்லு.’

‘என்ன? கோச்சிங் கிளாஸ் டியூட்டர் அந்த ராத்திரியில் பெண்கள் ஹாஸ்டல் வாசலில் என்ன செய்வான்? மணி மூணே கால்.’

‘எனக்குத் தெரியாது,’ என்று முகத்தில் படர்ந்த இலைகளைத் தட்டினேன்.

‘மச்சி நீ இதைப்பற்றி தீர ஆலோசிக்கவில்லை.’

‘சரி. யாரும் வர மாட்டார்கள்,’ என்றேன். மேலே பார்த்தேன். இன்னும் கொஞ்சம் ஏறிவிட்டு ஸௌரப்பைப் பார்த்தேன்.

‘அடச்சே? பெரிய பிரச்சினை,’ என்றேன். ஸௌரப்பின் முகம் தொங்கியது.

‘என்ன?’ என்றான் ஸௌரப்.

‘அவளுக்கு எந்தப் பரிசுப் பொருளும் வாங்கி வரவில்லை.’

‘நிஜமாவே இது ஒரு பிரச்சினையா, மச்சி?’

‘அவளைப் பல ஆண்டுகளுக்குப் பிறகு சந்திக்கிறேன். அதுவும் பிறந்தநாளன்று. பரிசு இல்லாமல்.’

‘அவளுக்கு, பிறகு அமேஸான் வௌச்சர் அனுப்பு. இப்போ தயவு செய்து மேலே போ. சீக்கிரமா முடி.’

‘பரிசு இல்லை. கேக் இல்லை. ச்சே!’ என்று முணுமுணுத்தபடி என்னை மேலே ஏற்றினேன். என்னுடைய உடல் முன் போல் ஃபிட்டாக இல்லை என்பதை உணர்ந்தேன். ஐஐடி டெல்லி வாலிபால் கேப்டனாக இருந்த பொழுது இருந்த ஃபிட்னெஸ் சந்தன் கிளாஸஸ் கணக்கு வாத்தியாராக இருக்கும் பொழுது இல்லை. ஸராவின் ஜன்னலை அடைந்தேன். எனக்காக லேசாகத் திறந்து வைத்திருந்தாள். எப்பொழுதும் போல்.

என் கைகளை நீட்டி ஜன்னலைத் தள்ளித் திறந்தேன். உள்ளே செல்ல வசதி செய்து கொண்டேன். அறை விளக்குகள் அணைக்கப்பட்டிருந்தன. அவள் தூங்கி விட்டாளோ? அல்லது என்னை அசத்துவதற்காகத் தூங்குவது போல் நடிக்கிறாளோ? என்னைப் போல் ஸராவுக்கும் சில பித்துக்குளித்தனங்கள் உண்டு. முன்பு அப்படித்தான் இருந்தாள். அதனால் தான் ஒரு வேளை நாங்கள் இணைந்தோமா?

நான் முன்பு ஏறியதைவிட இப்பொழுது கிளைகள் அதிகரித்திருந்தன. முன் போல அறைக்குள் குதிப்பதற்கு பதில் ஒரு காலைத் தூக்கிப் போட்டு ஜன்னல் ஃப்ரேமைப் பிடித்தபடி தொங்கி என்னை நானே உயர்த்தி உள்ளே சென்றேன்.

ஜன்னல் கதவுகளை மென்மையாக மூடியபடி ‘ஹேப்பி பர்த்டே’ பாடினேன். கால் விரல்களில், சத்தமின்றி நடந்தேன். என் கண்கள் இருட்டுக்குப் பழகின. ஹீட்டரின் மென்மையான சத்தம் மட்டும் கேட்டது.

‘ஹேப்பி பர்த்டே ஸரா கண்ணே,’ என்று தொடர்ந்து பாடினேன். அவள் கட்டிலருகே நின்றிருந்தேன். அவள் தானே என்னை அழைத்தாள். ஆனாலும் முன் போல் அவள் போர்வைக்குள் புகுந்து அவளை அணைத்துக் கொள்வது அவ்வளவு சரியாகப் படவில்லை. அப்படியெல்லாம் அவளுடன் ஒடுங்கிக் கொள்ள முடியாது. நாங்கள் இப்போது இணைந்து இல்லை என்று எனக்கு நானே நினைவு படுத்திக் கொண்டேன்.

ஆனால், அவள் தானே மிஸ்யூ சொன்னாள், என்று என்

தலைக்குள் ஒரு குரல் ஒலித்தது. நான் போனை எடுத்து டார்ச்சை ஆன் செய்தேன். வெள்ளை எல்ஈடி வெளிச்சம் நான் நீட்டிய இடத்தை எல்லாம் வெளிச்சம் போட்டுக் காட்டியது ஸரா கட்டிலில் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள். அவள் போர்த்தியிருந்த குவில்ட் கழுத்து வரை இருந்தது. முகமே மூடியது போல் இருந்தது.

'ஸரா,' என்றேன் மென்மையான குரலில். அவளை அச்சுறுத்த விரும்பவில்லை.

'நான் கேஷவ். வந்துவிட்டேன்,' என்று திரும்பவும் கிசுகிசுத்தேன். அவள் பதிலேதும் கூறவில்லை. கட்டில் அருகில் இருந்த விளக்கின் ஸ்விட்சை என் போனின் லைட் மூலம் கண்டு பிடித்தேன். பிசுபிசு வென்ற வெளிச்சம் அறையில் பரவியது. ஸரா படுக்கையில் இருந்தாள். வெள்ளை குவில்ட்டின் மீது அழகான பிங்க் பூக்கள் இறைந்த டிஸைன்.

'ஹே பர்த்டே பெண்ணே,' என்றேன். 'நான் தான். உனக்கு வாழ்த்துக் கூற வந்திருக்கேன்.'

ஒரு பதிலும் இல்லை, ஓகே நல்ல நடிப்பு ரொம்ப கியூட் என்று நினைத்தேன். அறையைச் சுற்றிப் பார்த்தேன். ஒரு சிறிய அடுக்கு வெள்ளைதாள்கள், படிக்கும் நோட்ஸாக இருக்கலாம். பெட்டுக்குப் பக்கத்திலிருந்த மேசை மீது வைக்கப்பட்டிருந்தன. அவள் ஐபோன் அந்த நோட்ஸின் மீது இருந்தது. சார்ஜரில் இணைக்கப்பட்டிருந்தது. எப்போதும் போல் ஸரா ஜான்ஸன் பேபி லோஷனைப் பக்கத்தில் வைத்திருந்தாள். ஒவ்வொரு இரவும் முகத்திலும், உடலிலும் பூசுவாள். எப்போதும் குழந்தை போன்ற வாசனை.

'ஹே ஜான்ஸன் பேபி, எழுந்திரு,' என்றேன்.

நான் என் கைகளை குவில்ட்டில் மூடிய அவள் தோள்பட்டை மீது வைத்து மென்மையாக அசைத்து எழுப்பினேன். அவள் நகரவே இல்லை. அவளும் குடித்திருக்கிறளோ? ஒரு வேளை போதையில் அனுப்பிய டெக்ஸ்ட்களா? அதனால் தான் அறைக்கு அழைத்தாளோ? ஆனால் நல்ல அரட்டை அடித்தாளே.

நடிக்கிறாளா? என்னைக் காக்க வைப்பது நோக்கமா? என்னைப் படுக்கைக்கு அழைக்கிறாளா, வாயால் கூறாமல்?

என் மனம் வெவ்வேறு சாத்தியக்கூறுகளை அலசியது. ஒரு பையனாக இருந்து பெண்ணுக்கு என்ன தேவை என்று ஆராய்வது கடினம். ஒரு பக்கம் தைரியமாக அணுகலாம் என்று தோன்றியது.

படுக்கையில் சரிந்து, பிறந்த நாள் முத்தத்தைப் பதிவு செய் என்றது குரல்.

ஓகே. உதடுகளில் வேண்டாம். நெற்றியில், நெற்றியில் முத்தமிடுவது சரிதானே? என்றது மற்றொரு குரல்.

இல்லை. சொதப்பாதே அவள் உன்னைக் கூப்பிட்டாள். அவள் தீர்மானிக்கட்டும் என்ன, எப்படி என்று, சந்தோஷத்தைக் குலைக்கும் குரல் கூறியது.

இஷ்டமே இல்லாமல் கடைசி குரலுக்குச் செவி சாய்த்தேன். அவள் நடிக்கிறாளோ இல்லையோ அவளை எழுப்பியே ஆகணும்.

நான் திரும்பவும் ஸராவின் தோளைத் தொட்டு உலுக்கினேன். இம்முறை கொஞ்சம் அழுத்தம் அதிகம்; அசைந்து கொடுக்கவில்லை. அவள் முகத்திலிருந்து குவில்ட்டை விலக்கினேன். அப்படியே அசையாமல் இருந்தாள். ஆழ்ந்த உறக்கமா?

‘ஓகே ஸரா, போதும் நடித்தது. உன்னை நேரில் சந்தித்து வாழ்த்துக் கூற வந்தேன். பிறந்தநாள் வாழ்த்துக்கள்.’

அவள் பதில் பேசவில்லை.

‘எழுந்திருக்கப் போறியா, இல்லையா?’ என்றேன்.

பதில் இல்லை.

‘ஸரா, எனக்கு எது வேலை செய்யும் என்று தெரியும். நானும் உன்னுடன் பெட்டில் படுக்கிறேன். அது உன்னை நிச்சயம் எழுப்பும்.’ என் மூச்சைப் பிடித்து சிரித்தேன்.

அவள் இப்பொழுதும் பேசாததால், குனிந்து அவளைத் தள்ளி எனக்கும் கொஞ்சம் இடம் பண்ணலாம் என்று நினைத்தேன்.

அவள் கொஞ்சம் ‘ஹெவியாக’ இருந்தாள்.

‘ஸரா.’ இம்முறை என் குரல் உயர்ந்தது. ‘எல்லாம் ஓகே தானே?’ அவள் நெற்றியைத் தொட்டேன். ஐஸ் போல் ஜில்லென்றிருந்தது. என் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. ஏதோ தவறாக இருக்கிறது. குவில்ட்டை இன்னமும் விலக்கினேன். அவள் கழுத்தில் சிவப்பான காயம்.

‘ஸரா பேபி,’ என்றேன். அவள் கன்னத்தைத் தொட்டேன், கண்களை, காதை என்று சட்டென்று மாற்றித் மாற்றி தொட்டுப் பார்த்தேன். எல்லாமே ஜில்லிட்டிருந்தது.

‘எழுந்திரு,’ என்றேன். யாரிடம் குறிப்பிட்டுச் சொல்கிறேன் என்றே புரியவில்லை. அறையின் மெயின் ஸ்விட்சைப்

போட்டேன். அந்தப் பளீரென்ற நூறு வாட் வெளிச்சத்தில் என் கண்கள் கூசின. கண்களை இடுக்கிக் கொண்டேன். ஆனாலும் ஸரா அப்படியே உறைந்து போய் படுத்துக் கிடந்தது தெரிந்தது.

‘ஸரா,’ என்று உரக்கக் கூறினேன். அவள் மூக்கினருகே விரல்களைக் கொண்டு சென்றேன். ஒரு அசைவும் இல்லை. ஒருவருடைய நாடியை எப்படிப் பிடித்துப் பார்ப்பது என்று நான் படங்களில் பார்த்திருக்கிறேன். அவளுடைய ஒல்லியான ஜில்லிட்ட மணிக்கட்டைப் பிடித்தேன். நாடி துடிக்கவில்லை சில முறை பிடித்துப் பார்த்தேன். ஒன்றும் தென்படவில்லை.

ஸரா வந்து... இறந்து விட்டாளா?

வாந்தி வரும் போல் இருந்தது. எனக்குக் காற்று வேண்டும். எழுந்தேன். ஜன்னலை அகலமாகத் திறந்தேன். கீழே பார்த்தேன். நிலா வெளிச்சத்தில் ஸௌரப் தெரிந்தான். காலை மாற்றி மாற்றி நின்று கொண்டுருந்தான். இவன் ஜன்னல் வழியாக என்னைப் பார்த்து எப்படிப் போகிறது என்று சைகை செய்தான். ஒரு விரலைக் காட்டிக் கீழே வருமாறு பணித்தான். என்னால் பதில் கூற முடியவில்லை, வாந்தியும் வரவில்லை. குழம்பிப் போய் இரண்டு கைகளையும் ஸௌரப் மேலே தூக்கினான். நான் திரும்பவும் அறைக்குள் பார்த்தேன். இல்லை என் ஸரா இறந்திருக்க முடியாது. இது ஒரு கெட்ட கனவு. நான் அசையாமல் நின்று அவளையே முறைத்தும் பார்த்தேன். அவள் எழுந்து விடுவாளோ என்று ஒரு சின்ன சபலம்.

என் பாக்கெட்டில் அதிர்ந்த மொபைல் என்னை உலுக்கியது. நான் ஸௌரப்பின் போனை எடுத்தேன். அவன் நக்கலான குரலில் கேட்டான்.

‘மச்சி, என்ன நடக்குது? நீ உள்ளே போனே. அதிர்ஷ்டம் அடித்ததா? நான் இருக்கட்டுமா, போகட்டுமா?’

‘ஸௌரப்,’ என்று அவனை நிறுத்தினேன்.

‘என்ன?’

‘ஸௌரப், மேலே வா.’

‘என்ன?’

‘மேலே வாயேன்.’

‘என்னை எதற்கு உன் கேர்ள் பிரெண்டு அதாவது மாஜி கேர்ள் பிரெண்டு அறைக்கு அழைக்கிறே?’

‘உன்னைக் கெஞ்சிக் கேட்கிறேன், ஸௌரப், மேலே வா,’ என்றேன் அழுகையே வந்துவிடும் போலிருந்தது. ஏதோ தவறு என்பதை உணர்ந்தான்.

‘நான் மேலே வந்தால் ஸராவுக்கு ஓகே வா?’

‘வா,’ என்று கூறித் துண்டித்தேன். திரும்ப ஜன்னலுக்குச் சென்றேன். போனின் வெளிச்சத்தை மரத்தின் மீது அடித்தேன் அவனுக்கு ஏறி வர உதவியாக.

அவன் படபடப்பாகச் சுற்றும் முற்றும் பார்த்தான். ஒரு காலைத் தூக்கி ஏறினான். மரமே கிறீச்சிட்டது. மரங்கள் குரங்குகளுக்காகச் செய்யப்பட்டவை. தொண்ணூறு-கிலோ மனிதனுக்கு அல்ல.

‘ஜாக்கிரதை, அடுத்து இடது காலை அந்தக் கிளை மேல் வை,’ என்று கிசுகிசுத்தேன். மெதுவாக மேலே வந்தான். அதிர்ஷ்ட வசமாக யாருமே இந்த சத்தத்தையும், மரம் அசைவதையும் அந்த இரவில் பார்க்கவில்லை.

காலை ஜன்னலில் வைத்தான். அவனை உள்ளே இழுத்தேன். ‘என்ன ஆச்சு, மச்சி?’ என்றான்.

நான் ஜன்னலை மூடி உள் பக்கமாகத் தாளிட்டேன்.

‘அவள் தூங்குகிறாளா?’ என்று கிசுகிசுத்தான். ‘இன்னமுமா அவளை எழுப்பவில்லை?’

‘அவள் இறந்துவிட்டாள்,’ என்றேன்.

ஸௌரப் ஓரடி பின்னே நகர்ந்தான்.

‘என்ன?’ என்று அலறினான்.

‘கத்தாதே. இது பெண்கள் ஹாஸ்டல். இங்கே ஆண் குரல் கேட்க அனுமதி இல்லை.’

‘ஆண் குரலாவது, மண்ணாவது, மச்சி, என்ன உளறுகிறாய்?’ ஸௌரப்பின் குரலும் ரத்த அழுத்தமும் அதிகரித்தது.

அவன் கழுத்தைப் பிடித்து முறுக்கி என் கைகளால் வாயைப் பொத்தினேன். அவன் முனகினான்.

‘தயவு செய்து சத்தம் போடாதே,’ என்றேன். ‘என்னை பயமுறுத்துகிறாய். அமைதி, சரியா?’

ஸௌரப் தலையை ஆட்டினான். நான் அவன் வாயிலிருந்து என் கையை எடுத்தேன். என் பிடியைத் தளர்த்தினேன்.

ஸௌரப் பேசும் போது இருமினான். ஆனால் சாதாரண குரலில் பேசினான்.

‘நிச்சயமா தெரியுமா?’ என்றான் ஸௌரப். ‘ஒரு வேளை அவளுக்கு உடம்பு சௌகரியம் இல்லையோ?’

‘அவள் போயிட்டா. அவள் உடல் ஐஸ் மாதிரி இருக்கு.

அவள் சுவாசிக்கவில்லை. அவள் முகத்தைப் பார்,' என்றேன்.

அவள் கழுத்திலிருந்த சிவந்த காயத்தைப் பார்த்தான்.

'எப்படி இறந்தாள்?' என்று கிசுகிசுத்தான்.

'எனக்கு எப்படித் தெரியும்? இப்படித்தான் நான் வரும் போது அவள் கிடந்தாள்.'

'ஆனால் அவள் இப்போது தானே மெஸேஜ் செய்தாள்?' என்றபடி ஸௌரப் அறைக்குள் குறுக்கும், நெடுக்கும் நடக்கத் தொடங்கினான்.

'ஆமாம்,' என்றேன். என் மொபைலைத் திரும்பவும் திறந்து பார்த்தேன். ஆமாம் இது கனவு அல்ல. இவள் மெஸேஜ்கள் இருக்கின்றன. அவள் என்னை மிஸ் செய்கிறாள். என்னை நேரில் வந்து வாழ்த்து சொல்லச் சொன்னாள். ஸராவின் நாற்காலியில் அமர்ந்தேன். அவள் முகத்தை ஆராய்ந்தேன், தூங்கும் குழந்தை போல் அமைதியாக இருந்தது. என் காதல் இறந்துவிட்டது. ஆனால் அதிர்ச்சியில், என்னால் வலியைக் கூட உணர முடியவில்லை. 'என்ன செய்வது?' என்றான் ஸௌரப்.

'புரியலை,' என்றேன். 'ஆனால் தயவு செய்து அமர்ந்து கொள். நீ நடப்பது எனக்குப் பதற்றமாக இருக்கு.'

'எனக்குப் பயமாக இருக்கு,' என்றான் ஸௌரப் எனக்கும் பயமாகத்தான் இருந்தது. ஆனால் அவனைப் போல் உருகி ஓட முடியாது, யாராவது யோசிக்கணும்.

'நான் ஒரு சடலத்தைப் பார்த்ததே இல்லை' என்றான் ஸௌரப் நான் என்னமோ சடலங்களுடனே குடும்பம் நடத்துவது போல். 'மச்சி, ஏதாவது செய்.'

'வாயை மூடு ஸௌரப். நான் என்ன செய்வது என்று யோசிக்கிறேன். உனக்கு ஏதாவது எண்ணம் தோன்றுகிறதா?'

'இல்லை, மச்சி நாம் இங்கு வந்திருக்கக் கூடாது. நாம் நம் பிளாட்டில் தண்ணி அடித்து சந்தோஷமாக இருந்தோம். முன்னமே சொன்னேன் இது மட்டமான ஐடியா...'

அவன் புலம்பியதில் என்னால் யோசிக்க முடியவில்லை. அவனுக்கு ஒரு அறை விடலாம் என்று தோன்றியது. ஆனால் முடியவில்லை. ஆமாம், அவன் என்னை இங்கே வருவதிலிருந்து தடுத்தான். அதனால் ஒரு ஐந்து நிமிடம் அவனைப் புலம்ப விட்டேன். பிறகு சோர்வாகி அவன் அந்த அறையிலிருந்த மர ஃ.ஸி சேரில் அமர்ந்தான்.

'யாரிடமாவது சொல்ல வேண்டும்,' என்றேன் 'நமக்கு வேறு வழியில்லை.'

‘எப்படி?’ என்றான் ஸௌரப். ‘நாம் இங்கே என்ன செய்து கொண்டிருந்தோம் என்று சொல்வது. பெண்கள் விடுதியில், இந்த அதிகாலையில், இறந்த பெண்ணுடன்...?’

‘என்ன செய்யலாம்? ஓடி விடலாமா?’

‘செய்யலாம், ஆனால் இருட்டாக இருக்கே. நாம் வந்த வழியே திரும்பி விடலாம்.’

நான் அந்த யோசனையை நினைத்துப் பார்த்தேன். நாங்கள் தப்பித்து எங்கள் வீட்டுக்கே ஓடுவது. இப்படி ஒன்று நடக்கவே இல்ல என்று எங்களுக்கே சொல்லிக் கொள்வது. ஆனாலும் இந்த யோசனை எனக்குச் சரியாகப் படவில்லை.

‘எப்படி இறந்தாள்?’ என்றேன்.

‘என்ன?’

‘ஸரா எப்படி இறந்தாள்? ஒரு மணி நேரத்திற்கு முன் உயிருடன் இருந்தாள். உடல் நலத்துடன்.’

‘எனக்கு அக்கறை இல்லை, மச்சி. இப்போது இங்கிருந்து கிளம்பணும். சீக்கிரம்.’

‘அவளுக்கு உடல்நலக் குறைவு இல்லை.’

‘ஆமாம். அதனால்?’

‘யாரோ அவளைக் கொன்று விட்டார்கள்,’ என்றேன்.

ஸௌரப் சேரில் இருந்து குதித்து எழுந்தான்.

‘என்ன?’ என்றான். ‘நாம் இருப்பது கொலை நடந்த இடத்திலா? போகலாம் மச்சி. இப்பவே.’

அவன் ஜன்னல் அருகே சென்றான்.

‘நாம் இப்படியே விட்டுவிட்டுப் போக முடியாது, கோலு, உட்காரேன். இதைப் பற்றி யோசிக்கலாம்.

அவன் சிரமப்பட்டு ஈஸி சேருக்குச் சென்றான்.

‘ஏன் இருக்கணும்? மக்கள் நம்மை இங்கே பிடிக்கவா? நாம் செய்தோம் என்று நம்பவா?’ என்றான்.

‘நாம் ஓடி விட்டால், நாம் தான் செய்தோம் என்று தீர்மானமே ஆகிவிடும்.’

‘நாம் இங்கே வந்தோம் என்று எப்படி அவர்களுக்குத் தெரியும்?’ என்றான் ஸௌரப் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். ‘இன்னமும் வெளியே இருட்டாக இருக்கு. ஓடி விடலாம்.’

‘உனக்குப் புரியலை. இது பெரிய விஷயம். ஒரு பிஎச்டி

மாணவி ஹாஸ்டலில் கொல்லப்பட்டிருக்கா. ஐஐடி மட்டும் அல்ல, மொத்த போலீஸும், ஊடகமும் இறங்கி விடும்.’

‘அதனால்?’ அவன் கைப்பிடிகளை இறுகப் பிடித்துக்கொண்டான்.

‘தோண்ட ஆரம்பிப்பார்கள்.’

‘யார் வேண்டுமானாலும் செய்திருக்கலாம். இந்த கேம்பஸில் மட்டுமே ஆயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் இருக்கின்றனர்.’

‘மெயின் கேட் காவலாளி நம்மை நினைவு கூறலாம். செக் போஸ்ட் போலீஸ் நிச்சயமாக என் பைக்கை நினைவு கூறுவார்கள். நாம் கேம்பஸுக்குள் சென்றோம் என்பதையும் நினைவில் வைத்திருப்பார்கள்.’

‘அதனால் என்ன? நாம் இரவில் சுற்றினோம்.’

‘இந்த அறையில் ரேகைகளைச் சோதிப்பார்கள். என்னுடையவை ஜன்னலில் உள்ளது. பெட் மீது, அவள் முகத்தில் கூட என் கை ரேகைகள் பதிந்துவிட்டன.’

‘கை ரேகைகளா?’ என்று ஸௌரப் எதிரொலித்தான். அவன் முகம் வெளிறியது.

‘இப்போ உன் கைரேகைகள் ஈஸி சேரில் பதிந்துவிட்டன;’ என்றேன். உடனே கைப்பிடியிலிருந்து தன் கைகளை விடுவித்துக் கொண்டான்.

‘மச்சி, என்ன தான் நடக்குது? ஏதாவது ரெய்டு நடக்குமா?’ என்றபடி எழுந்து நின்றான். ‘எல்லாவற்றையும் துடைத்துவிட்டுப் போய் விடலாமா? எனக்குப் போகணும்’

‘நாம் போக முடியாது, கோலு.’

‘நம் வாழ்க்கை அழிந்தது.’

‘இல்லை, கோலு. நாம் கைரேகைகளை அழித்துவிட்டு ஓடினால் தான் அழிந்து விடுவோம்.’

‘என்ன தான் செய்வது?’

‘நாம் இங்கேயே இருந்து, உண்மையைச் சொல்வது.’

‘நாம் ஒரு பாட்டில் விஸ்கியைக் குடித்தோம். போதையில் வண்டி ஓட்டினோம். ஒரு போலீஸை ஏமாற்றி டிமிக்கி கொடுத்துவிட்டு செல்லாத ஐடி கார்டை காவலாளியிடம் காட்டி, பெண்கள் விடுதிக்குள் இரவு ஏறி குதித்தோம். பைத்தியமா, மச்சி?’

‘இவை எல்லாம் தவறுகள் தான், ஆமாம். ஆனால் இதனால்

நாம் கொலையாளிகள் இல்லை.'

'கொலையாளி?' ஸௌரப் கிறீச்சிட்டான். 'இந்த வார்த்தையை உன்னால் எப்படி சொல்ல முடியும்? நாம் எதுவுமே செய்யவில்லை.'

'எனக்குத் தெரியும் அதனால் தான் இருக்கணும். இப்போ யாரைக் கூப்பிடுவது முதலில்?'

என் மொபைலை எடுத்தேன்.

'நிச்சயமா, மச்சி? உனக்கு இன்று நல்ல எண்ணங்களே தோன்றதா?'

'உனக்குப் போக வேண்டுமென்றால் நீ போகலாம் ஸௌரப்,' என்றேன். இந்த ரகளையில் அவனுக்குப் பங்கு வேண்டாம்.

'நான் அப்படிச் சொல்லலை, மச்சி.'

'நான் நிஜமாகத் தான் சொல்கிறேன். என்ன நடந்தாலும், ஏதாவது பிரச்சனை வரத்தான் போகிறது. நீ இங்கே இருக்க வேண்டிய அவசியம் இல்லை.'

'நம்முடைய தண்ணிப் பார்ட்டியில் நாம் ஒரு சபதம் செய்யவில்லையா? எது செய்தாலும் இருவரும் சேர்ந்தே இருப்போம் என்று?' என்று கேட்டான். நான் அவனைப் பார்த்தேன். சில சமயங்களில் காதலியைவிட நல்ல நண்பன் இருப்பதே முக்கியம் என்று உணர்ந்தேன்.

'நான் உன்னை விரும்புகிறேன்,' என்றேன்.

'மீடூ, மச்சி யாரைக் கூப்பிடப் போறே?'

'அவள் பெற்றோர்கள், பாய் பிரெண்டு, போலீஸ் - இவை தான் நமக்கு முன் இருக்கும் சாத்தியங்கள்.'

'நாம் நடந்து போகலாமா? காவலாளியைப் பார்த்து எல்லாவற்றையும் சொல்லலாம். அவனை விட்டுக் கூப்பிடச் சொல்லலாம்.'

நான் ஆழமாக மூச்சு விட்டேன். அவன் சொல்வதும் சரி என்று பட்டது.

'பரவாயில்லை. நல்ல யோசனை. ஆனால்...,' என்று நிறுத்தினேன்.

'ஆனால் என்ன?'

'நாமே அவர்களை அழைக்கவில்லை என்றால், நாம் இங்கே இருந்தோம் என்பதைக் கண்டுபிடித்து சந்தேகப் படுவார்கள். நாமே அவர்களைக் கூப்பிட்டு விட்டுக் காவலாளியைத் தேடிப் போவோம்.'

‘நான் என் வாழ்க்கையில் போலீசைக் கூப்பிட்டதே கிடையாது,’ என்றான் ஸௌரப்.

‘நானும் தான். நான் போலீசைக் கடைசியாகக் கூப்பிடுகிறேன்.’

‘பெற்றோர்கள்?’

‘அதுவும் கஷ்டம் தான். முதலில் ரகுவைக் கூப்பிடுகிறேன்.’

‘அவன் நம்பர் இருக்கா?’

‘ஆமாம், இருக்கு,’ என்றேன்.

என்னைச் சில முறை அவன் கூப்பிட்டிருக்கான். ஸராவிடமிருந்து விலகி இரு என்று எச்சரிப்பதற்காக. அவன் நம்பரை நான் சேமித்து வைத்துள்ளேன். ஸரா என்னை பிளாக் செய்துவிட்டால் அவன் மூலமாக அவளைக் கூப்பிடலாம் என்று. நான் நேரம் பார்த்தேன், 3:36. அவன் நம்பரை அடித்தேன். மணி அடித்தது. யாருமே எடுக்கவில்லை. பிறகு தெலுங்கில் ஏதோ குரல் நபரை தொடர்பு கொள்ள முடியாது என்பது போல் கூறியது. திரும்ப அடித்தேன்.

பதில்லை.

‘தூங்கிக் கொண்டிருப்பான் போலிருக்கு,’ என்றேன்.

‘அவள் அப்பாவைக் கூப்பிடு,’ என்றான் ஸௌரப்.

நான் ஸஃப்தர் லோன் நம்பரைக் கூப்பிட்டேன். அவரிடம் என்ன சொல்வேன். யோசித்தேன். ஹை, அங்கிள், உங்களைத் தொந்திரவு செய்வதற்கு மன்னிக்கவும். நான் தான் கேஷவ். நீங்கள் உங்கள் மகளிடமிருந்து விலகி இருக்கச் சொல்லி எச்சரித்தீர்களே, நினைவிருக்கா? சரி, நான் அவள் அறையில் இருக்கேன். மேலும் அவள் இறந்துவிட்டாள்.

‘என்ன?’ ஸஃப்தரின் குரலில் தூக்கமும், கோபமும் கலந்திருந்தது.

‘அங்கிள், நான் தான், கேஷவ்’

‘தெரியுது, மணி பார்த்தாயா?’

‘3:38, அங்கிள்.’

‘என்ன வேணும்?’ என்றார்.

‘அங்கிள், ஸரா...’

‘என்ன?’

‘மிஸ்டர் லோன், ஸரா...’

‘நீ ஸராவை மறக்கணும். இதை பல வருடங்களுக்கு

முன்னாலேயே நான் உனக்குத் தெளிவாகச் சொல்லி விட்டேன். திரும்பக் குடிச்சிருக்கியா?

குடித்திருந்தேன் தான். ஆனால் போதை மறைந்து விட்டது.

‘அங்கிள், நான் சொல்வதை தயவு செய்து காது கொடுத்துக் கேளுங்கள். இது முக்கியம்,’ என்றேன் என் எண்ணங்களைத் திரட்டியபடி.

‘என்ன?’

என்னால் செய்தியைப் போட்டு உடைக்க முடியவில்லை.

‘நீங்கள் இப்போ ஸராவின் ஹாஸ்டலுக்கு வர முடியுமா? உடனே?’

‘என்ன? எதுக்கு?’

‘தயவு செய்து முக்கியம். உடனே வாருங்கள். நான் இங்கே தான் இருக்கேன்.’

‘அன்...?’

நான் பேச்சைத் துண்டித்தேன். ஏன் என்று தெரியவில்லை. ஆனால் அவள் அப்பாவுடன் பேசிய போது எல்லாமே இன்னமும் நிஜமாகத் தோன்றியது. ஸரா இறந்துவிட்டாள். போயே விட்டாள். இல்லை, நான் உடைந்து போக முடியாது. இப்போ இது சந்தர்ப்பம் இல்லை. நான் இன்னமும் நிறைய பேரைத் தொலைபேசியில் அழைக்கணும்.

‘போலீஸ்,’ என்றேன் உரக்க, ‘அவர்கள் எண் என்ன?’

‘100?’ என்றான் ஸௌரப்

‘இது பொதுவான நம்பர். லோகல் போலீஸ் ஸ்டேஷனைக் கூப்பிடணுமா?’

‘நம்மை துரத்தின அதே ஆட்களா?’ என்றான் ஸௌரப். ‘வாயை மூடு,’ என்றேன். நான் ஹௌஜ்-காஸ் போலீஸ் ஸ்டேஷன் நம்பரை என் மொபைலில் கூகிள் செய்தேன்.

அழைத்தேன்.

யாரோ ஐந்து முறை மணியடித்ததும் எடுத்தார்கள்.

‘ஹௌஜ்-காஸ் போலீஸ்,’ என்றது ஒரு சோர்வான குரல்.

‘ஒரு குற்றம் பற்றி ரிபோர்ட் கொடுக்கணும்,’ என்றேன்.

ஸௌரப் என்னைக் கவலையாகப் பார்த்தான்.

‘எங்கிருந்து பேசுகிறீர்கள்?’

‘ஐஐடி டெல்லி. ஹிமாத்ரி ஹாஸ்டல். அறை எண் 105,’

என்றேன்.

‘குற்றத்தின் தன்மை?’ என்றது உணர்வற்ற குரல்.

‘கொலை. மாணவி கொலை!’

மறுமுனையில் ஏதோ விழுந்த சத்தம் கேட்டது.

‘யார் பேசுவது?’ குரல் இப்பொழுது உஷாராகக் கேட்டது.

‘இது கேஷவ் ராஜ்புரோஹித். நான் இங்கேயே காத்திருக்கிறேன். ஹிமாத்ரி ஹாஸ்டல் வாசலில்?’

‘கொலை செய்யப்பட்டது யார்? அவர்களுடன் உங்களுக்கென்ன தொடர்பு?’

‘ஸரா லோன். நான் இவள் நண்பன். மாஜி மாணவன்.’

‘அங்கேயே இருங்கள். எங்கள் குழுவை அனுப்புகிறோம்,’ குரலில் சுறுசுறுப்பு தொனித்தது.

நான் பேசி முடித்தேன். ஸௌரப்பும் நானும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

‘கீழே காத்திருக்கலாமா?’ என்றான் ஸௌரப். அறையை விட்டு வெளியேற நினைத்தான். சடலத்தை விட்டு விலக நினைத்தான்.

‘சரி,’ என்றேன். எழுந்து கதவைத் திறந்தேன்.

வெளியே நடைபாதை இருட்டாகவும் காலியாகவும் இருந்தது. ஸௌரப் வெளியேறினான். நான் அறையில் இருந்தேன்.

‘என்ன? போகலாமா?’ என்றான் ஸௌரப்

‘இரு. ஒரே நிமிஷம்,’ என்று திரும்பினேன். அவள் கட்டிலருகே சென்றேன். குனிந்து நெற்றியில் முத்தமிட்டேன். அவளுடைய ஜில்லிட்ட முகத்தில் ஒரு கண்ணீர் துளி விழுந்தது.

‘பிறந்த நாள் நல்வாழ்த்துக்கள் ஸரா. ஐ லவ் யூ.’ ஸரா அசங்காமல் கிடந்தாள்.

‘மச்சி,’ ஸௌரப் கதவைத் தட்டினான். ‘வா போகலாம்.’

‘வரேன்,’ என்றேன். நிமிர்ந்தேன். அவளை ஒரு முறை ஆழமாகப் பார்த்துவிட்டு அறையை விட்டு வெளியேறினேன்.

# அத்தியாயம் 6

நாங்கள் படியிறங்கி ஹிமாத்ரியின் முன் வாசலுக்குச் சென்றோம். ஹாஸ்டலிலிருந்து நாங்கள் வெளியேறியதைப் பார்த்த வாட்ச்மேன் தன் இருக்கையிலிருந்து வியப்பில் எழுந்து குதித்தான்.

‘நில்லுங்கள். யார் நீங்கள்?’ என்றான்.

‘வாட்ச்மேன் ஐயா,’ என்றேன். ‘நாங்கள் உங்களுடன் பேச வேண்டும்.’

‘பெண்கள் விடுதியில் உங்களுக்கென்ன வேலை?’ என்றான்.

‘கேளுங்கள், வாட்ச்மேன் ஐயா,’ என்றேன். ‘யாரோ இறந்துவிட்டார்கள்.’

‘என்ன?’ அவன் வாயைப் பிளந்தான்.

நான் மேலும் சொல்வதற்குள் போலீஸ் ஸைரன் கேட்டது. நான் எதிர்பார்த்ததைவிட ஹௌஸ் காஸ் போலீஸ் ரொம்ப நேர்த்தி. ஹாஸ்டல் காம்பவுண்டுக்குள் டெல்லி போலீஸ் மாருதி ஜிப்ஸி நுழைந்தது. ஒருவர் போலீஸ் தொப்பி அணிந்திருந்தார். சீருடையும், நட்சத்திரங்களும் (தோளில்) அணிந்திருந்தார். அவர்களில் பெரிய அதிகாரி எங்களை நெருங்கினார். அவருடைய பெயரட்டையைப் பார்த்தேன். விகாஸ் ரானா. இரண்டு கான்ஸ்டபிள்கள், நான்கு ஐஐடி டெல்லி காவலாளிகள் அவர் பின்னே வந்தனர். வாட்ச்மேன் மயங்கியே விட்டான்.

‘இங்கே கேஷவ் ராஜ்புரோஹித் யாரு?’ இன்ஸ்பெக்டர் ரானா கரடுமுரடான குரலில் கேட்டார்.

‘நீதான் அழைத்தாயா?’

‘நான் தான் கேஷவ், ஸார்,’ என்று கை குலுக்க முயற்சித்தேன். அவர் புறக்கணித்தார்.

‘ஆமாம் ஸார்,’ என்றேன். ‘நான் தான் என் தோழி ஸரா லோனின் இறந்த உடலைக் கண்டேன். அறை எண் 105.’

காவலாளிகள் என்னை அதிர்ச்சியாகப் பார்த்தார்கள்.

‘நீ யார்?’ என்றார் ஒருவர். ‘மாணவனா?’

‘மாஜி-மாணவன்,’ என்றேன். ‘2013 பேட்ச். குமாவோன் ஹாஸ்டல்.’

‘2013?’ என்றார் அதே காவலாளி. ‘இப்போ, இங்கே என்ன செய்யறே?’

‘அவளைப் பார்க்க வந்தேன்,’ என்று கூறி கூடுதல் தகவலாக, ‘இன்று அவள் பிறந்தநாள்,’ என்றேன்.

‘ஆனால் பெண்கள் விடுதிக்கு நீ எப்படி வரலாம்?’ அவர் குரல் உயர்ந்தது.

‘நேரத்தை வீணடிக்காமல் பாடியைப் பார்க்கலாமா?’ என்றார் இன்ஸ்பெக்டர் ரானா.

❖

ஒரு கான்ஸ்டபிள் கைகளில் கர்ச்சீப்பைச் சுற்றிக் கொண்டு ஸராவின் அறைக்கதவைத் திறந்தார்.

‘ஜாக்கிரதை,’ என்றார் இன்ஸ்பெக்டர் ரானா. ‘அதில் கைரேகைகள் இருக்கலாம்.’

ஸௌரப்பும் நானும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். அவர்கள் கண்டுபிடிக்கக் கூடிய ஒரே கைரேகைகள் எங்களுடையதாகத் தான் இருக்கும்.

போலீஸ் அறைக்குள் நுழைந்தனர். ஸரா, அல்லது ஸராவின் உடல் அங்கே கிடந்தது. குவில்ட் விலகி, விளக்கு வெளிச்சத்தில்.

‘எதையும் தொடாதீர்கள்,’ என்று இன்ஸ்பெக்டர் ரானா எச்சரித்தார்.

நாங்கள் ஏற்கனவே தொட்டுவிட்டோம் இன்ஸ்பெக்டர் என்று சொல்ல நினைத்தேன். ஒரு கான்ஸ்டபிள் உடலை போட்டோ பிடித்தார், தன் போனில். இந்த நேரத்தில் புகைப்படக்காரர் யாரும் கிடைக்கவில்லை என்று முணுமுணுத்தார்.

இன்ஸ்பெக்டர் ரானா கட்டிலருகே சென்றார். ஸராவின் கழுத்தை உற்றுப் பார்த்தார்.

‘இது தற்கொலை அல்ல, யாரோ கழுத்தை நெரித்துக் கொன்றிருக்கிறார்கள்,’ என்றார்.

திறந்த கதவின் வழியாக ஜில்லென்ற காற்று அவர் வார்த்தைகளைப் பின்தொடர்ந்தது. எல்லோரும் அமைதியானார்கள். ஒரு காவலாளி பேசினார்.

‘எப்படி நடந்தது, லக்ஷ்மண்?’ என்று வாட்ச்மேனைக் கேட்டார். வாட்ச்மேன் லக்ஷ்மண் கைகளைக் கட்டிக் கொண்டான்.

‘தெரியவில்லை, ஐயா.’

‘யாராவது உள்ளே வந்தார்களா?’ என்று காவலாளி குரைத்தார்.

‘யாரும் வரவில்லை. இரவு பூராவும் நான் தான் டூட்டியில் இருந்தேன்.’

‘தூங்கிவிட்டாயா? இடத்தை விட்டு நகர்ந்தாயா?’ காவலாளி மிரட்டினார். போலீஸிடம் தான் சீராக வேலை செய்வதாகவும், உயர் அதிகாரி என்று காட்டிக் கொள்வதற்காகவும் செய்த முயற்சி.

வாட்ச்மேன் லக்ஷ்மண் தலையசைத்து மறுத்தான். அவன் உடல் குறுகியது. அது குளிரினால் இல்லை என்று புரிந்தது.

‘உண்மையைச் சொல். நான் சிசிடிவியைப் பார்த்துக் கண்டுபிடிக்க முடியும்,’ என்றார் காவலாளி.

ரோந்து சுத்தும் காவலாளியும் தன் பங்குக்கு எதுவும் தவறில்லை என்று உணர்த்த முயன்றார். அவருடைய ரோந்து சமயத்தில் தான் யாரோ உள்ளே நுழைந்து மாணவியைக் கொலை செய்திருக்கிறார்கள்.

‘இல்லை ஐயா. நான் டூட்டியில், விழித்துக் கொண்டு தான் இருந்தேன்,’ என்றான் லக்ஷ்மண்.

‘அப்பொழுது இரு ஆண்கள் எப்படி ஹாஸ்டலுக்குள் நுழைந்தனர்?’ என்றார் காவலாளி என்னையும் ஸௌரப்பையும் கை காட்டியபடி. லக்ஷ்மணுக்குச் சொல்ல வார்த்தைகள் இல்லை.

ரோந்து ஆபீஸர் அவன் கன்னத்தில் ஒரு அறை விட்டார். தான் முரட்டு அதிகாரி என்று போலீஸுக்கு தெரிவிக்க முயற்சித்தார்.

‘நிறுத்து,’ என்றார் இன்ஸ்பெக்டர் ரானா. ‘எங்கள் வேலையை நீ செய்யாதே.’

‘ஸாரி ஸார்,’ என்றார் ரோந்து ஆபீஸர். தன்னுடைய ஜுனியர் ஆபீஸர்களுக்கு முன்னால் திட்டப்பட்டதால் அவமானப்பட்டார். அவருக்கும் ஒரு வேளை போலீஸில் குற்றப்பிரிவில் வேலை செய்ய ஆசையோ, என்னவோ? எல்லோருக்கும் வளர்ந்து போலீஸாகும் ஆசை இருக்கும். ஒரு அறிவார்ந்த மாணவர்கள் விடுதியின் காவலாளியாகப் பணிபுரிய வேண்டும் என்ற லட்சியம் யாருக்கும் இருக்காது.

‘உன்னால் குற்றத்தைத் தடுக்க முடியவில்லை. இப்பொழுது எங்களைப் புலனாய்வு செய்யவிடு,’ என்றார் இன்ஸ்பெக்டர் ரானா.

ரோந்து ஆபீஸர் தலை குனிந்தார்.

‘ஸாரி, ஸார்.’

இன்ஸ்பெக்டர் ரானா அவரைப் புறக்கணித்தார். அறையைச் சுற்றி நடந்தார். ஸராவின் போனைப் பார்த்தார். சார்ஜரிலிருந்து பிடுங்கி எடுத்தார். அதைக் கர்ச்சீப்பால் கையில் எடுத்தார். கான்ஸ்டபிள் அதைப் பிளாஸ்டிக் பையில் பெற்றுக் கொண்டான். அவள் மேஜையின் மேல் இருந்த காகிதங்களைப் பார்த்தார். அவற்றை மேஜை மீதே வைத்தார். ஜன்னலருகே சென்றார். அது தாழ்ப்பாளிட்டு அடைக்கப்பட்டிருந்தது.

‘ஜன்னல் மூடியிருக்கு. கொலைகாரன் கதவு வழியாகத்தான் வந்திருக்க வேண்டும்,’ என்றார்.

பிரச்சினையில் மாட்டிக் கொள்ள விருப்பமில்லை என்றாலும், நான் பேசத் துணிந்தேன்.

‘ஸார், ஜன்னல் திறந்து தான் இருந்தது,’ என்றேன். ‘அது வழியாகத்தான் நானும், ஸௌரப்பும் உள்ளே வந்தோம். நாங்கள் வாட்ச்மேனிடம் பேசப்போகும் போது அதைச் சாத்திவிட்டுச் சென்றோம்.’

இன்ஸ்பெக்டர் என் பக்கம் திரும்பினார்.

‘நீ நிஜமாக யார்? இந்தக் குண்டன்? எப்படி, எதற்காக நீங்கள் இங்கு இருக்கிறீர்கள்?’

‘ஸார், நாங்கள் எல்லாவற்றையும் விளக்குகிறோம்,’ என்றேன்.

அடுத்த சில நிமிடங்களில், நானும் ஸௌரப்பும் எப்படி உள்ளே வந்தோம் என்று விளக்கினேன்.

‘அதனால் ஸௌரப்பை மேலே வரச் சொன்னேன். பிறகு போலீஸைக் கூப்பிட நினைத்தோம்,’ என்று என் கதையை முடித்தேன்.

நான் எல்லோருடைய முகத்தையும் பார்த்தேன். யாருமே நம்பியதாகத் தெரியவில்லை. ரோந்து ஆபீஸர் ரொம்பக் கோபமாக இருந்தார். கொலையைவிட என் திமிரை நினைத்து விசனப்பட்டார்.

‘ஐஐடி பெண்கள் விடுதிக்குள் ஏறி வந்தாயா? ஒரு வெளியாள்? நீ யார் என்று நினைத்தே?’

‘ஸாரி, ஸார்,’ என்றேன். ‘அது தவறு தான். ஆனால்...’ இன்ஸ்பெக்டர் ரானா என்னை நெருங்கி வந்தார். என் கண்களுக்கு அங்குலங்களே தள்ளியிருந்தார். ஒரு யுகம் போல் என்னை முறைத்தார். பிறகு ஸௌரப்பைத் திரும்பிப் பார்த்தார்.

‘உன் நண்பன் உண்மை பேசுகிறானா?’

ஸௌரப் ‘ஜக்காஜாஸஸ்’ படத்தில் ரன்பீர் கபூர் பேசுவது போல் பேசினான்.

‘ஆ... ஆ... ஆமாம் ஸார்.’

‘உன் குரல் ஏன் நடுங்குகிறது?’ என்றார் இன்ஸ்பெக்டர் ரானா.

‘சு... சும்மா தான் ஸார்.’

‘நீங்கள் அவளைக் கொலை செய்யவில்லையே?’ என்றார் ரானா.

என் காலடியில் பூமி நகர்ந்தது. எங்களைச் சந்தேகிக்கிறார்களா?

‘இல்லை ஸார்,’ என்று உளறினேன். ‘என் அம்மா மீது சத்தியம்.’ இன்ஸ்பெக்டரின் கண்கள் என்னைத் துளைத்தன.

‘தே..... பையா! ஒவ்வொரு கொலையாளியும் தன் அம்மா மீது சத்தியம் செய்வான் தப்பிப்பதற்காக.’

‘இல்லை ஸார், ஆனால்...’ என்று அவர் பேச்சைக் கேட்டு அதிர்ந்தேன்.

‘வாயை மூடு,’ என்றார். கான்ஸ்டபிளைப் பார்த்தார். ‘போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டி வாருங்கள்,’ என்றார்.

‘ஸார், நீங்கள் -----’ ஆனால் இன்ஸ்பெக்டர் ரானா என் பேச்சை இடைமறித்தார்.

‘வாட்ச்மேன் வாக்குமூலத்தையும் எழுதிக் கொள்ளுங்கள். சிசிடிவி ஃபுட்டேஜ் எடுங்கள். பெற்றோர்களுக்குத் தகவல் தெரிவிச்சாச்சா?’

‘நான் கூறினேன் ஸார். அவள் அப்பா வருகிறார்,’ என்றேன்.

ஸௌரப் என் கையை இழுத்தான். என் வாயை மூடிக் கொள்வதற்கான சமிக்ஞை.

ஒரு கான்ஸ்டபிள் ஏரியாவில் கோடு வரைந்தார். மேலும் புகைப்படங்கள் எடுத்தார். நான் அமைதியாக ஓரத்தில் நின்றேன். ரோந்து ஆபீஸர் நகர்ந்து போய் ஐஐடி டைரக்டருக்குத் தகவல் தெரிவித்தார். போலீஸ் அறையைச் சோதனை செய்தனர்.

‘இங்கே என்ன நடக்கிறது? ஸரா எங்கே?’ ஸஃப்தர் லோனின் குரல் அனைவரையும் அதிர வைத்தது.

❖

இந்தியாவில் நேரத்தைச் செலவழிக்க போலீஸ் ஸ்டேஷன்கள் சரியான இடம்; அதுவும் ‘நேரப் பயணம்’ (டைம் டிராவல்) கண்டிப்பாகச் செய்யலாம். எழுபதுகளின் இந்தியா - கணினி இன்றி, பழுப்பு நிறக் காகிதங்கள் குவிந்திருந்தன. இதைப் பார்க்க சரியான இடம் போலீஸ் ஸ்டேஷன் தான். ஆனால் ஹவுஸ் காஸ் போலீஸ் ஸ்டேஷனில் லேசான நவீனம் எட்டிப் பார்த்தது. இரண்டு கணினிகள், தடியான மானிட்டர்களுடன் இருந்தன. தொண்ணூறுகளின் விண்டோஸ் மென்பொருளில் இயங்கின. காலை ஒன்பது மணி - ஸ்டேஷனில் ஜனம் தெரிந்தது. போலீஸ் இலவச 10எஆ கார்டுகள் கொடுப்பது போல் கூட்டம் அலை மோதியது. தூக்கமின்மை, நேற்றைய இரவு ஏற்றிய சரக்கு இரண்டும் சேர்ந்து தலைவலி தெறித்தது. ஸ்டேஷனில் இருந்த ரகளை வலியை மேலும் நரகமாக்கியது. ஸௌரப்பையும் என்னையும் பிரித்து அமர்த்தியிருந்தனர். நாங்கள் இருவருமாகச் சேர்ந்து, சிந்தித்து ஒரு பொய்க் கதையை ஜோடிக்க வேண்டாம் என்ற ஜாக்கிரதை உணர்வு. வேண்டுமென்றால் இருவரும் வாட்ஸ்அப் செய்து கொண்டிருக்க முடியாதா என்ன?

பல மணி நேரங்கள் காத்திருந்தோம். இன்ஸ்பெக்டர் ரானா இறுதியில் தன் அலுவலக அறைக்குள் என்னை அழைத்தார். சிறிய களேபரமான அறை. ஒரு மேஜையும் இரண்டு நாற்காலிகளும் சிரமப்பட்டுப் பொருந்தின.

அவர் எதிரே அமர்ந்து கொட்டாவி விட்டேன். ஒரு ஃபைலைப் படித்துக் கொண்டிருந்தார். ஒரு கண் என் மீதே இருந்தது.

‘தூக்கமா?’

‘கொஞ்சம்,’ என்றேன்.

‘முகத்தைக் கழுவிக் கொண்டு வா.’

‘பரவாயில்லை.’

என்னை முறைத்துப் பார்த்தார்.

‘சொன்னபடி செய்,’ என்றார். நான் உடனே செய்தேன். அழுக்கான கழிப்பறையில் இருந்த அழுக்கான குழாயைத் திறந்து அழுக்கான தண்ணீரை முகத்தில் தெளித்துக்

கொண்டேன். அவருடைய அலுவலகத்துக்கு திரும்பி என் கண்களை அகலமாகத் திறந்தபடி அமர்ந்தேன்.

‘உன்னை வெளியில் தான் அமர வைக்க முடிந்தது. இல்லையென்றால் லாக்கப்பில் தள்ளியிருக்க வேண்டும். அங்கே இரவைக் கழிக்க உனக்கு விருப்பமிருக்காது என்று நினைக்கிறேன்.’

கம்பிகள் பின்னால் இருப்பதாகக் கற்பனை செய்து பார்த்தேன். என் பெற்றோர்கள் அறிந்தால் என்னவாகும்? எந்த போலீஸ் கத்துவதைக் காட்டிலும் அதிகமாகச் சத்தம் போடுவார்கள். அந்தத் தேர்வைச் செய்ய முடியாது.

‘இல்லை ஸார், வெளியிலேயே சௌகரியமாக இருக்கு.’

‘நீ அவளைக் கொலை செய்திருந்தால் கம்பிகளுக்குப் பின்னால் தான் காலம் தள்ள வேண்டும்.

‘நான் செய்யலை ஸார். உண்மையாக.’

‘அதைவிட அதிகமாக சாட்சி வேண்டும். நிச்சயம் செய்வதற்கு.’

‘நான் அவளைக் காதலிக்கிறேன் ஸார். உங்களால் புரிந்து கொள்ள முடியாது. ஸரா வந்து... அவள் தான் என் உலகம். நான் ஏன் அவளைக் கொல்லப் போகிறேன்?

‘அவளை அடைய முடியாததால்?’

‘இல்லை ஸார். அவள் என்னுடையவள் தான். அவளே எனக்கு மெஸேஜ் அனுப்பியிருந்தாள்.’

என் போனை அவரிடம் நகர்த்தினேன். என்னுடைய கடைசி வாட்ஸ்அப் செய்திகள் (ஸராவுடன்). அவற்றைப் படித்தார்.

‘என்னுடைய பேட்சில் படித்த யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள். ஸராவே என்னுடன் சேர வேண்டும் என்று கூறினால் அது எனக்கு எவ்வளவு பெரிய விஷயம் என்று புரியும்,’ என்றேன்.

இன்ஸ்பெக்டர் அந்தத் தொடர் செய்திகளை பலமுறை படித்துப் பார்த்தார். நான் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தேன்.

‘நான் போலீஸைக் கூப்பிட்டேன் ஸார். அவள் அப்பாவைக் கூப்பிட்டேன். அவள் பாய் ஃபிரெண்டைக்கூடக் கூப்பிட முயன்றேன்.’

‘நிறுத்து, பாய் ஃபிரெண்டா?’ என்று என்னை இடைமறித்தார்.

‘ஆமாம், ரகு. அவன் போனை எடுக்கவில்லை. தாமதமாகி

விட்டது. அவன் ஹைதராபாத்தில் இருக்கான்.'

'அவன் நம்பரைக் கொடு.'

'என் போனில் தான் இருக்கு. ரகு வெங்கடேஷ்.'

இன்ஸ்பெக்டர் ரகுவின் நம்பரைச் சேமித்துக் கொண்டார். ஒரு கான்ஸ்டபிள் அவர் அறைக்கு வந்தார்.

'ஸரா லோனின் உடலைப் பெற்றுக் கொண்டு அவளுடைய அப்பா வீட்டுக்குச் சென்றுவிட்டார்,' என்றார் கான்ஸ்டபிள்.

'என்ன எழவு இது! ஏன் இவ்வளவு சீக்கிரம்?' இன்ஸ்பெக்டர் ரானா கோபமாகக் கேட்டார்.

'அப்பா பெரிய புள்ளி. அவர் தொடர்புகளை உபயோகித்திருப்பார், என்றார்' கான்ஸ்டபிள்.

'அவள் பெற்றோர்கள் எங்கு இருக்கிறார்கள்?'

'வெஸ்ட் எண்ட் கிரீன்ஸ். டெல்லி பார்டரில் உள்ள ஷிவன் சிலைக்கருகில்,' என்றார் கான்ஸ்டபிள்.

'பணக்காரப் பெண்,' என்று இன்ஸ்பெக்டர் நக்கலடித்தார்.

'அவர்களிடம் பிரேதப் பரிசோதனையைப் பற்றிக் கூறவில்லையா?'

'நான் கேட்டேன். அப்பா மறுத்துவிட்டார். ரொம்பக் குழப்பமாக இருந்தார்,' என்றார் கான்ஸ்டபிள். 'உங்களுக்கு இந்த முஸ்லீம் மக்களைப் பற்றித் தெரியாதா? அவர்கள் மதம் பிரேதப் பரிசோதனையை அனுமதிக்காது. அதிக அழுத்தம் கொடுத்தால் பெரிய கலவரமே நடக்கும்.'

'இந்தக் கேஸை எப்படி முடிப்பது - பிரேதப் பரிசோதனையின்றி?' என்று இன்ஸ்பெக்டர் ரானா கத்தினார்.

அந்த கான்ஸ்டபிள் பதிலே பேசவில்லை. அவர் அதை கிளம்புவதற்கான ஆணையாகப் புரிந்து கொண்டு நகர்ந்தார்.

கான்ஸ்டபிள் விலகியதும் ரானா என்னைப் பார்த்தார்.

'நீ அவளைக் காதலித்தாய். ஆனால் ஏன் சோகமாக இல்லை?' என்றார் ரானா.

'எனக்குத் தெரியவில்லை, ஸார்,' என்றேன். 'அவள் போய்விட்டாள் என்று புரிந்தாலும், நம்ப முடியவில்லை. ஏற்றுக் கொள்ளவும் முடியவில்லை. நான் ஏதோ சீக்கிரமே கனவிலிருந்து விழித்துக் கொள்வேன் என்று தோன்றுகிறது...'

'அது நடந்தே விட்டது. ஸரா லோன் இறந்துவிட்டாள். நீ அவளைக் கொன்றிருக்கலாம். நீ குற்றம் நடந்த இடத்தில்

இருந்திருக்கே. சரக்கடிச்சிருக்கே.’

‘இல்லை ஸார். அப்படியில்லை.’

‘மாஜிக்காதலன். அவள் நினைவுகளிலிருந்து மீள முடியவில்லை. அவள் உன்னைக் கூப்பிட்டாள். நீ உன்னை அவள் மீது திணிக்கப் பார்த்தே. அவள் மறுத்தாள். உன்னால் அதை ஒப்புக்கொள்ள முடியவில்லை.’

‘நான் செய்யவில்லை,’ என்று கர்ஜித்தேன். பிறகு சமாதானமான குரலில், ‘நான் செய்யவில்லை என்று தான் சொல்ல வருகிறேன். நான் அவளுக்குப் பிறந்தநாள் வாழ்த்துக்கள் கூறத்தான் சென்றேன்.’

அந்த அழுத்தம் எனக்கு அழுகையை வரவழைத்தது. கண்ணீர் கண்களிலிருந்து உருண்டோடியது. நான் அழத் தொடங்கினேன். ஸரா இறந்துவிட்டாள். அவளை இனி நான் பார்க்கவே மாட்டேன். இனி அவள் குரலைக் கேட்க முடியாது. அவளுக்கு மெஸேஜ் அனுப்ப முடியாது. அவள் ஸ்டேடஸ் பார்த்து அல்ப சந்தோஷங்களை அனுபவிக்க முடியாது. சில ஆண்டுகளாக நான் அவளுடன் கொண்ட தொடர்பு இதுபோன்ற சில்லறை விஷயங்கள் தான். கொடுமை என்னவென்றால், போலீஸ் நான் தான் அவளைக் கொலை செய்ததாகக் கருதுகிறார்கள். ஏற்கனவே சீர்கெட்ட என்னுடைய வாழ்க்கையைச் சிறையில் கழிக்க வழி செய்கிறார்கள். நான் கையைக் கூப்பினேன்.

‘நான் செய்யவில்லை, ரானா ஸார். என்னால் அப்படியெல்லாம் செய்ய முடியாது.’

‘சரி, யார் செய்தது? அழுகையை நிறுத்து. என்ன குழந்தைத்தனமாக?’

‘எனக்குத் தெரியவில்லை,’ என்று சுதாரித்துக் கொண்டேன்.

இன்ஸ்பெக்டர் இன்டர்காமை எடுத்தார். இன்னொரு கான்ஸ்டபிள் உள்ளே நுழைந்தார்.

‘பெண்ணுடைய போனை வைத்துக் கொண்டு ஏதாவது கண்டுபிடிக்க முடிந்ததா?’

‘அது லாக்கான ஐ-போன் ஸார். அதற்கான பாஸ்கோட் தெரியவில்லை.’

‘அது டச் ஐடி தானே? கட்டைவிரல் தானே?’

‘ஆமாம் ஸார்.’

‘இறந்த பெண்ணின் விரலை வைத்துத் திறக்க வேண்டியது

தானே?' கான்ஸ்டபிள் தலையைச் சொறிந்தார். 'போனை முதலில் ஆன் செய்யும் போது நம்பர் தான் ஸார் போட வேண்டும்.'

'யாராவது ஸ்டேஷன் முட்டாள் அதை அணைத்துவிட்டானா?'

'இல்லை, இல்லை, ஸார். முதலிலேயே போன் ஸ்விட்ச் ஆஃபில் தான் இருந்தது. சார்ஜில் இருந்தது. அதற்குபின் அதை ஆன் செய்ய முயற்சித்தோம்.'

'அப்போ போனை அன்லாக் செய்ய முடியாதா?'

'இல்லை ஸார். அது ஆறு - டிஜிட் கோட். பத்துமுறை திறக்க முயற்சித்து முடியாவிட்டால் பிறகு அதைத் திறக்கவே முடியாது.'

'என்ன ஒரு முட்டாள்தனமான கம்பெனி. இதன் சிம்கார்டு கம்பெனியைக் கூப்பிட்டு எந்த நம்பர்களுக்கு அழைப்பு போயிருக்கு என்பதைக் கண்டுபிடிக்கச் சொல்.'

'ஏற்கனவே செய்துவிட்டோம், ஸார்.'

'யாராவது அந்தப் பெண்ணின் நம்பரை இன்று அழைத்தார்களா? மணியடிக்கும் தானே?'

'இரண்டு மிஸ்டு கால்கள் ஸார். ரகு க்யூட்டிபை என்ற எண்ணிலிருந்து.'

'நான் இப்பவே அவனைக் கூப்பிடுகிறேன், செல் டவர் மூலம் ரகு க்யூட்டிபையின் இடத்தைக் கண்டுபிடியுங்கள். நேற்று இரவு அவன் எங்கிருந்தான் என்று அறிய வேண்டும்.'

'நிச்சயமாக ஸார்,' என்றார் கான்ஸ்டபிள்.

இன்ஸ்பெக்டர் என்னை நோக்கி, 'வெளியே காத்திரு கேஷவ்,' என்றார். 'எஃப்ஐஆர் போடாமல் சற்று நேரம் தாக்குப் பிடிக்கிறேன். ஆனால் நீ ஸ்டேஷனை விட்டு வெளியேற முடியாது.'

'நான் போகமாட்டேன் ஸார்,' என்று உறுதி கூறினேன்.

'தரையில் படுத்து உறங்கு. ஏதாவது மூலையைத் தேடிக்கொள்.'

'நான் நாற்காலியில் ஓய்வெடுத்துக் கொள்கிறேன். ஆனால் ஒரு விஷயம் ஸார்.'

'என்ன?'

'நீங்கள் ரகுவை அழைக்கப் போகிறீர்கள். நானும் இருந்து அவனுடன் பேசுவதைக் கேட்டுவிட்டுப் போகட்டுமா?'

‘ஏன்?’

‘தெரியவில்லை. ஒரு ஆர்வம் தான்.’

‘ஓ! நீ இப்பொழுது துப்பறிவாளனாகி விட்டாயா?’

‘நான் தான் பாடியைக் கண்டுபிடித்தேன். எனக்கு அவளைத் தெரியும். மேலும் எனக்கு ஆர்வம் தான். ஒரு வேளை நான் உங்களுக்கு உதவியாகக்கூட இருப்பேன்.’

இன்ஸ்பெக்டர் தோள் குலுக்கினார். அவருக்கு அக்கறை இல்லை. ரகுவின் எண்ணைத் தட்டி ஸ்பீக்கரில் போட்டார்.

‘ஹலோ. குட் மார்னிங்,’ என்றாள் ஒரு பெண். அவள் குரலில் ஒரு தெலுங்கு வாடை.

‘ஹலோ. திரு. ரகு வெங்கடேஷ் இருக்கிறாரா?’ என்றார் ராணா.

‘ஒரு நிமிஷம். டாக்டர் பார்த்துக் கொண்டிருக்கிறார். நான் போனை அவருக்குக் கொடுக்கிறேன். யார் பேசுவது?’

‘நான் இன்ஸ்பெக்டர் விகாஸ் ராணா பேசுகிறேன். நீங்கள் யாரு?’

‘நர்ஸ் ஜேனி ஸார். நான் தான் ரகு ஸாரைப் பார்த்துக் கொள்பவள்.’

‘எங்கே?’

‘அப்போலோ ஹாஸ்பிடல் ஸார். இருங்கள். நான் போனை அவரிடம் கொடுக்கிறேன்.’

அவள் யாரிடமோ தெலுங்கில் பேசுவது காதில் விழுந்தது. சில நொடிகளுக்குப் பிறகு ரகு லைனில் வந்தான்.

‘ஹலோ?’ என்றான் ரகு.

‘ஹலோ மிஸ்டர் ரகு, இன்ஸ்பெக்டர் விகாஸ் ராணா, ஹவுஸ் காஸ் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து பேசுகிறேன். பேச முடியுமா?’

‘முடியும் ஸார்.’

‘செய்தி கேள்விப்பட்டீர்களா?’

‘என்ன செய்தி, ஸார்?’

‘ஸரா லோன், உங்கள் தோழி தானே?’

‘எனக்கு நிச்சயிக்கப்பட்டவள், ஸார்,’ என்றான் ரகு.

‘ஓ! ஸாரி, மிஸ்டர் ரகு. அவள் அறையில் அவள் பாடி கண்டெடுக்கப்பட்டது. அவள் உயிருடன் இல்லை.’

போன் அமைதியானது.

‘மிஸ்டர் ரகு?’ என்றார் ராணா.

‘என்ன?’ என்றான் சில நொடிகளுக்குப் பிறகு.

‘உங்கள் தோழியோ, நிச்சயிக்கப்பட்டவளோ - அறையில் இறந்து கிடந்தாள். கொலை செய்யப்பட்டிருக்கிறாள் என்று நினைக்கிறோம்.’

‘என்ன பேசுகிறீர்கள்? யார் இது? நீங்கள் தான் அந்த ஆட்களையும் அனுப்பினீர்களா?’ என்றான் ரகு. குரலில் பயம்.

‘எந்த ஆட்கள்? இது போலீஸ். எங்களிடம் அவள் போன் இருக்கிறது. இன்று இரு முறை அவளைக் காலையில் அழைத்திருக்கிறீர்கள். 8:14 காலையில்; மற்றொன்று 8:32?’

ரகு தன் போனைக் குடையும் சத்தம் கேட்டது. பிறகு பேசினான்.

‘என்னால் ... என்னால் நம்ப முடியவில்லை.’

‘அவள் பெற்றோரிடம் பாடி ஒப்படைக்கப்பட்டு விட்டது. அவர்களைக் கூப்பிடுங்கள்.’

‘இப்பொழுதே கூப்பிடுகிறேன்’ என்றான் ரகு. ‘இது வந்து... நடக்க முடியாது... ஸாரி... என்னால் பேச முடியவில்லை.’

‘எனக்கு புரிகிறது. இது உங்களுக்கு ஒரு பெரும் அதிர்ச்சி தான்.’

‘இன்று ஸராவின் பிறந்தநாள்,’ என்றான். மூச்சு வாங்குவது தெளிவாகக் கேட்டது. ‘அடுத்த இரண்டு மாதங்களில் எங்கள் திருமணம்.’

‘திருமணம்’ என்ற வார்த்தையைக் கேட்டதும் இதயம் வலித்தது. இன்ஸ்பெக்டரிடமிருந்து பார்வையை விலக்கிக் கொண்டேன்.

‘ஸாரி, மிஸ்டர் ரகு. அவளைத் திரும்பக் கொண்டு வர முடியாது. ஆனால் யார் செய்தது என்பதைக் கண்டுபிடிக்கத் தீவிர முயற்சியில் இறங்குவோம்.’

‘யார் ஸராவுக்குத் தீங்கு நினைப்பார்கள்?’ என்றான் ரகு.

‘யாராவது செய்வார்கள் என்று நினைக்கிறீர்களா?’

‘மூன்று நாட்களுக்கு முன் யாரோ என்னைத் தாக்கினார்கள். ஏதோ லோகல் கும்பல் பணம் பிடுங்க அப்படிச் செய்திருப்பார்கள் என்று நினைத்தேன்.’

‘அப்படியா? யாரு? எப்பொழுது?’ என்றார் இன்ஸ்பெக்டர். ஒரு நோட்டு புத்தகத்தை எடுத்து எழுதத் தொடங்கினார்.

‘மூன்று ரௌடிகள். இரவு வெகுநேரம் கழித்து ஸைபர் சிடியில் என் ஆபீஸுக்கு வெளியே பைக்குகளில் வந்து ஹாக்கி மட்டைகளால் என்னை அடித்தார்கள். என் கார் கண்ணாடியை உடைத்தார்கள். நான் எப்படியோ கஷ்டப்பட்டுக் கத்தினேன். இல்லை என்றால் என் மீது மேலும் வன்முறை நடந்திருக்கும்.’

‘அடிபட்டிருக்கா?’

‘தலையில் காயம். கையில் எலும்பு முறிவு.’

இன்ஸ்பெக்டர் வேகமாக எழுதினார்.

‘அதனால் தான் ஹாஸ்பிடலில் இருக்கிறீர்கள்?’

‘ஆமாம். அப்போலோவில் இருக்கிறேன். அவள் பிறந்தநாளுக்கு அங்கே அவளுடன் இருக்கத் திட்டமிட்டிருந்தேன்... ஆனால்...’ என்று நிறுத்தினான். கேவல் வெடித்தது. ரகு, என் வாழ்விலேயே மிகப் பெரிய எதிரி, தேம்பி அழுதான். ஆனாலும் எனக்கு மகிழ்ச்சியாக இல்லை. இன்ஸ்பெக்டர் சற்று நேரம் ரகுவை அழவிட்டு விட்டு, பிறகு பேசினார்.

‘நீங்கள் கலங்கிப் போயிருக்கிறீர்கள் என்று தெரிகிறது. இப்பொழுது வைக்கிறேன். திரும்பவும் பேச வேண்டியது இருக்கும். பார்த்துக் கொள்ளுங்கள்.’

இன்ஸ்பெக்டர் போனை வைத்தார்.

முதலில் வந்த போலீஸ் திரும்ப வந்தார்.

‘ஸார், போன் ரெக்கார்டுகள் நாளை வரும். ஆனால் ரகுவின் செல் டவர் லோகேஷன்படி அது நேற்றிரவு ஹைதராபாத்தில் தான் இருந்திருக்கிறது.’

‘ஆமாம். அவர் அங்கே ஹாஸ்பிடலில் அட்மிட் ஆகி இருக்கிறார்,’ என்ற ரானா என்னைப் பார்த்தார். ‘மாப்பிள்ளை கணக்காக, நாள் முழுவதும் என் அலுவலகத்திலேயே அமர்ந்திருக்கப் போகிறாயா? போய் வெளியே காத்திரு.’

‘போகிறேன் ஸார்,’ என்று கூறி அறையை விட்டு வெளியேறினேன்.

# அத்தியாயம் 7

க்ளிக்! ஃப்ளாஷ்! க்ளிக்! க்ளிக்! கேமரா க்ளிக்குகளும், ஃப்ளாஷ்களும் ஓய்ந்தபாடில்லை. ஊடகத்தினர் உரக்கப் பேசி என் கவனத்தைச் சீண்டி என்னை நிலை குலையச் செய்தனர். ஸரா இறந்ததினம், மதியத்திற்குள் அனைத்துப் பத்திரிகை, சேனல் ஆட்களும் ஹவுஸ் காஸ் போலீஸ் நிலையத்தில் குழுமி விட்டனர். நிலைய வாயிலை ஒரு முப்பது பேர் அடைத்துக் கொண்டனர். சிறு சிறு செய்திகளைச் சேகரிக்கத் தொடங்கினர். இன்ஸ்பெக்டர் ரானா பேச மறுத்தார். எந்த கான்ஸ்டபிளும் அனுமதியின்றி ஊடகத்திடம் பேச அஞ்சினர். ஏதாவது சாப்பிடலாம் என்று எண்ணி மதியம் நிலையத்திலிருந்து வெளியே வர நினைத்தேன். அனைவரும் என்னைச் சூழ்ந்து கொண்டு கேள்விக் கணைகளைத் தொடுத்தனர்.

‘நீங்கள் தான் கேஷவ் ராஜ் புரோஹித்தா?’ என்றார் ஒருவர்.

நான் சிறிதாகத் தலையசைத்தேன். உடனே ஊடகத்தாருக்குப் பரபரப்பு கூடிவிட்டது. இடித்துப் பிடித்து மைக்கை என் முகத்தருகே நீட்டினர்.

‘நீங்கள் தான் பிணத்தைப் பார்த்தீர்களா?’ என்றார் மற்றொருவர்.

‘நீங்கள் பெண்கள் விடுதிக்குள் புகுந்தீர்களா?’ என்றார் ஒரு நபர்.

‘நீங்கள் மாஜி பாய் ஃபிரெண்டா?’ என்றது அடுத்த கேள்விக்கணை அதிர்ச்சியாகி ஸ்தம்பித்தேன். என்ன சொல்வது, யாரிடம் முதலில் பேசுவது என்று புரியவில்லை.

‘தயவு செய்து என்னைப் போக விடுங்கள். நான் எதுவும் செய்யவில்லை, எனக்கு எதுவும் தெரியாது,’ என்றேன்.

அதை ஏன் சொன்னேன் என்று புரியவில்லை. அது நெருப்பை மேலும் விசிறி விட்டுப் பற்ற வைத்தது. கேள்விகள் உரக்கவும், ஊடுருவதாகவும் மாறின.

‘நீங்கள் சந்தேக லிஸ்ட்டில் இருக்கிறீர்களா?’

‘இல்லை,’ என்றேன். ‘அப்படியெல்லாம் இல்லை. நான் எப்போ அப்படி சொன்னேன்?’

‘நீங்கள் அவருடன் உடல் ரீதியான உறவில் இருந்தீர்களா, ஸரா லோனுடன்?’ என்றார் ஒரு ரிப்போர்ட்டர். சோடா புட்டி அணிந்திருந்தார். அவர் கண்ணாடி இட்ட முகத்திலேயே ஒரு குத்து விடலாம் போல் தோன்றியது. கட்டுப்படுத்திக் கொண்டேன். ஒரு ஊடக உறுப்பினரைக் காவல் நிலைய வாயிலில் அடித்தால் அது என் கேஸுக்கு உதவாது என்று புரிந்தது. பல்லைக் கடித்துப் பொறுத்துக் கொண்டேன்.

‘எனக்கு வெளியே போக வேண்டும். போக விடுங்கள்,’ என்றேன்.

‘நீங்கள் ஸரா லோனைக் கொலை செய்தீர்களா மிஸ்டர் ராஜ் புரோஹித்?’ என்றார் கண்ணாடிக்காரரர் மறுபடியும்.

‘இல்லை!’ என்று அலறினேன். நான் முன்னால் நகர முயற்சித்தேன், முடியவில்லை. திரும்பவும் காவல் நிலையத்தின் உள்ளே ஓடினேன். பசியோடு கூட இருந்துவிடலாம். ஆனால் என்னை உயிருடன் தின்று விடுவார்களோ என்ற அச்சம் எழுந்தது.

இன்ஸ்பெக்டர் என்னை ஸௌரப்பிடம் பேசக்கூடாது என்று சொல்லியிருந்தாலும் நான் அவனிடம் சென்று பேசினேன். அவன் கட்டை பெஞ்சில் தூங்கிக் கொண்டிருந்தான். என் மூளை வேலை செய்யமாட்டேன் என்று அறிவித்தது. பயமோ, சோகமோ, சோர்வோ கூட ஆகவில்லை. ஸௌரப்பைப் போல என்னால் தூங்க முடியவில்லை. புழுதி படிந்த ஷெல்பில் ஒரு டி.வி. இருந்தது. எனக்கு எதிர்சுவரில் இருந்தது. செய்திச் சேனல் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தது. சில விளம்பரங்களுக்குப் பிறகு, சேனல் சற்று முன் வெளிவந்த செய்தி என்ற குறிப்புடன் தொடர்ந்தது.

‘காஷ்மீரி இஸ்லாமியப் பெண் ஐஐடி டெல்லி ஹாஸ்டலில் கொலை செய்யப்பட்டாள்.’

செய்தியாளர் ஐஐடி கேட் வாசலில் நின்றிருந்தார். செக்யூரிட்டி செக்போஸ்ட் அருகே. என் காலாவதியான ஐடி கார்டை நான் காட்டிய அதே இடத்தில்.

டஜன் கணக்கில் செய்தியாளர்கள் குழுமியிருந்தனர். டைரக்டர் ஊடகத்துக்கு உள்ளே வர அனுமதி தரவில்லை போலும். மெயின் கேட்டில் இருந்த ஐஐடி பெயர் மட்டுமே காண்பிக்கப்பட்டது.

ஒலி குறைவாக இருந்ததால் நான் டி.வி.யை நெருங்கினேன். உன்னிப்பாகக் கவனித்தேன். காதில் ஒரு விரலை வைத்தபடி, செய்தியாளர் ஸ்டுடியோவிலிருந்த தொகுப்பாளன் அர்ஜித்திடம் பேசினார்.

‘அர்ஜித், இதுவரை கொலை செய்யப்பட்டப் பெண்ணின் பெயர் ஸரா லோன், பிஎச்டி மாணவி, ஐஐடி டெல்லி என்பது மட்டுமே தெரியும். அறை எண் 105, ஹிமாத்ரி விடுதியில் கொல்லப்பட்டாள். அதிகாலை மூன்று மணிக்கு அவளுடைய மாஜி பாய் ஃபிரெண்டு, மாஜி - ஐஐடி டெல்லி மாணவன், அவளுக்குப் பிறந்தநாள் வாழ்த்துக்கூற அவள் அறைக்குள் அடாவடியாகப் புகுந்தான். அவள் பிணத்தைக் கண்டுபிடித்தான்.’

‘ஒரு நிமிஷம்,’ தொகுப்பாளன் அர்ஜித் சொன்னான், கையில் பேனாவைப் பிடித்தபடி. ‘அவள் மாஜி நண்பன் அறைக்குள் புகுந்தானா?’

‘ஆமாம் அர்ஜித். அவன் பெயர் கேஷவ் ராஜ் புரோஹித். அவன் ஐந்து வருடங்களுக்கு முன் ஐஐடியிலிருந்து படித்து வெளியேறினான். அவனும் ஸரா லோனும் உறவில் இருந்தனர். ஸரா டெல்லி காலேஜ் ஆஃப் இன்ஜினியரிங்கில் படித்து பின்னர் ஐஐடி டெல்லியில் பிஎச்டிக்காக சேர்ந்தாள். அதனால் கேம்பஸில் இருந்தாள். ஆனால் கேஷவ்-ஸரா உறவு சில காலத்துக்கு முன்பே முறிந்துவிட்டது என்று நம்பத்தகுந்த வட்டாரங்களில் கூறுகிறார்கள்.’

நான் பிரபலமடைந்து விட்டேன். என்னைப்பற்றி டி.வி.யில் பேசுகிறார்கள். பல கோடி ரூபாய்க்காகப் புதிதாகக் கம்பெனி திறந்த ஐஐடி மாணவன் என்றோ, கம்பெனி முதலாளி, CEO என்றோ, அரசியல் கட்சி ஆரம்பித்தவன் என்றோ பெருமையாகப் பேசவில்லை. பெண்கள் விடுதிக்குள் அத்துமீறல் என்ற அளவில் என் பிரபலத்துவம் முடிந்துவிட்டது.

‘அத்துமீறலைப் பற்றி, மேலும் விவரம் கிடைத்ததா?’ அர்ஜித் கேட்டான். ‘ஆண்கள் எப்படி பெண்கள் விடுதியில்?’

‘ஆமாம். ஐஐடி டெல்லி உறுதியாக ஆண்களைப் பெண்கள் விடுதிக்குள் அனுமதிக்காது தான். அதனால் மாமரம் ஏறி ஜன்னல் வழியாக அறைக்குள் வந்திருக்கிறான், கேஷவ். துரதிர்ஷ்டவசமாக எங்களை விடுதிக்குள் அனுமதிக்க மறுக்கிறார்கள். அதனால் மாமரத்தைப் படம் பிடித்துக் காட்ட முடியவில்லை.’

ஆமாம். ரொம்ப அவசியம்! நாடு மாமரத்தைப் பார்க்காதது பெரிய நஷ்டம் தான். அதில் வளர்ந்த மாங்காய்களைப்

பார்க்கவும் கொடுப்பினை இல்லை.

‘மேலும் தொடர்ந்து சொல்,’ அர்ஜித் தலையசைத்தான். அவனுக்கு இருந்த கவலையில், அவன் ஆட்டிய வேகத்தில் தலை உருண்டுவிடும் அபாயம்.

‘சரி. அவன் அறைக்குள் ஏறி வந்து வாழ்த்து தெரிவிக்கப் பார்த்தான். பிணத்தைக் கண்டான். பிறகு போலீஸுக்கும் அவள் பெற்றோர்களுக்கும் தகவல் தெரிவித்தான். இதுதான் அவன் தரப்பு வாதம்.’

‘படு நிச்சயமாக அதுதான் அவன் தரப்பு வாதம். போலீஸ் என்ன சொல்கிறார்கள்?’

‘இவ்வளவு சீக்கிரத்தில் எதுவும் சொல்லவில்லை. ஆனால் கேஷவ் ஹவுஸ் காஸ் காவல் நிலையத்தில் தான் இருக்கிறான். அவன் ஏதும் புரியாத அதிர்ச்சியில் இருக்கிறான். சற்று கோபமாகவும் தெரிகிறான். காணொளி பாருங்கள்.’

சட்டென்று நான் ஸ்கிரீனில் தெரிந்தேன். பார்க்க சைக்கோ என்றே சொல்லலாம்.

‘இல்லை!’ என்று அலறிக் கொண்டிருந்தேன். என்னுடைய ‘இல்லை’ என்ற ஒற்றை வார்த்தையை ஐந்து முறை ‘லூப்பில்’ ஓட்டினார்கள் - தொலைக்காட்சித் தொடர் போல.

‘கூடுதல் தகவல்,’ என்றார் செய்தியாளர். ‘கேஷவ் ராஜ் புரோஹித் ராஜஸ்தானைச் சேர்ந்தவர். அவர் தந்தை நமன் புரோஹித் ஆர்.எஸ். எஸ்.ல் மூத்த உறுப்பினர். குடும்பம் அரசியல் தொடர்புடையது.’

என்ன? இந்தக் கூடுதல் தகவல் எதற்காக? என் தோடைத் தொட்டுப் பார்த்தேன். என் பெற்றோரை எதற்கு இதில் வம்புக்கு இழுக்கிறார்கள்? என் பாக்கெட்டைத் துழாவினேன். என் போனைக் காணோம். காவல் நிலையத்தில் நான் அமர்ந்திருந்த நாற்காலி மீதே வைத்துவிட்டேன். அதிர்ஷ்டவசமாக நான் விட்ட இடத்திலேயே அது இருந்தது. காவல் நிலையத்தில் யாரும் திருட மாட்டார்கள் என்று நினைக்கிறேன். என் வீட்டிலிருந்து பத்து மிஸ்டு கால்கள் வந்திருந்தன. நான்கு சந்தன் ஆரோராவிடமிருந்து. இரண்டு செக்ஸி ஷீலாவிடமிருந்து. சந்தன் சார்பில் கூப்பிட்டிருப்பாள். அவர்களை நான் திரும்ப அழைப்பதற்குள், தொலைக்காட்சியில் என் பெயர் அறிவிக்கப்பட்டது.

‘சரி, கேஷவ் ராஜ் புரோஹித்தை போலீஸ் கைது செய்துவிட்டார்களா? அல்லது அரசியல் தொடர்பு

காப்பாற்றுகிறதா?' என்றான் அர்ஜித்.

என்னடா நடக்குது இங்கே? என்னை எதற்குக் கைது செய்ய வேண்டும்? நான் என்ன அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தினேன்? என் அப்பாவுக்கு இந்தத் தகவல் எதுவும் தெரியக்கூடாதே என்று கவலைப்பட்டேன். செய்தியாளர் தொடர்ந்து பேசினார்.

'இல்லை அர்ஜித். இதுவரை எந்தக் கைதும் இல்லை. கேஷவ் போலீஸுடன் ஒத்துழைக்கிறார். அவரை எதற்கு நிலையத்தில் வைத்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை. போலீஸ் தரப்பில் நிறைய கோணங்களில் ஆராய்கிறார்கள். மற்ற விடுதி-வாசிகளுடனும் பேசப் போவதாகக் கேள்விப்பட்டோம்.'

'ஏன் மாஜி-காதலனையோ, வேறு யாரையோ கைது செய்யாமல் இருக்கிறார்கள்?' என்றான் அர்ஜித் காட்டமாக.

நான் எதுவும் செய்யவில்லை என்பதால்! டி.வி.யில் செய்தி வந்து பத்து நிமிடங்கள் தான் ஆகியிருக்கும். அதற்குள் இந்த ஆள் கைது செய் என்று அதட்டுகிறான். ஆனால் அர்ஜித்தின் மாஜி-காதலன் கதையைக் காட்டிலும் காரசாரமாக ஒரு கதையைச் சொன்னான் செய்தியாளன்.

'இங்கே பார் அர்ஜித், நாங்களும் கேள்விப்பட்டோம். ஆனால் ஆதாரம் கிடைக்கவில்லை. தீவிரவாதியாக இருக்கலாம் என்று. ஸரா லோன், இஸ்லாமியப் பெண், காஷ்மீரி, என்பதால்.'

ஆமாமாம். காஷ்மீர் இஸ்லாமியப் பெண் என்றாலே கவனிக்கப்பட வேண்டியவளாக மாறுகிறாள். உடனே தீவிரவாதத்தில் செல்கிறது எண்ணம். சில நொடிகளிலேயே அர்ஜித் என்னை மறந்துவிட்டான்.

'காஷ்மீரி இஸ்லாமியப் பெண் மர்மமான முறையில் கொல்லப்பட்டாள். இது என்ன சதி?' என்று அர்ஜித் இலக்கில்லாமல் கேள்வி கேட்டான்.

'எங்களுக்கு இன்னும் தெரியாது அர்ஜித்?' என்றான் செய்தியாளன் பணிவாக.

அர்ஜித்துக்கு இதுபோன்ற பிடிப்பில்லாத பதில் பிடிக்கவில்லை. அவன் கேமராவுக்கு முன்னால் சாய்ந்தான். 'பெரியோர்களே, தாய்மார்களே, இங்கே ஒரு பெரிய செய்தி காத்திருக்கிறது. உங்கள் சேனலில் முதலில் பாருங்கள்.'

பெரிய பொய். நான் காவல் நிலையம் அருகே முப்பதுக்கும் மேற்பட்ட செய்தியாளர்களைப் பார்த்துவிட்டேன். எல்லோரும்

ஒரே சமயத்தில் இதை ஒளிபரப்பினார்கள்.

'விளம்பர இடைவேளைக்குப் போகும் முன்னர், நம்முன் எழும் பெரிய கேள்வி இது தான்,' என்றான் அர்ஜித். ஒவ்வொரு வார்த்தையிலும் அழுத்தம். அவன் உயிரே அதில் இருப்பது போல். 'தீவிரவாதம் இந்தியாவின் முன்னணி கல்விக்கூடங்களுக்குள் ஊடுருவிவிட்டதா?'

பதஞ்சலி பற்பசைக்கான விளம்பரம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ரிஷிகள் பயன்படுத்திய மூலிகைகளைக் கொண்டு உருவாக்கியது, கொலை செய்தியைப் பின்னுக்குத் தள்ளியது. விளம்பரத்தில் ரிஷிகள் அமைதியாக மௌன நிலையில் இருந்தனர். பற்பசை செய்வதைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையாக இருக்கலாம். அவர்கள் ஸ்பான்சர் செய்த நிகழ்ச்சியின் தொகுப்பாளரைப் போல் இல்லாமல் பதஞ்சலியின் பற்பசை விளம்பர மாடல்கள் அமைதியின் மொத்த உருவமாக இருந்தனர். விளம்பரம் பாபா ராம்தேவுடன் முடிவுற்றது. பாபா ராம்தேவின் சிரிப்பைக் கண்டு நான் இவ்வளவு குதூகலித்தது இல்லை. சேனல் திரும்ப ஸராவிடம் போகாமல் இருந்தால் நல்லது என்று யோசித்தேன்.

எனக்கு என்ன வேண்டும் என்பதைப் பற்றி யாருக்கும் அக்கறை இல்லை. சில நிமிடங்களில் அர்ஜித் திரும்பி வந்தான். இப்பொழுது அவனுடன் ஒரு 'மாண்புமிகு' குழு இருந்தது. ஆறு நபர்கள் - சமூக அந்தஸ்துடையவர்கள், முன்னாள் போலீஸ் அதிகாரிகள், காஷ்மீரைப் பற்றிய அறிவு ஜீவித்தனமான சிந்தனையைப் பரப்பும் ஒருவர், ஓய்வுபெற்ற பேராசிரியர் (ஐஐடி) - என்று டி.வி.க்குள் ஆறு ஜன்னல்களில் எட்டிப்பார்த்தனர். செய்தி சேனல்கள் எப்படி இதை ஏற்பாடு செய்கிறார்கள்? வெவ்வேறு துறை நிபுணர்கள் என்ற பெயரில் இவ்வளவு வெட்டிகளை எங்கிருந்து இவ்வளவு சீக்கிரம் களத்தில் இறக்குகிறார்கள்?

அர்ஜித்துக்கு அவனுடைய ஜன்னல் இருந்தது. மற்றவர்களுடையதைவிட இருமடங்கு பெரியது. அவன் பேச்சைத் தொடங்கினான். 'மாண்புமிகு சிறப்புக்குழுவே, கேள்வி இதுதான். நம் சிறந்த மண்ணில் தீவிரவாதத்தன்மை எட்டிப் பார்க்கிறதா? இங்கே அந்த கோணத்தை ஆராயலாமா? டெல்லியில் யாருக்குமே பாதுகாப்பு இல்லை என்பதைத்தான் இந்த நிகழ்வு சுட்டிக் காட்டுகிறதா?'

'எனக்குத் தீவிரவாதத்தைப் பற்றித் தெரியாது,' என்று தொடங்கினார் காஷ்மீர் அறிவு ஜீவி. சமூக அந்தஸ்து நிரம்பிய பெண்மணி, பத்து ரூபாய் நாணயம் அளவில் பொட்டு

வைத்திருந்தாள். அவரை இடைமறித்து அவள் பேசினாள். ‘தீவிரவாதத்தை விட்டுத் தள்ளுங்கள்! என் கேள்வி இதுதான், அர்ஜித். கல்விக்கூடத்தின் காவலாளி என்ன செய்து கொண்டிருந்தார்? டெல்லி போலீஸ் எங்கே போனார்கள்? ஹவுஸ் காஸ் ஒரு செல்வந்தர்கள் நிறைந்த இடம். இதுவே பாதுகாப்பற்றதாக விளங்கினால் நம் நாட்டின் தலைநகரம் குற்றங்களின் தலைநகரமா?’

‘அதுதானே! பணக்காரர்களுக்குக்கூடப் பாதுகாப்பு இல்லையே! போலீஸ் எங்கே போய்விட்டார்கள்?’ என்றான் அர்ஜித்.

மாஜி-போலீஸ், காவல்துறைக்கு விசாரிக்க அவகாசம் கொடுங்கள் என்றார். மாது அவர் வாயை அடைத்துவிட்டாள்.

மாஜி ஐஐடி பேராசிரியர் பேசவே இல்லை.

‘வாங்க! ரானா ஸார் உங்களைக் கூப்பிடுகிறார்,’ என்று ஒரு கான்ஸ்டபிள் அழைத்தார். தோளை உலுக்கினார்.

❖

‘உன் பெற்றோர்கள் அழைத்தனர். உன்னிடம் பேச முயல்கின்றனர்,’ என்றார் ரானா. அவர் குரல் முன்பைவிட அமைதியாக இருந்தது.

‘மன்னிக்கவும். நான் என் போனை கைமறதியாக எங்கோ வைத்துவிட்டேன்,’ என்றேன். அவர்களை எவ்வளவு தவிர்க்க முடியுமோ தவிர்க்க நினைத்தேன்.

‘அவர்கள் ஆல்வாரிலிருந்து வந்து கொண்டிருக்கின்றனர். சில மணி நேரங்களில் வந்து விடுவார்கள்.’

‘அடக்கடவுளே!’ என்றேன்.

‘என்ன?’

‘ஒன்றும் இல்லை.’

‘உன் நண்பனையும் இங்கே கூப்பிடு. நாம் பேசலாம்.’ நான் அவனை எழுப்பிக் கூட்டி வந்தேன். ஸௌரப்பும் நானும் இன்ஸ்பெக்டரின் அலுவலகத்திற்குள் சென்றோம்.

‘இது பெரிய கதையாகி விட்டது. நாடு தழுவிய செய்தி,’ என்றார் ரானா.

‘எனக்குத் தெரியும் ஸார்,’ என்றேன்.

‘என்ன? எப்படி?’

‘நான் டி.வி.யில் பார்த்தேன். செய்தியாளர்கள்,’ என்றேன்.

‘உன்னுடைய நன்மைக்குச் சொல்கிறேன். அவர்களிடமிருந்து விலகியிரு.’

‘நான் அவர்களிடம் பேசவில்லை ஸார். அவர்கள் என்னைக் கும்பலாக வந்து நெருக்கினர். நான் சாப்பிடுவதற்காக வெளியே செல்லப் பார்த்தேன். உடனேயே உள்ளே ஓடி வந்துவிட்டேன்.’

‘காலையிலிருந்து ஏதாவது சாப்பிட்டாயா?’

ஸௌரப் இல்லை என்று வேகமாகத் தலையாட்டினான்.

இன்ஸ்பெக்டர் ரானா பியூனை அனுப்பி எங்களுக்குத் தின்பதற்கு ஏதேனும் வாங்கி வரும்படி கட்டளையிட்டார். அவர் இரண்டு டீயும், உருளைப் பக்கோடாவும் கொண்டு வந்தார். இன்ஸ்பெக்டர் எங்களைச் சாப்பிடும்படி பணித்தார். மெதுவாகக் கடித்தேன். அவர் பேசத் தொடங்கினார்.

‘உன் அப்பா என்னிடம் பேசினார். அவர் என்ன ஆர்.எஸ்.எஸ்.ஸின் முக்கிய உறுப்பினரா, ராஜஸ்தானில்?

‘மாநில பிராந்திய பிரசாரக்.’

‘ஆமாம். அவர் தெற்கு டெல்லி எம்.பி.யிடம் பேசினார். ஹவுஸ் காஸ் தெற்கு டெல்லியைச் சார்ந்தது தான்.’ இதுதான் ரானாவின் புதிய தொனிக்கான அர்த்தம் என்று புரிந்துவிட்டது. டீயும், கொறிக்கத் தீனியும் கிடைத்ததும் அதனால் தான். இந்தியாவில் சக்தி வாய்ந்த பதவியில் இருப்பவர்களிடம் வேலை ஆக வேண்டுமா? வேறு ஒரு சக்தி வாய்ந்தவருடைய சிபாரிசு தேவை.

‘உன் அரசியல் செல்வாக்குக்காக உன்னை நான் லேசில் விட்டுவிட மாட்டேன். சொல்லப் போனால் கூடுதல் மிரட்டலுடன் தான் அணுகுவேன்,’ என்றார் என் மனதைப் படித்தவர் போல.

‘கண்டிப்பாக ஸார்; நாங்கள் நிரபராதி,’ ஸௌரப் சொன்னான். காலையின் முதல் வார்த்தைகள் அவை.

‘நிரபராதியாக இருந்தால் மட்டுமே விடுதலை,’ என்றார் இன்ஸ்பெக்டர்.

‘கேஸ் டி.வி.யில் ஒளிபரப்பாகி விட்டது. சந்தேகப்படுபவரின் மீது போலீஸ் சரியான நடவடிக்கை எடுக்கவில்லை. செல்வாக்கைப் பயன்படுத்தினார்கள் என்ற வதந்தி பரவினால், எனக்கு தான் பிரச்சினை.’

நான் தான் குற்றம் சாட்டப்பட்டவனா? இல்லை தானே?

‘ஸார்! குற்றம் சாட்டப்பட்டவனா?’ என்றேன் குழப்பமாக.

‘அதாவது நீயாக இருந்தால் என்கிறேன். நிரூபணமாகாத

ஆதாரங்கள் உள்ளன. ஆனால் அதிர்ஷ்டவசமாக, உனக்கு உதவக்கூடிய ஒரு தகவல் கிடைத்துள்ளது.'

'என்னது?' என்று ஸௌரப்பும், நானும் கோரஸாகக் கேட்டோம். தாமதமாக 'ஸார்' என்று சேர்த்துக் கொண்டோம்.

'கேம்பஸ் ரெஜிஸ்டர்படி நீங்கள் என்ஃபீல்டு பைக்கில் 3:14க்குக் கேம்பஸுக்குள் சென்றீர்கள். ஸராவின் அறைக்குள் 3:20க்கு தான் அடைத்திருக்க முடியும்.'

'ஆமாம் ஸார். அப்பொழுது தான் சென்றேன். என் பைக் இன்னமும் கேம்பஸில் தான் நிறுத்தப்பட்டிருக்கு.'

'அவள் பெற்றோர்களைக் கூப்பிடும் பொழுது நேரம் 3:38, போலீஸை அழைக்கும்போது 3:40. போலீஸ் 3:52க்கு வந்தோம். 3:54க்கு பாடியைப் பார்த்தோம்.'

'ஆமாம் ஸார்,' என்றேன். எதற்கு இவ்வளவு துல்லியமாக நேரங்களைக் குறிப்பிடுகிறார் என்று குழம்பினேன்.

'சரி நீ 3:20க்கு வந்து 3:35க்குள் அவளைக் கொலை செய்தாய் என்று வைத்துக் கொள்வோம்.

'நான் செய்யலை ஸார்.'

'வாயை மூடிக் கொண்டு கேளு.'

'சரி, ஸார்.'

'அதனால் அவளை 3:35க்கு கொலை செய்தாய் என்றால் நான் பாடியை 3:54க்கு பார்த்தேன். நான் பிரேதப் பரிசோதனை செய்யும் நிபுணன் கிடையாது. ஆனால் என் வாழ்க்கையில் நிறைய பிணங்களைப் பார்த்திருக்கிறேன். இருபது நிமிடங்களுக்கு முன் இறந்த பிணமாகத் தெரியவில்லை. அது சில்லிட்டு விறைத்துப் போயிருந்தது.'

எனக்கு நிம்மதிப் பெருமூச்சு வந்தது.

'எனக்குத் தெரியும் ஸார். நான் பார்க்கும் போது இறந்திருந்தாள். சில்லென்றிருந்தாள்.'

'பிரேதப் பரிசோதனையில் தெரிந்திருக்கும். பெற்றோர்கள் அனுமதிக்கவில்லை,' என்று ரானா விரல்களைக் கோர்த்தபடி பேசினார்.

'ஏன்?' என்றேன்.

'மதம் சார்ந்த காரணங்கள்? யாருக்குத் தெரியும்? அவளைச் சரியாக 'அடக்கம்' செய்ய வேண்டும் என்கிறார்கள். பரிசோதனையில் உடலைக் கூறுப்போட்டுத்தானே தருவோம். ஆனால் திரும்பத் தைத்துக் கொடுப்போம். ஆனால் அவள்

பெற்றோர்கள் காது கொடுத்து கேட்பதாக இல்லை.’

ஸௌரப்பும் நானும் பேசாமல் இருந்தோம். இன்ஸ்பெக்டர் திரும்பப் பேசினார்.

‘நான் ஒரு கோரோனரை அனுப்பியிருக்கேன். அவரைப்புறப் பரிசோதனை செய்ய அனுமதிப்பார்கள் என்று நம்புகிறேன். அவருடைய தகவல்களுக்காகக் காத்திருக்கிறேன்.’

அவர் தன் ‘நோட்ஸை’த் திறந்தார்.

‘கழுத்தை நெறித்த அடையாளங்களைத் தவிர வேறு எந்த காயமும் இல்லை. நான் பார்த்தவரை வேறு எந்தத் தாக்குதலோ, பலாத்காரமோ இல்லை.’

நாங்கள் கோச்சிங் சென்டரில் ட்ரிக்னோமெட்ரி, அல்ஜீப்ரா பற்றிப் பேசுவதைப் போல் அலட்சியமாகப் பிணங்கள், பலாத்காரம் என்று பேசினார். ‘நாங்கள் விடுதியில் தங்கியிருந்த சிலரிடமிருந்து ஸ்டேட்மெண்ட் வாங்கினோம். கேம்பஸ் விடுமுறையா?’

‘இருக்கலாம். ஒரு வார விடுமுறை - பிப்ரவரியில் இருக்கும்,’ என்றேன்.

‘ஆமாம். விடுதியில் நிறைய பேர் இல்லை. அவள் இருந்த பிளாக்கில் மூன்று பெண்கள் தான் இருந்தனர். மற்றவர்கள் வீட்டுக்குச் சென்றுவிட்டனர்.’

‘ஆமாம் ஸார்,’ என்றான் ஸௌரப்.

‘விடுதி வாசலில் சிசிடிவி ஃபுட்டேஜ் இருக்கு. அதைப் பார்த்துக் கொண்டிருக்கோம். ஸராவின் போன் ரெக்கார்டுகளைப் பார்த்துக் கொண்டிருக்கோம். அவளுக்கு நிச்சயிக்கப்பட்டவனின் செல் டவர் இடத்தைக் கண்டுபிடித்து விட்டோம். அவனிடம் பேசி விட்டோம். நான் இரவு முழுவதும் தூங்கவே இல்லை. நாங்கள் சிறப்பாக வேலை செய்கிறோமா?’ என்று இன்ஸ்பெக்டர் கேட்டார். ஒரு நிமிஷம் என்னை அக்யூஸ்டாகப் பார்த்தார். மறுநிமிடம் நான் ஆதரவு தரும் பெண்டாட்டி போல் பேச வேண்டுமா?

‘ஆமாம் ஸார், நீங்க தான் பெஸ்ட்,’ என்றேன்.

‘ஆனால் எதற்கு ஒன்றுமே புரியாமல் அலையும் டெல்லி போலீஸ் என்று டிவியில் காட்டுகிறார்கள்?’ கைகளை மேஜை மீது குத்தினார். ‘நாங்கள் என்ன தான் செய்ய வேண்டுமாம்? ஒவ்வொரு இரவும் ஒவ்வொருவர் வீட்டிலும் புகுந்து புறப்படணுமா? தவறுகள் நடக்காமல் காக்கணுமா? குற்றங்களைத் தவிர்க்கணுமா? எங்களால் குற்றம் செய்தவரைக்

கண்டுபிடிக்கத் தானே முடியும்?'

'ஆமாம்,' என்றேன், ஏன் என்றால் அவரே நான் ஆமோதிப்பதை விரும்பினார் என்று தான் தோன்றியது.

'நேரமெடுக்கும் தானே? குற்றங்களைக் கண்டுபிடிக்கும் 'ஆப்' இருக்கா என்ன?'

'இன்னும் இல்லை,' என்றான் ஸௌரப். கடவுளே! நீ இப்பொழுது இதைச் சொல்லித்தான் ஆகணுமா ஸௌரப்? என்று உள்ளுக்குள் சபித்தேன். இன்ஸ்பெக்டர் ஸௌரப்பைப் பார்த்தார். அவன் தரையைப் பார்த்தான்.

'இல்லை ஸார்,' என்றேன்.

'யாரையாவது கைது செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். அதுவும், உடனே. நான் யாரையும் கைது செய்யவில்லை என்றால், நாங்கள் சோம்பேறிகள். யாரையாவது சந்தேகத்தின் பேரில் கைது செய்தால் நான் குழப்பவாதி, கொடூரமானவன். நான் என்ன தான் செய்ய வேண்டும்?'

அவர் கத்திக் கூப்பாடு போடாமல் வேறு என்ன தான் செய்ய முடியும் என்று யோசித்தேன். 'எனக்கும் புரியவில்லை ஸார். செய்திகளைப் புறக்கணித்து விடுங்களேன்.'

'அப்படி செய்யலாம். ஆனால் அரசியல்வாதிகள் விடமாட்டார்கள். என் உயர் அதிகாரிகள் அவர்களிடம் சல்யூட் அடிக்க வேண்டும். அதனால் அதிகாரிகள் என்னைத் துரத்துவார்கள்.'

இன்ஸ்பெக்டர் ரானாவின் போன் அடித்தது. அவர் புலம்பலைத் தடுத்து நிறுத்தியது. ஆட்களை அடிப்பதில் ஒரு சின்ன சந்தோஷம் இருந்தாலும், போலீஸாக இருப்பது அவ்வளவு எளிதான காரியம் இல்லை என்பதை உணர்ந்தேன்.

'ஆமாம். ஓகே,' என்ற ரானா ஒரு நிமிடம் பேசாமல் இருந்தார். 'நல்லது. நிச்சயம் தெரியுமா? முழு ஃபுட்டேஜவம் பார்த்தாயா? என்ன மணி? 2:02 - 2:41? ரொம்ப நல்லது.'

இன்ஸ்பெக்டர் எங்களிடமிருந்து விலகி நின்றார். போனில் பேசியபடியே நோட்ஸ் எழுதிக் கொண்டார். பிறகு எங்களிடம் வந்தார்.

'நான் சற்று நேரம் முன்பு உன் அப்பாவிடம் பேசினேன். அவரை மதிக்கிறேன். நல்ல மனிதர். என்னை மிரட்டவோ, தன் செல்வாக்கைப் பயன்படுத்தவோ மனிதர் நினைக்கவே இல்லை.'

'ஆமாம் ஸார். அவர் அப்படியெல்லாம் செய்யமாட்டார்.' அதுவும் என்னைப் போன்ற வெத்துப் பயலுக்கு, என்று சொல்ல

நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை.

‘அவர் வரும் பொழுது அவருக்கு நல்ல தகவல் கொடுக்க விரும்புகிறேன்.’

‘என்ன அது?’

‘முதல் சந்தேக லிஸ்டில் நீ இல்லை என்பது தான்.’

முதல் என்றால்? நான் சந்தேக லிஸ்டிலேயே இருக்க விரும்பவில்லை.

‘சரி ஸார்,’ என்றேன். என் பெற்றோர்கள் வர எவ்வளவு நேரம் ஆகும் என்று யோசிக்கத் தொடங்கினேன்.

‘வாட்ச்மேன் தன் இடத்தில் 2:02 - 2:41 மணி வரைக்கும் இல்லை என்பது சிசிடிவியில் நிரூபணமாகி விட்டது.’

‘ஓ’ என்றேன், ‘வேறு யாராவது ஹாஸ்டலுக்குள் நுழைந்தார்களா?’

‘இருக்கலாம். ஆனால் விஷயம் இருக்கு,’ என்றார் இன்ஸ்பெக்டர் ரானா. அவர் கண்கள் மின்னின.

‘என்ன?’ என்றான் ஸௌரப்.

‘ஒரு மாதம் முன்பு, இதே வாட்ச்மேன் லக்ஷ்மண் ரெட்டியுடன் ஸராவுக்குப் பெரிய சண்டை நடந்திருக்கு. அவனை லாபியில் வைத்துக் கன்னத்தில் பளாரென்று அறைந்திருக்கிறாள். சில பெண்களுக்கு முன் இந்தச் சம்பவம் நடந்திருக்கு.’

‘நிஜமாகவா? ஏன்?’ என்றேன்.

‘அது எனக்குத் தெரியாது. ஆனால் கண்டுபிடிப்போம். நாங்கள் சிறப்பாக வேலை செய்வோம், என்று சொன்னேன் தானே?’

‘ஆமாம் ஸார். ஓர் ஆர்வத்தில் கேட்கிறேன். இந்தச் சண்டையைப் பற்றி உங்களுக்கு யார் தகவல் சொன்னது?’

இன்ஸ்பெக்டர் நோட்ஸை எடுத்தார்.

‘ருசிகா தில், நான்காம் - ஆண்டு மாணவி, ஹிமாத்ரி விடுதி. அறை 109. மற்றொரு பெண் சுபத்ரா பாண்டே, அறை 203, இதை உறுதி செய்கிறாள். என் சப்-இன்ஸ்பெக்டர் இப்பொழுது தான் அவர்களிடம் பேசி முடித்தார். என் டீம் இந்தக் கேஸில் கடுமையான விசாரணை நடத்தி வருகிறது. நாங்கள் இதைக் கண்டுபிடித்து விட்டோம் என்றே நினைக்கிறேன். ஆனால் இந்தக் கேடு கெட்ட ஊடகம் இவற்றை எல்லாம் ஒளிபரப்பாது.’

நான் பேசாமல் இருந்தேன். இன்ஸ்பெக்டர் எழுந்து நின்றார்.

‘பிரேன்,’ என்று உரக்கக் கூப்பிட்டார். கான்ஸ்டபிள் ஓடி வந்தார்.

‘சொல்லுங்க ஸார்,’ என்றான்.

‘லக்ஷ்மண் ரெட்டி அங்கே இருக்கானா?’

‘இருக்கான் ஸார். அவன் வெளியே நாற்காலியில் தூங்கிக் கொண்டிருக்கான்.’

‘இரண்டு முறை அடித்து எழுப்பு. உள்ளே இழுத்து வா.’

‘சரிங்க ஸார்,’ என்று கிளம்பினார். தன் அதிகாரத்தை யார் மீதாவது செலுத்த வாய்ப்பு கிடைத்த மகிழ்ச்சியில் நகர்ந்தார்.

இன்ஸ்பெக்டர் எங்கள் பக்கம் திரும்பினார்.

‘வெளியே காத்திருங்கள். ஸாரி. ஆனால் நீங்கள் கிளம்ப முடியாது.’

ஸௌரப்பும் நானும் எழுந்து நின்றோம். அறையை விட்டு வெளியே செல்லும் பொழுது, லக்ஷ்மண் உள்ளே வருவதைப் பார்த்தோம். கூனிக்குறுகிக் கை கூப்பி வந்தான்.

ஓங்கி அறையும் சத்தம் காதில் விழுந்தது. ராணா லக்ஷ்மணை அறைக்குள் வரவேற்கிறார் என்று உணர்ந்தோம்.

# அத்தியாயம் 8

‘கேஷவ், கேஷவ், மகனே!’ என்று என் அம்மாவின் குரல் என்னை எழுப்பியது. என்னைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்று அப்பொழுது தான் விழித்துப் பார்த்தேன். சத்தமாக இருந்த போலீஸ் ஸ்டேஷன் சூழலையும் மீறி நான் உறங்கியிருக்கிறேன். பெஞ்சிலிருந்து எழுந்தேன். என் எதிரேயிருந்த கடிகாரம் மணி நான்கு என்றது.

‘அம்மா!’ என்று கண்களைக் கசக்கினேன். ‘எப்போ வந்தே?’

‘இப்போ தான். என்ன நடந்தது? நீ ஏன் இங்கே இருக்கே?’ என்றாள்.

‘அப்பா எங்கே?’ என்றேன்.

‘அங்கே,’ என்று இன்ஸ்பெக்டர் ரானா அலுவலக அறையைச் சுட்டிக் காட்டினாள். அப்பா அறையிலிருந்து வெளியே நடந்து நேரே என்னை நோக்கி வந்தார்.

‘உன்னைப் பத்து முறை கூப்பிட்டோம். எங்களைத் திரும்பக் கூப்பிடவே இல்லை,’ என்றார்.

‘ஸாரிப்பா,’ என்றேன். ‘நான் வந்து...’

என் வாக்கியத்தை முடிப்பதற்குள் நான் உடைந்து அழத் தொடங்கினேன். என் அப்பா கலங்கவில்லை. கர்ச்சீப்பை வைத்து முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டார். என் அம்மா என்னை அணைத்துக் கொண்டாள். என் வாழ்க்கையில் அந்த அணைப்பைக் காட்டிலும் வேறு சுகமே இல்லை என்பது போல் தோன்றியது. குழந்தைப் பருவத்தில் என் அறையில் அவள் என்னைத் தூங்க வைக்கும் சுகம்.

‘காவல் நிலையத்தில் எதற்கு ஸீன் போடறே?’ என்றார் என் தந்தை.

‘ஸாரிப்பா,’ என்று கூறி என் அம்மாவின் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டேன். கண்ணீரைத் துடைத்துக் கொண்டேன். காவல் நிலையத்தில் இருந்த மற்றவர்கள் என்னைப் பரிதாபமாகப் பார்த்தனர். நான் நெடுங்காலம் ஜெயிலுக்குப் போகப் போவதாகக் கூட நினைத்திருக்கலாம்.

‘என்ன வேலை செய்யறே நீ? நீ வேலை தேடும் வரை ட்யூஷன் எடுக்குறே என்று தானே நினைத்துக் கொண்டிருந்தோம்.’

என் அப்பாவின் எண்ணத்தைத் திருத்த இது சந்தர்ப்பம் இல்லை. எனக்கு வேலை இருக்கு என்று சொல்ல விரும்பவில்லை. கோச்சிங் சென்டரில் வாத்தியார் என்பது ட்யூஷனைவிட மேலானது என்று சொல்லவில்லை.

‘நான் எந்தத் தவறும் செய்யவில்லையப்பா. உங்கள் மீதும், அம்மா மீதும் சத்தியம் செய்யத் தயார்,’ என்றேன்.

‘பெண்கள் விடுதிக்குள் குடித்துவிட்டு, அத்துமீறி நுழைந்திருக்கிறாய். நம் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் இதைப்பற்றித் தெரிந்துவிட்டது.’

‘நான் யாரையும் காயப்படுத்தவில்லை. யாரையும் கொலை செய்யவில்லை.’

‘நல்ல உபகாரம் செய்துவிட்டே. நன்றி மகனே. கொலையாளியாக மாறாததற்கு நன்றி.’

‘நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லையப்பா,’ என்று திரும்ப அழத் தொடங்கினேன். ‘இவ்வளவு தப்பாக முடியும் என்று நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை.’

‘அந்த இஸ்லாமியப்பெண்,’ என்று கடுமையான குரலில் ஆரம்பித்தார் என் தந்தை. ‘முதல் நாளிலிருந்தே அவள் பெரிய பிரச்சினை தான். ஆண்டாண்டு காலமாக நான் அதைத்தான் கூறுகிறேன். நீ அவளுடன் எல்லாம் முடித்துவிட்டாய் என்று தானே எண்ணினேன்.’

‘ஆமாம். முடிந்து தான் இருந்தது.’

‘பிறகு? மூளை மழுங்கிவிட்டதா? அவளிடம் ஏன் திரும்பச் சென்றாய்? சென்ற முறை நீ செய்த அவமானம் பத்தாதா?’

‘நீங்கள் கத்துகிறீர்கள் ராஜ் புரோஹித் ஜீ,’ என்றாள் அம்மா. ‘தயவு செய்து நாம் இதைப்பற்றி பின்னர் பேசலாம். இப்பொழுது கிளம்பலாமா? வா, கண்ணா, வீட்டுக்குப் போகலாம்.’

‘என்னால் வரமுடியாது,’ என்றேன். ‘இன்ஸ்பெக்டர் நான் கிளம்பக்கூடாது என்று கூறியிருக்கிறார்.’

‘அவர் சம்மதம் தெரிவித்துவிட்டார். நான் அவரைக் கெஞ்ச வேண்டியிருந்தது,’ என்றார் என் அப்பா.

‘நீங்கள் ஏன் கெஞ்ச வேண்டும்?’ என்றேன். ‘நான் எதுவும் செய்யவில்லை என்று அவர்களுக்குத் தெரியும்.’

‘அப்படியிருந்தும் அவர்கள் உன்னை இங்கே பிடித்து

வைத்துக் கொள்ள முடியும். நாம் கிளம்புவதற்கு முன் நீயும் உன் நண்பனும் அவருக்கு நன்றி கூறுங்கள்,' என் அப்பா இன்ஸ்பெக்டரின் அறையைச் சுட்டிக் காட்டினார்.

❖

'நல்ல வேளை,' இன்ஸ்பெக்டர் தன் போனை மேஜையில் உருட்டியபடி பேசினார். 'நீ அதிர்ஷ்டசாலி.'

ஸௌரப்பும் நானும் தலையாட்டி ஆமோதித்தோம். எங்கள் வாயை மூடிக் கொண்டிருக்க உத்தேசித்தோம்.

'அந்த வாட்ச்மேன். அவனைக் கைது செய்யும் அளவுக்கு ஆதாரங்கள் கிடைத்துவிட்டன.'

ஸௌரப் திரும்பவும் தலையசைத்தான். இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார். 'ஊடகம் இப்பொழுது சந்தோஷப்படும் என்று நம்புகிறேன். இருபத்திநான்கு மணி நேரத்துக்குள் கைது. பரவாயில்லை?'

நான் தலையாட்டிக் கொண்டே இருந்தேன்.

'இப்போ போகலாம். ஆனால் சில விதிகள் உண்டு. சம்மதமா?'

நாங்கள் அமைதியாக நின்றோம்.

'சம்மதமா, இல்லையா?' என்று கத்தினார்.

வலைத்தளங்களில் படிக்காமலேயே 'சம்மதம்' என்பதை 'க்ளிக்' செய்வது போல் நாங்களும் அதையே செய்தோம்.

'கண்டிப்பாக ஸார். அனைத்து விதிகளுக்கும் சம்மதிக்கிறோம்,' என்றேன். எனக்குக் கிளம்பினால் தேவலை என்று தோன்றிவிட்டது.

'இவை தான் விதிகள். முதலில், டெல்லியை விட்டு வெளியே செல்லக்கூடாது. மேலும் கேஷவ், நீ தினமும் காவல் நிலையத்திற்கு வந்து ஆஜர் ஆக வேண்டும். இரண்டாவது, ஊடகத்துடன் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்கள் எவ்வளவு தொந்தரவு செய்தாலும் பேசக்கூடாது.'

'ஆமாம் ஸார்,' என்றேன்.

'மூன்றாவது, எனக்கு தேவைப்பட்டால் உதவ வேண்டும். ஐஐடி எப்படி வேலை செய்யும் என்று எனக்குத் தெரியாது. அதனால் ஏதாவது தேவைப்பட்டால் உன்னிடம் வருவேன்.'

'சரி, ஸார்,' என்றேன்.

'நல்லது. இந்த கேஸ் சீக்கிரமே முடிவுக்கு வரும் என்று

நினைக்கிறேன். கொலையாளியைக் கம்பி எண்ண வைத்துவிடுவேன்.' இன்ஸ்பெக்டர் ரானா எழுந்து நின்றார். நாங்களும் புரிந்து கொண்டு எழுந்தோம்.

'நாங்கள் போகலாமா ஸார்?' ஸௌரப் நம்ப முடியாமல் கேட்டான்.

'ஜெயிலில் தங்க ஆசையா?' இன்ஸ்பெக்டர் ரானா சிரித்தார். முதல் முறையாகச் சிரித்திருப்பார் - அன்றைய தினத்தில், அந்த வாரத்தில், இந்த வருஷத்தில், ஏன் அவர் வாழ்நாளிலேயே!

ஸௌரப் இன்ஸ்பெக்டர் அறையிலிருந்து வெளியே ஓடினான். நான் கிளம்புவதற்கு முன் என் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவரிடம் ஒரு கேள்வி கேட்கத் துணிந்தேன்.

'ஸார், வாட்ச்மேனைப் பற்றி மேலும் தகவல் கிடைத்ததா? ஸரா எதற்கு அவனை அடித்தாள்? அவன் தான் கொலை செய்தான் என்று எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?'

'வீட்டுக்குப் போ. செய்தியில் தெரிந்து கொள்வே,' என்று கண்ணடித்தார்.

# அத்தியாயம் 9

‘ஹே கேஷவ்,’ என்று ரகு என் முதுகுப் பக்கத்திலிருந்து தோளைத் தட்டினான். ஸராவின் ஈமச்சடங்குகள் நடந்த தினத்தன்று.

காவல் நிலையத்திலிருந்து வெளியே வந்ததும், என் பெற்றோர்களிடம் அனைத்தையும் சொன்னேன். சந்தன் அரோராவுக்கு அனைத்து விஷயங்களையும் விளக்க வேண்டியிருந்தது. அவர் என்னைத் தொடர்ந்து தொலைபேசியில் அழைத்துக் கொண்டே இருந்தார். ‘உன்னுடன் தான் இருக்கேன்,’ என்று குட்கா சுவைத்த வாயுடன் என்னிடம் பேசினார். ‘ஊடகத்தில் ஒரு சிறந்த கோச்சிங் சென்டரில் வேலை செய்கிறேன் என்று சொல். ‘சந்தன் கிளாஸில்’ நாம் நாடு தழுவிய சென்டராகிக் கொண்டிருக்கிறோம்.’ நான் ஊடகத்திடம் பேசக்கூடாது என்று சொல்ல விரும்பவில்லை. இதை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்தி அவருடைய சென்டரைப் பற்றி விளம்பரபடுத்த முடியாது என்றும் சொல்லவில்லை.

ஸரா வீட்டின் அருகே சத்தர்பூரில் இருந்த இஸ்லாமிய மயானத்திற்கு, ஸௌரப்பும் நானும் சென்றோம்.

‘ஹை ரகு. எப்போ வந்தே?’ என்று அவனைத் திரும்பிப் பார்த்தேன்.

இடது கையில் கட்டுப் போடப்பட்டிருந்தது. நெற்றி, பின்னங்கழுத்து போன்ற இடங்களில் காயம். வெள்ளை குர்த்தா, பைஜாமா அணிந்திருந்தான். குளிர் கண்ணாடியைக் கழட்டிக் கண்களைத் துடைத்துக் கொண்டான்.

‘நேற்று மாலை. நீ அவளைப் பார்த்தாயா?’ என்றான் மென்மையான குரலில். நான் ‘ஆமாம்’ என்றேன்.

‘எல்லாத்தையும் சொல். தயவு செய்து,’ ரகு கேட்டான். ‘எனக்கு ஒரு விஷயமும் தெரியவில்லை.’

ஸராவின் இறப்புக்குப் பின் அவன் மீது அவ்வளவு வெறுப்பு தோன்றவில்லை. ஸரா இறப்பதற்கு முன் எனக்கு அனுப்பிய குறுஞ்செய்திகள் பற்றி அவனுக்கு தெரியுமா, என்று

யோசித்தேன். அவனிடம் சொல்லத்தான் வேண்டும் என்று நினைத்தேன். போலீஸிடம் ஏற்கனவே சொல்லிவிட்டேன். அவனிடம் அவர்களே பிறகு சொல்லலாம். ஸரா என்னுடன் திரும்ப சேர வேண்டும் என்று ஆசைப்பட்டாள் என்ற விஷயத்தை அவன் முகத்தில் அடித்தது போல் சொல்ல வேண்டும் என்று விருப்பப்பட்டேன். இவ்வளவு அல்பமாக எண்ணியதற்காக என்னை நானே திட்டிக் கொண்டேன். ஸரா இறந்த அன்று நடந்த விஷயங்களை என்னால் முடிந்தவரை விரிவாகச் சொன்னேன். அவள் எனக்கு அனுப்பிய வார்த்தைகளைச் சற்றுக் குறைத்துச் சொன்னேன்.

‘நாங்கள் திரும்பவும் இணைந்தோம். நான் அவளுக்கு வாழ்த்து சொல்லச் சென்றேன். அவ்வளவு தான்,’ என்று என் கதையை முடித்தேன்.

அவன் கீழே பார்த்தபடி தலையசைத்தான்.

‘ரொம்பக் கொடுமை தான்,’ என்றேன் சற்றே இக்கட்டான அமைதிக்குப் பின்.

அவன் உதடுகளைக் கடித்துக் கொண்டான். என் கண்களையே ஊடுருவிப் பார்த்தான். வார்த்தைகளே இல்லை. பார்வை மட்டுமே.

நான் தான் கொலை செய்திருப்பேன் என்று நினைத்தானோ?

‘நான் அவள் அறைக்கு ஏன் சென்றேன் என்றால்...,’ என்று தொடங்கினேன்.

‘எனக்குத் தெரியும். நான் நேற்று இரவு காவல் நிலையத்திற்குச் சென்றிருந்தேன். உன்னுடன் அவள் ‘சாட்’ செய்ததைப் பற்றிக் கேள்விப்பட்டேன்.’

‘அவள் தான் முதலில் செய்தி அனுப்பினாள்,’ என்றேன் ஒரு தற்காப்பு உணர்ச்சியுடன்.

‘இப்போ அதனால் என்ன?’ என்றான். ‘அவளை இழந்துவிட்டோம். இனி திரும்பப் பெற முடியாது. இந்தக் கொடுமையான நகரத்திற்கு அவளை இழந்துவிட்டோம். அவளை இங்கிருந்து வெளியேறும் படி எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்.’

நான் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். ஸராவின் அப்பா வந்தார். ரகுவிடம் தனியாகப் பேச விருப்பப்பட்டார். ரகுவும், அவரும் என்னிடமிருந்து விலகி நடந்தனர்.

ஸௌரப்பும் நானும் குழி அருகில் சென்றோம். ஸராவின் உடல் வெள்ளைத் துணியால் சுற்றப்பட்டிருந்தது. நான் அருகே

வந்து பேசுவதற்காகத் தான் காத்திருக்கிறாள் என்ற அபத்தமான உணர்வு எழுந்தது. நான் அவளருகில் சென்று எழுப்பினால் எழுந்து அழகாகப் புன்னகைப்பாள். அந்தப் புன்னகை அனைத்தையும் சரி செய்துவிடும்.

சில இஸ்லாமிய முதியவர்கள் அரபி மொழியில் உரக்கப் பிரார்த்தனை செய்தனர். சஃப்தர் அருகே நின்றார். முகம் இறுகியிருந்தது. கைகளை இறுகக் கட்டியிருந்தார். இஸ்லாமியச் சடங்குகளில் பெண்கள் சாதாரணமாகப் பங்கேற்க மாட்டார்கள். ஆனால் ஸராவின் மாற்றாந்தாய், ஜைனாப் அவளுடைய அப்பாவுக்குப் பின்னால் சில உறவினர்களுடன் நின்று கொண்டிருந்தாள்.

ஸராவின் அப்பா கைப்பிடி மண் எடுத்து அவள் தலைக்கடியில் வைத்தார். ஸராவின் உடன் பிறவாத தம்பி, சிகந்தர், வயது இருபதுகளில் தான் இருக்கும். ஆனால் வயதைவிடச் சிறியவனாகக் குழந்தைத்தனமான முகத்துடன் இருந்தான். அவனைக் குடும்பப் புகைப்படங்களில் தான் நான் பார்த்திருக்கிறேன். ஸராவின் தந்தையின் பூர்வீகம் ஸ்ரீநகர். ஸரா மூன்று வயதாக இருந்த போது அவர் மனைவியை இழந்துவிட்டார். ஸராவுக்கு ஐந்து வயதாகும் பொழுது ஃபர்ஜானா என்ற விதவையைத் திருமணம் செய்து கொண்டார். ஃபர்ஜானா தன் முதல் கணவரைக் காஷ்மீர் தாக்குதலில் இழந்துவிட்டாள். சிகந்தர் அவளுடைய முதல் திருமணத்தின் மூலம் பிறந்த மகன். அதனால் சிகந்தரும், ஸராவும் காஷ்மீரில் ஒன்றாக வளர்ந்தனர். எட்டு வருடங்களுக்குப் பிறகு சஃப்தரும், ஃபர்ஜானாவும் விவாகரத்து செய்து கொண்டனர். அவள் குடும்பத்தாருக்குக் காஷ்மீர் தீவிரவாதத்துடன் சம்பந்தம் உண்டு என்று சஃப்தர் கண்டுபிடித்ததால் விவாகரத்து நடந்தது. சஃப்தருக்கு அடிப்படைவாதிகள் என்றாலே ஆகாது. அவர்கள் பிரிந்த போது, தத்தம் குழந்தைகளையும் பிரித்துக் கொண்டு தங்கள் வழியைப் பார்த்துக் கொண்டனர். சஃப்தர் தன் வியாபாரத்தை டெல்லிக்கு மாற்றிக் கொண்டார். ஸரா அவருடன் வந்துவிட்டாள். டெல்லியில் தன் அக்கவுண்டண்டு ஜைனாபை அவள் தந்தை மணந்து கொண்டார். சிகந்தர் ஸ்ரீநகரிலேயே ஃபர்ஜானாவுடன் தங்கி வளர்ந்தான்.

கைவிரல்களைக் கோர்த்தபடி சிகந்தர் ஸராவின் உடலருகே நின்றான். ஒரு உருண்டை மண்ணை எடுத்து அவள் தாடையில் வைத்தான். அந்தச் சடங்கைச் செய்யும் பொழுது கேவி அழுதான்.

பெற்றோர்கள் பிரிந்த பின்பும் சிகந்தரும், ஸராவும்

தொடர்பில் இருந்தனர். நெருக்கமாகவும் இருந்தனர். சஃப்தருக்கு இந்த உறவு பிடிக்காமல் இருந்த பொழுதும் தொடர்பில் இருந்தனர். ஸரா என்னிடம் கூறிய வரையில் சிகந்தர் நன்றாகப் படிக்கமாட்டான். அவன் பரீட்சையில் தேர்வடைவதற்காக அவள் நிறைய உதவி செய்வாள். ஸரா காஷ்மீரிலிருந்து வந்த பிறகு அவன் மதிப்பெண்கள் மிகவும் குறையத் தொடங்கின. அவன் ஐந்தாவதைத் தாண்டவில்லை.

‘சிகந்தர் நன்றாக இருக்க வேண்டும் என்பது என் ஆசை. அவன் ஒரு குழந்தை,’ என்ற ஸரா என்னிடம் அடிக்கடி சொல்வாள்.

ஸராவுடைய பிஎச்டி கைடு பேராசிரியர் ஸஃப்தர், ஐஐடி, டெல்லியிலிருந்து தன் மனைவியுடன் வந்திருந்தார். மாணவர்களின் டீனாகவும் அவர் விளங்கினார். அவர் சஃப்தர் அருகே சென்று சிறிது நேரம் பேசினார்.

பேராசிரியர் ஸஃப்தர் நகர்ந்ததும், ஸராவின் அப்பா ரகுவை அழைத்து அவன் கையில் ஒருபிடி மண்ணைக் கொடுத்தார். மிகவும் நெருக்கமான ஆண் உறவுகள் மட்டுமே இந்தச் சடங்கைச் செய்தனர். ரகுவைத் தன் குடும்பத்தில் ஒருவனாகத் தான் சஃப்தர் கருதினார். ஒரு மௌல்வி அரபி மொழியில் ஏதோ ஜபித்தார். ரகு மண்ணை ஸராவின் தோள்களில் வைத்தான். அவன் மீது கொண்ட வெறுப்பு திரும்பவும் என்னைத் தொற்றிக் கொண்டது. எப்படி கடைசியில் அவன் திரும்பவும் அவளுடன் ஒட்டிக் கொண்டான்? நான் ஏதோ வேண்டாதவன் போல் தூரத்திலிருந்து எதற்கு இதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்? என்னை ஏன் யாரும் கூப்பிட்டு மரியாதை செய்ய விடவில்லை?

மௌல்வியின் பிரார்த்தனை காற்றை நிரப்பியது. ஸராவின் ஆண் உறவினர்கள் அவள் உடலைக் குழிக்குள் இறக்கினர். என் முன்னால் நின்றவர்கள் காட்சியை மறைத்தனர். நான் முந்தியடித்துக் கொண்டு முன்னேறினேன். கடைசியாக அவளிடம் கிசுகிசுத்தேன்.

‘நமக்காகப் போராடாமல் இருந்ததற்கு மன்னித்துவிடு, ஸரா,’ என்றேன்.

‘என்ன மச்சி?’ ஸௌரப் கேட்டான், நான் முணுமுணுப்பதைப் பார்த்து.

‘ஒன்றும் இல்லை,’ என்றேன். தலையைத் திருப்பி அழுகையைக் கட்டுப்படுத்தினேன்.

‘போகலாமா?’ என்றான் ஸௌரப். ‘நாம் இங்கே தேவையில்லை.’

‘அவள் அப்பாவிடம் துக்கம் விசாரித்துவிட்டு வருகிறேன். பிறகு நாம் கிளம்பலாம்,’ என்றேன்.

ஸராவின் உடலை மேலும் மண்ணால் மூடினர். சஃப்தர் முப்பது வயதுடைய ஒரு உயரமான மனிதனுடன் பேசிக் கொண்டிருந்தார். அவன் முதுகு நேராக நிமிர்ந்திருந்தது. வழக்கமான காஷ்மீர் ஆப்பிள்-போன்ற சிவந்த கன்னங்கள். அவர்கள் அருகே சென்று பொறுமையாக அவர்கள் பேசி முடிக்கும் வரை காத்திருந்தேன்.

‘நன்றி ஃபையஸ். உன் கடமையை விட்டு விட்டு இவ்வளவு தூரம் வந்ததற்கு,’ என்றார் சஃப்தர்.

‘என்ன சொல்கிறீர்கள், அங்கிள்? இது குடும்பம். நடந்தது பெரிய துக்கம்,’ என்றான் ஃபையஸ்.

சஃப்தர் தலையசைத்தார். அவனை அணைத்துக் கொண்டார். பிறகு அவன் கிளம்பினான். அவர் என்னைப் பார்த்தார்.

‘எதற்கு இங்கே வந்தே?’

‘துக்கம் விசாரிக்க,’ என்றேன்.

‘நீ அங்கே இருந்தாய். அவள் அறையில். பிறகு இப்போது எந்த தைரியத்தில் துக்கம் கேட்க வந்தாய்?’ என்று கோபித்தார்.

‘அங்கிள், நான் உங்கள் மகளைக் காதலித்தேன். எப்படி நீங்கள் இதுபோல நினைக்கலாம்...?’

அவர் கையை உயர்த்தி என்னை நிறுத்தினார்.

‘அவளைத் தனியே விடு என்று உன்னிடம் சொன்னேனே? ஏன் செய்யவில்லை?’

‘நான் அவளை விரும்பினேன்.’

‘அதனால் தான் உன் குடும்பம் அவளை இழிவுபடுத்த அனுமதித்தாயா?’

‘என்னால் அவர்களைக் கட்டுப்படுத்த முடியாது. நீங்களும் எங்களை ஆதரிக்கவில்லையே, அங்கிள்.’

‘நான் உனக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்தேன்,’ என்றார். ‘இப்பொழுது இன்னொரு வாய்ப்பு அளிக்கிறேன்.’

‘என்ன?’

‘இங்கிருந்து கிளம்பு. ஹுவதா ஹவிஸ்.’

❖

அன்று மதியம் ஆல்வார் சென்றேன். இன்ஸ்பெக்டர் ரானாவின் அனுமதியுடன் ஒரு நாள் வீட்டிற்குச் சென்றேன். என் பெற்றோர்களுடன் இருக்க விரும்பினேன். மொத்தமாக உணர்ச்சிகள் மீறி உடைந்துவிட்டேன் என்றால் என்ன செய்வது? என் அம்மா என் வலியை உணர்ந்து எனக்குப் பிடித்த அனைத்து ராஜஸ்தானி உணவையும் செய்து வைத்தாள். கட்டே கீ ஸப்ஜி மற்றும் சூடான புல்கா சப்பாத்திகள், நெய் ஒழுக சாப்பிட்டபடி மதிய செய்திகளைப் பார்த்தேன்.

'சற்றுமுன் வந்த செய்தி: வாட்ச்மேன் கைது. ஐஐடி டெல்லி பெண்ணின் கொலை வழக்கில்.'

தொகுப்பாளன் அர்ஜித் தெரிவித்தான்.

'ஹிமாத்ரி விடுதி வாட்ச்மேன் லக்ஷ்மண் ரெட்டி, ஸரா லோனின் கொலை வழக்கில் கைது. ஸரா, காஷ்மீர், ஐஐடி டெல்லி மாணவி.'

காணொளியில் பேந்தப் பேந்த விழித்தபடி லக்ஷ்மண் ரெட்டி போலீஸ் வேனில் ஏறினான். அர்ஜித் தொடர்ந்தான், 'தகவல்களின்படி, லக்ஷ்மண் ரெட்டி ஹிமாத்ரி விடுதி தோட்டத்திலிருந்து பெண்களை நோட்டம் விட்டான். வெறித்துப் பார்த்து அவர்களை அசௌகரியப்படுத்துவான். ஒரு மாதம் முன்னால் ஒரு பெண் ஸ்கூட்டரில் குட்டைப் பாவாடை அணிந்து சென்ற பொழுது அவள் பாவாடை பறந்த காட்சியைப் படம் பிடித்தான். ஸரா லோன் அவனை நேருக்கு நேர் சந்தித்துச் சண்டைப் பிடித்தாள். அனைவரும் பார்க்கும் வண்ணம் ஸரா அவன் கன்னத்தில் அறைந்தாள்.'

என் அம்மா மேலும் புல்கா சப்பாத்திகளுடன் அறைக்குள் நுழைந்தாள். ரிமோட்டை எடுத்து டி.வி.யை அணைத்தாள்.

'இந்தக் கேஸைப் பற்றி யோசிக்காமல் இருப்பதற்குத் தானே இங்கே வந்தே?' என்றாள்.

'அம்மா, என்ன செய்யறே?' என்றேன். ரிமோட்டை அவள் கையிலிருந்து பிடுங்கினேன். 'புதிய தகவல்கள் தருகிறார்கள்.'

'அவள் இறந்துவிட்டாள். அவர்கள் என்ன தகவல் கொடுத்தாலும் அந்த இஸ்லாமியப் பெண் திரும்ப வரமாட்டாள். கடவுளுக்கு நன்றி.'

'அம்மா,' என்று கத்தினேன். 'நிறுத்து. ஒரு வாரம் கூட ஆகவில்லை அவள் இறந்து.'

'அவள் உயிருடன் இருக்கும் பொழுது நிறைய பிரச்சினைகளை ஏற்படுத்தினாள். அவள் இறந்த பிறகும்

உன்னை பாதிக்கும்படி வைத்துக் கொள்ளாதே.’

‘போதும்மா,’ என்றேன். அவள் கைகளிலிருந்து புல்கா சப்பாத்தியை வாங்கிக் கொண்டேன்.

‘உன் வேலை தேடும் படலம் என்ன ஆச்சு?’

‘முயற்சி செய்கிறேனம்மா. நிறைய நேர்காணல்கள். பார்க்கலாம்.’ பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. அவர்கள் ஏற்கனவே நிராகரித்து விட்டார்கள்.

அம்மா எரிச்சலாக அறையை விட்டு வெளியேறினாள். அம்மா போனதும் நான் திரும்ப டி.வி.யைப் பார்த்தேன். அர்ஜித் ஒரு செய்தியாளரிடம் பேசிக் கொண்டிருந்தான்.

‘வேறு என்ன கேள்விப்படுகிறோம்?’ அர்ஜித் கேட்டான். செய்தியாளர் மைக்கில் பேசினான்.

‘நாங்கள் ஹவுஸ் காஸ் போலீஸ் ஸ்டேஷனில் இருக்கிறோம். லக்ஷ்மண் ரெட்டி கைது செய்யப்பட்டுள்ளான். டெல்லி போலீஸ் இந்தக் கேஸை வரலாறு காணாத சமயத்தில் முடித்துவிட்டோம் என்று மார்தட்டிக் கொள்கிறார்கள். வாட்ச்மேனைக் குற்றவாளி என்று நிரூபிக்க எல்லாவிதமான ஆதாரமும் கிடைத்துவிட்டது என்கின்றனர். அசிஸ்டெண்ட் கமிஷனர் சொல்கிறார், ஊடகம் தவறாக முடிவு செய்துவிட்டது, நாங்கள் (டெல்லி போலீஸ்) தாமதிக்கிறோம் என்று. ஆனால் இந்தக் கேஸைக் கண்டுபிடித்து பிரமாதமாக வேலை செய்துவிட்டோம்.’

‘சரி. தனக்கு தானே வாழ்த்துக்கள் சொல்லிக் கொள்வதை விட்டு விட்டு, வாட்ச்மேன் தான் கண்டிப்பாகக் குற்றவாளி என்பதற்கு என்ன ஆதாரம் வைத்திருக்கிறார்கள், டெல்லி போலீஸ்?’

சிசிடிவி ஃபுட்டேஜின் படி வாட்ச்மேன் நாற்பது நிமிடங்களுக்குக் காணவில்லை. அவனுக்கு எட்டிப்பார்க்கும் பழக்கம் உண்டு. ஸரா லோன் அவனை அறைந்ததுடன், போலீஸில் புகார் கொடுத்திருக்கிறாள். தெலங்கானா, ஹைதராபாத்துக்கு அருகில் இரண்டு மணி நேரப் பயணத் தொலைவில் தான் லக்ஷ்மண் ரெட்டியின் கிராமம் இருக்கு என்கின்றனர் போலீஸ். சில தினங்களுக்கு முன், ஸரா லோனுக்கு நிச்சயிக்கப்பட்ட மாப்பிள்ளை, வலைதள பிசினஸ் செய்யும் ரகு வெங்கடேஷை, யாரோ லோக்கல் ரௌடி கும்பல் ஹைதராபாத்தில் தாக்கியிருக்கின்றனர். இந்தச் சம்பவமும் லக்ஷ்மணுக்குத் தொடர்புடையதாக இருக்கலாம். ரகு இறக்காமல் மயிரிழையில் தப்பினார். ஆனால் படுகாயமடைந்து அப்போலோவில் சேர்க்கப்பட்டார். மீண்டும் அர்ஜித்திடமே

பேசவும்.’

கேமரா அர்ஜித் ஜன்னலுக்குத் தாவியது. பிறகு ஏழு ஜன்னல்களில் மற்ற குழுவினரையும் காட்டியது.

அர்ஜித் விவாதத்தைத் தொடங்கி வைத்தான் - தன் முதல் கேள்வியுடன்.

‘நாம் இங்கே குழுமியிருக்கிறோம். தொடர்ந்து பெண்களை எட்டிப்பார்த்து, பின்தொடர்ந்து உபத்திரவிக்கும் ஒரு வாட்ச்மேனை எப்படி ஐஐடி போன்ற கல்வி நிலையம் வேலையில் வைத்திருந்தது? நம் தொலைக்காட்சியில் இன்று சர்ச்சைக்கான விஷயம்; ஐஐடி அதிகாரிகள் இதற்குப் பொறுப்பேற்க வேண்டும். வாட்ச்மேன் மீது தொடுக்கப்பட்ட புகாருக்கு எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை, பல வாரங்களாக? ஐஐடி தான் ஸரா லோனைக் கொன்றுவிட்டதா?

சிலர் உடனே பேசத் தொடங்கினர். ஒருவர் பேச்சை ஒருவர் வெட்டிப் பேசினர். ஒரு வாக்கியம் கூடப் புரியவில்லை. இரைச்சல் காதைப் புண்ணாக்கியது. ரிமோட்டை எடுத்து டி.வி.யை அணைத்து அறையை அமைதிப்படுத்தினேன்.

‘நல்ல வேளை அந்த காய்கறி மண்டி சர்ச்சையை அணைத்தாய்,’ என்றாள் அம்மா சமையலறையிலிருந்து.

❖

ஒரு மணி நேரம் கட்டிலில் புரண்டேன். தூங்க முடியவில்லை. எல்லா இரவும் ஸராவை நினைத்து அழுதது போல் அழவில்லை. இன்றிரவு என் மனம் வேறு எங்கோ இருந்தது. லக்ஷ்மண் ரெட்டி நிஜமாகவே ஸராவைக் கொலை செய்தானா? இந்தக் கேள்வி என் மனதில் ஓடிக்கொண்டே இருந்தது. ஆமாம். அவனுக்குக் கொலைக்கான காரணம் இருந்தது. ஸரா அவனை அனைவர் முன்னிலையில் அடித்திருக்கிறாள். சூழ்நிலையும் எதிராகத் தான் அமைந்துள்ளது. அன்றிரவு அவன் தன் இருக்கையில் இல்லை. அவன் செய்திருக்க வாய்ப்புகள் அதிகம்.

ஆனால் ஏதோ உதைத்தது. என்ன காரணம் என்று சரியாகச் சொல்லத் தெரியவில்லை. வயிற்றில் ஏதோ பிசைந்தது. டெல்லி போலீஸ் வெற்றியை அறிவித்தது. ஊடகம் சத்தமாக சர்ச்சைகளை எழுப்பியது. ஏதோ சரியில்லை.

நான் ஸௌரப்பை அழைத்தேன்.

‘தூங்குகிறாயா?’ என்றேன், போனை எடுத்தவுடன்.

‘இல்லை, மச்சி. வீடியோ பார்த்தக் கொண்டிருந்தேன்.’

‘என்ன மாதிரியான வீடியோ?’ என்று நக்கலடித்தேன்.

‘வாயை மூடு மச்சி. யூ-ட்யூப்.’

‘சரிதான். சந்தன் கிளாஸஸ் எப்படிப் போகுது?’

‘’எப்பொழுதும் போல் போரடிக்கிறது. குட்கா ஆளு உன்னை விசாரித்தார்.’

‘நான் நாளை திரும்பிவிடுவேன். உன் சோகத்தில் ஐக்கியமாகி விடுவேன்.’

‘அவசரமே வேண்டாம். நான் இங்கே பார்த்துக் கொள்கிறேன். நீ ஓ.கே.வா?’

‘ஓ.கே என்பது வெகுதொலைவில் இருக்கு. இன்று மூன்று மணி நேரத்துக்கும் குறைவாகத் தான் அழுதேன். அது ஒரு நல்ல விஷயம்.’

‘இன்னும் சரியாகும்.’

‘நானும் அப்படித்தான் நம்புகிறேன். ஆனால் என் மனதில் வேறு ஒரு கவலை ஓடுகிறது.’

‘என்ன?’

‘செய்திகளைப் பார்த்தாயா?’

‘லக்ஷ்மண் ரெட்டியைக் கைது செய்துவிட்டனர். வெறியன். பெண்களின் ஸ்கர்ட்டைப் படமெடுத்திருக்கிறான். எதற்கு?’

‘பெண் குட்டைப் பாவாடை அணிந்திருந்தால் அதற்கு அடியில் உள்ளதை வீடியோ எடுத்திருக்கிறான்.’

‘எவ்வளவு கேவலமான, கீழ்த்தரமான செயல்?’

‘அதுதான்.’

‘அவனைப் பிடித்ததில் எனக்கு மகிழ்ச்சி.’

‘ஆமாம். அவன் மட்டமானவன் தான், கோலு. ஆனால் அவன் ஸராவைக் கொன்றானா?’

‘என்ன? நீ சரியாகத் தானே கேட்டாய்? அவன் ஸீட்டில் இல்லை. ஸரா அறைந்தாள், புகார்கள்.’

‘ஆமாம். ஆனால்...,’ என்று தயங்கினேன். ‘எனக்குத் தெரியவில்லை. ஏதோ சரியில்லை...’

‘நீ பதற்றமாக இருக்காய், மச்சி. அதிர்ச்சியிலிருந்து மீளவில்லை. இன்னும் சில நாட்கள் வீட்டிலேயே தங்கு. டி.வி. பார்க்காதே.’

# அத்தியாயம் 10

‘என்ன நினைக்கிறே? டெல்லி போலீஸ் சளைச்சவர்கள் இல்லை, தானே?’ ரானா எங்களைப் பார்த்துக் கண்ணடித்தார். மேஜை மீது டீ கப்பை வைத்தார். இப்பொழுது போலீஸ் ஆபீஸர் போர்வையைத் தளர்த்தி சகமனிதராகத் தெரிந்தார். நான் அவரை ‘இன்ஸ்பெக்டர் ரானா’ என்று நினைக்காமல், ‘ரானா’ என்று நினைக்கத் தொடங்கினேன். ஸௌரப்பும் நானும் அவர் அலுவலகத்தில் இருந்தோம். எங்களுடைய தினசரி ‘ஆஜருக்காக’ வந்திருந்தோம்.

‘அபாரம் ஸார், கொலையை இரண்டே நாட்களில் கண்டுபிடித்து விட்டீர்களே!’ என்று ஸௌரப் ஐஸ் வைத்தான். குறிப்பிட்ட காரணம் ஏதுமின்றி அவரைத் தாஜா செய்தான்.

என்னுடைய டீயை நான் தொடவே இல்லை. ‘டீ குடி,’ என்றார் ரானா.

‘ஸார், வாட்ச்மேன் தான் என்று உறுதியாகத் தெரியுமா?’ என்றேன். ரானா புருவத்தை உயர்த்தினார். ஸௌரப்பைப் பார்த்து சிரித்தார். ‘காரணம் சிசிடிவி ஆதாரம். தெலங்கானாகாரன். ஸராவின் மாப்பிள்ளையை அடிக்க ஆள் அனுப்பினான். திறந்து-மூடும் அளவுக்கு எளிமையான கேஸ்.’

‘அப்படியா?’ என்றேன்.

ஸௌரப் என் காலை உதைத்து வாயை மூடும்படி சமிஞ்ஞை செய்தான். அவனுக்குத் தினமும் நிலையத்தில் ஆஜராவது நின்றால் போதும். அதனால் ரானா என்ன சொன்னாலும் தலையாட்டினான்.

ஆனாலும் என்னால் கேட்காமல் இருக்க முடியவில்லை. ‘லக்ஷ்மண் எதற்கு ரகுவைத் தாக்க வேண்டும்?’

‘ஏன் என்றால் ரகுவும் லக்ஷ்மணை கேள்வி கேட்டிருக்கிறான். அவன் தான் ஸராவைப் புகார் கொடுக்கும்படி தூண்டினான்.’

‘ரகுவிடம் பேசினீர்களா?’ என்று கேட்டேன்.

‘நாங்கள் என்ன முட்டாள்களா? நிச்சயமாக மாப்பிள்ளைப்

பையனுடன் பேசுவோம்.'

'ஓ.கே. ஸார். ஸாரி ஸார்,' என்றேன்.

'அவன் காவல் நிலையத்திற்கு வந்தான். ஸரா வாட்ச்மேனுடன் போட்ட சண்டையை உறுதிப்படுத்தினான்,' என்றார் இன்ஸ்பெக்டர் எரிச்சலாக. 'நீங்கள் இருவரும் வெளியேறுங்கள்.'

'ஸார்?' என்று ஸௌரப் எழுந்தான்.

'என்ன?' என்றார் ரானா.

'நாங்கள் தினமும் வரணுமா? நீங்கள் தான் கொலையாளியைப் பிடித்துவிட்டீர்களே?'

'ஹ்ம்ம்ம்...' என்று ரானா ஸீட்டில் பின்னாடி சாய்ந்தார். 'நீ சொல்வது சரிதான். ஆனால் உன் நண்பன் எனக்கு அவசியப்படும் பொழுது தேவை.'

'கண்டிப்பாக ஸார். நான் இங்கே தான் இருக்கேன் ஸார். ஐந்து கிலோ மீட்டர் தொலைவில். சந்தன் கிளாஸில் தான் பாடம் நடத்துகிறேன்.'

'ஓ.கே. கேஷவ் மட்டும் என்னை சந்தித்தால் போதும். வாரம் ஒரு முறை. இல்லை நான் கூப்பிடும் பொழுது. ஸௌரப் இனி வர வேண்டாம். சந்தோஷமா?'

ஸௌரப்பின் முகம் சந்தோஷத்தில் மிளிர்ந்தது. ஜெயிலிலிருந்து முப்பது ஆண்டுகள் கழித்து விடுதலையான கைதி போல் உணர்ந்தான்.

'நான் எப்போ வேண்டுமானாலும் வருவேன் ஸார். ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள்,' என்றேன்.

'என்ன?' என்றார் ரானா.

'நான் ஒரே ஒரு முறை வாட்ச்மேனுடன் பேச முடியுமா? அதுவும் நீங்கள் சம்மதித்தால்?'

'என்ன?' ஸௌரப் என்னைக் கோபமாகப் பார்த்தான். நாங்கள் ஜெயிலிலிருந்து-விடுபடுவதற்கான - உத்தரவைப் பெற்றுவிட்டோம். நான் இப்பொழுது எதற்கு மூக்கை நுழைக்கணும்?

ரானா சிரித்தார். என்னருகே வந்து முதுகைத் தட்டினார்.

'உனக்கு என்ன கிறுக்கா? நீ யாரு? துப்பறியும் புலியா?' என்றார் ரானா.

'நான் ஒரு ட்யூஷன் வாத்தியார், ஸார். ஒரே ஒரு முறை பேச அனுமதி கொடுங்கள், ஸார்...'

இன்ஸ்பெக்டர் பெருமூச்சு விட்டபடி இருக்கைக்குச் சென்றார்.

‘நாளை இரவு வா. யாரும் இதைப் பார்க்க முடியாது.’

‘நன்றி, ஸார்,’ என்றேன்.

‘என்ன செய்தாலும், என் கேஸை சொதப்பாதே,’ என்றார்; தன் கப்பை கவிழ்த்துக் குடித்தார்.

❖

இதுவரை நான் போலீஸ் லாக்கப்புக்குள் சென்றதில்லை. ஹவுஸ் காஸ் நிலையத்தில் நான்கு இருந்தது. கைதிகளை வைத்திருக்கும் சிறு அறைகள். பிறகு அவர்களைச் சிறைக்கோ, அல்லது ‘பெயிலுக்கோ’ அனுப்பி விடுவார்கள். ஒரு கான்ஸ்டபிள் லக்ஷ்மண் அறையைத் திறந்துவிட்டு எனக்காக வெளியே நின்றார்.

லாக்கப்புக்குள் விந்தையாக இருந்தது. என்னையும் வைத்துப் பூட்டி விட்டால் என்ன செய்வது?

லக்ஷ்மண் தரையில் குந்தி உட்கார்ந்திருந்தான். அவன் கண்களில் இருந்த பயம் அவனை அணுகும் போதே தெரிந்தது. உடல் நடுங்கியது. முகத்தைத் திருப்பிக் கொண்டான். ஏதோ அடியை எதிர்பார்ப்பது போல். யார் அவனை காவல் நிலையத்தில் சந்தித்தாலும் அடிப்பார்கள் போல் தோன்றியது.

நான் ஜீன்ஸும், நீலத்தில் கட்டம் போட்ட சட்டையும் அணிந்திருந்தேன். என்னைப் பார்த்தால் புது கைதி போலவோ, போலீஸ் போலவோ தோற்றம் அளிக்கவில்லை. என்னைப் பார்த்து நடுங்கியபடி நின்றான். கான்ஸ்டபிள் ஒரு நிமிடம் எங்களையே பார்த்தார். பிறகு சுவாரஸ்யம் இல்லாமல் திரும்பிக் கொண்டார். ‘டைகர் ஜிந்தா ஹை’ என்ற படத்தின் திருட்டுப் பிரதியை தன் போனில் பார்க்கத் தொடங்கினார்.

‘நான் கேஷவ்,’ என்றேன். அவனுக்கு வியப்பு. ‘அன்று பார்த்தாயே.’

அவனுக்கு இணையாகத் தரையில் குனிந்தேன்.

‘நான் ஸராவின் நண்பன்,’ என்றேன். ‘அதாவது நண்பனாக இருந்தேன்.’

அவன் முகம் வெளுத்தது. எனக்கு ஸராவைத் தெரியும். நிச்சயமாக அடிப்பேன் என்று நினைத்தான். கைகளைக் கூப்பி உயர்த்தினான்.

‘ஐயா, நான் எதுவும் செய்யவில்லை. நான் ஸரா மேடத்தைக் கொலை செய்யவில்லை என்று சத்தியம் செய்வேன்.’ அவன் குரல் உடைந்து ஓலமிட்டான். கான்ஸ்டபிள் மூங்கில் லத்தியால் கம்பியில் தட்டினார்.

‘அமைதி,’ என்றார். கேத்ரினா கைஃப் பாடலில் கண்கள் மேய்ந்தன.

‘சுதாரித்துக் கொள் லக்ஷ்மண்,’ என்றேன் சமாதானமாக. ‘உனக்கு உதவி செய்யத்தான் நான் வந்திருக்கேன்.’

லக்ஷ்மண் என்னை நம்ப மறுத்தான்.

‘என்ன நடந்தது என்று நீ எனக்குச் சொல்ல வேண்டும்,’ என்றேன். ‘தெரியலை ஐயா. நான் விடுதி மெயின் கேட்டில் இருந்தேன். ஒவ்வொரு அறையிலும் என்ன நடக்கிறது என்று என்னால் எப்படிக் கண்காணிக்க முடியும்? என் குழந்தைகளின் மீது சத்தியம் செய்வேன். நான் எதுவும் செய்யவில்லை.’

நான் உதடுகளின் மீது ஒரு விரலை வைத்து பேசாதே என்றேன். கான்ஸ்டபிளைச் சுட்டிக் காட்டினேன்.

‘ஸரா மேடம் என்னை அடித்தார். ஆனால் அது என் தவறுக்காகத் தான்.’

‘ஒரு மாணவியின் காணொளியை எடுத்தாயா?’

‘ஆமாம், ஆமாம். பெரிய தவறு,’ என்று தலையைப் பலமாக ஆட்டினான்.

‘ஸராவுடன் சண்டை போட்டாயா?’

‘நான் கோபமானேன். மிரட்டினேன். ஆனால் நிஜத்தில் என்னால் என்ன செய்ய முடியும்? நான் வெறும் வாட்ச்மேன் தானே? நான் அவளை கொலையெல்லாம் செய்ய மாட்டேன்.’

‘பிறகு யார் செய்தது?’ என்றேன்.

‘எனக்கு தெரியாது, ஐயா.’

‘உன் இருக்கையில் நீ ஏன் இல்லை?’

அவன் கண்கள் என்னிலிருந்து விலகின. ‘நான் கழிப்பறைக்குச் சென்றேன்.’

‘நாற்பது நிமிடங்களா?’

அவன் தரையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

‘நீ பதில் சொல்லித்தான் ஆகணும் லக்ஷ்மண். இல்லையென்றால் வாழ்நாளை இங்கே தான் கழிக்க வேண்டும்.’ அவன் தாடையை என் கைகளால் நிமிர்த்தினேன். ‘ரெட்டி, நீ

என் ஸராவைக் காயப்படுத்தியிருந்தால், அவர்கள் தண்டனை கொடுப்பதற்கு முன் நான் உன்னைக் கொன்றுவிடுவேன்.’

‘நான் செய்யலை ஐயா. நான் ஸரா மேடத்தைக் கொலை செய்யவில்லை.’

‘2:02 - 2:41, எங்கே இருந்தே?’

கிட்டே வரும்படி சைகை செய்தான். காதில் கிசுகிசுத்தான்.

‘என்ன?’ என்று அவனிடமிருந்து விலகி நின்றேன்.

‘ஆமாம் ஐயா. அதுதான் காரணம்.’

‘எப்படி?’

‘என்னுடைய ஸ்மார்ட் போனில், ஐயா.’

‘போன் எங்கே?’ என்றேன்.

‘வீட்டில். என்னைப் பார்க்க வந்த போது பெண்டாட்டியிடம் கொடுத்தேன். ஐயா நான் எதுவும் செய்யவில்லை. கொலையாளி ஜன்னல் வழியாக வந்திருக்க வேண்டும்...’

‘என்ன?’

‘நான் கொலை செய்யணுமானால் எதற்கு ஜன்னல் வழியாகப் போக வேண்டும்? நான் அறைக்கு நடந்தே போயிருக்கலாம். ஏதோ பார்சல் கொடுப்பதாகப் பாவனை செய்திருக்கலாம்.’

‘ஆமாம். நீ கதவு வழியாகச் சென்றிருக்கலாம். ஆனால் நீ அவளைக் கொலை செய்துவிட்டு, கதவை உள்பக்கமாகத் தாளிட்டு ஜன்னல் வழியாகக்கூட தப்பித்திருக்கலாம். அப்பொழுது யாருக்கும் உன் மீது சந்தேகம் வராது,’ என்றேன்.

அவன் என் காலில் விழுந்தான்.

‘இல்லை ஐயா. என் சிறிய பெண்ணின் மீது சத்தியம்.’

❖

ஷாபூர் ஜாட் தெருக்கள் வழியாக நடந்தோம். மெயின் ரோட்டை அடைந்தோம். லக்ஷ்மணுடைய போனை அவன் வீட்டிலிருந்து வாங்கி வந்தோம்.

‘ஸாரி! இந்தப் போனை வைத்து நான் என்ன செய்ய வேண்டும்?’ என்றான் ஸௌரப்.

‘என்.ஐ.டி. ஹாக்கத்தான் போட்டியை வென்றதாக மார்தட்டிக் கொண்டாயே, நிஜம் தானா?’

‘கண்டிப்பாக, மச்சி. நான் டிண்டரை ஹாக் செய்தேன். பணம் கட்டாமலேயே அக்கௌண்ட் உருவாக்கினேன்.’

‘நல்லது. லக்ஷ்மண் போனை ஹாக் செய்.’

நான் ஒரு ஆட்டோவைக் கூப்பிட்டேன். டிரைவர் மாளவியா நகர் மிகவும் அருகே என்று புலம்பினான். ஸௌரப் அவனுக்கு லெக்சர் அடித்தான். ‘ஆப்’பில் புக் செய்யும் டாக்ஸிகள், ஆட்டோக்களின் சரிவை ஏற்படுத்தும் என்று ஸௌரப் அவனை எச்சரித்தான்.

ஹிமாத்ரி விடுதி விருந்தினர் கழிப்பறைக்குள் புகுந்தான் லக்ஷ்மண். அதனால் தான் போஸ்டில் இல்லை. அங்கு தான் அவனுக்கு ‘வைஃபை’ கிடைக்கும்.

‘கழிப்பறையில் எதற்கு வைஃபை?’

‘யோசி,’ என்றேன். ‘நீ இன்ஜினியரிங் காலேஜில் தானே படித்தாய்?’

‘ஆமாம்,’ என்றான் ஸௌரப்.

‘அவன் பொய் சொல்லுகிறானா என்று கண்டுபிடி.’

‘குறிப்பிட்ட நேரத்தில் பலான சைட்டுக்கு அவன் போனானா, என்று கண்டுபிடிக்க வேண்டுமா?’

‘ஆமாம். அவன் இருந்த லொகேஷனும் தேவை. முடியுமா?’

‘சுலபம். இது ஹாக்கே கிடையாது. போனில் உள்ள ‘பிரௌசர் ஹிஸ்டரி’ பார்த்தாலே போதும். அதிலேயே சென்ற நேரம், ‘சைட்’ எல்லாமே தெரியும். ஹிமாத்ரிக்குச் சென்று அவர்கள் வைஃபையில் இணைந்ததா என்று எளிதாகக் கண்டுபிடிக்க முடியும் ---’ ஸௌரப் பேசிக் கொண்டே போனான். அவனை இடைமறித்தேன்.

‘மச்சி, இதெல்லாம் தெரிந்தால் நான் ஒரு நிஜ இன்ஜினியர் ஆகி வேலையில் அமர்ந்திருப்பேன். புரிகிற பாஷையில் தயவு செய்து பேசு.’

ஸௌரப் என்னை ஆச்சரியமாகப் பார்த்தான்.

‘ஹிமாத்ரிக்குக் கூட்டிப் போ. அவர்களுடைய வைஃபை நெட்வொர்க்கை எனக்கு இணைத்துக் கொடு,’ என்றான்.

❖

‘எக்ஸ்க்யூஸ் மீ,’ என்றேன். ‘நான் கேப்பை அழைக்க வேண்டும். என் போனில் டேட்டா இல்லை. இங்குள்ள வைஃபை பாஸ்வேர்ட் கிடைக்குமா?’

ஹிமாத்ரி ஹாஸ்டல் தோட்டத்தில் குண்டான ஆறு புத்தகங்களை என் கைகளில் ஏந்திக் கொண்டிருந்தேன்.

இரசாயனம், கணக்கு, இயற்பியல் புத்தங்கங்கள். சோடாப்புட்டி கண்ணாடி. மூன்று நாள் சவரம் செய்யாத தாடி. தொள தொள சட்டை. ரப்பர் சப்பல், பாலியெஸ்டர் பேண்ட். ஒரு சராசரி ஐஐடி பிஎச்டி மாணவன் தோற்றத்தில் இருந்தேன்.

ஸௌரப் ரோட்டுக்கு அந்தப்பக்கம் இருந்தான். வைஃபை ரேஞ்ஜில்.

அந்தப் பெண், விடுதிக்கு அவளுடைய ஆக்டிவாவில் அப்பொழுது தான் வந்து இறங்கியிருந்தாள். என்னை மேலும், கீழும் பார்த்தாள், நான் பாஸ்வேர்ட் கேட்டதால்.

'மாணவனா?' என்றாள்.

'ஆமாம். பிஎச்டி விந்தியாசல் ஹாஸ்டல்.'

'ஹிமாத்ரி 2018ஜி' என்றாள். 'ஏ மற்றும் எ கேப்பிடல் எழுத்துக்கள்.'

'நன்றி,' என்றேன். அவளிடமிருந்து விலகி நடந்தேன். ஸௌரப்புக்கு வாட்ஸ்அப் செய்தி அனுப்பினேன்.

'கிடைத்துவிட்டது. ஹிமாத்ரி 2018ஜி.'

அவன் ஒரு நிமிடம் கழித்து பதிலனுப்பினான்.

'இணைப்பில் இருக்கேன். ஐபி ஹிஸ்டரி டவுன்லோடாகிறது. டிஎன்எஸ் தளங்கள்.'

'ஆங்கிலத்தில் பேசு,' என்றேன்.

'ஒன்றும் இல்லை. எல்லாம் டவுன்லோடாகி விட்டது. வீட்டுக்குப் போகலாம் வா. எனக்கு பசிக்கிறது. இன்றிரவு நீதான் சமைக்க வேண்டும்,' என்று ஸௌரப் செய்தி அனுப்பினான்.

❖

'யூபோர்ன்.காம்,' என்றான் ஸௌரப். 'கவர்ச்சியான இந்தியப் பெண் தன் மச்சினருடன் சல்லாபம். அது 2:10 - 2:14.'

'என்ன?' என்றேன். எங்கள் டைனிங் டேபிளில் ஃபிரெஞ்ச் ஃபிரைஸ் தின்று கொண்டிருந்தோம். எப்பொழுதும் பசித்தே இருக்கும் கனம் பொருந்திய ஸௌரப்புக்காக என்னால் செய்ய முடிந்த ஒரே ஐட்டம். ஸௌரப் தன் லாப்-டாப்பைத் திறந்து வைத்திருந்தான். லக்ஷ்மண் போன் அதனுடன் வால் போல் இணைந்திருந்தது.

'அதைத்தான் இந்த போனின் பிரௌஸர் ஹிஸ்டரி சொல்கிறது. போனை முழுவதும் நோண்டட்டுமா?' என்று ஸௌரப் கேட்டான்.

‘ரொம்ப அவசியம். அடுத்து என்ன?’ என்றேன்.

**‘**பக்கத்து வீட்டு மாமாவும்**,** பெரிய-மார்புகளைக் கொண்ட ஆர்வமான மல்லு ஆன்ட்டியும் கிளுகிளுப்பு**.** நாமும் ஆர்வமான மல்லு ஆன்ட்டியைப் பார்க்கலாமா?’

‘இரு. அவன் பலான மேட்டர் தான் பார்த்துக் கொண்டிருந்தானா?’

‘கண்டிப்பாக. இதைப்பார்: சர்தார் தேனிலவுக் காட்சிகள் ஆமாம் அவர்கள் தேனிலவுக்குத் தான் சென்றார்கள் என்று எப்படிக் கண்டிப்பாக நம்புவது?’

லக்ஷ்மண் பொய் பேசவில்லை. ஸீட்டிலிருந்து எழுந்து சென்ற போது அவன் நிஜமாகவே கையடித்துக் கொண்டு தான் இருந்தான்.

**‘**ஜெய்ப்பூர் காலேஜ் பெண் காட்டும் **....’** ஸௌரப் ஒவ்வொரு வலைதளமாகப் படித்துக் கொண்டே வந்தான். ‘மச்சி, ஒன்று நிச்சயம். அவனுக்கு இந்திய நீலப்படம் தான் புடிச்சிருக்கு. அகில உலக காணொளிகளைப் புறம் தள்ளிவிட்டான். தேசிய உணர்வு அதிகம், இல்லை?’

‘வாயை மூடு. இந்த பார்ட்டி எப்பொழுது முடியும்?’

‘சுமார் 2:29,’ என்றான் ஸௌரப்.

‘அவன் திரும்பவும் நடந்து தன் இருக்கைக்கு 2:40 மணிக்கு வருமளவுக்கு நேரம் இருக்கு.’

‘சுத்தம் செய்து கொண்டு பின்னர் கிளம்புவான் என்று நம்புகிறேன்,’ என்றான் ஸௌரப்.

‘வாயை மூடு. ஹிமாத்ரி நெட்வொர்க் ஐ.பி. அட்ரெஸ் லாக்குகளைத் திறந்து பார்.’

‘பார்க்கலாமே. ஆனால் கவர்ச்சியான தமிழ் ஜோடி ரயிலில் சரஸம் பார்க்க வேண்டாமா? எனக்கு ஆர்வமாக இருக்கு. ஒரு வேளை ஐஆர்சிடிசி ஸ்பான்சராக இருக்குமோ?’

‘கோலு, இது ஜோக்கு கிடையாது. இது ஒருவருடைய வாழ்க்கை சம்பந்தப்பட்டது.’

‘சரி,’ என்றான். பிரௌஸர் ஹிஸ்டரியிலிருந்து ஐ.பி. அட்ரெஸ் ஃபைல்களை எடுத்தான்.

‘இவை தான் ஐ.பி. அட்ரெஸ்கள். ஹிமாத்ரி வைஃபை நெட்வொர்க்குடன் இணைந்த அத்தனை சாதனங்களின் பட்டியல்,’ என்றான் ஸௌரப். அந்த எக்ஸ்செல் ஃபைலைச் சற்று நேரம் குடைந்தான்.

‘ஆமாம். லக்ஷ்மண் போன் அந்த நெட்வொர்க்கில் தான் இணைந்திருந்தது. உறுதியாக,’ என்றான் ஸௌரப்.

‘காட்டு,’ என்றேன்.

எனக்கு ஐ.பி. அட்ரெஸ்கள் கொண்ட ஒரு டேபிளைத் தன் லாப்-டாப் - ஸ்கிரீனில் காட்டினான்.

‘இது நிஜமான ஆதாரம். லக்ஷ்மண் நிரபராதி,’ என்றேன்.

‘ஆமாம். அவன் கீழ்த்தரமானவன். ஆனால் யாரையும் கொலை செய்யவில்லை, அந்த நேரத்தில்.’

‘நன்றி கோலு,’ என்று அவன் தலைமுடியைக் கலைத்து விட்டேன். ‘ரானாவிடம் இதை எடுத்துச் செல்லலாம்.’

‘நன்றி, மச்சி. ஆனால் நான் ஒரு விஷயம் கேட்கலாமா?’

‘கேளு.’

‘இதில் நீ ஏன் தலையிடுகிறாய்? நாம் இப்பொழுது விடுதலையாகி விட்டோம். ஏன் சிரமப்படணும்? போலீஸ் அவர்கள் வேலையைச் செய்யட்டுமே.’

‘ஆனால் பாரேன். அவர்கள் சொதப்பி விட்டார்கள். லக்ஷ்மண் இதைச் செய்யவில்லை.’

‘லக்ஷ்மண் இதைப் போராடட்டும். இல்லை போலீஸ் கடைசியில் கண்டுபிடிப்பார்கள். ஸரா போய்விட்டாள், மச்சி. அவளை உன் மனதிலிருந்தும் வெளியேற்று.’

‘தெரியும். அப்படித்தான் செய்யணும் என்றும் தெரியும். ஆனால் என்னால் முடியவில்லை,’ என்று பெருமூச்சு விட்டேன். என் கலவரமான முகத்தை ஸௌரப் பார்த்தான். தன் கையை என் தோள் மீது மென்மையாகப் போட்டான்.

‘எப்படியாவது அவளுடன் இன்னமும் இணைந்திருக்க விருப்பப்படுகிறேன்,’ என்றேன். ‘யார் கொலை செய்தது என்று கண்டுபிடிக்க வேண்டும். அவள் என்னிடம் திரும்ப வர நினைத்த அந்த சமயத்தில் அவள் உயிரை எடுத்தது யார்?’

‘நான் இதை பிரிண்ட் எடுக்கிறேன். நாளை ரானாவிடம் கொடுக்கலாம்.’

‘நன்றி.’

‘பரவாயில்லை, மச்சி. இந்த தேவதாஸ் சோகம் வேண்டாம். பிரெஞ்ச் ஃபிரைஸ் சாப்பிடும் போது யாரும் இந்த சோக முகத்தை வைத்துக் கொள்ளக் கூடாது.’

❖

‘ஹ்ம்ம்ம்...’ என்றார் ரானா. தன் ஆள்காட்டி விரலால் மூக்கைத் தட்டியபடி நான் கொடுத்த பிரிண்ட் அவுட்டுகளைப் பார்த்தார். ‘பிரௌஸர் ஹிஸ்டரியா?’ என்றார். கண்களைச் சுருக்கி அந்தத்தாளில் இருந்து எங்களைப் பார்த்தார்.

ஸௌரப் எழுந்து அவர் அருகே சென்றான்.

‘இங்கே பாருங்க ஸார். இவை ஐ.பி. அட்ரெஸ்கள். அடுத்த பக்கத்தில் சென்ற நேரம், வலைதளங்களின் குறிப்பு. லக்ஷ்மண் போனிலிருந்து எடுத்தது.’

சாம்பல் நிற மூன்று நாளான தாடியைச் சொறிந்தார் ரானா.

‘உட்காருங்கள், உட்காருங்கள்,’ என்று உறுமினார்.

ஸௌரப் தன் இருக்கைக்குச் சென்றான். இன்ஸ்பெக்டர் தாள்களை மேஜை மீது வைத்தார். அவர் ‘சிறப்பு,’ ‘நல்ல வேலை,’ என்று கத்துவார், கூப்பாடு போடுவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அவர் ஒவ்வொரு விரலாகச் சொடுக்கெடுத்துக் கொண்டிருந்தார்.

‘இது லக்ஷ்மண் நிரபராதி என்று சொல்கிறது, ஸார்,’ என்றேன். ரானாவுக்கு இது என்ன என்று புரிந்ததா என்று யோசித்தேன். ‘அவன் கழிப்பறையில் பலான படம் பார்த்தபடி கையடித்துக் கொண்டிருந்தான், ஸார்.’

‘அப்போ ஸராவைக் கொன்றது யார்?’ என்றார் ரானா.

அது உங்கள் வேலை. நீங்கள் தான் கண்டுபிடிக்க வேண்டும், என்று சொல்லத் தோன்றியது. ஆனால் சொல்லாமல் தோள் குலுக்கினேன்.

‘லக்ஷ்மண் செய்யவில்லையென்றால், சந்தேகம் திரும்பவும் உன்மீது தான்,’ என்றார் ரானா.

‘என்ன?’ என்றேன்.

இன்ஸ்பெக்டர் நக்கலாகத் தலையை நிமிர்த்தினார். தாள்களை என் பக்கம் தள்ளினார்.

‘இவற்றை வாங்கிக்கொள். இதை நீ என்னிடம் கொடுக்கவே இல்லை,’ என்றார்.

‘என்ன சொல்கிறீர்கள்?’ என்றேன்.

‘காபி பிடிக்குமா?’

‘என்னது?’

‘உனக்கு விலை கூடுதலான காபி வாங்கித் தருகிறேன்,’ என்றபடி ரானா எழுந்தார்.

❖

'நல்ல காபி கொடுங்கள். ஆனால் கசக்கக் கூடாது,' என்றார் ரானா. ஹவுஸ் காஸ் ஸ்டார் பக்ஸில் இருந்தோம்.

'லாட்டேவா ஸார்?' என்று பரிஸ்டா கேட்டார். ரானாவின் சீருடையைப் பார்த்து கண்ணில் லேசான அச்சம்.

'சூடான பால்,' என்றேன். ஸௌரப் இரண்டு சாக்லேட் மஃபின் ஆர்டர் செய்தான்.

இன்ஸ்பெக்டர் தன் பர்ஸை எடுத்தார். காஷியர் போலீஸிடம் காசு வாங்குவதா என்ற பயத்தில் சட்டென்று வேண்டாம் என்று மறுத்தார். இன்ஸ்பெக்டர் நகைத்தபடி பர்ஸைப் பாக்கெட்டில் வைத்தார்.

நாங்கள் எங்கள் பானங்களை வாங்கிக் கொண்டு ஜன்னலருகே இருந்த இருக்கைகளில் அமர்ந்தோம்.

'இங்கே தான் சிறுசுகள் கும்மாளம் அடிக்கிறார்களா?' என்றார் ரானா. காபியில் சர்க்கரையை கலக்கிக் கொண்டிருந்தார் சாஷேயிலிருந்து. 'ஒரு காபிக்கு இருநூறு ரூபாயா? பகல் கொள்ளையா இருக்கே?

காசு கொடுக்காமல் குடிப்பதும் பகல் கொள்ளையில் சேருமா என்று யோசித்தேன்.

'நான் ஒப்புக் கொள்கிறேன்,' என்றான் ஸௌரப். எப்பொழுதும் போல் பணிவாக அடங்கிப் போனான்.

'நான் உங்கள் இருவரையும் இங்கே கூட்டி வந்ததே தெளிவாகப் பேசத்தான். உங்களை நம்பலாமா?' என்று ரானா எங்கள் கண்களை நேராகப் பார்த்தார்.

'கண்டிப்பாக, ஸார்,' என்றேன்.

'எங்கே வேலை செய்கிறாய், கேஷவ்?'

'சொன்னேனே, சந்தன் கிளாஸஸ்.'

'எவ்வளவு கிடைக்கும், கையில்?'

அவரை ஆச்சரியமாகப் பார்த்தேன். ஸௌரப் வேறு பக்கம் பார்த்தான், கண்ணியமாக.

'நாற்பத்தி ஐயாயிரத்தி சொச்சம், ஒரு மாதத்திற்கு,' என்றேன்.

'இங்கே பாரு. நீ கூட என்னைவிட அதிகமாகச் சம்பாதிக்கிறே. பிடிப்பு போக மாசம் எனக்கு 42,000 தான் கையில் நிற்கும்.'

அன்லிமிடெட் ஸ்டார் பக்ஸ் காபியைக் கணக்கில் எடுக்கவில்லையே என்று நினைத்தேன். வேலையை எடுத்துக் கொள்வதற்கு முன் என்ன சம்பளம் என்று யோசித்திருக்க மாட்டாரா, என்ன? நான் பேசாமல் இருப்பது என்று முடிவெடுத்தேன்.

‘எனக்கு பதினைந்து வருட கால அனுபவம்,’ என்று ரானா தொடர்ந்தார். ‘நீ எப்பொழுது தொடங்கினே? நான்கைந்து வருடங்கள் இருக்குமா? இது நியாயமா?’

இல்லை என்று தலையாட்டினேன். குற்ற உணர்ச்சி எட்டிப் பார்த்தது. மத்திய அரசின் சம்பளத் திட்டத்தைப் பற்றிய பொறுப்பே என்னுடையதோ என்ற அளவுக்கு வருத்தப்பட்டேன். நாள் முழுவதும் சகிக்க முடியாத குட்கா சுவைக்கும் பாஸிடம் மல்லு கட்ட வேண்டும் என்று சொல்லலாமா என்று யோசித்தேன். ரானாவுடன் வேலை மாற்றம் செய்து கொள்ள நான் தயார். சற்றே குறைந்த சம்பளம் என்றாலும் எல்லோரையும் போகவர அறையும் அதிகாரம். ஸ்டார் பக்ஸில் இலவச காபி, எனக்கு சம்மதம் தான்.

ஸௌரப் சுண்டு விரலை உயர்த்தி கழிப்பறை செல்வதாகக் கூறினான். ரானா தொடர்ந்தார்.

‘என் பணிக் காலம் முழுவதும் நான் கடுமையாகத் தான் உழைக்கிறேன். பிரமாதமான வருட ரிப்போர்ட். ஆனாலும் கடந்த ஐந்தாண்டு காலமாக எனக்குப் பதவி உயர்வு கிடைக்கவில்லை. என்னை அஸிஸ்டென்ட் கமிஷனர் பதவியில் உட்கார வைக்க மறுக்கிறார்கள்.’

நான் பாலைக் குடித்தபடி தலையாட்டினேன். லக்ஷ்மண் பிரெளஸர் ஹிஸ்டரிக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?

‘அதற்குள் ஏதாவது ஐஐடி முட்டாள் மனப்பாடம் செய்து ஐ.பி.எஸ். பரீட்சையில் தேர்வாகி விடுவான். எனக்கு உயர் அதிகாரியாக உட்கார வைத்து என்னைவிட ஸீனியர் ரேங்க் அளிப்பார்கள்.’

என்னைத்தான் ஐஐடி முட்டாள் என்று குறிப்பிடுகிறாரோ என்று தோன்றியது. ஆனால் அப்படியில்லை. நான் தான் ஐ.பி.எஸ். பரீட்சையில் தேர்வாகாத ஐஐடி பையன். அதனால் நான் இன்னும் பெரிய முட்டாள்.

‘இது நியாயமான அமைப்பு கிடையாது. ஆங்கிலேய காலத்திலிருந்து இதைத் தொடர்கிறோம்,’ என்றேன்.

‘என்ன?’

‘ஆங்கிலேயர்கள் தான் சிவில் சர்வீஸைக் கொண்டு

வந்தார்கள்.’

‘ஆமாம். மடத்தனமான வெள்ளையர்கள். இந்த போலீஸ் ஃபோர்ஸிலேயே அபூர்வமான ஆள் நான். நேர்மையானவன். ஆனால் என்னை இப்படி நடத்துகிறார்கள்.’

இலவச காபி நேர்மையற்றவனாக ஆக்காது போல? டெல்லி போலீஸின் லஞ்சம், ஊழலைப் பார்க்கும் போது இது கணக்கில் வராது. சப்பை மேட்டர்.

ராணாவை எப்படி சந்தோஷப்படுத்துவது என்று யோசித்தேன். ஒருவர் தன் வாழ்க்கை சரியாக இல்லை என்று நினைக்கும் பொழுது நம் வாழ்க்கை அதைவிட கேவலம் என்று சொன்னால் சமாதானப்படலாம்.

‘நான் ஐஐடி மாணவன் ஸார். கேம்பஸில் எனக்கு வேலை கிடைக்கவில்லை. ஐஐடியிலேயே இது அபூர்வம்.’

‘ஏன்?’

‘மட்டமான மதிப்பெண்கள். சில நேர்காணல்களைச் சொதப்பினேன். காதல் தோல்வி. வாழ்க்கையின் அந்தப்பகுதி படுமோசம்.’

‘ஆ! அதுதான் சந்தன் கிளாஸஸா?’

ஆமாம் என்று தலையசைத்தேன். எனக்கு டெல்லியிலேயே தங்க இது ஒரு உக்தி. ஐஐடி கேம்பஸ் அருகே. ஸரா அங்கே தங்கியிருந்தாள். அருகே இருந்தால் திரும்ப இணைய ஒரு வாய்ப்பாவது அமையும் என்று கருதினேன் என்ற விஷயங்களைக் கூறவில்லை.

இன்ஸ்பெக்டர் ஏளனமாகப் பார்த்தார்.

‘உனக்கு வேலை பிடிச்சிருக்கா?’ என்றார்.

‘வெறுப்பாக இருக்கு,’ என்றேன்.

‘நிஜமாகவா?’

‘சில நாட்கள் ஜெயிலிலேயே இருக்கலாம், வேலைக்குச் செல்வதற்கு பதில் என்று தோன்றும்.’

இன்ஸ்பெக்டர் சிரித்தார்.

‘அப்போ இருவரும் ஒரே சகதியில் தான் இருக்கோம்,’ என்று கூறினார். எங்களுடைய தேங்கிய தொழில் வாய்ப்பினால் இருவரும் ஒன்றிவிட்டோம். ஸௌரப் கழிப்பறையிலிருந்து வந்தான். ராணா தொடர்ந்தார்.

அவன் ஒரு செய்தித்தாளைப் பிரித்து வேலை காலி விளம்பரங்களைப் படிக்கத் தொடங்கினான். இன்ஸ்பெக்டரின்

போன் அடித்தது. அவர் அதை எடுத்துப் பேசினார்.

‘ஆமாம், ஷர்மா ஸார்,’ என்று கூறியபடி ரானா எழுந்தார். ஷர்மாவால் அவரைப் பார்க்க முடியும் என்பது போல. ‘சொல்லுங்க ஷர்மா ஸார். கண்டிப்பாக ஸார். இல்லை ஸார். வாட்ச்மேன் மேல் வலுவான கேஸ் இருக்கு. ஆமாம் ஸார். சீக்கிரமே குற்றப்பத்திரிகை தாக்கல் செய்வோம். இல்லை ஸார். நீங்கள் திரும்பவும் அழைக்க வேண்டாம். ஓ.கே. ஸார்.’

அவர் பேசி முடித்ததும் அவரிடம் கேட்டேன், ‘நீங்கள் லக்ஷ்மணை வெளியே விட்டு விடுவீர்கள் தானே? அவன் மலிவான சிந்தனை உடையவன். ஆனால் ஸராவைக் கொலை செய்யவில்லை.’

‘ஆமாம்! அதைப்பற்றி தான் உன்னிடம் பேச வேண்டும் என்று இருந்தேன். காவல் நிலையத்தில் யார் நாம் பேசுவதைக் கேட்டார்கள் என்று தெரியாது.’

‘என்ன?’ என்றேன்.

ஸௌரப் செய்தித்தாளிலிருந்து தலையைத் தூக்கி அவர் பேசுவதைக் கேட்டான். ‘இந்தப் பிரபலமான, ஊடகம் கவனிக்கும் கேஸ் தான் என் பதவி உயர்வுக்கான ஒரே வாய்ப்பு. என் முறையாக இல்லாவிட்டாலும் பதவி உயர்வு கிடைக்க ஒரு அரிய வாய்ப்பு. என் உயர் அதிகாரிகள் இந்தக் கேஸினால் எனக்கு சிபாரிசு செய்யலாம்.’

‘நல்ல விஷயம் தானே ஸார்,’ என்றேன்.

‘ஆமாம். ஆனால் நான் கேஸைக் கண்டுபிடித்தால் தானே. இப்போதைக்கு அவர்கள் பார்வையில் நான் கண்டுபிடித்து விட்டேன்.’

‘லக்ஷ்மண் கொலையாளி என்றா?’

‘ஆமாம். ஊடகக் கதைகளும் அடங்கி வருகின்றன,’ என்றார். முக்கியமான நடுப்பக்கத்தைப் பிரித்து, நகரப்பகுதிகளில் பற்றிய செய்திகளைச் சுட்டிக் காட்டினார்.

‘இங்கே பார். இன்று எந்தத் தவலும் இல்லை. என் உயர் அதிகாரிகள், ஊடகம், பொதுஜனம் எல்லோரும் லக்ஷ்மண் செய்திருப்பான் என்று நம்புகிறார்கள். அவர்கள் மனதில் கேஸை முடித்துவிட்டதாக நம்புகிறார்கள்.’

‘ஆனால் அவன் தான் கொலை செய்யவே இல்லையே,’ என்றேன்.

ரானாவுக்குப் பிடிக்காத வகையில் என் குரலில் ஒரு அதட்டல் இருந்தது.

‘அவன் என்ன உன் அண்ணனா?’ என்றார் ரானா உரத்தகுரலில்.

‘இல்லை ஸார்,’ என்றேன். ‘ஆனால் அவன் நிரபராதி.’

‘அதனால் நான் அவனை விடுவிக்க வேண்டுமா? பிறகு ஊடகம் இன்னொரு கூத்தை ஆரம்பிப்பார்கள். பரவாயில்லையா?’

‘கூத்தா?’

‘ஆமாம். அவன் ஏழை என்பதால் போலீஸ் நிரபராதியைக் கைது செய்துவிட்டனர். போலீஸ் இன்னமும் கொலையாளியைக் கண்டுபிடிக்கவில்லை. டெல்லி போலீஸ் வெத்துவேட்டு. பயனற்றவர்கள். இப்படி மேலும் வசவுகள் கிடைக்கும். இந்தச் சொதப்பலுக்கு யாரைக் காரணம் காட்டுவார்கள்? இன்ஸ்பெக்டர் ரானா. பிறகு யார் எனக்குப் பதவி உயர்வு தருவார்கள்?’

யாருடைய பதவி உயர்வுக்காகவோ ஒரு நிரபராதி சிறைக்குத் தள்ளப்படக் கூடாது என்று சொல்ல நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை.

‘ஸார், நீதிமன்றத்தில் லக்ஷ்மணைக் குற்றவாளி என்று நிரூபிக்க வேண்டாமா?’

‘ஆமாம்.’

‘பிறகு கடைசியில் இந்தச் செய்தி வெளிவராதா? அவன் என்ன செய்தான் என்பதை வாக்குமூலமாகக் கூறமாட்டானா? அவனுடைய வக்கீல்களுக்கு இந்த விவரங்கள் கிடைத்துவிட்டால்?’

இன்ஸ்பெக்டர் சிரித்தார். ஒரு பேப்பர் டிஷ்யூ எடுத்து லாட்டே உருவாக்கிய மீசையைத் துடைத்தார். ஸௌரப் என்னை முறைத்தான். போலீஸோடு எந்த மோதலையும் வைத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை.

‘இதில் என்ன தமாஷ்?’ என்று இன்ஸ்பெக்டரிடம் கேட்டேன்.

‘இது ஒரு திரைப்படம் இல்லை. இது வாழ்க்கை. லக்ஷ்மணுக்கு எந்த மாதிரியான வக்கீல் கிடைப்பான் என்று நினைக்கிறே?’

‘அரசாங்கம் ஏழைகளுக்கு ஒரு வக்கீல் வழங்கமாட்டார்களா?’

‘அதேதான். வாட்ச்மேனுக்காக எந்த வக்கீல் போராடுவான்? ஹியரிங் சமயத்தில் வக்கீல் ஆஜரானாலே லக்ஷ்மணுக்குப் பெரிய

விஷயம்.’

‘இருந்தாலும் அவன் செய்யவில்லை. அதற்கு ஆதாரம் இருக்கு. அது கடைசியில் வெளிவரும்.’

‘வரட்டும். வரக்கூடும். மூன்று வருடங்களில். அதற்குள் இன்ஸ்பெக்டர் ரானா, ஏ.சி.பி. ரானாவாகி விடுவேன். இந்தப் போலீஸ் அரசியலிலிருந்து தூரத்தில் இருப்பேன். லக்ஷ்மண் அப்பொழுது வெளியே வந்து கொள்ளட்டும்.’

‘ஸார்... ஆனால்...’

‘இந்தத் துப்பறியும் இழவையெல்லாம் நிறுத்து. நான் உன்னைக் காப்பாற்றினேன். இப்பொழுது என் வாழ்க்கையைக் கடினமாக்காதே.’

என்னைக் காப்பாற்றினாரா? என் விடுதலைக்குக் காரணமே நான் யாரையும் கொலை செய்யவில்லை என்பது தானே என்று எரிந்து விழத் தோன்றியது.

‘ஸார், உங்கள் வாழ்க்கையைக் கிளற விரும்பவில்லை. யார் கொலையாளி என்று நான் கண்டுபிடிக்க வேண்டும். அதற்குச் சரியான விசாரணை தேவை. ஒரு நிரபராதியை லாக்கப்பில் தள்ளி, கேஸை மூடுவது அல்ல.’

இன்ஸ்பெக்டர் என்னையும் ஸௌரபையும் மாறி மாறிப் பார்த்தார். பிறகு ஆறிப்போன லாட்டேயைக் குடித்துவிட்டு, தோள் குலுக்கினார்.

‘வாட்ச்மேன் ‘குற்றமற்ற’ விஷயம், ஆதாரம் ஊடகத்துக்குக் கிடைத்தால்?’ என்றேன்.

‘என்னை மிரட்டுகிறாயா?’

‘இல்லை,’ என்றேன். ‘ஆனால் நான் சொல்வது நடக்கலாம்.’

‘தேவி... மகனே. ஒரு வாரம் முன்பு என்னிடம் விட்டுவிடு என்று கெஞ்சிக் கொண்டிருந்தீர்கள். இப்பொழுது என்னையே அதிகாரம் செய்கிறீர்களா? எனக்கு எப்படி விசாரிக்க வேண்டும் என்று தெரியவில்லை என்கிறாயா?’

‘இல்லை ஸார்,’ என்றேன். ‘யார் செய்தது என்று கண்டுபிடிக்கலாம் என்று தான் சொல்கிறேன். நான் உங்களுக்கு உதவி செய்கிறேன்.’

‘நீ எப்படி எனக்கு உதவ முடியும்? நீ சந்தன் கிளாஸஸ் வாத்தி தானே?’

ஸௌரப் என்னைக் கையமர்த்தி பேசாதே என்று சைகை செய்தான்.

‘ஸார், நான் ஒன்று சொல்லலாமா?’ என்றான் ஸௌரப்.

‘இப்போ நீ வேறு ஏதோ சொல்லப் போகிறாயா?’ என்ற இன்ஸ்பெக்டரின் குரலில் எரிச்சல் மண்டிக் கிடந்தது. ‘அவன் எனக்கு விசாரணை செய்ய போதனை செய்கிறான். உன் முட்டாள் நண்பனுக்கு நான் எதையெல்லாம் சந்திக்க வேண்டும் என்று கொஞ்சமாவது அறிவிருக்கா? நேற்றைய முன் தினம், மாணவர்கள் நல ‘டீன்’ என்னை உதாசீனப்படுத்தி அவமானப்பட வைத்தான்.’

‘யாரு?’ என்று கேட்டான் ஸௌரப்.

‘அந்த பேராசிரியர் ஸஃப்தர். கேம்பஸுக்குள் பவனி வராதே என்றான் ராஸ்கல். போலீஸிடமே இப்படி அனுமதி பெற வேண்டுமாம். எச்.ஆர்.டி. துறையை அழைப்பேன் என்கிறான். என்னை விசாரிக்க வேண்டும் என்று வேறு கூறுகிறார்களா? அந்த முட்டாள் டீனை என்னை அவமானப்படுத்த வேண்டாம் என்று சொல்லுங்கள்.’

‘பேராசிரியர் ஸக்ஸேனாவைச் சந்தித்தீர்களா?’ என்றேன்.

‘ஆமாம். கல்லூரிக்கே அக்கறை இல்லை. எனக்கென்ன?’

‘பேராசிரியர் ஸக்ஸேனா ஸராவின் பிஎச்டி கைடு,’ என்றேன்.

‘அவர் ஏன் எங்களைத் தடுத்து நிறுத்துகிறார்? கேம்பஸுக்குள் ஊடகத்துக்கும், போலீஸுக்கும் இடம் இல்லை என்று ஒரு குப்பை விதியைச் சொல்லிக் காட்டுகிறார்,’ என்றார்.

‘எனக்குத் தெரியவில்லை ஸார்,’ என்றேன்.

‘கேளு, வாத்தி,’ என்றார் ரானா என்னைக் கூர்மையாகப் பார்த்தார். ‘எனக்கு வாட்ச்மேன் கொலை செய்யவில்லை என்று தெரியாது என்று நினைத்தாயா?’

‘உங்களுக்குத் தெரியுமா?’ என்று அதிர்ந்தேன்.

‘நான் பதினைந்து வருடங்களாகக் குற்றவாளிகளை விசாரிக்கிறேன். கண்களைப் பார்த்தே சொல்லிவிடுவேன். அவன் கலீஜானவன். ஆனால் கொலையாளி இல்லை. உன் டேட்டா நான் நினைத்ததை ஊர்ஜிதம் செய்திருக்கிறது.’

நான் ஸ்தம்பித்து விட்டேன். ‘பிறகு ஏன் கைது செய்தீர்கள்?’

‘ஏன் என்றால் எனக்கு வேறு யாரும் கொலையாளி கிடைக்கவில்லை. எல்லோரும் ஒரு முடிவை எதிர்பார்க்கிறார்கள். டி.வி. தொகுப்பாளர்கள், மக்கள், சமூக வலைதளம், போராளிகள், என் உயர் அதிகாரிகள்.’

இன்ஸ்பெக்டர் ரானா ஒரு சிலிர்ப்புடன் எழுந்தார்.

‘இதைக்கேளு, நான் இலவச காபி அருந்துவேனா இருக்கலாம். அதுவும் அதிக விலை வைத்து விற்கும் இந்தக் காபியைக் குடிப்பேன் என்றே வைத்துக்கொள். எனக்குப் பதவி உயர்வு தேவை. ஏன் என்றால் அதற்கு நான் தகுதியானவன். ஆனால் நான் கொடூரமானவன் கிடையாது. யார் செய்தது என்று கண்டுபிடிக்க முயல்வேன். அதுவரை லக்ஷ்மண் உள்ளே இருக்கட்டும்.’

‘புரிந்தது ஸார்,’ என்றான் ஸௌரப். இன்ஸ்பெக்டரின் பூதாகாரமான உருவத்தைப் பார்த்து லேசாக அரண்டுவிட்டான்.

‘கொலையாளியைக் கண்டுபிடித்துக் கொடு. அன்று கண்டிப்பாக லக்ஷ்மணை விட்டுவிடுகிறேன். என் நிலைப்பாட்டை மாற்றிக் கொள்ளும் அபாயம் இருந்தாலும் பரவாயில்லை.’

‘ஸார்,’ என்று நானும் எழுந்தேன். ‘நாங்கள் உங்களுக்கு எப்படி உதவ முடியும்?’

‘குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் இதிலிருந்து விலகி நில்லுங்கள்,’ என்றார் ரானா.

‘அப்படியே செய்கிறோம், ஸார்,’ என்ற ஸௌரப் என் முழங்கையைப் பிடித்து இழுத்தான். அவனும் எழுந்து நின்றான்.

‘வேறு ஏதாவது, ஸார்?’ என்றேன்.

‘என்னை ஐஐடிக்குள் கூட்டிச்செல். கேம்பஸிற்குள் செல்ல ஏதாவது வழியிருக்கா?’

‘நான் மாஜி மாணவன் ஸார்,’ என்றேன்.

ஸௌரப் என் பக்கம் திரும்பினான்.

‘மச்சி, இன்ஸ்பெக்டர் ஸார் நம்மைத் தள்ளி நிற்கச் சொல்கிறார். தலையிட வேண்டாம் என்கிறார்.’

‘அவன் காதலன்,’ என்று ரானா சிரித்தார். ‘அவனால் எப்படித் தலையிடாமல் இருக்க முடியும்?’

# அத்தியாயம் 11

‘கணக்குப் பரீட்சை - மேத்ஸ் டெஸ்ட். இந்த ஞாயிறு பத்து மணிக்கு,’ என்று என் வகுப்பில் அறிவித்தேன். என் வகுப்பின் முடிவில் இரண்டு டஜன் மாணவர்கள் புலம்பினார்கள். அவர்களின் கையாலாகாத புலம்பலை அலட்சியப்படுத்தி விட்டு வகுப்பிலிருந்து வேகமாக வெளியேறினேன்.

நடைபாதையில் என் போனைப் பார்த்தேன். ரகுவிடமிருந்து இரண்டு மிஸ்டு கால்கள். செய்தியும் அனுப்பியிருந்தான்.

‘டெல்லியை விட்டு சீக்கிரமே புறப்படுகிறேன். ஒரு முறை சந்திக்கலாமா?’

நான் பதிலளிப்பதற்குள் சந்தன் அரோராவின் குட்கா வாசனை என்னை அடைந்தது.

‘வேலை நேரத்தில் போன் செய்யக்கூடாது. முன்னமே கூறியிருக்கிறேன்,’ என்றார் சந்தன் என் பின்னாலிருந்து.

‘ஸாரி, ஸார்,’ என்று சொன்னேன். அவன் சொட்டைத் தலையில் என் போனை ஓங்கி அடிப்பது போல் கற்பனை செய்தேன்.

❖

‘வந்ததற்கு நன்றி,’ என்றான் ரகு.

‘ஒரு பிரச்சினையும் இல்லை. எதற்குச் சந்திக்கணும் என்று விரும்பினாய்?’ என்றேன்.

ஹவுஸ் காஸில் உள்ள சோஷியலில் ஏரியை நோக்கி இருந்த மேஜையில் அமர்ந்திருந்தோம். அவன் கருப்பு ஸ்வெட்டர் அணிந்திருந்தான். அவனுடைய சோடா புட்டி கண்ணாடிக்குப் பொருத்தமாக இருந்தது. இடது கையில் மாவு கட்டு. வலது கையில் ஐ-போன் X. மூன்று மாதங்களுக்கு முன் தான் மார்க்கெட்டுக்கே வந்தது. விலை ஒரு லட்சம் ரூபாய்.

‘என்ன நடந்தது என்று அறிய விரும்புகிறேன்,’ என்றான் ரகு.

‘அன்று இறுதிச்சடங்கில் என்ன நடந்தது என்று

சொன்னேனே.' நம்பாதது போல் என்னைப் பார்த்தான் ரகு.

'என்ன? என்னை ஏன் அப்படிப் பார்க்கிறாய்?'

'உனக்கு தெரியுமா, கேஷவ்? கடந்த காலத்தில் நீ என்னை நிறைய அவமானப்படுத்தியிருக்கிறாய், நிறைய.'

'என்ன வேண்டும்? மன்னிப்பு கேட்கணுமா?' என்றேன். சர்வர் எங்களுக்கு இரண்டு மசாலா டீ கொண்டு வந்தான். சர்வர் நகர்ந்ததும், ரகு பதில் சொன்னான்.

'இல்லை. மன்னிப்பை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன்?' என்றான். டீயை ஒரு வாய் அருந்தினான். 'எனக்கு அவமானங்களைப் பற்றி அக்கறை இல்லை. நான் நேருக்கு நேர் மோதும் ஆள் கிடையாது. நீ ஸராவைத் தொந்தரவு செய்யாமல் இருக்க வேண்டும் என்று தான் விரும்பினேன்.'

நான் நாற்காலியிலிருந்து குதித்து எழுந்தேன்.

'நான் செய்யவில்லை. அவளை என்னால் மறக்க முடியவில்லை. அதனால் தான். ஸாரி. நான் கிளம்பலாமா?' என்றேன்.

'தயவு செய்து உட்காரு, கேஷவ். எனக்கு மன்னிப்பு வேண்டாம் என்று சொன்னேனே,' என்றான் ரகு.

'என்ன தான் வேணும், ரகு?' என்று கேட்டபடி அமர்ந்தேன். 'இம்முறை ஸரா தான் என்னிடம் சேர நினைத்தாள்.'

'அமைதியாக இரு. இதுபோன்ற முரட்டுத்தனம் எனக்குப் பிடிக்காது,' ரகு சொன்னான்.

ஏன் என்றால் நீ ஒரு பயந்தாங்கொள்ளி என்று சொல்ல நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை.

'முதலில் எனக்குத் தெரிய வேண்டியது இதுதான்,' என்று ரகு தன் கை கட்டைக் காண்பித்தான். 'இது நிற்க வேண்டும். நான் அடிதடிக்குப் போகாதவன். நான் ஸராவுடன் எளிமையாக வாழ ஆசைப்பட்டேன்.'

'ஹே!' என்றேன். 'நான் தான் இதன் பின்னால் இருக்கேன் என்கிறாயா? நான் தான் உன்னை அடிக்க ஆள் அனுப்பினேனா?'

'நான் எந்தக் குறையும் கூறவில்லை. குற்றமும் சாட்டவில்லை. எனக்குத்தான் என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம். என் குடும்பம் அஞ்சுகிறது. என் அம்மாவும், அப்பாவும் பயப்படுவதனால் தயவு செய்து அடிதடியில் இறங்க வேண்டாமே.'

'நான் எதுவும் செய்யவில்லை, ரகு,' என்றேன். 'நான் ஏன்

செய்ய வேண்டும்?’

‘நீ செய்தாய் என்று சொல்லவில்லை. அப்படியிருந்தால் நிறுத்திக்கொள். நான் அமைதியை நாடுகிறேன்.’

‘ரகு, நான் உன்னை கேலி செய்திருக்கேன். கிண்டலடித்திருக்கிறேன். ஆனால் உன்னை எதற்குக் காயப்படுத்தவேண்டும்? ஸராவும் நீயும் மூன்று வருடங்கள் டேட்டிங் செய்தீர்கள். நான் ஏதாவது செய்தேனா?’

‘அந்த பயந்தாங்கொள்ளியைக் கொன்றுவிடுவேன், என்று ஸராவிடம் ஒருமுறை கூறவில்லையா?’

‘அது கோபத்தில் சொன்னது. மப்பில் சொன்னது. தயவு செய்து நம்பு ரகு. நான் ஒன்றும் செய்யவில்லை. வாட்ச்மேனைத் தான் கைது செய்துவிட்டார்களே.’

அவன் அமைதியானான். ஆனால் நம்பியது மாதிரி தெரியவில்லை.

‘ரகு நீ என்னை நம்ப மாட்டாயா? புரிகிறது. ஆனால் சத்தியமாக நான் யாரையும் காயப்படுத்தவில்லை. ஸராவையும் சரி, உன்னையும் சரி,’ என்றேன்.

சுருக்கமாகத் தலையாட்டிவிட்டு மேஜையைப் பார்த்தான். சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு மென்மையாக, மிகவும் மென்மையாகப் பேசினான். என் காதில் விழவில்லை. சிரமப்பட வேண்டியிருந்தது.

‘அவள் என் உலகம். என் வாழ்க்கையின் அபூர்வம்.’ இதை நானும் அவனிடம் சொல்லியிருக்கலாம், என்று நினைத்தேன். ஆனால் அவன் தன்னுடைய ஸ்லோ-மோஷன் குரலில் பேசிக்கொண்டே இருந்தான்.

‘சிலிகான் வேலியிலிருந்து புதிதாக ஒரு முதலீட்டாளரை அடையாளம் கண்டு வைத்திருந்தேன். அங்கே செல்ல வேண்டும் என்ற ஆசை எனக்கு எப்பொழுதும் உண்டு. ஆனால் ஸரா ஒத்துக் கொள்ளவில்லை. அவள் பாதியில் தன் பிஎச்டியை விட விரும்பவில்லை.’

‘காஷ்மீருக்கே திரும்பச் சென்று பாடம் நடத்த ஆசைப்பட்டாள், சரியா?’ என்றேன். நாங்கள் பழகிய ‘எங்கள்’ காலத்தில் அவள் அதை அடிக்கடி சொல்லுவாள்.

‘ஆமாம். ஆனால் கஷ்டப்பட்டு அவளைச் சம்மதிக்க வைத்தேன். அமெரிக்காவில் சில காலம் தங்கிவிட்டுப் பிறகு காஷ்மீரில் சேவை செய்யலாம் என்று. அவள் சில மாதங்களில் பிஎச்டி வாங்கிவிட்டால் நாங்கள் ஸான்ஃபிரான்சிஸ்கோவிற்குப்

பறக்கத் திட்டமிட்டோம். மவுண்டன் வியூ அடுக்குமாடிகளில் சிலவற்றைப் பேசிக்கூட வைத்திருந்தேன். ஆனால் இப்பொழுது...'

அவன் குரல் அடைத்தது. தன் முகத்தைக் கைகளில் மூடிக் கொண்டான். அவன் கேவி அழும் சத்தம் சந்தேகமின்றி காதில் விழுந்தது. ரெஸ்டாரண்டில் இருந்த மற்றவர்கள் எங்களையே குறுகுறுவென்று பார்த்தனர். கூச்சமே படாமல் அழுதான். யாராவது என்னை பிள்ளை பிடிப்பவன் என்று நினைக்கக்கூடாதே என்று அஞ்சியபடி அவனிடம் டிஷ்யூக்களைத் தள்ளினேன்.

'நன்றி,' என்றான். முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டான். 'நான் எதுவும் செய்யவில்லை. நம்புவியா? என் கண்ணைப் பார்த்துப் பேசு, ரகு.'

'நம்புகிறேன்,' என்றான். கடைசியாக என் கண்களைச் சந்தித்தான்.

'நல்லது,' என்றேன். 'எனக்கு எந்தக் காழ்ப்புணர்ச்சியும் கிடையாது. இனி வைத்துக் கொள்ளப் போவதும் இல்லை.'

'ஸாரி. என் பெற்றோர்கள் பதற்றமடைந்து விட்டனர். இருபத்திநான்கு மணி நேர காவல் ஏற்பாடு செய்திருக்கின்றனர். நான் ஆபீஸுக்கு வெளியே சென்றாலே கவலைப்படுகின்றனர். நாங்கள் எல்லோருமே பயந்து போயிருக்கிறோம்.'

'என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. எனக்கு உன் மீது எந்த அக்கறையும் இல்லை... ஒன்றைத் தவிர...' என்று நிறுத்தினேன்.

'என்ன அது?'

'எனக்கு உன் உதவி தேவை.'

'என்ன உதவி?'

'யாரு ஸராவைக் கொன்றது என்று தெரிய வேண்டும். நான் போலீஸுக்கு உதவுகிறேன்.'

'அப்படியா. நீயா? வாட்ச்மேன் செய்தான் என்று தானே போலீஸ் தரப்பில் சொன்னார்கள்.'

'அப்படியில்லாமலும் இருக்கலாம்.'

'நானுமே லக்ஷ்மண் செய்திருப்பான் என்று கேள்விபட்டதும் ஆச்சரியப்பட்டேன்.'

'அப்படியா?'

'ஆமாம். நான் அந்த வாட்ச்மேனைப் பார்த்திருக்கேன்.

அவனைப் பார்த்தால் கொலையாளி போன்ற தோற்றம் இல்லை. ஆனால் டி.வி.யில் போலீஸ் அப்படித்தான் கூறினார்கள்.'

'ஊடகத்தின் வாயை அடைக்க, போலீஸ் சில சமயம் அப்படிச் செய்வது உண்டு.'

'சரி, யார் ஸராவைக் கொன்றது? எனக்கும் தெரிந்து கொள்ள ஆசை.'

'அதைக் கண்டுபிடிக்கத் தான் எனக்கு உன் உதவி தேவை.'

'நான் இதில் உன்னுடன் இணைந்து வேலை செய்ய விரும்புகிறேன். என் பெற்றோர்கள் இவற்றிலிருந்து வெட்டிக் கொண்டு விலகும்படி கூறுகின்றனர். ஆனால் நாம் இதில் இறங்கலாம்.'

'இல்லை, ரகு. என்னால் உன்னுடன் வேலை செய்ய முடியாது,' என்று அவனை இடைமறித்தேன். 'நீ உதவி செய்தால் மட்டும் போதும். அவளைப் பற்றியும், அவள் உலகைப் பற்றியும் உனக்குத்தான் நன்றாகத் தெரியும்.'

ரகு என்னை வியப்புடன் பார்த்தான். நான் அவனை உறுதியாகப் பார்த்தேன். அவன் மூச்சு வாங்கினான்.

'என்ன வேண்டுமோ, கேளு,' என்றான்.

'ஓ.கே.,' என்றேன். நான் என் நோட்டுப்புத்தகத்தை எடுத்தேன். 'எனக்கு சில கேள்விகளுக்குப் பதில் வேண்டும்.'

'கண்டிப்பாக.'

'முதலில், நீ ஏன் வாட்ச்மேன் செய்திருப்பான் என்று சொன்ன போது வியப்படைந்தாய்?'

'நம்பத்தான் முடியவில்லை. ஸரா லக்ஷ்மணைப் பற்றி புகார் செய்தது உண்மை தான். ஆனால் அவன் பலமுறை அதற்குப்பின் கருணை காட்டும்படி கெஞ்சினான். என் முன்னால் கூட ஒரு முறை கெஞ்சினான். நான் அப்போது கேம்பஸுக்கு ஸராவைச் சந்திக்கச் சென்றேன்.'

'அப்போ, ஸரா என்ன சொன்னாள்?'

'அவள் மனம் இளகினாள். புகாரை வாபஸ் பெறவில்லை. ஆனால் அதைப்பற்றிய நடவடிக்கையைத் தொடரவில்லை. அவனுடைய குட்டிப் பெண்ணைப் பற்றியும், அவன் தான் குடும்பத்துக்காகச் சம்பாதிக்கும் ஒரே நபர் என்பதையும் கருத்தில் கொண்டாள்.'

'வேறு ஏதாவது விஷயம், அவனாக இருக்காது என்று நிரூபிக்க நம்மிடம் இருக்கா?'

‘என்னை அடிக்க வந்தவர்கள்.’

‘அவர்களைப் பற்றி என்ன?’

‘அவர்கள் லக்ஷ்மணைப் போல் கிராமத்து ஆட்கள் இல்லை. அவர்கள் போட்டிருந்த உடைகள், பேசிய மொழி அவர்களை நகரவாசிகள் என்று தெளிவாகக் காட்டிக் கொடுத்தது. இதை நான் போலீஸிடமும் சொன்னேன். அவர்கள் காது கொடுத்து கேட்டதாகவே தெரியவில்லை.’

நான் என் நோட்புக்கிலிருந்து முகத்தை விலக்கி அவனை நேராகப் பார்த்தேன்.

‘அன்று உனக்கு என்ன தான் நடந்தது?’

‘நான் தாமதமாக வேலையை முடித்துவிட்டு அலுவலகக் கட்டிடத்திலிருந்து வெளியே வந்தேன். என் டிரைவருக்காகக் காத்திருந்தேன். திடீரென்று நான்கு பேர் வந்து என்னை அடித்தார்கள். என் போனும், பர்ஸும் வேண்டும் என்று அடிக்கிறார்களோ என்று தான் நினைத்தேன் ஆனால் அவற்றை எடுக்கவில்லை. என்னைக் காயப்படுத்துவதில் குறியாக இருந்தனர்.’

‘எவ்வளவு நேரம்?’

‘என் டிரைவர் கோபால் காரை எடுத்து வரும் வரை. காரின் மீது கல்லடித்தார்கள். ஜன்னல் கண்ணாடியை உடைத்தார்கள். பிறகு ஓடிவிட்டார்கள். கோபால் வண்டியை விட்டு இறங்கிப் பார்த்தால் நான் ரத்தத்தில் கிடந்தேன்.’

‘உன்னை அவன் தான் ஹாஸ்பிடலில் சேர்த்தானா?’

‘அவன் முதலில் என்னை வீட்டுக்கு அழைத்துச் சென்றான். என் பெற்றோர்கள் என்னை அப்போலோவில் சேர்த்தனர். அங்கிருந்த டாக்டர்கள் என் இடது கையில் எலும்பு முறிந்துவிட்டது என்றனர். கொஞ்சம் மயங்கி விட்டேன். என்னை ஹாஸ்பிடலில் சேர்த்து கண்காணிப்பில் வைத்தனர்.’

‘ஸராவிடம் நீ இதைப்பற்றிச் சொன்னாயா?’

‘கண்டிப்பாக. நான் காரிலிருந்தே செய்தி அனுப்பினேன். அவள் ஹைதராபாத்துக்கு வரேன் என்றாள். ஆனால் அந்தக் கொடுமைக்கார ஸக்ஸேனா அவளை வரவிடவில்லை.’

‘பேராசிரியர் ஸக்ஸேனாவா? அவள் கைடா?’

‘ஆமாம். அவனுக்கு ஏதோ பேப்பர் எழுதணுமாம். அதனால் அவள் உதவி வேண்டும் என்று கூறிவிட்டார். அவளால் கிளம்ப முடியவில்லை.’

‘அவள் பிடிவாதம் பிடிக்கவில்லையா? ஸராவைத் தெரிந்ததால் சொல்கிறேன். அவள் அப்படியெல்லாம் சொன்ன பேச்சு கேட்க மாட்டாளே.’

‘ஆமாம். அவள் எப்படியிருந்தாலும் வருவேன் என்று அடம்பிடித்தாள் தான். ஆனால் நான் தான் அவளை நிறுத்தி வைத்தேன். அவளுடைய கடைசி தீஸிஸ் அனுமதி பெற மூன்று மாதங்களே இருக்கின்றன. இப்பொழுது ஸக்ஸேனாவை எரிச்சலடையச் செய்ய வேண்டாமே?’

ஒரு சர்வர் எங்களைச் சுற்றியபடி எதிர்பார்ப்புடன் காத்திருந்தான். டீயைத் தவிர வேறு ஏதாவது ஆர்டர் செய்ய மாட்டோமா என்ற நப்பாசையில்.

‘ஒரு முட்டை புர்ஜி மற்றும் பாவ்,’ என்றேன். ‘உனக்கு என்ன வேண்டும் ரகு?’

‘சைவத்தில் என்ன இருக்கு? ஏதாவது லைட்டாகப் போதும்,’ என்றான் சர்வரிடம்.

வெஜிடேரியன் கிளப் சாண்ட்விச். ரொம்ப போரிங் சாப்பாடு.

‘ஹாஸ்பிடலிலிருந்து ஸராவுடன் தொடர்பில் இருந்தாயா?’

‘எப்போதுமே.’

‘அவள் என்ன பேசினாள். சொல்ல விருப்பமிருந்தால் சொல்லு.’

‘வழக்கமான விஷயம் தான். என் உடல் நலத்தைப் பற்றி விசாரித்தாள். நான் அவளை மிஸ் செய்ததாகக் கூறினேன். எங்கள் திருமண ஏற்பாட்டைப் பற்றிப் பேசினோம். பே ஏரியா, அமெரிக்காவுக்குப் போவதைப் பற்றியும் பேசினோம்.’

‘இவையெல்லாம் சாட்டிலா பேசினீர்கள்?’

‘சில வாட்ஸ்அப் கால், சில போன் கால். என் போனைப் பார்க்கிறாயா?’

தன் ஐ-போனை என் பக்கமாக நீட்டினான்.

‘இல்லை. அது சரியில்லை. ஏதாவது அபாயத்திலிருப்பதாக அவள் சொன்னாளா?’

‘இல்லை.’

‘யாரைப் பற்றியாவது பயத்திலோ, சங்கடத்திலோ இருந்தாளா?

‘ஸக்ஸேனா மட்டும் தான். அவனைப்பற்றி என்ன சொன்னாள் என்று வார்த்தை மாறாமல் சொல்கிறேன்.’ வாட்ஸ்அப் சாட்டுகளைப் புரட்டினான்.

‘எனக்கு அவரைப் பிடிக்காது. கொஞ்சம் கூடப் பிடிக்காது,’ ரகு தன் போனிலிருந்து படித்தான்.

‘வேறு?’

‘நீயே பாரேன்,’ என்று போனை என்னிடம் கொடுத்தான். ஒரு நிமிஷம் தயங்கிவிட்டு வாங்கிக் கொண்டேன். ஸராவுடன் பேசிய சாட்டுகளைப் படித்தேன்.

ரகுவை தாக்கிய நாளுக்கு நகர்ந்தேன். ரத்தம் ஒழுகும் கையின் புகைப்படத்தை அனுப்பியிருந்தான். அவள் அதிர்ச்சியாக ஸ்மைலி அனுப்பியிருந்தாள். பிறகு கூப்பிட்டிருந்தாள், யார் அதைச் செய்திருக்கக்கூடும் என்று இருவரும் பேசிக் கொண்டனர். ஆனால் கண்டுபிடிக்க முடியவில்லை. அடுத்த நாள் சாட்டில் நிறைய ‘பேபி,’ ‘பேபி’ என்று உருகியிருந்தாள். ஹாஸ்பிடலில் பெட்டிலிருந்து ஸெல்ஃபி அனுப்பியிருந்தான். அவள் முத்தங்களும், அன்பும் அனுப்பியிருந்தாள். ஹைதராபாத்தில் எவ்வளவு சீக்கிரம் இருக்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் இருப்பதாக வாக்களித்தாள்.

அடுத்த நாள் ஸரா ரகுவுக்கு அனுப்பிய செய்தியில் பேராசிரியர் ஸக்ஸேனாவைக் கெட்ட வார்த்தையில் திட்டியிருந்தாள்.

‘அவனை எரிச்சல்படுத்தாதே. பன்னிரெண்டே வாரங்கள் பொறுத்துக்கோ பிறகு அவனை நீ பார்க்க வேண்டாம்.’ என்று ரகு அனுப்பியிருந்தான்.

ஸரா பிறந்தநாளுக்கு முந்தைய இரவு, ரகு ஒரு ஸெல்ஃபி அனுப்பியிருந்தான். அவனுடைய மாவுகட்டில் ஒரு செய்தி எழுதியிருந்தான். ‘உன்னுடைய பிறந்தநாளன்று உன்னை விட்டுப் பிரிந்திருக்கும் வலி, என் உடல் வலியைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது.’

‘உன்னுடன் நான் அங்கிருந்தால் நன்றாக இருக்குமே,’ என்றாள் ஸரா.

நாம் ஒருவருடன் பழகிவிட்டுப் பிரிந்தாலும், அவரால் இன்னொருவருடன் நெருக்கமாக இருக்க முடியும் என்று கற்பனை கூட செய்ய முடியாது. இதைப் பார்க்காமலே இருந்திருக்கலாம். ஆழமான மூச்சு விட்டு அமைதியாக இருக்க முயற்சித்தேன். மேலும் ஸ்க்ரோல் செய்து படித்தேன்.

சரியாகப் பன்னிரெண்டு மணிக்கு ரகுவிடமிருந்து பிறந்தநாள் செய்தி வந்திருந்தது.

‘இது நள்ளிரவு. ஹாஸ்பிடலில் இவ்வளவு நீண்ட நேரம்

விழித்திருக்கக் கூடாது, பேபி! நீ என் வாழ்வின் காதல்! உன்னுடன் இருக்கப் பிரியப்படுகிறேன். ஐ லவ் யூ.’

‘நன்றி. நானும் உன்னை அதிகமாக லவ் செய்கிறேன்.’ ரகு ஒரு கட்டிப்பிடித்து, முத்தமிடும் இமோஜியை அனுப்பியிருந்தான். இரண்டு மணி நேரங்களில் ரகு மற்றொரு செய்தி அனுப்பினான். ‘ஹே பர்த்டே பேபி. குட் மார்னிங்’ அரை மணி நேரத்திற்கு பிறகு மற்றொரு செய்தி.

‘என் பர்த்டே பெண் எப்படியிருக்கா? இன்னமும் தூக்கமா? இரு முறை அழைத்தேனே.’

ஆனால் கடைசி இரண்டு செய்திகளுக்கு ‘நீல டிக் மார்க்’ இல்லை. அவை படிக்கப்படவில்லை.

அவனிடம் போனைத் திருப்பிக் கொடுத்தேன்.

‘ஸாரி,’ என்றேன்.

அவன் தலையசைத்தான்.

‘நான் அவளை மிகவும் காதலித்தேன்.’

ரகு, ஸரா காதல் கதை கேட்க எனக்குத் தெம்பில்லை. பேச்சை மாற்றப் பார்த்தேன்.

‘ஸராவுக்கு சுத்தமாக பிடிக்காது என்று யாராவது இருந்தார்களா? ஸக்ஸேனாவைத் தவிர?’ என்று கேட்டேன்.

‘உனக்குத் தான் ஸராவைத் தெரியுமே. என்ன பாஸிடிவான பெண். எல்லோரிடத்திலும் நல்லதையே பார்ப்பாள்.’

அதனால் தான் நான் அவளுடன் இருந்தேன், தம்பி, என்று சொல்ல வேண்டும் போலிருந்தது.

‘யாருமில்லையா?’

‘ஸக்ஸேனா மட்டும் தான். அவனை வெறுத்தாள். நானும் தான்.’

‘ஏன்? அவளுக்கு லீவு கொடுக்கவில்லை என்பதாலா?’

‘இல்லை. அதையும் தாண்டி. ஒரு வருடமாக அவளுடைய தீஸிஸை இழுத்தடிக்கிறான். அவளைப் பாலியல் ரீதியாகவும் துன்புறுத்தியிருக்கான்.’

‘என்னது பாலியலா?’

‘தீஸிஸை சீக்கிரம் முடிக்க வேண்டுமென்றால் அவள் இணங்க வேண்டும் என்று கூறியிருக்கான்.’

‘டீன் ஸக்ஸேனாவா? நிஜமாவா?’ என்றேன். ‘அவருக்கு நாற்பத்தி ஐந்து வயதிருக்கும்.’

‘சொல்லப் போனால் நாற்பத்தியெட்டு. ஸரா அவன் துன்புறுத்தலை வருடக்கணக்காகப் பொறுத்துப் போயிருக்காள். அவளுடைய கடைசி பிஎச்டி தீஸிஸ் அனுமதி அவன் கையில் என்பதால்.’

‘என்னால் நம்ப முடியவில்லை. பேராசிரியர் ஸக்ஸேனா நமக்குக் காலேஜில் பாடம் நடத்தியிருக்கிறார். நினைவிருக்கா? வேலையிலேயே கண்ணாய் இருப்பாரே.’

‘ஒருவர் மீது அதிகாரம் செலுத்தும் சக்தியிருந்தால் மக்கள் மாறி விடுவார்கள்.’

‘அதிர்ச்சியாக இருக்கு. ஸரா புகார் தரவில்லையா?’

‘பிஎச்டி கைடை அவ்வளவு லேசில் பகைத்துக் கொள்ள முடியாது. பாடுபட்டு உழைத்த அத்தனை வருடங்களின் உழைப்பு வீணாகி விடுமே. வாழ்க்கைக் கனவு, உத்தியோகம் - விட்டுக் கொடுக்க முடியாதே. கையாலாகாத்தனத்தை நொந்தபடி எனக்கு ஒரு ஈ-மெயில் அனுப்பியிருந்தாள்.

‘ஈ-மெயிலா?’

‘ஆமாம். ஒரு வருஷம் முன்பு. இரு.’

அவன் போனைக் குடைந்தான்.

‘உன் ஈ-மெயிலைப் பார்,’ என்றான் ரகு.

ஸரா ரகுவுக்கு எழுதிய மெயிலை வாசித்தேன். படிக்க, படிக்க என் தாடை விழுந்தது. வாய் பிளந்தேன்.

‘கீழ்த்தரமானவன் - தேவடி ..... மகன்,’ என்றேன்.

‘அப்பொழுது எனக்கும் இப்படித்தான் தோன்றியது,’ என்றான் ரகு. ‘ஸராவுடைய படிப்புக்கு இடையூறு இல்லாமல் இருந்திருந்தால் நானே தனிப்பட்ட முறையில் புகார் செய்திருப்பேன்.’

‘வேறு ஏதாவது நான் தெரிந்து கொள்ளணுமா?’ என்றேன்.

‘ஆமாம். உனக்கு சிகந்தர் தெரியும் தானே?’

‘ஸராவுடன் உடன் பிறவா தம்பி? இறுதிச்சடங்கில் அவனைப் பார்த்தேனே!’

‘ஆமாம். அவன் சந்தேகப்படும் ஆசாமிகளுடன் காஷ்மீரில் சகவாசம் வைத்திருக்கான். ஸரா அவனை ஒரு நல்ல வேலை எடுத்துக் கொள்ளச் சொல்லி வற்புறுத்தினாள்.’

‘என்ன சந்தேக ஆசாமிகள்?’

‘என்னிடம் சொல்ல மறுத்தாள். அவள் எப்படி என்று

உனக்கே தெரியுமே. விருப்பமில்லையென்றால் எந்த அழுத்தமும் வேலை செய்யாது. அதுவும் அவள் குடும்ப விவகாரத்தை எவ்வளவு தான் கேட்க முடியும்? ‘தலையிடாதே,’ என்பாள்.

‘பிறகு உனக்கு எப்படித் தெரியும்?’

‘சில சமயம் போனில் அவள் சிகந்தரைத் திட்டுவாள். சரியான பாதையில் செல் என்பாள். என் எதிரில் அவனைச் சந்திக்கவோ, அவனைப் பற்றி பேசவோ மாட்டாள்.’

‘நன்றி,’ என்றேன்.

‘வேறு ஏதாவது தேவையா?’

இல்லையென்றேன். ரகு கிளம்புவதற்காக எழுந்தான்.

‘என் நம்பர் உன்னிடம் இருக்கு. தகவல் தெரிந்தால் தெரிவி.’

‘முயற்சி செய்கிறேன்.’

‘நன்றி. வேறு ஏதாவது தேவை என்றால் என்னிடம் சொல்,’ என்றான் ரகு. சர்வர் பில் கொண்டு வந்தான். ரகு பணம் கொடுத்தான். கருப்பு நிற அமெரிக்கன் சென்சூரியன் கார்டைத் தேய்த்தான்.

‘வேறு ஏதாவது வேண்டுமா, ஸார்?’ ரகு கிளம்பியதும் சர்வர் என்னிடம் கேட்டான்.

‘மூன்று லார்ஜ் விஸ்கி. ஐஸ் இல்லாமல்,’ என்றேன். தனியாக உட்கார்ந்து தண்ணியடித்தேன். துணைக்கு ஸராவின் நினைவுகள் இருந்தன.

# அத்தியாயம் 12

நான்கு வருடங்களுக்கு முன்

‘மில்க் கேக்கா?’ ஸரா கேட்டாள்.

‘ஆமாம். அது தான் ஆல்வாயில் பிரபலம். நீ இதைக் கண்டிப்பாகச் சாப்பிட்டுப்பார்க்கணும்.’

மூன்று மணி நேரம் வண்டியில் பிராயணம். டெல்லியிலிருந்து ஆல்வாருக்கான 150 கிலோ மீட்டரைக் கடந்து விட்டோம். கேபில் என்னுடன் ஸரா பின்னால் அமர்ந்திருந்தாள். ஜன்னல் வழியாக ஆர்வமாக எட்டிப் பார்த்தபடி வந்தாள்.

‘அது என்ன? பெரிய கோட்டை?’ என்று சுட்டிக் காட்டினாள்.

‘அது என் வீடு,’ என்றேன்.

‘நிஜமாவா?’

‘இருந்தால் நன்றாக இருக்கும்,’ என்று சிரித்தேன். ‘அது பாலா-கிலா அல்லது ஆல்வார் கோட்டை; பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த ராஜாவால் கட்டப்பட்டது.’

‘அழகாக இருக்கு! நகரத்தைச் சுற்றிக் காட்டுவியா?’

‘சுற்றிப் பார்க்க இங்கு வரவில்லை. உன் மாமனார் வீடு இங்கு இருந்தால் நீ எப்போ வேணுமானாலும் வரலாம்.’

‘மாமனார், மாமியாரா?’ என்று இளித்தாள். ‘கேஷவ், நான் உன்னை கேலி செய்தாலும் நீ செய்வது ரொம்ப கியூட்,’

‘எது?’

‘இந்த முயற்சியை எடுப்பது. உன் குடும்பத்துக்கு என்னை அறிமுகப்படுத்தி அவர்களில் ஒருத்தியாக ஆக்க முயற்சிப்பது.’

‘நீ ஏற்கனவே ஒருத்தி தான்,’ நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கா? என் பெற்றோர்களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று.’

‘இல்லை.’

‘என்ன?’ என்றேன் எரிச்சலாக.

‘கிண்டல். கண்டிப்பாக நினைவிருக்கு. ஆனால் நான் நானாகத் தான் இருக்கப் போகிறேன். என்னைப் பிடிக்கணுமானால் என் நிஜத்தைத் தான் அவர்களுக்குப் பிடிக்கணும். ஏதோ ஒரு போலி நானாக இருக்கக்கூடாது.’

‘ஸரா, இங்கே பாரு, இது பெற்றோர்கள். ஏதாவது கதை படிக்கத் தான் வேண்டும்.’

‘அப்போ இன்றிரவு நான் என் ஷார்ட்ஸ் போட்டுக் கொண்டு தூங்கக் கூடாதா?’

‘ஸரா உனக்கென்ன கிறுக்கா?’ என்று அதிர்ந்தேன். ஹா, ஹா… ரிலாக்ஸ்டா இரு. சும்மா பேசிக்கொண்டே வராதே. உன் பெற்றோர்களிடம் நல்ல பேர் வாங்குகிறேன். அவர்களுக்கு என்னைப் பிடிக்கும். பொறுத்திருந்து பார்.’

‘அவர்கள் பிள்ளைக்கு உன்னை ரொம்பப் பிடிக்கும்,’ என்று அவள் பக்கமாக நகர்ந்து உட்கார்ந்தேன்.

‘நினைத்து கூடப் பார்க்காதே,’ என்று டிரைவரைச் சுட்டிக் காட்டினாள்.

❖

என் பெற்றோரின் பங்களா வாசலில் பெயர்ப் பலகையைப் படித்தபடி தன் நீலம்-வெள்ளை துப்பட்டாவை இழுத்து விட்டுக் கொண்டாள் ஸரா.

ஸ்ரீ நமன் ராஜ்புரோஹித், வக்கீல்

மஹாநகர் காரியஸ்தர், ஆர் எஸ்எஸ்

‘உன் பெற்றோர்களிடம் நான் வரப்போறேன் என்று சொல்லிவிட்டாயா?’ ஸரா லேசான கலக்கத்துடன் கேட்டாள்.

‘கண்டிப்பாக,’ என்றேன். பாதி உண்மைதான். பெல் அடித்தேன். வீக்எண்டுக்கு ஒரு நண்பனைக் கூட்டி வருகிறேன் என்று நான் கூறியிருந்தேன். அம்மாவுக்கு மட்டும் அது பெண் என்று தெரியும். அவளிடமும் நான் ஸராவின் பெயரைக் குறிப்பிடவில்லை. அவளைச் சந்திப்பதற்கு முன்னரே அவளைப் பற்றிய அபிப்பிராயத்தைத் தர விரும்பவில்லை. நாங்கள் டேடிங் செய்கிறோம் என்றும் அம்மாவிடம் சொல்லவில்லை. ‘என் நண்பனுக்கு ஆல்வார் சுற்றிப் பார்க்கணுமாம்; என்று மட்டுமே போனில் சொல்லியிருந்தேன். என் அம்மா என் நண்பன் ஒரு பெண் என்பதைக் குறித்து ஆச்சரியம் தெரிவித்திருந்தாள்.

‘ஆமாம், அவள் ஐஐடியில் பிஎச்டி படிக்கிறாள்,’ என்றேன். யதார்த்தமாக இருப்பதற்கான முயற்சி. படிப்பு சம்பந்தமான

தொடர்பாக இருந்தால் இந்தியப் பெற்றோர்கள் எளிதில் ஒப்புக் கொள்வார்கள்.

அவளைச் சந்தித்தால் ஸராவை என் பெற்றோருக்குக் கண்டிப்பாகப் பிடிக்கும் என்று நம்பினேன். அதற்குப் பிறகு வாழ்க்கையில் இணைந்திருப்பதைப் பற்றிச் சொல்லிக் கொள்ளலாம்.

'ஸாரி, சமையலைறையில் இருந்தேன்,' என்று கூறியபடி அம்மா கதவைத் திறந்தாள்.

'நமஸ்தே ஆன்ட்,' என்று ஸரா அழகாகக் கை கூப்பினாள். அவள் கைகளில் அணிந்திருந்த வளையல்கள் குலுங்கி வெளிச்சத்தில் மின்னின.

'ரொம்ப அழகாக இருக்கா,' என்றாள் அம்மா.

ஸரா அடக்கமாகச் சிரித்தாள்.

'மா. இது ஸரா,' என்றேன். ஆனால் என் அம்மா அதைக் கேட்டதாகத் தெரியவில்லை.

'உள்ளே வா. வெப்பம் அதிகமாக உள்ளது,' அவள் ஸராவிடம் சொன்னாள்.

❖

'சீக்கிரமே மதிய உணவு தயாராகி விடும்,' என்று கூறி அம்மா சமையலை கவனிக்கச் சென்றாள். ஸராவும் நானும் லிவிங் ரூமில் விடப்பட்டோம்.

ஸரா சோபாவில் அமர்ந்தாள். கண்கள் சுவரை நோட்டமிட்டன. ராஜஸ்தானி ஓவியங்கள். என் அப்பா அரசியல் பெருந்தலைகளுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டவை.

'அது பிஎம்.மா? என்றாள்.

'ஆமாம், அப்பொழுது அவர் சிஎம்மாக இருந்தார்.' 'ஆர்எஸ்எஸ் மூத்த உறுப்பினர். திருமணமானவர்கள் எந்த உயரத்தைப் பிடிக்க முடியுமோ, அந்த உயரம்.'

'அப்படியென்றால்?' என்று ஆச்சரியப்பட்டாள்.

'ஆர்எஸ்எஸ்ஸில் வெகு உயர்ந்த பதவிகள் பிரம்மச்சாரிகளுக்குத் தான் ஒதுக்கப்பட்டவை.'

'ஏன் அப்படி? அறிவாளிகளைத் தேர்வு செய்யும் முயற்சியா? ரொம்ப சாமர்த்தியமாக இருந்தால், திருமணமே செய்து கொள்ள மாட்டார்கள்,' என்று ஸரா சிரித்தாள்.

சுவருக்கு அருகே சென்று அந்தப் புகைப்படங்களைக்

கூர்ந்து கவனித்தாள். எங்கள் திருமணத்திற்கு பின் அவள் இந்த வீட்டில் நடப்பதைக் கற்பனை செய்து பார்த்தேன். புல் தரையில் அமர்வோம். என் அம்மா, அப்பாவுடன் அரட்டை அடிப்பாள். ஒன்றிரண்டு குழந்தைகள் கூட வரலாம். அவர்களுக்கு என்ன பெயர் வைக்கலாம். இரண்டு தரப்புக்கும் பொதுவாக கபீர்?

நான் ஸராவைப் பார்த்தேன். அவள் அந்தப் பெரிய அறையில் சிறு பெண்ணாகப் பாதுகாக்கப்பட வேண்டியவளாகத் தெரிந்தாள். கைகளைப் பின்னால் கட்டியிருந்தாள். அவள் கடைசியில் என் வீட்டில் இருக்கிறாள் என்பது மகிழ்ச்சியாக இருந்தது.

'நீ கியூட் குழந்தையாக இருந்திருக்கே,' நான் பார்க்கில் விளையாடிக் கொண்டிருந்த கருப்பு, வெள்ளைப் புகைப்படத்தைப் பார்த்தபடி கூறினாள்.

'நன்றி.'

'பிறகு என்ன ஆச்சு?'

'வாயை மூடு,' என்றேன். அவள் சிரித்தாள்.

'ஸாரி, ஸாரி,' என் அம்மா திரும்பவும் ஹாலுக்கு வந்தாள். புடவைத் தலைப்பால் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டாள். 'உங்களுக்கு பசிக்கிறதா?'

'இல்லை அம்மா. உட்கார். உங்கள் இருவரையும் சரியாக அறிமுகப்படுத்தி வைக்கிறேன்,' என்றேன்.

'சரி கண்ணா,' என்று அம்மா என்னைப் பாசமாகப் பார்த்தாள்.

அம்மா சோபாவில் உட்கார்ந்தபடி தன் அருகில் இருந்த இடத்தைத் தட்டி ஸராவை அமரும்படி கூறினாள். ஸரா அவளருகே அமர்ந்தாள்.

'அம்மா, இது ஸரா. என் டெல்லி ஃபிரண்டு. ஸரா, இது என் அம்மா. நான் அவளுடைய ஒரே மகன். அவள் என் ஒரே அம்மா.'

'ஸரா, என்றால்...?' அம்மா வினவினாள். 'முழு பெயர் என்ன?'

'ஸரா லோன், ஆன்ட்டி.'

'ஓ,' என்ற அம்மா அமைதியானாள். அவசரமாகப் பேசி அந்த இக்கட்டான அமைதியைச் சமாளிக்கப் பார்த்தாள்.

'நீ ரொம்ப அழகாக இருக்கே கண்ணு. நீ மாடலா?' ஸரா புருவம் உயர்த்தி சிரித்தாள்.

'அம்மா, என்னம்மா?' என்று இடைமறித்தேன். 'அவள் ஐஐடியில் பிஎச்டி செய்கிறாள். பி.டெக். முடித்தவுடன் இடம்

கிடைத்துவிட்டது. வெகு சிலருக்கே அப்படிக் கிடைக்கும்.'

'ஸாரி. நான் அதை வாழ்த்தாகத்தான் சொன்னேன்.'

ஸரா சொன்னாள், 'உங்கள் வீடு அழகாக இருக்கு. சுவரில் இருக்கும் அனைத்து ஓவியங்களும் எனக்குப் பிடித்தன.'

'நன்றி கண்ணு. எவ்வளவு நல்ல பிள்ளையாக இருக்கிறாள்,' என்று அம்மா என்னிடம் சொன்னாள்.

'என்ன? அப்போ நான்?' என்றேன்.

'பையன்களுக்கு எப்படிப் பேசணும் என்று தெரிவதில்லை. ஒரு பெண் இல்லையே என்று எனக்கு எப்பொழுதும் வருத்தம் தான்,' என்றாள் அம்மா. ஸராவைப் பார்த்து கேட்டாள், 'லோன் குடும்பம் எந்த ஊரு?' இந்தியாவில் பூர்வீகம் தெரிந்து கொள்வது மிகவும் அவசியம். அப்பொழுது தான் பேசும் சௌகரியமே ஏற்படும்.

'நான் காஷ்மீரிலிருந்து வருகிறேன், ஆன்ட்டி. ஸ்ரீநகர். டெல்லிக்கு வந்து பத்து வருடங்கள் ஆகின்றன.'

'காஷ்மீரி? ஓ,' என்றாள் அம்மா. அம்மா இழுத்த 'ஓ' வைப் பார்த்தால் அவள் செவ்வாய் கிரகவாசி என்று புரிந்து கொண்டது போலிருந்தது.

'அது இந்தியாவில் தான் இருக்கு,' என்றேன் நக்கலாக.

'எனக்குத் தெரியும். இதுதான் சொன்னேன், ஆம்பிளைப் பசங்களுக்குப் பேசத் தெரியாது,' என்று ஸராவைத் தோழமையாகப் பார்த்தாள்.

என்னை நோக்கி, 'உன் விருந்தாளிக்கு அவள் அறையைக் காண்பித்தாயா?'

அவள் ஸராவை 'உன் விருந்தாளி' என்றாள். 'உன் தோழி,' அல்லது 'ஸரா' என்று குறிப்பிடவில்லை. இது ஒரு நல்ல தொடக்கமாகப்படவில்லை.

'காண்பிக்கிறேன்,' என்றேன்.

'நல்லது' என்ற அம்மா ஸராவிடம், 'நீ ஆல்வாரைப் பார்க்க இன்று போகிறாயா, நாளையா?'

'எப்போ கேஷவ் கூட்டிப் போகிறானோ, அப்போ நாங்கள் போவோம்.' அம்மா என்னை ஆச்சரியமாகப் பார்த்தாள். 'நாங்கள் போவோம்,' என்பதைக் குறித்த ஆச்சரியம்.

'ஆல்வாரில் சுற்றிப் பார்க்க வெகு சில இடங்களே உள்ளன. சரி மதிய உணவைச் சாப்பிடலாம் ஸரா, சைவம் தான் சமைத்திருக்கிறேன். உனக்குப் பிடிக்குமா?'

‘பிரச்சினையே இல்லை, ஆன்ட்டி. எனக்கு சைவம் ரொம்பப் பிடிக்கும்.’

‘உங்களுக்கெல்லாம் அசைவம் தான் பிடிக்கும் என்று நினைத்தேன்.’

பெற்றோர்கள் கேர்ள் ஃபிரெண்டை ‘உங்களுக்கெல்லாம்,’ என்று அழைத்தால் அது நல்ல அறிகுறி அல்ல.

❖

‘ராஜஸ்தான் சி.எம். அடுத்த வாரம் ஆல்வாருக்கு வருகிறார். வீட்டிற்கு வரும்படி அழைத்திருக்கிறேன்,’ என்றார் அப்பா. ஸாக்ஸை அவிழ்த்து ஷுக்குள் வைத்தார். இரவு எட்டு மணி சுமாருக்கு வீட்டுக்கு வந்தார். ஸரா விருந்தினர் அறையில் இருந்தாள். இரவு உணவுக்கு முன்னால் குளித்து ரெடியாகிக் கொண்டிருந்தாள். பூஜையறையில் அம்மா மாலைப் பிரார்த்தனை செய்துக் கொண்டிருந்தாள். இன்று அவள் பாடிய பஜன்கள் உரத்த குரலில் இருந்ததாகத் தோன்றியது. ஸராவுக்குத் தன் அடையாளத்தைப் புதுப்பித்துக் கொள்ளும் முயற்சியாகப்பட்டது. இது போன்ற அராஜகமான, திருட்டுத்தனமான முயற்சி அம்மாக்களுக்கு மட்டுமே உரித்ததாகும். அதுவும் மகன்களின் கேர்ள் ஃபிரெண்டுகள் மீது பிரயோகப்படுத்துவது ஒரு தனி கலை. ஆனால் அபாரமானது.

நானும் என் அப்பாவும் ஹாலில் அமர்ந்திருந்தோம். என் விருந்தாளியைப் பற்றி ஏதாவது கேள்வி கேட்பார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அவர் மனதில் ஒரே ஒரு விஷயம் தான் ஓடிக் கொண்டிருந்தது.

‘அடுத்த வாரம் இங்கே இருக்க முடியுமா? சி.எம். வருகிறார். அவரைச் சந்திப்பது உனக்கும் நல்லது தானே?’

‘எனக்கு டெல்லியில் வேலையிருக்கு அப்பா,’ என்றேன்.

‘என்ன வேலை? உனக்கு என்ன நிஜமான வேலையிருக்கா என்ன?’

பத்து மடங்கு அதிகமாக வேலை வாங்கும், துன்புறுத்தும் ‘பாஸ்’ இருக்கிறார்-நிஜ வேலையில்’ கூட அப்படிப்பட்டவர் இருக்கமாட்டார் என்று சொல்லலாம் என்று நினைத்தேன்.

‘எனக்கு கிளாஸஸ் இருக்கு அப்பா. மாணவர்கள் காத்துக் கொண்டிருப்பார்கள்.’

‘ராஜஸ்தான் சி.எம். நம் வீட்டுக்கு வரப் போகிறார். நீ டியூஷன் எடுக்கிறாயா?’

‘அதுதான் என் தொழில்.’

‘கம்பெனிகளுக்கு நல்ல வேலைக்காக அப்ளை செய்வாயா இல்லையா?’

‘ஆமாம்ப்பா. இப்போதைக்குக் கிடைத்ததை எடுத்துக் கொண்டேன்.’

‘காலேஜில் கொஞ்சம் நன்றாகப் படித்திருந்தால்? ஐஐடிக்குப் பிறகு நல்ல வேலை கிடைக்கவில்லை என் மகனுக்கு என்று என் நண்பர்களிடம் சொல்ல கஷ்டமாக இருக்கு.’

தரையைப் பார்த்தேன். இதை ஒரு நூறு முறை பேசியாகி விட்டது. ‘நம்

அகர்ஸேன்ஜியை எடுத்துக்கொள். பிராந்திய பிரச்சாரக், ராஜஸ்தான். ஒரு பளிங்கு தொழிற்சாலைக்குச் சொந்தக்காரர். நான் கேட்டால் உனக்கு வேலை போட்டுத் தருவார்.

‘ராஜஸ்தானில் ஒரு சிறிய குடும்பத் தொழிற்சாலையில் வேலை செய்ய எனக்கு இஷ்டமில்லை அப்பா.’

‘ஏன்? அப்படியாவது நீ நிஜ இன்ஜினியர் ஆகிவிடுவாய். டியூஷன் அளிப்பதைவிட தகுதியானது தானே?’

‘அது சர்வதேச கம்பெனியாக இருக்கணும் அல்லது இந்தியாவின் தலை சிறந்ததாகவாவது இருக்கணும். இல்லையென்றால் என்ன பிரமாதம்?’

அவர் ஏமாற்றத்தில் தலையசைத்தார். எழுந்து தன் உடலில் மேல்புறத்தை அசைத்தார். முதுகெலும்பை நெட்டி முறித்தார். நான் சொன்னேன், ‘சி.எம். எப்போ வருகிறார் என்று சரியான நேரத்தைச் சொல்லுங்கள். நான் ஒரு சில மணி நேரங்களுக்கு இங்கே வரப் பார்க்கிறேன்.’

‘ஓ, நீ இப்போ சி.எம்.மை விடப் பெரியவனாகி விட்டாயா? சி.எம். மின் சரியான வருகை தெரிந்தால் நீ வருவாயா?’

‘வாரம் முழுக்கத் தங்குவதற்கு பதிலாகச் சொன்னேன்.’ ஸரா தன் அறைக்கதவை திறந்தாள். அப்பாவுக்குச் சத்தம் காதில் விழுந்தது.

‘யார் மாடியில்?’ என்றார்.

‘ஆமாம்ப்பா, நான் தான் இந்த வீக்எண்ட் ஒரு நண்பனுடன் வருவதாகச் சொன்னேனே.’

‘அப்படியா? இங்கேயே தங்குகிறானா?’

‘ஆமாம். வீக்எண்டுக்காக. ஆல்வாரைச் சுற்றிப் பார்க்க.’

ஸரா தன் அறையிலிருந்து இறங்கி வந்தாள். ஹாலுக்குள்

நுழைந்தாள். ஒரு எளிமையான மஞ்சள் ஸல்வார்-கமீஜ் அணிந்திருந்தாள். ஈரமான தலைமுடி, மேக்கப் இல்லாத முகம். எப்பொழுதையும்விட அழகாகக் காட்சியளித்தாள். அப்பா அவளைப் பார்த்ததும் வாயைப் பிளந்தார். என் காதில் கிசுகிசுத்தார்.

‘இது தான் உன் நண்பனா?’

‘ஆமாம். ஐஐடியில் பிஎச்டி படிக்கிறாள்.’

‘ஆனால்...’ என்று அப்பா மேலே பேசுவதற்குள் ஸரா எங்களை அணுகிவிட்டாள்.

‘நமஸ்தே, அங்கிள்,’ என்றாள் ஸரா. அப்பா எழுந்து நின்றுவிட்டார். மரியாதையைவிட கூடுதல் அதிர்ச்சி.

அப்பாவும் கை கூப்பினார். வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை. இந்திய ஆண்களால் ஏன் பெண்கள் முன்னால் பேச முடிவதில்லை? வாயைக் கட்டிப் போட்டது போல் ஆகிவிடுகிறார்கள்.

ஸரா நான் சொன்ன பேச்சைக் கேட்டாள். முழு கை ஸல்வார் கமீஜ். அவள் மணிக்கட்டு வரை மூடியது. கழுத்தும் முழுவதும் மூடியிருந்தது. கொஞ்சம்கூட தோல் தெரியும்படி உடை அணிய வேண்டாம் என்று கண்டிப்பாகக் கூறியிருந்தேன். என் பெற்றோர்கள் ‘தாலிபனா’ என்றாள். அவளுக்குப் புரியவில்லை. ஒரு சிறிய காரணம் போதும், பெற்றோர்களுக்கு, தங்கள் மகனின் தேர்வை நிராகரிக்க. முதல் சுற்றிலேயே, ஆடைகள் சரியில்லை என்று நிராகரிப்புத் தொடங்கிவிடும். ஆட்டம் முடிந்துவிடும்.

‘அப்பா, இது ஸரா. ஸரா இது என் அப்பா,’ என்றேன்.

அப்பா மிகச் சுருக்கமாகத் தலையாட்டினார். பிறகு அமர்ந்தார்.

நாங்கள் மூவரும் ஹாலில் அமர்ந்திருந்தோம். இருந்த மயான அமைதியில் கடிகாரத்தின் டிக்-டிக் சத்தம் சுவரில் சம்மட்டியால் அடிப்பது போல் ஓங்கி ஒலித்தது. ஒரு சில விநாடிகளுக்கு முன் என் தந்தை பெரிதாக லெக்சர் அடித்துக் கொண்டிருந்தார். இப்பொழுது வார்த்தைகளைத் தொலைத்தவர் போல் அமர்ந்திருந்தார்.

‘ஸரா தன் பிஎச்டியை ஐஐடி, டெல்லியில் படிக்கிறாள்,’ என்றேன். ‘பிக் டேட்டா நெட்வொர்க்கிங்கில் ஆராய்ச்சி செய்கிறாள். கம்ப்யூட்டர் சயின்ஸ்.’

அப்பா தலையாட்டிச் சிரித்தார். ஆனால் குரல்

ஒலிக்கவில்லை. ஸரா பேச முற்பட்டாள்.

‘நீங்கள் வக்கீலா... அங்கிள்?’

‘ஹ்ம்ம்ம்...’ என்று அப்பா உறுமினார்.

‘நீங்கள் சொந்தமாக வக்கீல் தொழில் நடத்துகிறீர்களா?’ என்று ஸரா கேட்டாள்.

‘முன்னால் செய்தேன். இப்பொழுது முழு நேரம் ‘சங்’ வேலை தான்’ என்றார் அப்பா. வாவ்! கடைசியில் பேசிவிட்டாரே.

‘சங்?’ என்று கேட்டாள் ஸரா.

‘ஆர்.எஸ்.எஸ். உனக்கு ஆர்.எஸ்.எஸ். தெரியுமா?’

‘ஆமாம். ராஷ்ட்ரிய ஸ்வயம்சேவக் சங்.’

‘நீ எந்த ஊரு?’ என்று என் அப்பா வழக்கமான இந்தியப் பெரியவர்கள் கேட்கும் கேள்வியைக் கேட்டார். ஒரு வேளை பெற்றோர்கள் குழந்தைகளின் நண்பர்களைச் சந்திக்கும் போது அவர்களின் விலாச அடையாளம் அல்லது ஆதார் கார்டைக்கூட கேட்கலாம்.

‘நான் டெல்லியில் தங்குகிறேன். பூர்வீகம் காஷ்மீரி.’

‘ஓ!’ என்றார் அப்பா. ‘உன் முழு பெயர் என்ன?’ இந்த குறுக்கு விசாரணை போன்ற பேச்சு மிகவும் இயல்பானது என்று என் அப்பா கருதினார்.

‘ஸரா லோன், அங்கிள்,’ என்றாள்.

என் அப்பா அவளுடைய முழு பெயரையும் கேட்டுவிட்டு ஆழமாக மூச்சு விட்டார். ஆமாம். அவள் இஸ்லாமியப் பெண் தானப்பா. ரிலாக்ஸ். அவர்கள் கடிப்பதில்லை என்று சொல்ல நினைத்தேன்.

‘நான் அவன் அம்மாவுடன் பேச வேண்டும்,’ என்றார் அப்பா. எழுந்து நின்றார். பூஜை அறைக்குச் சென்றார். பஜன்கள் நின்றுவிட்டன. புரியாமல் குரல் மட்டும் கேட்டது. அவர்கள் தீவிரப் பேச்சில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று புரிந்து கொண்டேன்.

‘எல்லாம் ஓ.கே. தானே?’ என்றாள் ஸரா.

‘ஆமாம். ஏன்?’ என்று கூடுதல் ‘பளிச்’ சிரிப்பில் இறங்கினேன். ‘நல்ல ஸல்வார்-கமீஜ் அணிஞ்சிருக்கே.’

❖

அடுத்த நாள் மாலை சாப்பாட்டு மேஜையில் டீ அருந்தியபடி என்

பெற்றோர்களுடன் அமர்ந்திருந்தேன். ஸரா தனியாக ஆல்வார் மார்க்கெட்டுக்கு ஷாப்பிங் சென்றிருந்தாள்.

‘இந்தப் பெண்ணை வீட்டிற்கு எதற்குக் கூட்டி வந்தே என்று உன் அப்பா கேட்கிறார்,’ என்றாள் என் அம்மா. நான் அப்பாவைப் பார்த்தேன். என்னிடம் கேட்க வேண்டிய கேள்வியை என் அப்பா எதற்கு என் அம்மா மூலம் கேட்கிறார் என்று நினைத்தேன்.

‘அப்பா, அவளுக்கு ஆல்வார் பார்க்கணுமாம். அவள் உங்களைச் சந்திக்கும் வாய்ப்பாகவும் கருதினேன்.’

‘நாங்கள் எதற்கு அவளைச் சந்திக்கணும்?’ என்றார் அப்பா.

‘ஒன்றும் இல்லை தானே?’ என்றாள் அம்மா. ‘நான் உன் அப்பாவிடம் சொன்னேன். அவள் ஆல்வார் பார்க்க வந்த வெறும் தோழி. உன் வீட்டில் பாதுகாப்புக் கருதி தங்க வைத்தாய். இன்றைய தேதியில் பெண்களுக்கு எதிராக நிறைய வன்கொடுமைகள் நடக்கின்றன.’

‘ஆமாம், ஆனால்...’

‘ஆனால் என்ன?’ என்றார் அப்பா.

‘அவள் நல்ல தோழி, அப்பா.’

‘நல்ல தோழியா? யார் பெண்களை நல்ல தோழியாக அமைத்துக் கொள்வார்கள்?’ என்றார் அப்பா.

இயல்பான மக்கள் என்று பதில் சொல்ல எண்ணிக் கைவிட்டேன்.

‘நீ ஒரு காஷ்மீரி இஸ்லாமியப் பெண்ணை வீட்டுக்குக் கூட்டி வருவே. நாங்கள் என்ன என்று கேள்வி கூடக் கேட்கக்கூடாதா?’

‘எதற்கு கோபப்படுகிறீர்கள்?’ என்று என் அம்மா தன் கணவரைச் சமாதானம் செய்ய ஆரம்பித்தார். ‘ஐஐடியில் நிறைய மாணவர்கள், நாடு முழுவதிலிருந்தும் வந்து படிப்பார்கள். அவளைப் பார்த்தால் நல்ல பெண்ணாகத் தெரிகிறாள். அவள் ஆல்வாரைச் சுற்றிப் பார்த்துவிட்டுக் கிளம்பி விடுவாள். நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள் ராஜ்புரோஹித் ஜீ?’

‘உன் பையன் இஸ்லாமியப் பெண்ணை வீட்டிற்குக் கூட்டி வந்திருக்கான். உனக்குக் கவலை இல்லையா?’ என்றார் அப்பா. என் குற்றம் என்ன என்று எனக்குப் புரியவில்லை. நான் ஒரு பெண்ணை அழைத்து வந்ததா, அல்லது ஒரு இஸ்லாமியரை அழைத்து வந்ததா? இரண்டுமேவா?

‘ஏன் கண்ணா? கவலைப்பட ஏதாவது இருக்கா?’ என்று என் அம்மா ரொம்பவும் சமாதானம் செய்யும் குரலில் வினவினார்.

கவலை? நானும் ஸராவும் இணைவது தான் ‘கவலை’ என்று பொருள் கொண்டேன்.

‘அம்மா, அழகாக இருக்கிறாள் என்று நீ தானே சொன்னே?’

‘ஆமா, அதனால்?’ என்றாள் அம்மா. அப்பா அவளைக் கேவலமாகப் பார்த்தார். என்ன தைரியத்தில் ஒரு ஹிந்து அல்லாத பெண்ணை அழகு என்று அம்மா வர்ணித்தாள்?

‘அவள் அறிவாளி கூட. ஐஐடியில் பிஎச்டி படிக்கிறாள். பிக் டேட்டா நெட்வொர்க்கிங்கில். இதுதான் இப்பொழுது ஆராய்ச்சிகளிலேயே சிறந்து விளங்குவது.’

‘பிக் டேட்டான்னா என்ன? நம் டேட்டா பேக்கேஜ் மாதிரியா?’ என்றாள் அம்மா குழப்பமாக. ஸராவின் தீஸிஸ் பற்றிப் பேசியிருக்க வேண்டாமோ என்று யோசித்தேன்.

‘அவளுக்குச் சமூக அக்கறை அதிகம். அவளுக்குப் பணம், பொருளில் ஈடுபாடு இல்லை. படிப்பு முடிந்த பின் காஷ்மீருக்காக ஏதாவது செய்ய விருப்பப்படுகிறாள். மரியாதை தெரிந்தவள் -----’ என்று தொடர்வதற்குள் அம்மா வெட்டிப் பேசினாள்.

‘எல்லாம் சரி. இதையெல்லாம் எதற்கு எங்களிடம் சொல்றே?’ இரண்டு பேரும் என்னைப் பேரதிர்ச்சியுடன் பார்த்தனர். நான் ஆழமாக மூச்சை இழுத்தேன்.

‘எனக்கு அவளைப் பிடிச்சிருக்குமா,’ என்றேன்.

‘என்னது?’ என்றாள் அம்மா. எனக்கு ஏதோ வியாதி என்று சொன்னது போல் அதிர்ந்தாள்.

‘எனக்கு ஸராவைப் பிடிக்கும். அவளுக்கும் என்னைப் பிடிக்கும். நாங்கள் சேர்ந்து வாழ விருப்பப்படுகிறோம்.’

‘பார்த்தியா,’ என்று அப்பா கத்தினார். அவர் எழுந்து விட்டார். ‘நான் உன் அப்பா. முட்டாள் இல்லை. அவளைப் பார்த்தவுடனேயே புரிந்துவிட்டது.’

‘சேர்ந்தா? அந்த இஸ்லாமியப் பெண்ணை மணக்கப் போறியா?’ என்றாள் அம்மா, தன் குரலைத் தேடிபிடித்து.

‘எனக்கு ஸராவுடன் இருக்கணும்மா; அவள் இஸ்லாமியப் பெண். ஐந்தடி மூன்றங்குலம். கதையில் வரும் ஸ்நோவைட் போல் வெண்மையானவள். இந்த மேம்போக்கான விவரங்கள் எல்லாம் எதற்கு?’

‘அவள் இஸ்லாமியப் பெண் என்பது ஒரு விஷயம் இல்லையா?’ என்றாள் அம்மா. அவள் கண்களும், வாயும், ஆங்கில எழுத்து ‘O’ போல ஆச்சரியத்தில் விளங்கின.

கோடிக்கணக்கான இந்தியக் கணவர்கள் செய்வது போல் தன் பொறுப்பைத் தட்டிக் கழிக்கும் விதத்தில் வழக்கமான சொற்களை உதிர்த்தார் என் அப்பா, ‘போ. உன் மகன் மீது மேலும் அன்பு செலுத்து. முதல் விஷயம், அவன் வகுப்பில் கடைசி மாணவனாகத் தேர்வு பெற்றான். பிறகு வேலை கிடைக்கவில்லை. இப்பொழுது அவனுக்கு இஸ்லாமியப் பெண் கேட்கிறது. இது எல்லாவற்றுக்கும் காரணம் நீ அவனுக்குச் செல்லம் கொடுத்துக் கெடுத்தது தான்.’

அம்மா என் அருகே வந்து பின்னந்தலையில் ஒரு கொட்டு வைத்தாள். பதினைந்து வருடங்களில் அம்மா இதைச் செய்யவில்லை.

‘ஐயோ!’ என்று என் தலையின் வலியைத் தடவிக் கொண்டேன். ராஜ்புத் அம்மாவின் கொட்டு வலி நிறைந்தது.

‘உனக்கு புத்தி பேதலிச்சுப் போச்சா? இஸ்லாமியப் பெண்ணையா திருமணம் செய்வாய்?’ என்றாள். நான் ஏதோ ஆன்லைனில் போதைப் பொருள் விற்க முதலீடு கேட்டது போல் கொந்தளித்தாள்.

‘காஷ்மீரி இஸ்லாமியப் பெண்,’ என்று அப்பா கூடுதல் தகவலாகக் கூறினார். சாதாரண இஸ்லாமியர்களை விடக் கொடுமையானவர்கள் என்பது போல் அப்பா பேசினார்.

‘அப்பா, அவள் படித்த பெண். டெல்லியில் இருக்கிறாள். நல்ல குடும்பத்தைச் சார்ந்தவள்.’

‘இவளைப் போன்றவர்கள் தான் காஷ்மீரிலிருந்து ஹிந்துக்களை வெளியேற்றினார்கள்,’ என்றார் அப்பா.

‘என்ன? ஸரா, காஷ்மீர் இணக்கமாக, அமைதியாக இருக்க வேண்டும் என்று ‘பிளாக்’ எழுதுபவள்,’ என்றேன். ‘நீங்கள் என்ன பேசுகிறீர்கள் அப்பா?’

‘பிளா... என்னது?’ என்றார் அப்பா.

‘பிளாக். வலைதளத்தில் காஷ்மீரைப் பற்றியும் அங்கு அமைதி வேண்டியும் எழுதுகிறாள். அவளிடம் பேசினால் அவள் தரப்பு வாதம் புரியும்.’

‘காஷ்மீரி முஸ்லீம்களிடம் நான் காஷ்மீர் பற்றிப் பேசுவதாக இல்லை. நம் வீட்டை விட்டு அவள் எப்பொழுது கிளம்புகிறாள் என்று மட்டும் சொல்லு,’ என்றார் அப்பா. கோபமாக நடந்து போய் சோபாவில் அமர்ந்தார். டி.வி. போடும் போது இறுக்கமாக இருந்தார். செய்தி சேனல் வந்தது. விஷயத்தை மேலும் தீவிரப்படுத்தும்படி இன்றைய சர்ச்சை - இந்திய இராணுவத்தின்

மீது கல்வீசிய காஷ்மீரிகளைப் பற்றி இருந்தது.

‘அவர்களைப் பார். நன்றி கெட்ட ஜென்மங்கள். நம் இராணுவம் அவர்களை பாதுகாக்கிறது. அவர்கள் நம் இராணுவ வீரர்கள் மீது கல்லடித்துவிட்டுத் தீவிரவாதிகளுக்கு அடைக்கலம் தருகிறார்கள்.’

நான் ஆத்திரமாக ஹாலில் நடந்து போய் டி.வி.க்கு நடுவில் நின்றேன். ‘எனக்கு காஷ்மீர் பிரச்சினைப் பற்றி சரியாகத் தெரியாது. ஆனால் மக்கள் நன்றி கெட்டவர்கள் என்று ஒதுக்கும் அளவுக்கு எளிமையான விஷயமாகப்படவில்லை,’ என்றேன்.

‘நீ புரிந்து கொள்ள மறுக்கிறாய்.’

‘இல்லைப்பா. ஸராவும், நானும் காதலிக்கிறோம். இது ஒரு கேவலமான அரசியல் விஷயம் கிடையாது.’

‘காதலா?’ அம்மா ஹாலின் இந்தப் பக்கத்திலிருந்து அலறினாள். ‘உன் அப்பா சொல்வது தான் சரி? உன் மூளையைப் பரிசோதிக்கணும்.’

‘டி.வி.யை விட்டு நகரு,’ என்றார் அப்பா இறுக்கமாக.

‘இல்லப்பா. என்னுடன் பேசுங்கள். ஸராவிடம் என்ன குறை என்று கூறுங்கள். அவள் மதத்தைத் தவிர.’

‘எனக்கு இதைப்பற்றி பேச வேண்டாம். அவளைத் திரும்ப அனுப்பிவிடு.’

‘ஸரா ஒரு ராஜஸ்தானி ராஜபுத்தாக இருந்தால் எல்லாம் சரியாகி விடும் தானே?’

‘உன் அப்பாவை எதிர்த்துப் பேசாதே. நான் திரும்பவும் அறைந்து விடுவேன்,’ என்றாள் அம்மா, பல்லைக் கடித்தபடி.

என் அம்மாவைக் கெஞ்ச ஆரம்பித்தேன்.

‘அம்மா, அவள் மதத்தைத் தாண்டிப் பாரேன்.’

‘எப்படி? நம் குடும்பத்தில் யாராவது அதைத் தாண்டிப் பார்ப்பார்களா? உண்மையைச் சொல். திருமணத்தில் அனைவரும் எதைப்பற்றிப் பேசுவார்கள்?’

‘அவ்வளவு தானா? திருமணத்தில் அடிக்கும் வம்பு தான் கவலையா?’ அப்பா உச்சு கொட்டினார்.

‘அது மட்டுமல்ல,’ என்றாள் அம்மா. ‘உன் அப்பாவைப் பற்றி உனக்கு அக்கறை இல்லை என்பது தான் பிரச்சினை. அதுதான் அவரைக் காயப்படுத்துகிறது.’

நான் கற்பனை செய்தேனா என்று தெரியவில்லை. அப்பா லேசான அழுகையில் மூக்கை உறிஞ்சுவது போல் தோன்றியது.

பெற்றோர்கள் உணர்ச்சிப் போராட்டத்தில் இறங்கத் தீர்மானித்து விட்டால் எதுவுமே தடையில்லை. அழும் அப்பா, அடிக்கும் அம்மா, என்று வழக்கமாக இந்தியப் பெற்றோர்கள் மேற்கொள்ளும் உத்திகள். பிள்ளைகளைச் செதுக்குவதற்கு, தங்கள் இஷ்டப்படி பிள்ளைகளை வளைந்து கொடுக்க வைக்க எவ்வளவு ஆழமாக வேண்டுமானாலும் இறங்குவார்கள்.

‘இது எப்படி அப்பா சம்பந்தப்பட்டதாக இருக்கும்?’ என்றேன்.

‘அவர் ஆர்.எஸ்.எஸ்.ஸில் இருக்கிறார்,’ என்றாள் அம்மா. ‘ஏற்கனவே, அவர் திருமணமானவர் என்பதால் சில தடைகள் உள்ளன. இருந்தும் அவரை ஒரு உயர்பதவிக்கு உத்தேசித்திருக்கிறார்கள்.’

‘அதனால்?’ என்றேன் குழப்பமாக.

‘இப்பொழுது நீ ஒரு இஸ்லாமியப் பெண்ணை வீட்டுக்கு அழைத்து வந்தால், மக்கள் என்ன சொல்வார்கள்?’

‘இது இரண்டுக்கும் என்ன சம்பந்தம்? ஆர்.எஸ்.எஸ். ஒரு சமூக அமைப்பு தானே? நாட்டுப் பற்றை வளர்க்க ஏற்படுத்தப்பட்டது தானே? அதைத்தானே அவர்கள் வழக்கமாக முழங்குகிறார்கள்?’

‘நான் தான் சொன்னேனே? அவனுக்கு அக்கறை இல்லை,’ என்றார் என் தந்தை. ‘அவன் ஒரு தீவிரவாதியை மணம் முடிப்பான். நான் கண்டிப்பாகச் சொல்கிறேன்.’

‘தீவிரவாதியா?’ என்று உரக்கக் கத்தினேன். ‘அவள் ஐஐடி மாணவி.’

‘வாயை மூடு,’ என்றாள் அம்மா. ‘போதும்டா சாமி. நான் ஏமாந்துவிட்டேன். இன்றிரவே அவளைக் கிளம்பச் சொல்லு.’

‘இன்றிரவா?’ என்று கேட்டேன்.

‘ஆமாம்,’ என்றாள் அம்மா.

‘இரவில் டெல்லிக்கு வண்டியில் செல்வது அவ்வளவு பாதுகாப்பு இல்லை,’ என்றேன்.

‘உன் அப்பா ஒரு ஆர்.எஸ்.எஸ். உறுப்பினரை, கூட அனுப்பி வைப்பார். செய்ய முடியும் தானே, ராஜ்புரோஹித் ஜீ?’

அப்பா தலையாட்டினார்.

‘நீ அவளிடமிருந்து விலகியிரு.’

‘ஆனால், அம்மா...’

‘இல்லை, எங்களிடமிருந்து விலகியிரு,’ என்றார் அப்பா.

‘அம்மா, இது நியாயமே இல்லை,’ நான் அம்மா பக்கம் திரும்பினேன்.

‘நான் என்னையே எரித்துக் கொள்வேன், அவளை நீ மணம் முடித்தால்,’ என்றாள் அம்மா. ‘ஒரு பணியாளைக் கூப்பிடுங்கள் ராஜ்புரோஹித் ஜி.’

மணியடித்தது. எங்கள் பேச்சு நின்றது. அப்பா எழுந்து போய் கதவைத் திறந்தார்.

‘மில்க் கேக் வேண்டுமா?’ என்றது ஸராவின் கலகலப்பான குரல். அறையை நிரப்பியது அவள் கேள்வி.

❖

‘ஒரு மணி நேரம் தான்,’ என்றேன் கூகுள் மேப்பை பார்த்தபடி. ‘நீ ஹிமாத்ரியில் இருப்பே.’

சுகேது, ஆல்வாரில் பணியாற்றும் ஆர்.எஸ்.எஸ். பணியாள், ‘ஹோண்டா சிடியை’ டெல்லிக்கு ஓட்டிக் கொண்டு போனான். ராஜ்பால் என்ற ஒரு விடலைத் தொண்டன் அவனுடன் முன்னால் அமர்ந்திருந்தான். ஸராவும் நானும் பின்னால் அமர்ந்திருந்தோம்.

‘இது என்ன திடீர் வேலை வாய்ப்பு?’ என்றாள் ஸரா மூச்சு வாங்க. அவளை மிகவும் அவசரப்படுத்தி விட்டேன்.

‘ஓஎல்எக்ஸ், வாங்கி விற்கும் வலைதளம்?’ என்றேன். கதை கட்டியபடி. சில கிலோமீட்டருக்கும் பின்னால் விளம்பரப் பலகையில் பார்த்த பெயரை வைத்து கதை கட்டினேன்.

‘என்ன வேலை?’

‘கோடிங். வேறு என்ன?’

‘ஓ! உன்னை ஞாயிற்றுக்கிழமையா தேர்வுக்கு அழைத்தனர்?’

‘ஆமாம் நாளை காலை. CEO வருகிறாராம்.’

‘அண்ணே, நான் ஒரு செகண்டு ஹாண்ட் போன் ‘ஓஎல்எக்ஸி’ல் வாங்கினேன்,’ என்றான் ராஜ்பால். ‘நன்றாக வேலை செய்கிறது.’

ஓ.கே. நான் பேசுவதையெல்லாம் முன்னால் அமர்ந்திருக்கும் மூடர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்களா?

‘என்ன பிராண்டு?’ என்றான் சுகேது.

‘ரெட்மீ,’ என்றான் ராஜ்பால். ‘கேஷவ் அண்ணா, ‘ஓஎல்எக்ஸி’ல் வேலை கிடைத்தால் எங்களுக்கு முதலில் சொல்லி விடுங்கள் - நல்ல பேரம் அமைந்தால்.’

‘நிச்சயமாக,’ என்றேன்.

‘ஞாயிறு? CEO உன்னைச் சந்திக்கிறாரா?’ என்றாள் ஸரா. ‘ஒரு கோடர் வேலைக்கு?’

‘தெரியாது, ஸரா. நீ ஏன் இவ்வளவு கேள்விகள் கேட்கிறே?’

‘வியப்பாகவும், விநோதமாகவும் இருக்கு. உன் பெற்றோர்களை, உன் கேர்ள் ஃபிரண்டாக நான் சந்திக்கும் வீக்எண்டாகத் தானே இதைத் திட்டமிட்டோம்?’

‘நீதான் அவர்களைச் சந்தித்தாயே?’

‘நம்மைப் பற்றிப் பேசப் போவதாகச் சொன்னியே?’

‘இதைப்பற்றி பிறகு பேசலாமா?’ எதிரே இருந்தவர்களைச் சுட்டிக் காட்டினேன். நான் செய்த சைகையைக் கண்டு கொள்ளவில்லை அவள்.

‘அவர்களுக்கு என்னைப் பிடிக்கவில்லையா?’

‘உனக்கென்ன பைத்தியமா? என் அம்மா சொன்னதை நீ கேட்கவில்லையா? உன்னை அழகி என்றாளே.’

‘அதற்குப் பிடிச்சிருக்கு என்று அர்த்தம் இல்லையே.’

‘அவர்களுக்கு உன்னைப் பிடிச்சிருக்கு. கண்டிப்பாகப் பிடித்தது. எல்லையில் உள்ள டாபாவுக்குப் போகலாமா? சுகேது அண்ணா, கொஞ்சம் நிறுத்துகிறீர்களா?’

❖

‘நீ ரொம்ப வித்தியாசமாக நடந்து கொள்கிறாய்,’ என்றாள் ஸரா.

நாங்கள் சணல் இருக்கைகளுக்கு அருகில், டாபாவில் காத்திருந்தோம்.

ரங்கீன் டாபாவில் நின்று கொண்டிருந்தோம். டெல்லி நகரச்சூழல் தொடங்குவதற்கு முன் உள்ள அமைதியான, கடைசி திறந்தவெளி டாபா. சுகேதுவும், ராஜ்பாலும் கழிப்பறையைப் பயன்படுத்தச் சென்றிருந்தனர். ஒரு நிமிட தனிமை கிடைத்தது.

‘ஸரா, நான் யோசிக்கிறேன். முதலில் உன் பெற்றோர்களிடம் ஆரம்பிக்கலாமா?’

‘உன் பெற்றோர்களிடம் தொடங்கலாம் என்பது தானே நம் திட்டம்?’

‘ஆமாம். வேறு மாதிரியும் செய்யலாம் இல்லையா,’ என்றேன். பிளாஸ்டிக் கார்டைப் படித்தபடி. ‘கோபி பராத்தா

சாப்பிடலாமா?'

'நீ பயந்துவிட்டாயா?' என்று குரலைத் தாழ்த்திக் கேட்டாள்.

'நான் ஒன்றும் பயப்படவில்லை, சரியா?' என்று உரத்த குரலில் கூறினேன்.

'ஆமாம் அண்ணா. இங்கே சிக்கன் சாப்பிடாதீர்கள். நல்லா இருக்காது,' என்று ராஜ்பால் கழிப்பறையிலிருந்து வந்து சம்பந்தமில்லாமல் பேசினான்.

# அத்தியாயம் 13

'இப்படி பயந்து சாகாதே,' என்றாள் ஸரா. டெல்லி - குர்காவோன் எல்லையில் இருந்த பிரமாதமான ஃபார்ம் ஹவுஸக்குச் சென்று கொண்டிருந்தோம். வெஸ்ட் எண்ட் கிரீன்ஸ் செல்வந்தர்கள் தங்கும் இடம். நாங்கள் ஓலாவில் சென்று கொண்டிருந்தோம். ஐஐடி மாணவன் கண்டுபிடித்த ஆப் கம்பெனி. மதிப்பீடு கோடிகளில் போய்க் கொண்டிருந்தது. இதுபோன்ற ஆயிரத்தில் ஒரு ஐடியா கூட எனக்கு ஏன் வருவதில்லை? ஒரு நல்ல வேலை கூடக் கிடைக்கவில்லை? ஒரு டையைக்கூட சரியாக முடி போடத் தெரியவில்லை?

'இந்த டைக்கு தனியான ஆளுமையிருக்கிறது,' என்று புலம்பினேன்.

'இந்த ஸ்வட்டே வேஸ்டு. என் குடும்பத்தைத் தானே சந்திக்க வறே? இது என்ன இன்டர்வியூவா?'

'அவர்கள் என்னை வீட்டில் பார்த்தால் நான் ஒரு வேலையில் இருப்பவன். தீவிரமாக இருக்கிறேன் என்று நம்புவார்கள். இல்லையென்றால் நான் டியூஷன் எடுக்கிறேன் என்றால் அப்பொழுதே விஷயம் முடிந்துவிடும்.'

'இது ஒன்றும் டியூஷன் இல்லை. தயாராவதற்குப் பயிற்சி தரும் ஒரு பிரபலமான சென்டரில் வேலை பார்க்கிறாய்,' என்றாள் ஸரா.

ஸரா அப்படிச் சொன்னால் என் வேலை அவ்வளவு மோசமானதாகத் தோன்றவில்லை. அதனால் தான் அவளை நான் காதலிக்கிறேன். அவள் எல்லாவற்றிலும் நல்லதையே பார்த்தாள். என்னைப் போல் சராசரியானவனிடத்திலும்.

அவளுடைய மாளிகைக்குள் எங்கள் 'வேகன் ஆர்' சென்ற பொழுது, வாட்ச்மேன் கதவைத் திறந்தான்.

'இதுதான் உன் வீடா? பிறகு எதற்கு அந்த மூக்கோட்டை ஹாஸ்டல் அறையில் தங்குகிறாய்?' என்றேன். தோட்டமே வாலிபால் கோர்ட்டைப் போல் பெரியதாக இருந்தது. அரை ஏக்கரில் இருந்தது பங்களா.

‘என் அறை எனக்கு மிகவும் பிடித்தமானது. 105ல் என் வாழ்க்கையே அடங்கியிருக்கிறது.’

‘இங்கேயும் நல்ல வாழ்க்கை வாழலாமே?’

‘கேம்பஸிலேயே இருப்பது தான் நல்லது. வந்து போவது ரொம்ப சிரமம். ஓ.கே. கடைசியாகச் சரிபார்த்து விடலாம், மிஸ்டர். டை, பெல்ட், ஷூ லேஸ், நாடி நரம்பு? எல்லாம் சரியாக இருக்கா?’ ஸரா என் மூக்கைத் திருகினாள். நான் அதைப்பற்றிச் சொன்னேனா? என் மூக்கைப் பிடித்து அடிக்கடி திருகினாள். ரொம்ப எரிச்சல் தரும் விஷயம்.

❖

‘இன்னும் கொஞ்சம் கோஷத் பரிமாறலாமா?’ ஸஃப்தர் தன் இடிமுழக்கம் போன்ற குரலில் கேட்டார். தொலைக்காட்சித் தொடர்களில் புராணக் காலத்திய ஒரு சிம்மாசனம் போன்ற நாற்காலிகளில் அமர்ந்து மதிய உணவைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம்.

பதினெட்டு பேர் உட்காரக்கூடிய அந்த சாப்பாட்டு மேஜையின் தலைமை நாற்காலியில் ஸஃப்தர் அமர்ந்திருந்தார்.

கருப்பு பந்த்கலா உடை அணிந்திருந்தார். கையில் இரண்டு தங்க பிரேஸ்லெட்டுகள். இடது கையில் ரோலெக்ஸ் வாட்ச். ஃபிரெஞ்சு தாடியில் கருப்புச் சாயம் பூசப்பட்டிருந்தது. அவருடைய மனைவி எனக்கு இடதுபுறம் அமர்ந்திருந்தார். இதுவரை வெகு சில வார்த்தைகள் தான் பேசினார். பிங்க் பட்டு ஸல்வார்-கமீஜ் அணிந்திருந்தார். துப்பட்டாவால் தலையைப் போர்த்தியிருந்தார். அணிந்திருந்த, வைரமும்-ஜேடும் கலந்த நெக்லெஸ் ஒரு சிறிய ஃபிளாட்டின் மதிப்பு இருக்கலாம். துவாரகா-குர்காவோன் எக்ஸ்பிரஸ்வேயில் விற்பனைக்கு வரும் விளம்பரத்தில் கூறும் விலையிருக்கலாம். செல்வந்தர்கள் என்று அந்த நெக்லெஸ் பறைச்சாற்றியது. அவளுடைய தலைமுடி இயற்கையிலேயே கருப்பாக இருந்தது, ஸராவை விட பத்து வயது மூத்தவளாக இருக்கலாம்.

‘இல்லை, ஸார். வயிறு நிரம்பிவிட்டது,’ என்றேன். நான் அதிகம் மாமிசம் சாப்பிடுவதில்லை. இன்று என்னால் இயன்றதைச் சாப்பிட்டேன். ஸராவின் குடும்பத்தில் ஒருவனாக மாற வேண்டும்.

‘ஸரா சொன்னாள். நீயும் அவளும் நல்ல நண்பர்கள் என்று,’ என்றார் ஸஃப்தர் பிரியாணியை வேலைப்பாடு செய்த கத்தி, ஃபோர்க்குடன் சாப்பிட்டபடி கேட்டார்.

என்னைப் போன்ற முட்டாளாக இல்லாமல் ஸரா அவள் பெற்றோர்களிடம் இதைப்பற்றி ஏற்கனவே சொல்லி வைத்திருந்தாள். அவர்களைத் தயார்படுத்தியிருந்தாள். அதனால் என் அப்பா, அம்மாவுக்கு நான் கொடுத்த மின்சார அதிர்வு போலில்லாமல், ஸராவின் பெற்றோர்கள் அமைதியாக இருந்தனர். அவர்கள் இன்னும் தற்கொலை மிரட்டலுக்குப் போகவில்லை. ‘எங்களுக்கு இருவருக்கும் ஒரு மாதிரி பிடிக்கும்,’ என்று தான் கூறியிருந்தாள். துரதிர்ஷ்டவசமாக, என் பெற்றோர்களைப் போல் ஹிந்தி மட்டுமே பேசுபவர்களுக்கு ‘ஒரு மாதிரி’ போன்ற விஷயமெல்லாம் புரியாது. என் அப்பாவுக்கு ‘ஒரு மாதிரி’ யெல்லாம் ஒத்து வராது.

‘ஸார்,’ என்று பேசுவதற்குத் தொண்டையைச் செருமினேன்.

‘நீ என்னை ‘ஸார்’ என்று அழைக்காதே.’

‘உங்களை அங்கிள் என்று கூப்பிடட்டுமா? அல்லது மிஸ்டர் லோன்?’

‘அங்கிளே போதுமானது. உங்கள் நட்பைப் பற்றிச் சொல்லு.’

‘எங்கள் இருவருக்கும் மூன்று வருடங்களாகப் பழக்கம். கேம்பஸில் சந்தித்துக் கொண்டோம்.’

‘எங்கள் பெண் அதைப்பற்றிச் சொல்லவே இல்லையே? நீ என்ன நினைக்கிறே ஜைனரப்? ஸரா ஐஐடியில் பிஎச்டி சேர்ந்ததே அவள் நண்பனுக்காகத் தானா?’ மிஸ்டர் லோன் அப்படிச் சொல்லிவிட்டு உரக்கச் சிரித்தார். ஜைனரப் பாதி சிரிப்பை பதிலாக உதிர்த்தார்.

‘அங்கிள், ஸரா சேர்ந்த மறுவருடம் நான் பட்டம் பெற்றுவிட்டேன்.’

‘நான் சும்மா ஹாஸ்யத்துக்காகச் சொன்னேன். சரி, இப்போ என்ன செய்யறே?’

எனக்கு வயிற்றைக் கலக்கியது. சிறிய குரலில், ‘தேர்வுக்கான பயிற்சி நிலையத்தில் வேலை செய்கிறேன்.’

‘தேர்வு பயிற்சி என்றால்?’

‘அது ஹைடெக் அப்பா. ஆப் வைத்து டெஸ்டிங் செய்கிறார்கள். கேஷவ் அதில் சம்பந்தப்பட்டிருக்கான்,’ என்றாள் ஸரா.

ஸரா இந்தக் கதையைத் தானாகவே தான் சொன்னாள். சந்தன் அரோராவின் ஒரே ஹைடெக் விஷயம் சாப்பிடும் குட்காவை - ஆன்லைனில் ஆர்டர் செய்ததாக இருக்கலாம்.

‘கல்வி தொடர்பான ஸ்டார்ட்அப் கம்பெனியா?’ என்றார் ஸஃப்தர்.

‘ஆமாம், அங்கிள்,’ என்றேன். ‘தற்போது கல்லும், மண்ணுமாகத் தான் இருக்கு. ஆனால் சீக்கிரமே ஆன்லைனுக்கு வந்துவிடுவோம்.’

‘நல்லது. நானும் வலைதளங்களில் முதலீடு செய்யலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்,’ என்றார் ஸஃப்தர். ‘இன்றைய தேதியில் நிறைய பேர் ஆப்பிள் தோட்டத்தைக் காட்டிலும் ஆப்பிள் போனில் தான் கவனம் செலுத்துகிறார்கள்.’

எல்லோரும் சிரித்தார்கள். எனக்கு ஸராவின் அப்பாவைப் பிடித்தது. அவர் ஏதோ ஒரு உரையாடல் நடக்க வேண்டும் என்று முயற்சியாவது எடுத்தார்.

‘நீங்கள் காஷ்மீரிலேயே பிரசித்தி பெற்ற பழ ஏற்றுமதி வியாபாரி என்று கேள்விப்பட்டேன்,’ என்றேன்.

‘கடவுள் கருணை காட்டியுள்ளார்.’

ஸரா எங்களை முக்கியமான விஷயத்துக்கு இழுத்தாள்.

‘நான் சொன்னேனேப்பா, கேஷவுக்கும் எனக்கும் ஒருவரை ஒருவர் ரொம்பப் பிடிக்கும்.’

‘அது தெரியுது,’ என்றார் ஸஃப்தர்.

‘உங்கள் அனுமதியும், ஆசியும் வேணும்,’ என்றாள் ஸரா.

‘ஓ,’ என்றார் ஸஃப்தர் ஆச்சரியமாக. ‘ஜைனரப், இந்த ஆப் செய்யும் குழந்தைகளைப் பார்த்தாயா? இந்தக் காலத்தில் எப்படி நேராகக் கேட்கிறார்கள் பாரேன்.’

‘உங்களுக்கு தெரியுமே அப்பா. நான் நேராகத் தானே உங்களிடம் பேசுவேன்.’

ஸஃப்தர் சிரித்தார்.

‘ஆமாம். கண்டிப்பா. நான் என்ன செய்யட்டும். அவன் பெற்றோர்களை சந்திக்கவா?’

‘வேண்டாம்,’ என்று நான் உணர்ச்சி பொங்கத் தடுத்தேன்.

‘என்ன?’ என்று ஸரா என்னை வியப்பாகப் பார்த்தாள்.

‘ஸாரி, ஸரா, உன்னிடம் நான் முதலிலேயே சொல்லியிருக்கணும். ஆனால், அங்கிள், என் பெற்றோர்கள் இதற்கு ஆதரவு தெரிவிக்கவில்லை. உங்களுக்கே ஏன் என்று புரிந்திருக்கும்.’

‘எப்போ நடந்தது?’ என்றாள் ஸரா. நான் அவள் அப்பாவையே

நேராகப் பார்த்தேன்.

‘அங்கிள், நான் உங்கள் மகளை மிகவும் நேசிக்கிறேன். அவளைச் சந்தோஷமாக வைத்துக்கொள்ள நான் எதுவும் செய்யத் தயார். தயவு செய்து எங்களுக்கு ஆசி வழங்குங்கள். என் பெற்றோர்கள் அனுமதிக்க மாட்டார்கள். ஆனால் ஒரு பக்க உறவினராவது எங்களுடன் நிற்க வேண்டும் என்று விரும்புகிறேன்.’

‘ஆனால், கேஷவ்...’ ஸரா ஆரம்பித்துவிட்டுப் பேசாமல் இருந்தாள். ஸஃப்தர் ஆழ்ந்த மூச்சை இழுத்துவிட்டார்.

‘பெற்றோர்கள் மிகவும் முக்கியம். நான் சொல்லத்தான் வேண்டும். நானுமே ஸரா சொன்ன போது அவ்வளவாகச் சந்தோஷப்படவில்லை.’

‘ஏன் என்றால் நான் ஹிந்து, அதுதானே?’

‘ஆமாம். ஆனால் நான் அவ்வளவு கர்நாடகமானவன் அல்ல.’

நிம்மதியில் பேச்சே வரவில்லை. ‘ந... நன்றி, அங்கிள்.’

அவர் தலையை அசைத்து ஆமோதித்தார். ‘ஆமாம். பரவாயில்லை. நாம் அதைச் சரி செய்துவிடலாம்,’ என்றார்.

மதிய உணவுக்குப் பிறகு, நாங்கள் தோட்டத்துக்குச் சென்றோம். ஸராவின் அப்பாவும், நானும் ஊஞ்சலில் அமர்ந்து கொண்டிருந்தோம். ஸரா தன் நாய் ரூபியுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். அது ஒரு ஜெர்மன் ஷெபர்டு. ஸராவுடன் விளையாடுவதைவிட அது வெய்யிலில் படுத்து உறங்குவதை தான் விரும்பியது. ஜைனரப் மதிய தூக்கம் போடுவதற்குப் போய்விட்டாள்.

ஸரா மூச்சு வாங்க ஊஞ்சலில் வந்து அமர்ந்தாள். ஸஃப்தர் திரும்ப என்னிடம் பேசினார்.

‘ஆல்வாரில் சூழ்நிலை எப்படி இருக்கு?’

‘ஆமாம், எனக்கும் தெரியணும், கேஷவ்,’ என்றாள் ஸரா.

அவர்களிடம் இஸ்லாமியர்களைப் பற்றிச் சொன்ன காட்டுத்தனமான அபிப்ராயங்களைத் தவிர்த்து மற்றவை முழுதும் சொன்னேன். ஆல்வாரில் என் குடும்பம் சொன்னவற்றை வரி விடாமல் சொன்னேன்.

‘அதனால் தான் நாம் ஆல்வாரை விட்டுச் சீக்கிரமாகக் கிளம்பினோமா?’

‘ஆல்வாருக்குப் போனீர்களா?’ என்றார் ஸஃப்தர்.

‘சும்மாத்தான் போனோம். நான் அங்கிருந்து வெளியே

அனுப்பப்படும் வரை இருந்தோம்.’

‘யாரையும் வெளியேற்றவில்லை,’ என்றேன். நமக்கு எதிராக இருந்தாலும் நம் பெற்றோர்களைப் பற்றித் தவறான விஷயங்களைக் கேட்கப் பிடிக்கவில்லை.

‘அவர்களுக்கு இஸ்லாமியர்கள் மீது வெறுப்பு?’ என்று சிரித்தார்.

நான் வியந்தேன்.

‘இல்லை. இஸ்லாமிய நண்பர்கள் சிலர் இருக்கிறார்கள். ஆனால் ஒரே மகன் இஸ்லாமியப் பெண்ணை மணம் முடிப்பதை அவர்கள் விரும்பவில்லை - அது அவர்களுக்கு முடியாத காரியமாகப்பட்டது.’

‘ஒரு ஆளின் உண்மையான அபிப்பிராயம் தெரியணுமா? வேறு ஜாதியில் திருமணம் செய்து கொடுப்பார்களா என்று கேட்கணும்,’ என்று சிரித்தார்.

‘அவர்கள் நல்லவர்கள் தான். நம்புங்கள். லேசாகப் பயந்து விட்டார்கள். என்னை அவர்களுக்கு ரொம்பப் பிடிக்கும். மாறி விடுவார்கள். ஆனால் சட்டென்று சொல்லச் சொன்னால் கொஞ்சம் சிரமம்.’

‘நீ என்ன சொல்ல வர்றே?’ என்றாள் ஸரா.

‘நாம் திருமணம் செய்து கொள்வோம். பிறகு அவர்களைச் சம்மதிக்க வைக்கலாம். வேறு எதுவும் செய்ய முடியாதே’ என்றேன்.

‘உன் பெற்றோர்களைச் சந்திக்காமலேயே, ஸராவைத் திருமணம் முடித்து வைக்கச் சொல்கிறாயா, என்னை?’ என்றார் ஸஃப்தர்.

‘அவர்களை வேண்டுமானால் சந்தித்துக் கொள்ளுங்கள். அது விஷயத்தை விபரீதமாக்கும்.’

ஸஃப்தர் சாய்ந்து உட்கார்ந்தார்.

‘என்னைக் கேட்டால் நீங்கள் இந்த விஷயத்தை முடித்துக் கொள்ளலாம்,’ என்றார் ஸஃப்தர்.

‘எங்களால் முடியாது,’ என்றோம் ஸராவும் நானும் கோரஸாக. ஸஃப்தர் எங்களைப் பார்த்தார்.

‘தயவு செய்து உதவி செய்யுங்கள், அங்கிள்,’ என்றேன். எழுந்து ஊஞ்சலைச் சுற்றி இருமுறை நடந்தார்.

‘ஏதாவது சொல்லுங்களப்பா,’ என்றாள் ஸரா.

‘இது நம் வழியில் நடத்த வேண்டும். நிக்காஹ் செய்யலாம்.’

‘ஏதுவாக இருந்தாலும் சரி,’ என்றேன்.

‘உனக்கு ஷாஹதா சடங்கை நிக்காவுக்கு முன்போ, பிறகோ கூட செய்துவிடலாம்.’

‘ஷாஹதா?’ என்றேன். வார்த்தையை முதல் முறையாகக் கேள்விப்பட்டேன்.

‘உன் நண்பனுக்கு இது என்ன என்று தெரியாதா? ஆனாலும் இஸ்லாமியப் பெண்ணை விரும்புகிறானா?’

‘அப்பா, என்னை இந்த ஷாஹதா கூத்து? இப்படியெல்லாம் நாம் செய்ய அவசியம் இல்லை...’

‘கண்டிப்பாகச் செய்யணும்,’ என்று அப்பா குறுக்கிட்டார். ‘அவன் பெற்றோர்கள் அவனை பிள்ளை இல்லை என்று ஒதுக்கிவிடுவார்கள். நம் பக்கத்திலிருந்து எல்லாவற்றையும் முறையாகச் செய்யலாம்.’

‘ஷாஹதா என்றால் என்ன?’

‘ஒரு உறுதிமொழி,’ என்றார் ஸஃப்தர்.

‘அப்பா, வேண்டாமே. இது ரொம்பப் பழங்காலத்து வழக்கமாக இருக்கு.’

‘பழங்காலமா?’ ஸஃப்தரின் மூக்கு ஒரு அங்குலம் உயர்ந்தது. ‘என்ன தைரியத்தில் இது பழங்காலம் என்கிறாய்? ஏதாவது மரியாதை பாக்கியிருக்கிறதா, இல்லையா?’

ஸரா தோளைக் குலுக்கிவிட்டு ரூபியுடன் புல் தரையில் அமர்ந்தாள்.

‘ஸாரி, அங்கிள். நான் எந்த சடங்குக்கும் கட்டுப்படுகிறேன். எனக்குத் தெரியாது இதைப் பற்றி,’ என்றேன்.

‘இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம்,’ என்றார் ஸஃப்தர். ‘நவ நாகரீகமாக இருக்கக் காரணமே இல்லையே.’

‘இது என்ன உறுதிமொழி, அங்கிள், ஷா-என்ன?’

‘ஷாஹதா, எளிமையான விஷயம். இரண்டே வரிகள் தான்.’ கைகளை உயர்த்தி, அரபு மொழியில் ஏதோ முணுமுணுத்தார். ‘லா லிலாஹா லில்லா லாஹா’ முஹமதுல் ரஸுலுஸ் லாஹி, வேறு எந்தக் கடவுளும் இல்லை, ஒருவரைத் தவிர. முஹம்மது தான் கடவுளின் தூதன். உன்னை எங்களில் ஒருவனாக மாற்றும் சடங்கு.’

‘உங்களில்?’

‘நிக்காஹ் நடக்கணுமானால் மாப்பிள்ளை, பெண் இருவருமே இஸ்லாமியர்களாக இருக்கணும். நீ மதம் மாறணும்,’ என்றார்

ஸஃப்தர்.

ஊஞ்சலில் ஆடியதில் தலை சுற்றியதா என்று தெரியவில்லை. என் காலடியில் பூமி நகர்ந்தது போலிருந்தது.

‘கொஞ்சம் டீ வேணுமா? காஷ்மீரி காஹ்வாஹ் இருக்கு,’ என்றார் ஸஃப்தர். மதம் மாறினால் காஹ்வாஹ் இலவச இணைப்புப் போல் பேசினார்.

❖

‘என்னை நம்பு. நான் விஷயம் இப்படி திசை திரும்பும் என்று எதிர்பார்க்கவில்லை,’ என்றாள் ஸரா. என் முகத்தைக் கையில் ஏந்தியிருந்தாள்.

நான் அவள் கைகளைப் பிடித்து மணிக்கட்டின் உள்பக்கம் முத்தமிட்டேன்.

‘என்னால் மதம் மாற முடியாது ஸரா. தயவு செய்து புரிஞ்சுக்கோ. உன் மதத்தின் மீது வெறுப்பில்லை. ஆனால் மாற முடியாது. என் பெற்றோர்கள் தற்கொலை செய்து கொள்வார்கள்.’

‘அப்போ மாறாதே.’

‘எப்படித் திருமணம் செய்து கொள்வது?’ என்று கேட்டேன்.

‘ஸ்பெஷல் மேரேஜ் ஆக்ட்டின்படி - இந்தியச் சட்டம் எந்த மதத்தைச் சேர்ந்தவரும் கோர்ட்டுக்குச் சென்று மணம் முடிக்கலாம். மதம் வேண்டாம். ஜாதிக் கூத்து வேண்டாம். எப்படி எளிமையாக நடக்கணுமோ, அப்படி.’

‘கோர்ட் திருமணமா?’

‘ஆமாம். நீ மதம் மாறாவிட்டால்.’

‘உன் பெற்றோர்களும் வரமாட்டார்களா?’

‘வருவதா? மறந்துவிடு. என்னையும் ஒதுக்கி விடுவார்கள். என் அப்பா தன் வேர்ஹவுஸ் அடியாட்களை அனுப்பி நம்மை அடிக்கக் கூட ஏற்பாடு செய்யலாம். படக் காட்சி மாதிரி இருக்கு, இல்லே?’ என்று ஸரா தன் புருவத்தை நகைச்சுவையாக உயர்த்தினாள்.

‘நான் தீவிரமாகப் பேசிக் கொண்டிருக்கிறேன், ஸரா. இரு பக்கமும் பெற்றோர்கள் - இல்லாமல் இருக்க முடியாது. அது நல்ல ஆரம்பம் இல்லை.’

‘உன் பெற்றோர்களிடம் பேசி, சம்மதம் வாங்கு.’

‘முடியாது.’

‘மதம் மாறு.’

‘முடியாது.’

‘நம் காதலுக்காக இவர்களை விட்டுக் கொடுத்துவிடு.’

‘ஸரா, நீ என்ன பேசறே?’

‘ஒன்றும் இல்லை.’

ஸரா என் கைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டாள்.

‘ஸரா, நான் என்னால் இயன்றதை செய்கிறேன்.’

‘இது தான் உன்னால் செய்யக் கூடியதா? என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. உன் பெற்றோரிடம், ‘இது என் பெண். அவ்வளவு தான்,’ என்று சொல்லுவதைப் பார்க்க முடியவில்லை.’

‘அவர்கள் என் பெற்றோர்கள், ஸரா.’

‘அது அவர்கள் எப்போதும் இருப்பார்கள். ஆனால் நாம் போகும் பாதை...’ பாதி வாக்கியத்தில் நிறுத்தினாள்.

‘என்ன?’

‘ஒனறும் இல்லை, குட் நைட்!’

❖

ஸ்டாஃப் ரூமில் என் போன் சிணுங்கியது. எடுத்தேன்.

‘நான் ஸஃப்தர் பேசுகிறேன். பேசலாமா?’

‘கேஷவ்! சந்தனின் உரத்தக் குரல். ‘என் ஆபீஸ‌க்கு வா!’ அவருடைய பெரிய தொப்பை அவர் நுழைவதற்கு முன்னால் ஸ்டாஃப் ரூமை எட்டிப் பார்த்தது. போனைக் கைகளில் மூடினேன்.

‘சந்தன் ஸார், நான் ஒரு முக்கியமான காலில் இருக்கேன். ஐந்து நிமிடம் தாருங்கள்.’

‘முக்கியமான காலா? என்ன? மற்ற கோசிங் செண்டரில் இருந்து வேலை வாய்ப்பா?’ என்றார் புருவத்தை உயர்த்தி.

‘ஸார், குடும்ப விஷயம்,’ என்றேன். சந்தனிடமிருந்து நகர்ந்து நின்றேன். ‘சொல்லுங்கள் அங்கிள். எப்படி இருக்கீங்க?’

ஸஃப்தர் நேரே விஷயத்திற்கு வந்தார். ‘ஸரா சொன்னாள். மதம் மாற உனக்கு விருப்பமில்லை என்று.’

‘இல்லை ஸார். அப்படி இல்லை. மாறுவேன் ஸார். ஆனால் பெற்றோர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது.’

‘அப்போ, ஸராவை மறந்துவிடு. அவளைச் சந்திப்பதை நிறுத்திவிடு.’

‘ஆனால், அங்கிள்…’

‘நிறுத்து என்றால் நிறுத்து. நான் என் இதயத்தை உனக்காகத் திறந்தேன். நீ எங்களை ஏமாற்றிவிட்டாய்.’

‘ஏமாற்றினேனா?’

‘விருந்தினராக உன் வீட்டிற்கு வந்த போது உன் பெற்றோர்கள் இவளை வெளியேற்றினர். நான் உன்னை என் குடும்பத்துக்குள் வரவேற்றேன். ஆனால் எங்கள் கனவை உன்னால் மதிக்க முடியவில்லை.’

‘அங்கிள், ஒருவருடைய மதம்…’

‘போதும்,’ என்று வெட்டிப் பேசினார். ‘ஸராவுடன் நேற்று பிவிஆர் போனாயா?’

‘ஆமாம் ஸார்,’ இவருக்கு எப்படித் தெரியும் என்று யோசித்தேன்.

‘அதற்குப் பிறகு அவள் உன் வீட்டிற்கு வந்தாளா?’

‘ஸரா சொன்னாளா?’ என்றேன்.

‘இல்லை. எனக்கு மக்கள் இருக்கிறார்கள். உன்னைக் கண்காணிக்க, பின்தொடர, தேவைப்பட்டால் உன்னைக் காயப்படுத்தவும் செய்வார்கள்.’

‘காயமா?’

‘நீ ஒரு காஃபிர். என் விலைமதிப்பற்ற பெண்ணைப் பயன்படுத்திக் கொள்ளப் பார்க்கிறாய். அவளைத் தனியாக விட்டுவிடு. இல்லை, நல்லதுக்கில்லை.’

‘என்னை மிரட்டுகிறீர்களா. அங்கிள்?’ என்றேன், தெளிவு பெறுவதற்காக.

‘நான் மிரட்டுவது இல்லை. நான் கருணையைத் தான் வெளிப்படுத்துவேன். ஏமாற்றப்பட்டால் நடவடிக்கை எடுப்பேன். என் குடும்ப மான மரியாதையைக் காக்க, தேவைப்பட்டால், ரத்தம் பார்க்கவும் அஞ்சமாட்டேன்.’

‘ரத்தம்,’ என்ற வார்த்தை என் முதுகுத் தண்டில் ஜில்லிப்பை ஏற்படுத்தியது. சந்தன் அரோரா திரும்பவும் ஸ்டாஃப் ரூமுக்குள் புகுந்து என் தோளைக் குலுக்கினார்.

‘உன் பாசமான குடும்ப போன் கால் முடிந்ததா? வேலைப் பற்றிப் பேசலாமா?’

❖

‘அது ரொம்பத் தப்பு, கேஷவ்,’ என்றாள் ஸரா.

‘எனக்குத் தெரியும்,’ என்றேன். அவள் தோழி ஸனம் சமையலறையில் இருந்தோம். ஃபலிஃபல் கபாப்பை எடுத்து கடித்தேன். ஸனம் ஆன்ட்டி வீட்டில் புத்தாண்டு தின பார்ட்டி.

நானும், ஸராவும் மொத்தமாகப் பிரியவில்லை. ஆனால் எங்கள் உறவில் விரிசல், போர்க் களை கட்டியது. அபூர்வமாகத் தான் சந்தித்தோம். சந்தித்தாலும் அவ்வளவாகப் பேசிக் கொள்வதில்லை. விவாதம் தான் செய்தோம். திரும்பத் திரும்ப ஒரே விஷயத்தைத் தான் பேசினோம் - எதிர்காலம் இல்லை. எனக்கு மதம் மாறவும் வேண்டாம். பெற்றோர்களை கைவிடவும் வேண்டாம். எங்களுக்காகத்தான் சண்டை போட மறுக்கிறேன் என்பதை ஸராவால் ஏற்க முடியவில்லை.

பார்ட்டியில் ஸராவிடம் தனியாகப் பேசவேண்டும் என்று சொன்னேன். ஸனம் சமையலறை மட்டும் தான் நாங்கள் கண்டுபிடித்த அமைதியான, தனியான இடம். முழு வீடும் மனிதர்களால் நிறைந்திருந்தது.

‘ஒவ்வொரு வாரமும் நீ குடித்துவிட்டுக் கண்டபடி பேசுவது சிரமமாக இருக்கு. ஆனால், அப்பாவை வேறு ஏன் கூப்பிட்டே?’ என்றாள் ஸரா.

‘நான் நினைக்கவே இல்லை. போனில் லோன் என்று தேடினேன். எப்படியோ அவர் நம்பருக்குப் போய் விட்டது.’

‘அவர் போனை எடுத்தால் அவரைத் திட்டி அவமானப்படுத்துவது சரி என்று பட்டதா?’

அவள் கண்களை நேராகச் சந்திப்பதைத் தவிர்த்தேன். அடுப்பு பக்கத்தில் டிரேக்களில் அலுமினியம் ஃபாயிலில் சுற்றப்பட்ட பார்ட்டிக்கான உணவு வைக்கப்பட்டிருந்தது. மூன்று நாட்களுக்கு முன் அளவுக்கு அதிகமாகக் குடித்துவிட்டு, அகஸ்மாத்தாக ஸஃப்தர் லோனிடம் கண்டபடி பேசிவிட்டேன். ராஜஸ்தானி மாப்பிள்ளையாக - ஆகியிருக்கக் கூடிய பிள்ளையிடமிருந்து காது குளிர வசவுகள் வாங்கினார். சொதப்பிவிட்டேன். ஒரு சால்ஜாப்பும் சொல்ல முடியாது. இருந்தும் முட்டாள்தனமாக நான் செய்தது சரி என்ற பாவனையில் நின்றேன்.

அவள் என்னை முறைத்தாள். நான் நக்கலாகச் சிரித்தேன். இப்பொழுது அவளைப் பார்த்து நக்கலடிக்கும் துணிவு இருந்தது. இந்தப் பெண் எனக்கு எவ்வளவு முக்கியம் என்று உணரவில்லை.

வருடக்கணக்காக அவளைத் தொலைத்து விட்டு உருகுவேன் என்று யோசிக்கவில்லை.

ஆனால் அந்தச் சமயம் நான் ஒரு பெரிய முட்டாளாகத் தான் இருந்தேன். எந்த அக்கறையும் இல்லாமல்.

‘உன் அப்பாவுக்குத் தேவை தான்,’ என்றேன்.

‘என்ன?’

‘உன்னைச் சந்திக்க வேண்டாம் என்று என்னை மிரட்டினார் தானே? வேலையிலிருந்த என்னை அழைத்து மிரட்டினார்.’

‘அதனால் நான் உன்னைச் சந்திக்காமல் இருந்தேனா? இப்படிச் செய்தேனா, கேஷவ்?’

‘இல்லை,’ என்றேன் அசடு வழிய.

‘நீ என்ன செய்யணும் என்று யோசிக்க உனக்கு எவ்வளவு வாய்ப்புகள் தந்தேன்?’

‘ஆமாம். ஆனால் நீ என்னை இப்பொழுது தவிர்க்கறே?’

‘ஏன் என்றால் நம் சூழ்நிலைக்கு உன்னிடம் எந்தப் பதிலும் இல்லை. அதனால் விலகியிருப்பதே நமக்கு நல்லது.’

‘சும்மாவே விட்டு விடுவதா?’

‘இல்லை. சும்மா எல்லாம் இல்லை. ரொம்பக் கடினம். மிக மிகக் கடினம். கேஷவ் ராஜ்புரோஹித், நான் எம்ஐடி ஸ்காலர்ஷிப்பைக் கூட உனக்காகத் துறந்தேன். ஐஐடியில் சேர்ந்தது உன் அருகில் இருப்பதற்காக. நீ இது சும்மா என்றா நினைக்கிறாய்?’

‘ஓ! இப்போ நான் குற்ற உணர்ச்சியில் தவிக்கணுமா? நீ ஸ்காலர்ஷிப்பை வேண்டாம் என்று சொன்னதால் நான் என் மதம், கடவுள் என்று அனைத்தையும் விட்டுத் தரணுமா?’

‘உன் தொனி எனக்குப் பிடிக்கவில்லை, கேஷவ்.’

‘எனக்கு அக்கறை இல்லை.’

‘நல்லது. நான் என் நண்பர்களுடன் இருக்கப் போகிறேன், நீ தான் என்னை உள்ளே கூப்பிட்டே. ‘நான் போகிறேன், கேஷவ். இது குழந்தைத்தனமாக இருக்கு. ஆனால் நாம் அதிகாரப்பூர்வமாக பிரிந்து விடலாமா?’

‘என்ன?’

‘நாம் ஏற்கனவே பிரிந்து தான் இருக்கிறோம். ஆனால் அதைப் பற்றித் தெளிவாக இருக்கலாம். இனி எந்தத் தொடர்பும் தேவையில்லை, சரியா?’

‘ஸரா, உனக்கு என்ன பைத்தியமா?’ என்றேன்.

‘பைத்தியமாகத்தான் இருந்தேன். இப்பொழுது தான் தெளிவு அடைகிறேன்.’

‘ஏதோ குடித்துவிட்டு உன் அப்பாவைக் கூப்பிட்டுவிட்டேன். பெரிய விஷயமா? என்ன செய்யணும்? ஸாரி சொல்லணுமா? கேட்கிறேன்.’

ஸரா தலையசைத்தாள்.

‘அது மட்டுமல்ல விஷயம். அதற்கும் மேல். இப்போ திரும்பவும் அதைப் பற்றிப் பேசிப் பிரயோசனம் இல்லை. நாம் முடித்துக் கொள்ளலாம். பை.’

‘ஸரா,’ என்று நான் அழைத்தேன். ஆனால் அவள் சமையலறையை விட்டு வெளியேறிவிட்டாள். நண்பர்களிடம் சென்றுவிட்டாள். அன்று என்னுள் இருந்த திமிரும், கர்வமும் என்னை அவள் பின்னால் செல்ல விடாமல் தடுத்தது. அவள் கூறியது சரிதான். என்னிடம் பதில்கள் இல்லை. இந்தப் பெண்ணுடன் இருப்பது எனக்கு எவ்வளவு அவசியம் என்று எனக்கு அன்று தெரியவில்லை.

❖

யாரோ என் தோளை உலுக்கிக் கொண்டிருந்தான்.

‘இனி உன்னை இது போல் கூட்டிச் செல்ல வரமாட்டேன்,’ என்றான் ஸொரப். என் தோளைத் தொடர்ந்து உலுக்கிக் கொண்டிருந்தான். என் தலையில் ஓடிக் கொண்டிருந்த பழைய நினைவுகளின் வீடியோவை அணைத்தான்.

‘ஹான்? ஓ கோலுவா? நீ இங்கியா இருக்கே? நீ என் உயிர், கோலு,’ நான் அவன் தலையைக் கோதினேன். கொஞ்சம் கொஞ்சமாக இன்றைய நினைவுகளுக்குத் திரும்பினேன்.

ஸோஷியலில் பத்து விஸ்கிக்கான பில் கட்ட வேண்டியிருந்தது. ஸௌரப் நேற்றிரவு கட்டியிருந்தான். என் போனைப் பயன்படுத்தி ஒரு சர்வர் அவனைக் கூப்பிட்டிருக்கிறான். நான் நினைவிழந்து டேபிளில் சாய்ந்திருக்கிறேன்.

‘நான் அவர்கள் பேசிக் கொண்டதைப் போனில் பார்த்தேன். ஸராவும், ரகுவும். காதல் ரசம் கொட்டியது,’ என்றேன். நான் குடித்து மட்டையானதற்கான காரணம் அது தான் என்பது போல் கூறினேன்.

‘அவர்கள் டேட்டிங்கில் இருந்தனர். பிறகு, அப்படித் தான்

பேசிக் கொள்வார்கள். எப்போ தான் இந்த ஸரா பிரச்சனையிலிருந்து மீளப் போகிறாய்?'

'எதை நிறுத்த முடியும்? கடவுளே தான் நிறுத்தி விட்டாரே. நான் மதம் மாறவில்லை. அதனால் என்னைத் தண்டித்து விட்டார். அவளை எடுத்துக் கொண்டு விட்டார். அவள் என்னுடன் சேர வேண்டும் என்று நினைத்த போது பறித்துக் கொண்டுவிட்டார்.'

எனக்கு அழுகை வந்தது. ஸௌரப் அதைக் கவனித்துவிட்டு திரும்பப் பேசினான்.

'வாயை மூடு. போய்க் குளி. பாடம் நடத்து. நகர்ந்து செல் வாழ்வில்,' ஸௌரப் குரலில் அபூர்வமான அதட்டல்.

'பேராசிரியர் ஸக்ஸேனா ஸராவுக்கு வன்கொடுமை செய்ய முயன்றுள்ளான். தெரியுமா?'

'உன் ஐஜடி டீனா?'

'ஆமாம். ஸராவின் கைடு. ஸரா அவன் செய்த கொடுமையைப் பற்றி ஈமெயில் எழுதியிருக்கும் ஆதாரம் என் கையில் இருக்கு, நான் அந்த தே.... முண்டையைச் சந்திக்கப் போகிறேன்,' என்றேன்.

நான் எழுந்து கழிப்பறைக்குச் சென்றேன்.

'யாரையும் சந்திக்க வேண்டாம்,' என்று ஸௌரப் என் பின்னாலிருந்து கத்தினான். 'வேலையில் கவனம் செலுத்து.'

'முதலில் என் வகுப்பை முடிக்கிறேன். கோலு. ரிலாக்ஸ்! என்று கூறி குழாயைத் திறந்து என் முகத்தில் தண்ணீரை வாரி அடித்துக் கொண்டேன்.

# அத்தியாயம் 14

‘லக்ஷ்மண், நீ வெளியில் வந்துடுவே. ஆனால் உடனே நடக்காது,’ என்றேன்.

நான் லக்ஷ்மணை திஹார் சிறையில் பார்க்க வந்திருந்தேன், மேற்கு டெல்லியில் இருந்து. அவன் கேஸ் ஓடிக் கொண்டிருந்ததால் குறிப்பிட்ட நேரங்களில் தான் அவனால் பார்வையாளர்களைச் சந்திக்க முடியும்.

‘ஐயா, என் மனைவி தனியா இருக்கா, சம்பளம் வருவதில்லை,’ என்றான் லக்ஷ்மண்.

‘ஸாரி, லக்ஷ்மண்,’ என்றேன். ‘நீ எனக்கு உதவி செய்தால் நானும் உனக்கு உதவி செய்கிறேன்.’

நாங்கள் சந்திக்கும் அறையில் இருந்தோம். இடுக்கு முடுக்காக, ஓட்டை ஓடைசல் நாற்காலிகளுடன் இருந்தது.

‘உங்களுக்கு நான் எப்படி உதவ முடியும்?’ என்றான் லக்ஷ்மண்.

‘ஸராவை ஹாஸ்டலில் சந்திக்க யார், யார் வருவார்கள் என்ற விவரம் வேண்டும்.’

‘அவள் பெற்றோர்கள், அடிக்கடி வரமாட்டார்கள். இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை.’

‘பிறகு?’

‘ரகு ஸார். டெல்லிக்கு மாதம் ஒரு முறை வருவார். அவளைக் கூட்டிச் செல்வார். ஸரா மேடம் சில நாட்களுக்கு இங்கு தங்கமாட்டார். அவருடன் சென்றுவிடுவாள்.’

என் மூச்சை ஆழமாக இழுத்தேன்.

‘பிறகு?’

‘சில சமயம் பேராசிரியர் ஸக்ஸேனா.’

‘எப்பொழுது?’

‘விருந்தினர் வருகைப் புத்தகத்தில் எல்லாமே இருக்கும். அவர் மாதத்திற்கு மூன்று முறை வருவார் என்று ஞாபகம்.’

‘அவர்கள் பேசிக் கொள்வதைக் கேட்டிருக்காயா?’

‘இல்லை என்று வாட்ச்மேன் தலையசைத்தான்.’

‘அவர் காமன் அறைக்குச் செல்வார். ஸரா மேடம் அங்கே வருவார். ஐயா, நான் எப்பொழுது வீட்டுக்குப் போகலாம்?’

❖

‘என்ன வேணும் உனக்கு?’ என்றார் பேராசிரியர் ஸக்ஸேனா. அவர் மேசையில் அமர்ந்திருந்தார். பாதி முகம் பைல்களால் மூடியிருந்தது. புத்தகம், கம்ப்யூட்டர், பூதாகாரமான ஸிபியூ, பிக் டேட்டா மாடலாக இருக்கலாம், அவரைப் புடை சூழ்ந்திருந்தன.

‘நான் கேஷவ் ராஜ்புரோஹித் ஸார். இங்கு படித்த முன்னாள் மாணவன். ஐந்து வருடங்களுக்கு முன் பட்டம் பெற்றேன்.’

பேராசிரியர் ஸக்ஸேனாவின் தலைமுடி மிகவும் மெலிதாகவும், குறைவாகவும் இருந்தது. பட்டம் பெற்ற காலம் முதல் சீப்பு பார்க்காத முடிபோலிருந்தது. அவுருடைய தொந்தி டெஸ்கின் பின்னால் மறைந்திருந்தது. கம்ப்யூட்டரில் இருந்து தலையை நிமிர்த்தவில்லை.

‘எனக்கு இப்போது அஸிஸ்டெண்டுகள் தேவைப்படவில்லை,’ என்றார்.

மாணவர்கள் அவரிடம் அஸிஸ்டெண்டாகப் பணிபுரிய அணி வகுத்தனர். அவர் எழுதிக் கொடுக்கும் சிபாரிசுக் கடிதத்துக்காகக் காத்திருந்தனர். அமெரிக்கக் கல்லூரிகளுக்கு அது தேவைப்பட்டது. அவரிடமிருந்து நல்ல சிபாரிசு கடிதம் கிடைத்தால் எம்ஐடி அல்லது ஸ்டான்ஃபோர்டில் முழு உதவித் தொகையுடன் படிக்க வாய்ப்பு கிடைக்கும்.

‘எனக்கு உங்கள் அஸிஸ்டெண்டாக ஆக வேண்டாம்,’ என்றேன். ‘பிறகு எதற்கு இங்கே வந்தே?’ என்றான். கண்கள் மானிட்டரைத் தான் மேய்ந்தன.

‘நான் ஸரா லோனைப் பற்றிப் பேச வந்தேன்.’

‘என்ன?’ என்று முதல் முறையாக நிமிர்ந்து பார்த்தான்.

‘உனக்கடியில் தானே பிஎச்டி படித்தாள்?’

அவன் முறைத்தான்.

‘ஸாரி,’ யார் நீ?’ என்றான்.

‘கேஷவ் ராஜ்புரோஹித். 2013 பாட்ச்.’

‘உனக்கும் ஸராவுக்கும் என்ன தொடர்பு?’

‘என் உற்ற தோழி.’

‘அப்படியா? நெருக்கமா?’ என்றான் பேராசிரியர் ஸக்ஸேனா. ‘நீ அவளுடைய மாஜி பாய் ஃபிரண்டு தானே? உன்னால் தான் அவள் எம்ஐடி ஸ்காலர்ஷிப்பை விட்டுக் கொடுத்தாள் என்று மற்ற மாணவர்கள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள்.’

அவன் முன்னால் சாய்ந்து கைகளை மேசை மீது ஊன்றினான்.

‘ஆமாம், ஸார்,’ என்று தொண்டையைச் செருமினேன். ‘விஷயம் என்னவென்றால் நான் தான் அவள் பாடியைக் கண்டுபிடித்தேன். அவள் பிறந்தநாளுக்கு வாழ்ததுச் சொல்லச் சென்ற போது.’

‘நீ தான் பெண்கள் விடுதிக்குள் அத்து மீறி நுழைந்தவனா?’ ஆமாம் என்று தலையசைத்தேன்.

‘அவளுக்கு நிச்சயிக்கப்பட்டவன் இருக்கானே? அவனைச் சந்தித்திருக்கேன். இங்கே தான் மேல்படிப்பு படித்தான். ரகு வெங்கடேஷ். அவன் பிஜிஎம் தானே?’

பிஜிஎம் என்றால் பிரெஸிடெண்டின் கோல்டு மெடல் என்று பொருள். தங்க மெடல் முதல் மாணவனுக்குத் தான் தரப்படும். கண்டிப்பாக அது மக்கு ரகுவுக்குத் தான் கிடைத்தது. பத்து ஜிபிஏ பெற்றவன். கிரேட் பாயிண்ட் ஆவரேஜ் அனைத்து ஸெமஸ்டர்களிலும் அவன் தான் பாட்ச் நெர்ட் (அறிவாளி) அதனால் மெடலும் அவன் தான் வாங்கினான். வேறு யாருக்கும் கிடைக்கவில்லை.

‘ரகுவும் என் பாட்ச் தான்.’

‘நல்லா தொழில் செய்யறான். ஸீகோயா காபிடல் அவனுடைய ஆர்டிஃபிஸியல் இன்டெலிஜென்ஸ் கம்பெனிக்கு முதலீடு வழங்கியிருக்கு. நிறைய ஸிலிகான் வேலி கம்பெனிகளும் அதில் முதலீடு செய்ய விருப்பம் தெரிவித்துள்ளனர். ஐடிடி டெல்லியின் வெற்றியாளன் கதை.’

என்னைப் போல் இல்லாமல்; நான் ஐஐடி டெல்லியின் தோல்வி அத்தியாயம்.

‘எனக்குத் தெரியும், ஸார். ஸரா லோன் கொலையை முடிவுக்குக் கொண்டு வர ஏதாவது தகவல் தெரியுமா?’

‘என்ன?’ அவன் நாற்காலி கிறீச்சிட்டு நிமிர்ந்தது. ‘வாட்ச்மேன் தான் செய்தான். நாங்கள் செய்தியில் பார்க்கிறோமே, கொடூரம்.’

‘வாட்ச்மேன் செய்யவில்லை, ஸார்.’

‘நிஜமாவா?’

‘ஆமாம். நூறு சதவிகிதம் உறுதி. அவன் செய்யவில்லை.’

‘நீ யாரு? போலீஸா?’

‘இல்லை, ஸார்.’

‘முதலில் அந்த இன்ஸ்பெக்டர், அவர் பெயர் என்ன, ரானா, என்னைத் தொந்தரவு செய்தார். கேம்பஸ் முழுதும் தன் குழுவை அனுப்ப இருந்தார். வாட்ச்மேன் கைதுக்கப்புறம் நல்ல வேளை அமைதியாகிவிட்டார்.’

‘போலீஸை விசாரிப்பதற்கு கேம்பஸுக்குள் ஏன் வர அனுமதி தரவில்லை, நீங்கள்?’

‘இங்கே மாணவர்கள் படிக்கிறார்கள். இது குற்றவாளிக்கான விசாரணை இடம் கிடையாது. அவர்களை ஒழிந்து போகச் சொன்னேன். ஸாரி, நீயும் என் நேரத்தை வீணடிக்கிறே.’

நான் போலீஸுக்கு உதவி செய்கிறேன், ஸார். அவர்களை நீங்கள் உள்ளே அனுமதிக்காததால், நான் உங்களைச் சில கேள்விகள் கேட்கலாமா?’

‘என்ன இழவு! உன்னை முன்னாள் மாணவன் என்ற தகுதியில் உள்ளே அனுமதிக்கலாம். ஆனால் விசாரணை எல்லாம் செய்ய முடியாது. உன்னையும் வரவிடாமல் செய்யலாம், தெரியுமா?’

‘நீங்கள் அப்படியெல்லாம் சொல்ல மாட்டீர்கள்,’ என்று அமைதியாக ஆனால் உறுதியகாகச் சொன்னேன்.

என் புதிய உறுதி அவனை ஆச்சரியப்படுத்தியது.

‘இப்படித் தான் உன் ஆசிரியர்களிடம் பேசுவாயா? கிளம்பு.’

‘நீங்கள் ஸராவுக்கு வன்கொடுமை செய்தது உண்மையா?’

‘என்ன?’ என்ற பேராசிரியரின் முகம் வெளிறியது. அவன் முரட்டுப் பிடிவாதத்துடன் அமர்ந்திருந்தாலும், உதடு துடித்தது.

‘அவள் தீஸிஸ் எழுதுவதைக் கால தாமதமாக்கினீர், அவளைப் படுக்கைக்கு அழைத்தீர்.’

‘இது கட்டுக் கதை. ஸெக்யூரிட்டியை அழைத்து உன்னை வெளியேற்றிவிடுவேன்.’

அறையில் இருந்த இண்டர்காமைத் தட்டினான்.

‘அந்தத் தவறைச் செய்யாதீர்கள். நான் இப்போ உங்களிடம் பேசுவதை ஊடகத்திடமும் பேசலாம்,’ என்றேன். ‘பெண்கள் விடுதிக்குள் அத்து மீறுபவன் தானே நீ?’ என்று எள்ளி

நகையாடினார். போனைக் கையில் பிடித்தபடி, ‘ஹெலோ ஸெக்யூரிட்டி? என் ஆபீஸக்கு சிலரைச் அனுப்புங்கள். ஆமாம். தேவையற்றவன்.’

நான் அங்கேயே இல்லை என்ற பாவனையில் தன் கம்ப்யூட்டரில் வேலை செய்யத் தொடங்கினான்.

நான் என் போனில் ஈமெயிலைத் திறந்தேன். அடுத்த இரண்டு நிமிடங்களில் ‘உங்கள் இன்பாக்ஸைப் பாருங்கள்,’ என்றேன்.

‘ஏன்?’ கம்ப்யூட்டர் மௌஸைக் கிளிக்கியபடி கேட்டான். ஈமெயிலைத் திறந்தான். நான் அவனுக்கு ஃபார்வர்டு செய்தது. வாய் பிளந்தான். படித்தான்.

டு: ரகு

ப்ரம்: ஸரா

ஹே லவ்,

எப்படியிருக்கே? என்னைவிட்டு வெகு தூரம் தள்ளி ஹைதராபாத்தில் இருக்கே. இன்னொரு நாள் நீ என் கூட இருந்திருக்கலாம் என்று ரொம்ப நினைத்தேன். உன்னைக் கூப்பிட முயற்சித்தேன். ஸான்ஜோஸிலிருந்து வந்தவர்களுடன் நீ நாள் பூரா மீட்டிங்கில் பிஸியாக இருப்பே என்று உன் காரியதரிசி சொன்னாள். அதற்கு என் வாழ்த்துக்கள். எல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டுகிறேன். சமயம் கிடைக்கும் போது கூப்பிடு. எனக்கு உன்னுடன் அவசியம் பேசணும். நான் ஏற்கனவே பேராசிரியர் ஸக்ஸேனாவைப் பற்றி அவ்வளவு நல்ல அபிப்பிராயம் இல்லை என்று பகிர்ந்து கொண்டிருக்கேன். எவ்வளவு முறை என்னைக் காபி குடிக்க அழைத்திருக்கிறார் என்று உனக்குத் தெரியும். உன்னிடம் சொல்லாத சில விஷயங்கள் இருக்கின்றன. அவர் செய்த சில விஷயங்கள். தொடர்பில்லாதது போலவும், முக்கியத்துவம் கொடுக்க அவசியம் இல்லை போலவும் தோன்றினாலும் அடிக்கடி நடந்துவிட்டன. உதாரணத்திற்கு, அடிக்கடி என் பின்னால் நின்று என் முடியைத் தொடுகிறார் - நான் கமப்யூட்டரில் வேலை செய்யும்; போது இரண்டு நாட்களுக்கு முன் என் தோளில் கை போட்டார். நான் அவரிடம் பிரிண்ட் அவுட்டைக் காட்டிக் கொண்டிருந்தேன். நான் நெளிந்து நகரும் போது கூறுகிறார். ‘நாம் நெருக்கமாக இருக்கலாமா? நெருக்கம் மக்களை இணைக்கும்.’

ரகு எனக்கு உடம்பே கூசியது. ஆபீஸ் ஜன்னல் வழியாகக் குதித்து விடலாமா என்று தோன்றியது. அப்பவே இதை எல்லாம் ஏன் உன்னிடம் சொல்லவில்லை என்று தெரியலை.

ஏதோ ஒருமுறை நடந்தது என்று ஒதுக்கிவிட்டேன் என்று நினைக்கிறேன். லாப்டாப்பில் ஒரு எக்ஸெல் ஷீட்டைக் காட்டச் சென்றேன். என் வலது கன்னத்தை முத்தமிட்டார். நான் காஷ்மீரி ரோஜா போலிருப்பதாகக் கூறினார்! நான் உறுதியாகச் சொல்ல முடியாது. ஆனால் அவர் என் கையைப் பிடித்து தன் … ஐயே! ஒரு வேளை அவர் அப்படிச் செய்ய நினைக்கவில்லையோ, என்னவோ, ஆனால் ரகு, அது ரொம்ப அருவருப்பாக இருந்தது! எனக்குப் போதும் என்று தூக்கிப் போட்டுவிடத் தோன்றுகிறது. ஆனால் எப்படி? நான் என்ன செய்ய? எனக்குக் குழப்பமாக இருக்கு. சீக்கிரம் கூப்பிடு.

‘இது அப்பட்டமான பொய்,’ என்ற பேராசிரியர் ஸக்ஸேனாவின் குரல் நடுங்கியது.

‘கொலை செய்யப்பட்ட உங்கள் ஆராய்ச்சி மாணவியின் ஈமெயில்; பிஜிஎம் மாப்பிள்ளை தான் சாட்சி,’ என்றேன்.

‘நீ என்ன பேசுகிறாய் என்றே எனக்குத் தெரியாது.’

‘கடந்த மூன்று மாதங்களில், ஹாஸ்டல் ரெஜிஸ்டர்படி நீங்கள் எட்டு முறை வநதிருக்கிறீர்கள். வேறு எந்த மாணவியையும் விடுதியில் சந்தித்ததில்லை.’

யாரோ பேராசிரியர் ஸக்ஸேனாவின் அறைக் கதவைத் தட்டினார்கள்.

‘ஸார், எங்களை வரச் சொல்லியிருந்தீர்களா?’ என்று ஸெக்யூரிட்டி ஆபீஸர்கள் உள்ளே வந்தனர்.

இரண்டு காவலாளிகள் வெளியில் நின்றனர்.

‘சொல்லப்போனால் இங்கே எல்லாம் நலம். நீங்கள் கிளம்பலாம்.’

ஸெக்யூரிட்டி ஆபீஸர்கள் குழம்பி விட்டனர். எரிச்சலாகி வெளியேறிவிட்டனர்.

‘என்ன வேணும் உனக்கு?’ என்றார் பேராசிரியர் ஸக்ஸேனா.

‘இதைப் பேசுவதற்கு முன், உங்களுக்கு என்ன வேண்டும் என்று எல்லோருக்கும் தெரியும்.’

‘என்ன?’

‘பத்ம விபூஷன். அது உங்களுக்குச் சீக்கிரமே கிடைத்தாலும் கிடைக்கும்.’

‘நான் தான் என் துறையிலேயே சிறப்பானவன். உலகில் எந்தக் கல்லூரிக்கும் சென்றிருக்கலாம். இருந்தும் நான் இந்தியாவில் தங்க விரும்பினேன்.’

‘என்ன ஒரு நல்ல எண்ணம்,’ என்றேன். ஆனால் இந்தச் செய்தியை நினைத்துப் பாருங்கள். பேராசிரியர் ஸக்ஸேனா, பிஎச்டி மாணவியை வன்கொடுமை செய்தார். பிறகு உங்களுக்கு ஸ்பெஷல் பதவி தான் கிடைக்கும்.’

தன் தலையை கையில் பிடித்துக் கொண்டான். எப்படி மக்கள் ஒத்துழைக்கிறார்கள், எந்தப் பக்கம் அதிகாரம் என்று தெரிந்தவுடன், ஆச்சரியம் தான்!

‘உனக்கு என்ன தான் வேணும், நிஜமாக?’ என்றார் பேராசிரியர் ஸக்ஸேனா.

‘ஸராவின் கொலை வழக்கைத் தீர்க்கணும். அவ்வளவு தான்.’

‘ஓகே. சரி. அதனால் என்ன? நான் தான் செய்தேன் என்று நினைக்கிறாயா?’

‘நான் அப்படிச் சொல்லவில்லை. ஆனால் கொலை செய்தாயா? நீ தான் அந்த தே... பையன்?’

சொந்த ஆசிரியரிடம் இப்படிப் பேசுவது விந்தையாகத் தான் இருந்தது. ஆனால் திருப்தியாகவும் இருந்தது.

‘என்னது? நான் யாரையும் கொலை செய்யவில்லை. நீ என்ன பேசறே?’

நான் எழுந்து நின்றேன். முன்னால் சாய்ந்து அவன் சட்டைக் காலரைப் பிடித்து உலுக்கினேன்.

ரொம்பக் கோர்வையாகப் பேசமுடியவில்லை. ‘டேய் தண்ட கருமாந்திரம் ஸரா என்னிடம் வரப் பிரியப்பட்டாள். நீ அவளைச் சித்திரவதை செய்தாய். கொடுமைப்படுத்தினே, வேறு என்ன செஞ்சே என்று எனக்குத் தெரியாது. ஏதோ அப்பாவி, அறிவாளி பேராசிரியர் போல் இங்கே அமர்ந்திருக்கே.’

என் தெளிவற்ற பேச்சைச் சமாளிக்க நான் ஸக்ஸேனாவைப் பளார் என்று அறைந்தேன். அவன் காலரை விடவில்லை. திரும்பவும் அடிக்க வேண்டும் என்று பரபரத்தேன். ‘தயவு செய்து கிளம்பு,’ என்றான் பேராசிரியர் ஸக்ஸேனா.

‘என்னைக் காயப்படுத்தாதே.’

‘நீ கொலை செய்தாயா?’

‘இல்லை. என்னை விட்டுவிடு.’

பிடியைத் தளர்த்தி விட்டு அமர்ந்தேன். தன் இதயத்தின் மீது கை வைத்தான்.

‘நான் ஒரு ஈயைக் கூடத் துன்புறுத்தியதில்லை. அவளை ஏன் கொலை செய்ய வேண்டும்?’

‘ஒரு வேளை இவள் பிளச்டியை முடித்தபின் உன்னைப் பற்றிப் போட்டுக் கொடுப்பாள் என்று அஞ்சியிருக்கலாம். பயந்திருக்கலாம். அறைக்குச் சென்று கொன்றிருக்கலாம்.’

‘இல்லை, என் குழந்தைகள் மீது சத்தியம். நான் அப்படிச் செய்யவில்லை,’ என்றான்; எட்டு வயது குழந்தையைப் போல் தொண்டையைக் கிள்ளி சத்தியம் செய்தான்.

நான் எழுந்தேன்.

‘நீ செய்திருந்தால் ஒப்புக் கொள். இல்லையென்றால் போலீஸுடன் திரும்பி வருவேன்.’

‘அவன் இல்லை என்று தலையாட்டினான். இன்னமும் கழுத்தைக் கிள்ளிக் கொண்டிருந்தான். ‘சத்தியமாக நான் கொலை செய்யல,’ என்றான்.

‘உன்னை சீக்கிரம் சந்திக்கிறேனடா, கழிசடை,’ என்றேன். கதவை அழுத்திச் சாத்திவிட்டுத் திரும்பினேன்.

❖

‘டீனா? என்றான் ஸௌரப். டிரெட்மில்லில் இருப்பத்திலேயே குறைந்த வேகத்தில் வைத்து நடந்தான். எப்படியோ என்னுடன் ஜிம்முக்கு வர சம்மதிக்க வைத்தேன்.

‘உன்னால் நம்ப முடிகிறதா?’ என்றேன். ‘அந்த தே.. பையன் டீன் தான். ஈ-மெயிலைப் படித்தாய் தானே?’

‘படித்தேன். எனக்குச் சொல்ல இரண்டு விஷயங்கள் உள்ளன’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’ என்றேன் மணிக்கு நான்கு கிலோ மீட்டர் வேகத்தில் செல்லுமாறு டிரெட்மில்லை அட்ஜஸ்ட் செய்தேன்.

‘மெதுவாக, மச்சி.’

‘நல்லாத் தான் போகுது. உன் இதயம் படபடவென்று அடிக்க வேண்டும். வெயிட் எவ்வளவு?’

‘தொண்ணூற்றி ஐந்து புள்ளி ஐந்து.’

‘இது ரொம்ப அதிகம், ஸௌரப்.’

‘நான் உடற்பயிற்சி செய்கிறேனே, ஒரு நாள் உன்னைப் போல எனக்கும் ஸிக்ஸ்-பேக் வரும். எனக்கும் இருக்கு. எங்கேயோ இருக்கு. தசைக்குள் ஒளிந்து கொண்டிருக்கு.’

‘அந்த தசை பெயர் கொழுப்பு. இது ஏதோ தசை கிடையாது. நிறைய இருக்கு. சரி சொல்ல வந்ததைச் சொல்லு.’

‘ஒன்று என் மூளை சொல்லுது. மற்றொன்று என் இதயம் சொல்லுது.’

‘என்ன?’

‘மூளை சொல்லுது, இது பற்றி துப்பறிவதை நீ விட்டுவிடுவது நல்லது. ரானா கூட சொல்கிறார், ‘இதிலிருந்து விலகியிருப்பது உனக்கு நல்லது, என்று.’

‘மூளையை விடுடா. இதயம் என்ன சொல்லுது?’

‘இதயம் சொல்கிறது,’ என்ற ஸௌரப் ட்ரெட்மில்லில் நடப்பதை நிறுத்தினான். ‘இரு என் இதயம் படபடவென்று துடித்துக் கொள்கிறது.’

‘நீ இப்போ தானே தொடங்கினே!’

‘ஆமாம். இருந்தாலும் இதையெல்லாம் நிதானமாகத் தான் செய்யணும். என் இதயம் சொல்கிறது - இது மர்மமாகவும், சுவாரஸ்யமாகவும் இருக்கு. நிஜமாகவே ஐஐடி டெல்லி, மாணவர்களின் டீன், உலகின் உயர்ந்த குவாண்ட் பேராசிரியர், ஒரு மாணவியைக் கொலை செய்திருக்கலாம் என்ற சாத்தியக்கூறு.’

‘தன் குழந்தைகளின் மீது சத்தியம் செய்தான். இருந்தாலும் அவன் சாமர்த்தியமானவன். நடிப்பாகக் கூட இருக்கலாம்.’

கையில் 10 கிலோ டம்பெல்லைத் தூக்கினேன். ஸௌரப்பிடம் கொடுத்தேன். ஸௌரப் அதன் கனம் தாங்காமல், இரண்டு கிலோ டம்பெல்லைத் தேடினான்.

நான் தலைசைத்து மறுத்தேன்.

‘மச்சி, என் உடல் மென்மையானது. இவ்வளவு சீக்கிரம், இவ்வளவு தூரம் ஓட முடியாது. டீனைப் பற்றிய அடுத்த கட்ட நடவடிக்கை என்ன?’ என்றான் ஸௌரப்.

‘அவன் பெண்டாட்டியைச் சந்திப்பது. அன்றிரவு அவன் வீட்டில் இருந்தானா, இல்லையா என்று கண்டுபிடிப்பது.’

‘அவள் சொல்லுவாளா?’

‘தெரியாது, வேறு வழியில்லையே கண்டுபிடிக்க.’

‘ஹம்ம்ம்...’ ஸௌரப் பைசெப் கர்ல்ஸ் செய்தான். அவன் தூக்கிய கனத்தை, தவழும் குழந்தை கூடத் தூக்கும். இருவரும் ஜிம் கண்ணாடியின் பிம்பங்களைப் பார்த்தோம்.

‘நீயும்’ என்னுடன் வா,’ என்றேன்.

‘நானா? என்றான் ஸௌரப் ஆச்சரியமாக.

‘ஆமாம். எல்லாவற்றையும் கவனி. உனக்குப் பிடித்த எந்தக் கேள்வியையும் கேளு. பிறகு உன் தரப்பு அபிப்பிராயத்தை எனக்குச் சொல்லு.’

‘என்னை வரச் சொல்கிறாயா? என் மூளை நகர்ந்து நில் என்று சொல்லும் விஷயத்தில் பங்கேற்கச் சொல்கிறாயா?’ என்று ஸௌரப் சிரித்தான்.

‘ஆமாம்,’ என்று இளித்தேன்.

‘நான் ஏன் இதைச் செய்வேன் என்று நினைக்கிறாய்?’

‘உனக்கும் எனக்கும் இடையில் நம் பந்தம் இதய பூர்வமானது. நான் உன்னை விரும்புகிறேன்,’ என்றேன். அவனுக்குப் பறக்கும் முத்தம் ஒன்றை அனுப்பி அவனைப் பார்த்துக் கண்ணடித்தேன்.

‘ஓ! அடடா! பேராசிரியர்கள் அல்லது மாணவர்கள், ஐஐடியில் யாராக இருந்தாலும் கொஞ்சம் பயங்கரமானவர்கள் தான்,’ என்று கூறி ஸெட்டை முடித்தான்.

❖

‘பேராசிரியர் ஸக்ஸேனா வீட்டில் இல்லை,’ என்றாள் கதவைத் திறந்த பெண்மணி.

‘திருமதி. பரமேந்தர் ஸக்ஸேனா?’ என்றேன்.

‘ஆமாம்?’ திருமதி பரமேந்தர் ஸக்ஸேனா சொன்னாள். துப்பட்டாவை நைட்டி மீது சரி செய்து கொண்டாள். டெல்லியில் இல்லத்தரசிகளின் வழக்கமான உடை.

நான் என் முன்னாள் மாணவன் அட்டையை எடுத்தேன்.

‘நான் கேஷவ் ராஜ்புரோஹித் முன்னாள் மாணவன். இது என் நண்பன் ஸௌரப். உள்ளே வரலாமா? உங்களிடம் தான் பேச வேண்டும்?’

‘என்னிடமா?’

‘ஸரா லோன் சம்பந்தப்பட்டது பேராசிரியர் ஸக்ஸேனாவின் மாணவி, இறந்து விட்டாளே.’

பேராசிரியர் ஸக்ஸேனாவின் மனைவி இடதும், வலதும் பார்த்துவிட்டு உள்ளே அழைத்தாள்.

## அத்தியாயம் 15

தேநீர் அருந்தியபடி, எனக்குத் தெரிந்த விஷயங்களைத் திருமதி ஸக்ஸேனாவிடம் சொன்னேன். ஸராவிடம் ஸக்ஸேனா நடத்திய லீலைகளைத் தவிர்த்து.

‘இதனால் தான் இங்கு வந்தோம். யாருக்கெல்லாம் ஸரா பரிச்சயமோ, விசாரிப்பதற்காக. நிஜமான கொலையாளியைக் கண்டுபிடிக்கும் வரை நிரபராதியான வாட்ச்மேனை போலீஸ் விடமாட்டார்கள்,’ என்றேன்.

‘என்னிடம் எதற்குப் பேச வேண்டும்?’ என்று திருமதி ஸக்ஸேனா குழப்பமாகக் கேட்டார். ‘நான் அவளைப் பெரிதாகச் சந்தித்தது கூடக் கிடையாது. ஓரிருமுறை பேராசிரியர் ஸக்கேஸனாவை அவர் அலுவலகத்தில் காணச் சென்ற போது பார்த்திருக்கிறேன். நல்ல பெண் போலத் தான் தோன்றினாள்.’

‘பேராசிரியர் ஸக்ஸேனா மாணவர்களிடம் சகஜமாகப் பழகுவாரா?’ என்றான் ஸௌரப்.

திருமதி ஸக்ஸேனாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

‘குறிப்பிடும்படி இல்லை. எப்போழுதும் வேலையிலேயே ஆழ்ந்திருப்பார். அவரை நட்பானவர் என்று சொல்ல முடியாது. என்னைக் கேட்டால் கொஞ்சம் சிடுசிடு பேர்வழி என்று தான் சொல்வேன்,’ என்றாள் திருமதி ஸக்ஸேனா.

‘பிஎச்டி படிக்கும் மாணவர்களை விடுதியில் போய் சந்திப்பாரா?’

‘கண்டிப்பாக இல்லை. அவர்களின் டீன் மற்றும் கைடு. எதற்காகப் போக வேண்டும்?’ திருமதி ஸக்ஸேனா சற்று கோபமாகக் கேட்டார்.

‘திருமதி ஸக்ஸேனா, ஸார் எட்டு முறை விடுதியில் ஸராவைச் சந்தித்திருக்கிறார் - இந்த மூன்று மாதங்களில்,’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’

‘விடுதி ரெஜிஸ்டரில் பதிவாகியிருக்கு,’ என்றேன்.

‘உங்களிடம் இந்தப் பேச்சை எடுப்பதற்கு மன்னிக்கவும், திருமதி ஸக்ஸேனா, நான் நினைக்கிறேன் ஸாருக்கு ஸரா மீது கூடுதல் ஆர்வம்.’

‘கூடுதல்?’ என்று கேட்டாள், குழப்பமாக. நாற்பது வயது மதிக்கத்தக்க திருமதி ஸக்ஸேனா கேம்பஸில் பாதுகாப்பான வாழ்க்கையை வாழ்ந்திருக்கலாம். பரபரப்பு, கிசுகிசு, அவதூறு என்பது வேலைக்காரி இரண்டு நாட்கள் தொடர்ந்து வராததாகத் தான் இருக்கும்.

‘ஸராவுடன் உறவு வைத்துக் கொள்ள ஆசைப்பட்டார்,’ என்றேன். அமைதியாக, அவளிடம், ‘அதைப் பற்றி பலமுறைப் பேசிப் பார்த்திருக்கிறார்?’

‘என்ன?’ திருமதி ஸக்ஸேனா அதிர்ந்தார். சமையலறையிலிருந்து விஸில் அடித்த குக்கர் எங்கள் கவனத்தை திசைத் திருப்பியது.

‘குக்கரில் கருப்புப் பருப்பு வேகுதா?’ என்றான் ஸௌரப் முகர்ந்தபடி. நான் அவனை முறைத்தேன்.

திருமதி ஸக்ஸேனா வெடித்தார். ‘உங்களுக்கு என்ன மூளை குழம்பிவிட்டதா? என் கணவரா? அவர் துறையிலேயே மிகச் சிறந்த ஆராய்ச்சியாளர்?’

திரும்பவும் குக்கர் விசிலடித்தது.

ஸௌரப் சோபாவிலிருந்து குதித்து எழுந்தான்.

‘நான் போய் கேஸை அணைக்கிறேன் திருமதி ஸக்ஸேனா,’ என்றான். ‘கருப்புப் பருப்புக்கு இரண்டு விசில் போதும் தானே?’

அவள் இறுக்கமாகத் தலையசைத்தாள்.

‘நான் இதை உங்களிடம் சொல்வதற்காக வருத்தப் படுகிறேன்,’ என்றேன் மென்மையாக.

‘இது நூறு சதவிகிதம் கட்டுக்கதை. நூற்றி-ஒன்று சதவிகிதம் இதற்கு ஆதாரம் இருக்கா?’ என்றாள்.

‘இந்தச் செய்தி உங்களைச் சங்கடப்படுத்தியிருந்தால், ஆதாரம் மேலும் அச்சுறுத்தும்.’

‘என்ன ஆதாரம்?’

என் போனை அவளுக்குக் காட்டினேன். ஈ-மெயிலை வேகமாகப் படித்துவிட்டு என்னிடம் போனைத் திருப்பிக் கொடுத்தாள். ஸௌரப் சமையலறையிலிருந்து வந்தான். அனைவரும் சில விநாடிகளுக்குச் செய்வதறியாமல் அமர்ந்திருந்தோம்.

‘உங்கள் திருமணத்தைக் கலைக்க நான் வரவில்லை,’ என்றேன்.

‘காலம் கடந்துவிட்டது,’ என்றாள். போனை எடுத்துக் கணவனை அழைத்தாள். இப்பவே வீட்டுக்கு உடனே வாங்கன்னு ஆணை பிறப்பித்தாள். ‘இல்லை, இப்பவே வீட்டுக்கு உடனே வாங்கன்னு சொன்னேன். எனக்கு செனட் மீட்டிங் பற்றியெல்லாம் அக்கறை இல்லை. நீங்க உடனே வாங்க வினீத்.’

என்னைப் பார்த்தாள்.

‘உனக்கு என்ன வேண்டும்?’ என்று கேட்டாள்.

‘உங்கள் உதவி. உண்மையைக் கண்டுபிடிக்க,’ என்றேன்.

‘என்ன உண்மை? உன்னிடம் ஆதாரம் இருக்கே. என் வாழ்க்கையைத்தான் நாசம் செய்துவிட்டாயே ஏற்கனவே.’

பேராசிரியர் தான் நாசம் செய்தார், நானில்லை என்று சொல்ல ஆசைப்பட்டேன். ஆனால் கையில் இருந்த விஷயத்தில் கவனம் செலுத்த விரும்பினேன்.

‘உங்கள் கணவர் ஸரா லோனைக் கொன்றிருக்கலாம்.’

‘என்ன? வினீத்தா? உங்களுக்கு என்ன பிரச்சினை? என் கணவன் வன்கொடுமை செய்ய ஆசைப்பட்டாரா? கொலையாளியா?’

‘அமைதியாக இருங்கள், தயவு செய்து, திருமதி ஸக்ஸேனா,’ என்றான் ஸௌரப். ‘கேஷவ் சொல்றதைக் கேளுங்கள்.’

‘மேடம், அவருக்குத் தெளிவான காரணம் இருக்கு. பிஎச்டியை முடித்த பின்னர் ஸரா அவரைப் பற்றி வெளியே சொல்லமுடியும். அவருக்கு வாய்ப்பு இருந்திருக்கு. அவர் கேம்பஸிலேயே வசிப்பவர். இரவு வீட்டிலிருந்து நடந்து ஹிமாத்ரிக்குச் சென்று, ஸராவின் அறைக்குள் ஜன்னல் வழியாக நுழைந்து, கொலை செய்துவிட்டுச் சென்றிருக்கலாம். யாரும் கண்டுபிடிப்பதற்குள், திரும்பவும் வந்து பெட்டில் படுத்திருக்கலாம்,’ என்றேன்.

‘எங்கள் பெட் என்கிறாய்?’ என்றாள் திருமதி ஸக்ஸேனா.

‘ஆமாம். மேடம்.’

‘நாம் வினீத்தைப் பற்றித் தானே பேசிக் கொண்டிருக்கிறோம். அவர் ஐஐடிக்கும் ஸ்டான்ஃபோர்டுக்கும் சென்றவர். இப்படிப்பட்ட விஷயங்களை அவர் செய்வார் என்று நம்புகிறீர்களா?’ என்று திருமதி ஸக்ஸேனா கேட்டார்.

‘ஒரு பிஎச்டி மாணவியை வன்கொடுமை செய்யக் கூடியவர்

உங்கள் கணவர் என்று கருதினீர்களா?' என்றான் ஸௌரப்.

திருமதி ஸக்ஸேனா பேசாமல் இருந்தார்.

'மேடம், இது உங்களுக்கு ஏற்றுக் கொள்ள கஷ்டமாக இருக்கலாம். ஆனால் எங்களுக்கு உண்மை தெரியணும்,' என்றேன்.

'என்ன?'

'அன்றிரவு உங்கள் கணவர் வீட்டை விட்டு வெளியே போனாரா, இல்லையா?' என்றேன்.

அவள் பதில் சொல்வதற்குள் வீட்டின் மணி அடித்தது. திருமதி ஸக்ஸேனா எழுந்து கதவைத் திறந்தார். பேராசிரியர் ஸக்ஸேனா ஸ்லோமோஷனில் நடப்பது போல் நடந்து வந்தார். இடது காலை விந்தியபடி நடந்து வந்தார்.

'என்ன இந்த...' என்னையும் ஸௌரப்பையும் வீட்டில் பார்த்ததும் கத்தினார்.' 'இங்கே என்ன இழவெடுக்க வந்தீர்கள்? என் வீட்டிற்குள் எந்த தைரியத்தில் நுழைந்தீர்கள்?'

திருமதி ஸக்ஸேனா, பேராசிரியரிடம் போனாள். அவர் பேச ஆரம்பிக்கும்முன் பளார் என்று அறைந்தார்.

'பம்மி!' பேராசிரியர் ஸக்ஸேனா கையைக் காதில் வைத்தபடி கூப்பிட்டார்.

திருமதி ஸக்ஸேனா கூடுதலாக இரண்டு அறை வைத்தார். பதில் பேசாமல். நரகத்தில் கூட இவ்வளவு கொடூரமாக நடந்த கொள்ள முடியாது; ஒரு பஞ்சாபி பெண்ணின் கோபம் அப்படிப்பட்டது. அதுவும் வஞ்சிக்கப்பட்ட பெண்ணின் கோபம் அசாத்தியமானது.

'அவர்கள் பொய் பேசுகிறார்கள் பம்மி?' என்றார் பேராசிரியர் ஸக்ஸேனா. அழுது விடுவார் போலிருந்தது.

'அவர்கள் பொய் சொல்லவில்லை என்று எனக்குத் தெரியும்,' என்றார் திருமதி ஸக்ஸேனா.

ஸௌரப்பும் நானும் கிளம்புவதற்காக எழுந்தோம்.

'இன்னும் சில கேள்விகள் ஸக்ஸேனாவிடம் கேட்க வேண்டும். பிறகு வந்து கேடகிறோம்,' என்றேன் மரியாதையாக.

'இல்லை, இரு,' என்றாள் திருமதி ஸக்ஸேனா. 'இப்பவே கேளு. வினீத்தும் இங்கே இருக்கட்டும்.'

திரும்பவும் அமர்ந்தோம். பேராசிரியர் ஸக்ஸேனா கையைக் காதில் வைத்தபடி நின்றார்.

'திருமதி ஸக்ஸேனா, பிப்ரவரி இரவு 8-ஆம் தேதி உங்கள்

கணவன் எங்கே இருந்தார்.'

'என்னைப் போன்ற முட்டாள் பெண்டாட்டிக்கு எப்படித் தெரியும்? நான் தூங்கிக் கொண்டிருந்த போது, ஒரு மணி நேரம் எங்காவது சென்றிருக்கலாம்.'

'இல்லை பம்மி. நான் எங்கும் செல்லவில்லை.'

'உங்களுக்காகக் கலிபோர்னியாவில் என் வேலையை விட்டேன். வினீத் நீ ஒரு சனியன். நான் ஸீனியர் கன்ஸல்டண்டாக இருந்தேன். உன் ஆராய்ச்சி, உன் தேச பக்தி போன்ற தீவிரத்திற்காக விட்டுக் கொடுத்தேன். ஆனால் நீ எனக்கு செய்யும் பிரதிபலன் இதுதானா?'

'பம்மி, ஒன்றும் நடக்கவில்லை?'

'ஏன் என்றால் அவள் ஏதும் நடக்க அனுமதிக்கவில்லை!' என்றாள் திருமதி ஸக்ஸேனா சாமர்த்தியமாக விஷயத்தைப் புரிந்து கொண்டுவிட்டாள். அடுத்து ஒரு அடி எடுத்து வைத்தாள் கையை ஓங்கியபடி.

பேராசிரியர் ஸக்ஸேனா இரண்டடி பின்னால் நகர்ந்தார். 'தயவு செய்து என்னை அடிக்காதே!'

'உன்னை நாசம் செய்கிறேன். நீ ஒரு அருவருப்பானவன்.' என் பக்கம் திரும்பினாள். 'நான் என்ன செய்ய வேண்டும்? அன்றிரவு என் கணவனைக் காணவில்லை என்று ஏதாவது தாளில் கையெழுத்திடணுமா?'

'இல்லை,' என்று அலறியபடி பேராசிரியர் ஸக்ஸேனா தன் மனைவியின் காலில் விழுந்தார்.

'அது எல்லாவற்றையும் முடிவுக்குக் கொண்டு வந்துவிடும் தானே? இவரை வாழ்நாள் முழுவதும் சிறையில் அடைக்கப் போதுமானது தானே?' என்றாள் திருமதி ஸக்ஸேனா.

நான் தோள் குலுக்கினேன். என்னால் கண்டிப்பாகச் சொல்ல முடியவில்லை.

'நீங்கள் எங்களிடம் என்ன தருகிறீர்களோ, அதை போலீஸிடம் சேர்த்து விடுவோம்,' என்றேன்.

பேராசிரியர் ஸக்ஸேனா தரையில் முட்டி போட்டபடி இருந்தார்.

'நான் உன்னைக் கெஞ்சிக் கேட்கிறேன். ஆமாம், எனக்கு அவளைப் பிடித்திருந்தது தான். அவள் அழகாகவும், சாமர்த்தியமாகவும் இருந்தாள். நான் இளகி விட்டேன். ஆனால் எதுவும் நடக்கவில்லை. உன் மீது சத்தியம், நான் அவளைக்

கொல்லவில்லை?’

‘அப்போ, யார் கொலை செய்தது?’ என்று கேட்டேன். அவர் மனைவி கூக்குரலிட்டாள். ‘என் மீது சத்தியம் செய்யாதே. அழுக்குப் பதரே!’

‘எனக்குத் தெரியாது.’

‘பசங்களா, போலீஸுக்குப் போங்கள்,’ என்றாள் திருமதி ஸக்ஸேனா கோபமாக.

‘யாராவது நான் அன்றிரவு விடுதிக்குப் போவதைப் பார்த்தார்களா? அல்லது வீட்டை விட்டு வெளியேறுவதைப் பார்த்தார்களா?’

‘நான் பார்த்தேன் என்று சொல்லுவேன்,’ என்றாள் திருமதி ஸக்ஸேனா.

‘மேடம், இப்பொழுது நீங்கள் ஆத்திரப்படுகிறீர்கள். எங்களுக்குத் தேவை உண்மை,’ என்றேன்.

அமைதியாக யோசித்து எங்களை, திருமதி ஸக்ஸேனா இடைமறித்தாள்.

‘நான் எப்படி அமைதியாக இருப்பேன்? இரண்டு லட்சம் டாலர்கள் சம்பளம் வரும் வேலையை இந்த முட்டாளுக்காக விட்டேன். எல்லாம் அவர் ‘கொள்கைகளுக்காக.’

நான் எழுந்தேன்.

‘நாங்கள் உங்களுக்கும் கொஞ்சம் தனிமையைத் தர விரும்புகிறேன். வா போவோம் ஸௌரப்.’

‘நிச்சயமாக மேடம். இன்னும் ஒரே ஒரு கேள்வி,’ ஸௌரப் கதவருகே கேட்டான்.

‘என்ன?’ என்றாள் திருமதி ஸக்ஸேனா.

‘குக்கரை மூடி வைக்காதீர்கள். கருப்புப் பருப்பு ரொம்ப வெந்து விடும்.’

❖

‘டீன் ஸக்ஸேனாவா?’ என்றார் ரானா. ஹௌஜ் காஸ் ஸ்டார்பக்ஸில் அமர்ந்திருந்தோம். எக்ஸ்ட்ரா-சூடு, முழு க்ரீம், எட்டு சதவிகித கொழுப்பு நிறைந்த பால், நூறு சதவிகித இலவசமான லாட்டே குடிக்கும்போது இவருக்குப் புரை ஏறியது.

இன்ஸ்பெக்டர் ரானா கோப்பையை மேசை மீது வைத்தார். ராவணனைப் போல் உரத்த குரலில் சிரித்தார்.

‘ஆமாம்,’ என்றேன் உறுதியான குரலில். ‘இது போதுமான ஆதாரமாக ஒப்புக் கொள்வீர்களா?’

‘ஆமாம்,’ என்ற ரானா தொடர்ந்து சிரித்தார்.

‘பிறகு எதற்கு சிரிக்கிறீர்கள், ஸார்?’ என்றான் ஸௌரப். அவரிடம் பேசும்போது இன்னமும் லேசான பயம் தலை தூக்கும் அவனுக்கு.

‘நான் உன்னைப் பார்த்துச் சிரிக்கவில்லை. இந்தச் சூழ்நிலையே நகைச்சுவையாக இருக்கு. அவன் பெரிய உத்தமன் போல் நடந்து கொண்டான். என்னைக் கேம்பஸுக்குள் வரவிடாமல் தடுத்தான். அவனே ஒரு மட்டமான, கேடு கெட்ட பேராசிரியன்,’ என்ற ரானா திரும்பவும் சிரித்தார்.

என் பால் கப்பைப் பார்த்துக் கொண்டிருந்தேன். இன்ஸ்பெக்டர் சிரித்து முடிக்கக் காத்திருந்தேன். திரும்பவும் பேசினார்.

‘வாட்ச்மேனிலிருந்து, ஐஐடி டீன் வரை, வாவ்-எல்லா வர்க்கமும், ஒன்று தான். ஊடகம் இதில் நிறைய பரபரப்பை உருவாக்கும்.’

‘அப்போ அவனைக் கைது செய்யலாமா?’ என்றேன். ‘இது எப்படி வேலை செய்யும்?’

‘அவ்வளவு சுலபம் இல்லை. மனைவியின் வாக்குமூலம் தேவை. கணவர் அன்றிரவு வெளியே சென்றார் என்று சொல்ல வேண்டும். இல்லையென்றால் உறுதியாகச் சொல்ல முடியாது.’

‘உறுதியில்லையா?’

‘இது ஒரு மசாலா கதை. வாட்ச்மேனை விடுதலை செய்து டீனைக் கைது செய்வது என்பது. இதில் சிறிய தவறு இருந்தாலும் டெல்லி போலீஸின் மீது கல்லெறிவார்கள்.’

‘அப்போ அவனைக் கைது செய்ய மாட்டீர்களா?’

‘பெண்டாட்டியின் வாக்குமூலத்தை வாங்கி வா,’ என்றார் ரானா. கடிகாரத்தைப் பார்த்தார். ‘எனக்கு முடிவெட்ட நேரமாகிவிட்டது. நான் கிளம்பணும்.’

இன்ஸ்பெக்டர் ரானாவை அவருடைய ஜிப்ஸியில் ஏற்றிவிட்டோம்.

‘ஸராவின் ஈ-மெயில்,’ என்றேன்.

‘பேராசிரியர் ஒரு விகார மனம் கொண்டவன் என்பதைத் தான் சுட்டிக்காட்டுகிறது. அதற்காகக் கொலை குற்றத்தில் எப்படி கைது செய்வது?’

நான் தலையசைத்தேன். அவர் என் முதுகைத் தட்டிக் கொடுத்தார்.

‘சும்மா சொல்லக்கூடாது. நல்ல வேலை தான்.’

❖

‘மேகி? திரும்பவுமா? வேலைக்காரி காலிஃப்ளவர், உருளையும், சப்பாத்தியும் செய்திருக்கிறாளே?’

‘எனக்கு வேலைக்காரியின் சாப்பாடு சாப்பிட்டு போரடித்துவிட்டது,’ என்றேன்.

எங்கள் அபார்ட்மெண்ட்டின் சின்ன சமையலறையில் நின்று கொண்டிருந்தோம். நான் பட்டாணி, காரட், குடைமிளகாய் எல்லாவற்றையும் சேர்த்து கறிகாயைக் கரண்டியால் கலக்கினேன். அடுத்த அடுப்பில், மூன்று பாக்கெட்டு மேகி நூடுல்ஸ் கொதித்தது.

ஸௌரப் பாத்திரத்திலிருந்த அளவைப் பார்த்து இன்னும் இரண்டு மசாலா பாக்கெட்டைச் சேர்த்தான்.

என்னுடைய புதுமையான, காய் சேர்த்த மேகி நூடுல்ஸை இரண்டு பெரிய கப்பில் எடுத்து வந்து கொடுத்தேன்.

நாங்கள் டைனிங் மேசையில் இந்த ஒரே பதார்த்தத்தை வைத்துக் கொண்டு உணவு அருந்தினோம்.

‘அப்போ, திருமதி ஸக்ஸேனா ஒப்புக் கொள்ளவில்லையா?’ என்று பெரிய நூடுலஸ்ச் சப்பி இழுத்தபடி கேட்டான் ஸௌரப்.

‘ஆமாம். கோபத்தில் பேசிவிட்டாளாம். பிறகு யோசித்திருக்கணும். கணவன் சபலக் கேஸாக இருக்கலாம். ஆனால் கொலைக்காக அவனைச் சிறையில் தள்ள விரும்பவில்லை.’

‘அதனால் பெண்டாட்டி வாக்குமூலம் இல்லை.’

‘ஆமாம்,’ என்று மேலும் நூடுல்ஸை கப்பில் போட்டுக் கொண்டேன். ‘ஆதாரம் வேண்டுமானால் இன்னும் நச்சென்ற ஆதாரத்தைத் தேடணும்.’

‘நூடுல்ஸ் சூப்பர்,’ என்றான் ஸௌரப்.

‘நன்றி,’ என்று கண் சிமிட்டினேன். ‘ஸக்ஸேனா செய்திருப்பான் என்று நினைக்கிறாயா?’

‘ஸரா அவருடைய வாழ்நாள் சாதனையை அழித்துவிடலாம் என்ற அச்சம் இருந்தால் செய்திருக்கலாம்,’ என்றான் ஸௌரப்.

‘ஹாஸ்டல் கேட்டில் சிசிடிவி ஃபுட்டேஜில் அவன் பிம்பம்

தெரியவில்லை. அதனால் அவன் வந்திருக்ககூடிய ஒரே வழி மாமரம் தாண்டி,' என்றேன்.

'ஆமாம்,' என்றான் ஸௌரப். 'ஜன்னல் கதவு திறந்திருந்தால் ஸரா தான் திறந்து விட்டிருக்கணும்.'

'ஆமாம். அவள் திறந்திருக்கலாம். எனக்கு வாழ்த்துச் சொல்ல, இந்த முட்டாள், நடத்தை கெட்டவன் ஜன்னல் வழியாக வருகிறான். அடுத்த சில வாரங்களில் நான் அவனிடமிருந்து விடுபட்டுவிடுவேன் என்று நினைத்து அவள் ஜன்னலைத் திறந்திருப்பாள்.'

'பிறகு?' என்றான் ஸௌரப்.

'அவன் நுழைகிறான். கொலை செய்கிறான். கட்டிலுக்குப் போகிறான். பம்மியைக் கட்டிப் பிடித்து உறங்கியிருப்பான். கதை முடிந்தது.'

அப்படித் தானே? எல்லாம் சரியாகப் பொருந்துகிறது தானே?' என்றேன். ஸௌரப் சற்று நேரம் யோசித்துவிட்டு இல்லை என்பது போல் தலையசைத்தான்.

'ஏன்?'

'இல்லை. சாத்தியம் இல்லை,' என்றான் ஸௌரப்.

'என்ன சாத்தியம் இல்லை?'

'அவன் நொண்டுகிறான்,' என்றான் ஸௌரப்.

'என்னது?'

'அவன் வீட்டிற்குள் மிகவும் மெதுவாக நுழைந்தான் என்பதைக் கவனித்தாயா? அவனுக்கு லேசான ஊனம்.'

'சமீபத்தில் வந்ததா?'

'தெரியவில்லை. லாப்டாப்பைத் திற,' என்றான் ஸௌரப். பேராசிரியர் ஸக்ஸேனாவைப் பற்றிய யூ-டியூபுகளை அலசினோம். தூக்கம் வரவில்லை என்று தவித்தால் இவற்றைப் பார்த்துத் தூங்கலாம் என்பது போன்ற போரடிக்கும் என்ஜினியரிங் கான்ஃப்ரன்ஸ் பேச்சுக்கள் தான். சில மாதங்களுக்கு முன் அவர் மேடைக்கு ஏறி வருகிறார், விருது பெற.

'அன்று மட்டும் அல்ல. அவருக்குச் சரியான ஊனம் தான்,' என்றேன். ஸௌரப் அமைதியாக நிறைய வீடியோக்களை அலசினான்.

'அவனால் மாமரத்தில் ஏறியிருக்க முடியாது?' என்றேன் சில நிமிடங்களுக்குப் பிறகு.

‘ஆமாம்,’ என்றான் ஸௌரப். ‘எனக்கே ரொம்ப சிரமமாக இருந்தது. கால் சரியாக இல்லை என்றால் ஏற முடியாது.’

‘அப்போ ஸக்ஸேனா இல்லை,’ என்றேன். லாப்டாப்பைக் கோபமாக மூடினேன். ‘நான் ரானாவிடம் சொல்ல வேண்டும்.’

நான் இன்ஸ்பெக்டரை அழைப்பதற்காக நகர்ந்தேன்.

நான் பேசி முடிக்கும் வரை ஸௌரப் மேசையில் காத்திருந்தான். பிறகு கேட்டான்.

‘அவர் என்ன சொன்னார்?’

‘நாம் முட்டாளுங்க. டீனைக் கைது செய்திருந்தால் அவரை எல்லோரும் காறித் துப்பியிருப்பார்கள். நல்ல வேளை நம் பேச்சைக் கேட்டு கைது செய்யவில்லை என்றார்.’

‘நிஜம் தானே. வேறு என்ன?’

‘அது மட்டும் தான். கொஞ்சம் போல் டெல்லி கெட்ட வார்த்தைகளை உதிர்த்தார்,’ என்றேன்.

# அத்தியாயம் 16

கேம்பஸுக்கு வெளியே இருந்த டியர் பார்க்குக்கு வரச் சொல்லி ஸக்ஸேனாவை அழைத்தேன். இம்முறை உடனே ஒப்புக் கொண்டான். நீல நிற ஐஐடி டிராக்சூட் அணிந்திருந்தான். வெள்ளை நிறக் கோடுகள். ஒவ்வொரு அடியாக எடுத்து சிரமமாக வைத்தான்.

‘பேராசிரியர் ஸக்ஸேனா, நீங்கள் கொல்லவில்லை என்று தெரியும்,’

என்னை ஆச்சரியமாகப் பார்த்தான்.

‘என்ன?’ என்று கேட்டான்.

‘உங்கள் ஊனம் உங்களைக் காப்பாற்றிவிட்டது. உங்களால் மரம் ஏற முடியாது.’

‘நான் தான் செய்யவில்லை என்று சொன்னேனே?’

‘பேராசிரியர் ஸக்ஸேனா, வாட்ச்மேனும் செய்யவில்லை.’

‘அவனில்லையா?’

லக்ஷ்மண் போனில் உள்ள பிரௌஸர் ஹிஸ்ட்ரியைப் பற்றிச் சொன்னேன்.

‘நம் நாடு விந்தையானது. நிரபராதியை லாக்கப்பில் பூட்டியிருக்கிறார்கள்,’ என்றான் ஸக்ஸேனா.

நான் தலையாட்டினேன். ‘ஸார், கேள்வி இன்னமும் பாக்கியிருக்கு. யார் செய்தது?’

‘எனக்கு எப்படித் தெரியும்?’

‘உங்களுக்கு அவளைப் பல வருடங்களாகத் தெரியும். ஏதாவது யோசனை வரலாமே.’

‘நீ ஸராவின் குடும்பத்தைச் சந்தித்திருக்கிறாயா?’ என்றான் பேராசிரியர் ஸக்ஸேனா.

‘ஆமாம்,’ அவளுடைய அப்பா மற்றும் சித்தி.’

‘அவள் உடன் பிறவாத தம்பி?’

‘சிக்கந்தர். இல்லே. அவனைப் பற்றி நிறைய கேள்விப்பட்டு

விட்டேன். அவனை இறுதிச் சடங்கன்று பார்த்தேன்.’

‘கேளு. என்னை மதவாதி என்று கூட குற்றம் சாட்டலாம்; இதைச் சொன்னால். ஆனால் ஸராவின் அப்பா மற்றும் தம்பியைப் பார்த்தால் எனக்கு சௌகரியமான எண்ணங்கள் தோன்றுவது இல்லை. அவர்கள் மீது எனக்குச் சிறிய சந்தேகம் தான்.’

‘ஏன்?’

‘அவள் வீட்டார் வன்முறையை நேசிக்கும் அடிப்படைவாதிகளாக இருக்கலாம். இஷ்டம் போல் மக்களைக் கொல்பவர்கள்.’

‘தீவிரவாதிகளா?’

‘நீ சொல்வதனால் யோசித்தால் ஆமாம் என்று தான் படுகிறது.’

‘ஸரா இவற்றிலிருந்து விலகித் தள்ளி தானே இருந்தாள். எதன் அடிப்படையில் இதைப் பற்றிக் கூறுகிறீர்கள்?’

‘நாங்கள் பிக் டேட்டா சர்வர் ரூமில் ஒருமுறை இருந்தோம். அவள் தம்பியுடன் போனில் பேசிக்கொண்டிருந்தாள். அவள் துப்பாக்கிகள் பற்றிப் பேசுவது என் காதில் விழுந்தது.’

‘துப்பாக்கிகள்?’

‘துப்பாக்கிகள் பதில் கிடையாது, சிக்கந்தர், என்று பேசிக் கொண்டிருந்தாள்.’

‘அது ஒரு சாதாரணமான வாக்கியமாகக் கூட இருந்திருக்கலாமே!’

‘என்னை நம்பு. சாதாரண வாக்கியம் போல் தோன்றவில்லை. அவன் ஏதோ ஒரு குரூப்புடன் சேர்ந்து இயங்குகிறான். ஸரா அதைவிட்டு அவன் வெளியேற வேண்டும் என்று விரும்பினாள்.’

‘இதற்கு மேலும் விவரம் எனக்குத் தெரியாது. நான் பயந்து போனேன். அதனால் இதைப் பற்றி அவளிடம் பேசவே இல்லை.’

நாங்கள் பார்க்கைவிட்டு வெளியே நடந்தோம். பேராசிரியர் காரில் ஏறி டிரைவர் இருக்கையில் அமர்ந்தார்.

‘வேறு ஏதாவது?’ என்றேன்.

‘சற்று நேர மௌனத்திற்குப் பின் பேசினார்.’

‘பம்மி, இறுதிச் சடங்குக்குப் பின் ஏதோ சொன்னாள்,’ என்றார்.

‘நாம் எதிர்பார்த்த அளவு பெற்றோர்கள் துக்கமாக இருப்பது போல் தெரியவில்லை. சித்தி மட்டும் இல்லை, அப்பா கூடத்

தான். ஆனால் அப்படி நடக்கக் கூடும்; மக்கள் அதிர்ச்சியில் இருந்திருக்கலாம்.'

'நன்றி ஸார்,' என்றேன்.

'ரொம்ப உதவியாக இருந்தது.'

பேராசிரியர் தன் காரை ஸ்டார்ட் செய்தார்.

'அதிசயமாக இருக்கு. அவள் உன்னுடன் இல்லாவிட்டாலும் அவள் கொலையாளியை நீ இன்னமும் தேடுறே.'

நான் சிரித்தேன். 'இப்போ தெரியுது. அவள் உனக்காக ஏன் ஸ்காலர்ஷிப்பை விட்டுக் கொடுத்தாள் என்று,' என்றான். அடுத்த வார்த்தைகள் கார் சத்தத்தில் தேய்ந்து ஒலித்தன.' 'அட இளங் காதல்.

❖

'அவன் என்ன சொன்னான் என்று புரியவில்லை,' என்றேன்.

ஜில்லென்ற சோடாவை உறிஞ்சியபடி. 'குடும்பமே சந்தேகத்துக்கு இடமாகத் தோன்றுகிறது என்று மட்டும் தான் சொன்னான்.'

ராஸ்தா டெரஸ்ஸில் நானும், ரானாவும் அமர்ந்திருந்தோம். ஹௌஸ் காஸ் வில்லேஜின் பார். ரானாவுக்குச் சரக்கு வாங்கித் தருவதாகச் சொன்னேன், ஸக்ஸேனா விஷயத்தில் மொக்கை வாங்கியதற்காக. பாரிலும் இன்ஸ்பெக்டர் காசு கொடுக்க வேண்டியதில்லை. லார்ஜ் ரம் மற்றும் கோக் ஆர்டர் செய்தார். நான் வெறும் சோடா சொன்னேன்.

'சந்தேகம் என்றால் எப்படிப்பட்ட சந்தேகம்? கஸின்கள், அங்கிளைத் திருமணம் செய்வது போலவா?' என்றார் ரானா.

'இல்லை, இல்லை,' என்றேன். 'என்ன பேசுகிறீர்கள்? ஸக்ஸேனா நினைப்பது, குடும்பத்தாருக்குத் தீவிரவாதிகளுடன் ஏதும் தொடர்பு இருக்கலாம் என்று.'

'இந்த பிளடி காஷ்மீரி! எதுவும் சாத்தியம்.'

'ஸரா தீவிரவாதி இல்லை,' என்றேன். 'என்னை அமைதிப் போராட்டத்திற்கெல்லாம் அழைத்துச் சென்றாள்.'

'அதெல்லாம் மேம்போக்கான குப்பை. உள்ளே வன்முறை பொதஞ்சிருக்கு,' என்றார் ரானா. அவர் இடது புறம் திரும்பி, அப்பொழுது வந்த மூன்று பெண்களை நோட்டம் விட்டார். இருபது வயது மதிக்கத்தக்க ஒருத்தி, குட்டைப் பாவாடை சிகப்பு வண்ணத்தில் அணிந்திருந்தாள்.

‘அவளுக்குக் குளிராதா?’ என்றார் டெல்லி ஆண்களுக்கே உரித்தான எள்ளல் குரலில். திரும்பவும் விஷயத்துக்குள் அவரை இழுத்தேன்.

‘ஸராவின் அப்பா வெற்றிகரமான வியாபாரி. போராட்டத்தினால் தான் அவர் காஷ்மீரை விட்டே வெளியேறினார்.’

நான் சொன்னதைப் புறம் தள்ளி விட்டு இன்ஸ்பெக்டர் பக்கத்து மேசைப் பெண்களைப் பற்றியே பேசினார்.

‘இது போல் உடைகள் அணிந்து வெளியே வருவதற்கு இந்தப் பெண்கள் அஞ்சுவதே இல்லை. யாராவது எதையாவது பிடித்து அமுக்கி விட்டால் போலீஸைக் குறை சொல்வது,’ என்றவரின் கண்கள் சிகப்பு பாவாடைப் பெண்ணையே மேய்ந்தது.

இவர் ஸைட்டு அடித்து முடிக்கும் வரை நான் மௌனமாய் இருந்தேன். கடைசியில் என் பக்கம் பார்த்து இளித்தார்.

‘ஸாரி, என்ன சொன்னே?’ என்றார்.

‘ஸராவின் அப்பா எந்தத் தீவிரவாதக் கும்பலுடனும் சம்பந்தப்பட்டவர் இல்லை.’

‘நீ எப்படித் திட்டவட்டமாக சொல்கிறாய்? அவர்கள் மீது அனுதாபம் இருக்கலாம். பண உதவி செய்யலாம்.’

‘அவருடைய இரண்டாவது மனைவி ஃபர்ஜானாவின் குடும்பத்தார் அடிப்படைவாதிகள். அவருக்கு அது பிடிக்காது. அதனால் தான் முக்கியமாக அவர் அவளை விவாகரத்து செய்தார்.’

‘ஹம்ம்ம்...’ என்றார் ராணா. ‘ஒரு வேளை இது தீவிரவாதம் சம்பந்தப்பட்ட கேஸாக இருந்தால் நம் கைகளிலிருந்து பறிக்கப்படும். தீவிரவாதத்தை ஒடுக்கும் ஆண்டி டெரரிஸ்ட் ஸ்குவாட் பொறுப்பேற்றுக் கொள்ளும். ஒரு பெரிய உயர் அதிகாரி எடுத்து நடத்துவார். என்னைப் போன்ற கீழ்மட்ட ஆசாமியாக இருக்காது.’

தலையாட்டி இவர் பைசா பெறாதவர் என்று ஆமோதிப்பதா, அல்லது உங்களைவிட யாராலும் திறமையாகக் கையாள முடியாது என்று சொல்லி நானே சில்லரைத்தனமானவனாக மாறுவதா? பேசாமல் சோடா குடித்தேன்.

‘விட்டு-விடு,’ என்றார் இன்ஸ்பெக்டர் கண்களைச் சுருக்கி. ‘தீவிரவாத கும்பல் ஈடுபட்டிருந்தால் உன்னைக் கொன்று விடுவார்கள். இது அதற்கான விலை கிடையாது.’

‘அப்போ ஸராவைக் கொன்றது யார் என்று கண்டுபிடிக்கவே முடியதா?’ என்றேன் உரக்க. பக்கத்து டேபிளிலிருந்த மூன்று பெண்களும் ‘கொலை’ என்ற வார்த்தையைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தனர்.

‘ஒரு வேளை இது ஆணவக் கொலையாக இருக்குமோ? தீவிரவாதம் இல்லாமல்?’ என்று ரானா கிளாஸில் ஐஸ் க்யூபுகளைச் சுழற்றினார், டிரிங்க்ஸை நன்றாக மிக்ஸ் செய்வதற்காக.

‘ஆணவக் கொலையா? ஸராவின் அப்பா அவளைக் கொல்வதா? என்று அதிர்ந்தேன்.’

‘இல்லை யார் மூலமாவது கொல்ல வைப்பது. அப்படியெல்லாம் நடப்பது தானே. நானே நிறைய கேஸ்களைப் பார்த்திருக்கிறேன்.’

‘ஏன்?’

‘அவளுக்கு ஹிந்து பசங்களுடன் செக்ஸ் வைத்துக் கொள்ள இஷ்டம்,’ என்றார் ரானா.

என் காது சூடானது. அவர் முகத்தை இரண்டாகப் பிளக்கும் வெறி வந்தது. இது போன்ற வார்த்தைகளைச் சொன்ன வாயைக் கிழித்தால் என்ன? என் உறுதி அனைத்தையும் திரட்டி சிரமப்பட்டு அமைதி காத்தேன். ஒரு போலீஸ் ஆளைத் தாக்குவது மிகவும் தவறான விஷயம்.

‘அவள் பெற்றோர்களுக்கு ரகுவைப் பிடிக்கும். அவன் அவளுக்காக மதம் மாறுவதாகக் கூட இருந்தான்.’

‘இந்த மதராஸி இஸ்லாமியனாகச் சம்மதித்தானா? அவளுடன் இருப்பதற்காகவா?’ என்றார் ரானா. ஏதோ ரகு தன் ஆண்பிள்ளைத் தனத்தைத் துறந்து செக்ஸ் ஆபரேஷன் செய்ய ஒப்புக் கொண்டது போல் லுக்கு விட்டார்.

‘ஸராவின் அப்பா என்னையும் மதம் மாறச் சொல்லிக் கேட்டார்.’

‘நீ மறுத்துவிட்டாயா?’ என்றார் ரானா.

‘நான் ஆமாம்,’ என்றேன்.

அவர் என் முதுகைத் தட்டிக் கொடுத்தார். ‘அது என் துணிவான ராஜ்புத் பையன். எந்தப் பெண்ணுக்காகவும் நம் கடவுளை விட்டுக் கொடுக்கக் கூடாது. நன்றாக நடந்து கொண்டாய்.’

‘என்னால் முடியவில்லை. என் பெற்றோர்கள் தற்கொலை

செய்து கொண்டிருப்பார்கள்.’

‘ஆமாம். எந்த தைரியத்தில் மதம் மாறச் சொல்லிக் கேட்டார்கள்? அவர்கள் விந்தையானவர்கள் தான்.’

‘ரானா ஸார், விஷயம் என்னவென்றால், அவர்கள் ரகுவை வெறுக்கவில்லை. ஸரா ஹிந்து பாய்ஃபிரெண்டு வைத்துக் கொண்டதற்கு எதிர்க்கவில்லை. அவர்களுக்கு ரகுவையும், அவன் வெற்றியையும் பிடிக்கும்.’

‘அந்த மதராஸி மதம் மாற ஒப்புக் கொண்டதால் தான் அவனைப் பிடிக்கும்.’

‘ஆமாம், அதுவும் தான். சரி ஆணவக் கொலைக்கு வழியில்லை.’

‘உங்களுக்குத் தெரியாது. ஒரு வேளை அவள் அப்பா அவளுக்கு வேறு யாரையாவது கட்டி வைக்க உத்தேசித்திருக்கலாம். இஸ்லாமியக் குடும்பத்தைச் சேர்ந்தவன். இறுதிச் சடங்கில் அவர் பொட்டுக் கண்ணீர் விடவில்லையே?’

‘திருமதி ஸக்ஸேனாவும் அதையே தான் சொன்னார்.’

‘அந்தப் பாடாவதி டீனின் மனைவியா?’ என்றார் ரானா.

‘ஆமாம். ஸக்ஸேனா என்னிடம் சொன்னான்,’ என்றேன். ‘மேலும் நீங்கள் இந்தத் தோரணையில் ஆராய்வதால் தான் நான் இதைச் சொல்கிறேன். ஸஃப்தர் என்னை மிரட்டியிருக்கிறார்.’

‘எப்பொழுது?’ இன்ஸ்பெக்டரின் கண் பளிச்சிட்டது. ‘இதை நீ சொல்லவே இல்லையே?’

‘நான் மதம் மாற மறுத்த பொழுது, என்னை ஸராவிடமிருந்து விலகியிருக்கச் சொன்னார். என்னை காயப்படுத்தவோ, கொலை செய்யவோ முடியும் என்றார்.’

‘அவர் ஃபார்ம் வீட்டில் வாழும் குண்டர். அந்தப் பாடாவதி டீன் சொல்வது சரிதான். அவர்கள் சந்தேகத்துக்குரியவர்கள் தான்.’ ரானாவின் வார்த்தைகளை உள் வாங்கினேன். இன்ஸ்பெக்டரின் பார்வை மறுபடியும் அந்த மூன்று பெண்கள் மீதே மொய்த்தது. ‘அந்தச் சிகப்பு நிற உடை அணிந்திருக்கும் பெண்ணுக்கு இன்று அது கண்டிப்பாகத் தேவைப்படுகிறது.’

❖

‘என் மகளின் கொலையைத் துப்பறிய யார் உனக்குத் தைரியம் கொடுத்தது?’ என்றார் ஸஃப்தர். அவருடைய மிகப் பெரிய

போர்ச்சில் குரல் இடி முழக்கம் போல் கேட்டது. ஒரு ஞாயிறு காலை நானும், ஸௌரபும் அவர் வீட்டிற்குச் சென்றோம். இதுவரை நடந்த கதையை அவருக்குச் சொன்னோம். லக்ஷ்மணும், ஸக்ஸேனாவும் அப்பாவிகள் என்பது வரை கூறினேன்.

‘அந்த பிஎச்டி கைடு பற்றிய குப்பையை எதற்கு நீ கிளறினாய்?’

‘உங்களுக்கு அதிர்ச்சி ஏற்படவில்லையா, அங்கிள்? அவள் கைடு அவளைத் துன்புறுத்தினான் என்று கேள்விப்பட்டதும், கோபம் வரவில்லை?’ என்றேன்.

‘உன் மீது எனக்குக் கோபம். அவள் இறந்த பிறகும் என் பெண்ணைத் தனியாக விடமாட்டாயா?’

‘யார் கொலை செய்தது என்று எனக்குத் தெரியணும்.’

‘நீ யார்? போலீஸா? குடும்பமா? யாரு?’

மௌனமாயிருந்தேன்.

‘உனக்கும் ஸராவுக்கும் எந்த உறவும் இல்லை’ என்று ஸஃப்தர் பல்லைக் கடித்தார். ‘என் வீட்டை விட்டு வெளியே போ. என் இறந்த மகளின் வாழ்க்கையை விட்டும் வெளியேறு.’

ஸஃப்தர் எழுந்தார். எங்களை வழியனுப்பும் சைகை.

‘அங்கிள், குழம்பாதீர்கள். இது நிலைமையை மேலும் மோசமாக்கும்.’ ஸௌரப் உறுதியான குரலில் முதல் முறையாகப் பேசினான். ‘மோசமா?’ என்றார் ஸஃப்தர். ‘இதை விட என்ன மோசமாகும்? ‘நான் ஏற்கனவே என் மகளை இழந்துவிட்டேன்.’

‘இதைவிட மோசம் என்னவென்றால் மக்கள் இதில் ஆணவக் கொலை கலந்திருப்பதாகப் பேசலாம்,’ என்றான் ஸௌரப் நேரடியாக. அவரை இன்னமும் அங்கிள் என்று கியூட்டாக அழைத்தான். கொலை குற்றம் சாட்டப் போதுமானதாக, மரியாதையாக அங்கிள் என்றான்.

‘என்ன?’ ஸஃப்தர் விழித்தார். ‘உன் புத்திக்கு என்ன கேடு வந்தது? யார் உன்னுடைய இந்த மென்டல் நண்பன்?’

‘இவன் என் உற்ற நண்பன். அவன் மெண்டல் இல்லை. புத்திசாலி. தயவு செய்து அமருங்கள்,’ என்றேன்.

ஸௌரப் சிரித்தான்; ஸஃப்தர் அமர்ந்தார்.

‘ஸராவின் பிரேதப் பரிசோதனையை ஏன் நீங்கள் அனுமதிக்கவில்லை, அங்கிள்?’ என்றேன்.

‘என்ன? அந்தப் பாவிகள் என் மகளின் உடலைக் கூறு

போடவா? பிரேதேப் பரிசோதனையில் என்ன செய்வார்கள் என்றாவது தெரியுமா உனக்கு?' என்று கேட்டார் ஸஃப்தர்.

'என்ன நடந்தது என்று கண்டுபிடிப்பார்கள்,' என்றேன்.

'என்ன கண்டுபிடிப்பார்கள்? செய்தி சேனலுக்கு மேலும் மசாலாவா?' சௌரபும் நானும் பதில் பேசவில்லை. 'அவள் இறந்தபோது வந்த செய்திகளைப் பார்த்தாயா? ஸராவைப் பற்றியோ, அவள் குடும்பத்தைப் பற்றியோ யாருக்கும் அக்கறை இல்லை. வேறு என்ன அவர்கள் பேசவேண்டும்? அவள் கெடுக்கப்பட்டாளா, இல்லையா, என்றா?'

'அவள் கெடுக்கப்படவில்லை,' என்றேன். 'அப்படி எதுவும் நடக்கவில்லை. நான் தான் அவள் உடலை முதலில் பார்த்தேன்.'

'ஏதோ ஒரு பரதேசி டிவி தொகுப்பாளர் கதை கட்டிவிட்டால்? குடும்பம் எவ்வளவு கஷ்டப்படுகிறது என்று புரிகிறதா?'

ஸஃப்தர் ஏதாவது மறைக்கிறாரா? நன்றாகவே நடிக்கிறார்.

'நான் இதை ஏன் கேட்கிறேன் என்றால், பிறகு இந்தக் கேள்வி வரக்கூடும் என்பதால் தான். அன்றிரவு நீங்கள் எங்கே இருந்தீர்கள்?' என்றேன்.

ஸஃப்தர் என்னையே பார்த்துவிட்டுச் சற்று நேரம் கழித்துப் பேசினார்.

'வீட்டில் தான் இருந்தேன். அவள் பிறந்தநாள் பார்ட்டிக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தேன்.'

'சாட்சிகள் உண்டா?'

'மொத்த ஃபார்ம்ஹவுஸம் சாட்சி!'

'அவர்கள் உங்கள் கூலியாட்கள். உங்கள் சம்பளத்தை வாங்குபவர்கள்.'

'யாரை வேணுமானாலும் கேளுங்கள். தனித்தனியாக. அனைவரும் ஒரே விஷயத்தைத் தான் கூறுவார்கள். ஒரு நிமிஷம், என் மீது குற்றம் சுமத்துகிறீர்களா?'

'சிலர் செய்யலாம், ஆணவக் கொலை நடப்பது தானே,' என்றேன்.

'என்ன அபத்தம்,' என்று புறம் தள்ளினார்.,

'உங்களைப் பதற்றமாகவோ, கண்ணீருடனோ நாங்கள் பார்க்கவில்லை. இறுதிச் சடங்கிலோ, வேறு சந்தர்ப்பத்திலோ!'

'நான் பொதுமக்களிடையே என் உணர்ச்சிகளைக் காட்டுபவன் கிடையாது. என் சின்ன பெண்... அவள் அறை

இன்னமும் இருக்கு. அப்படியே அவள் விட்டுவிட்டு போனது போல். நான் அதில் நுழைந்து தனியாக அழுவேன். எனக்கு வலியில்லை என்று எந்தத் துணிவில் பேசுகிறீர்கள்?''

'ஒரு வேளை இருக்கலாம். ஆனால்...'

'என்ன ஆனால்? என்ன பேசுகிறீர்கள்? நான் எதுவும் செய்யவில்லை. நான் யாரையும் காயப்படுத்தும் ஆள் கிடையாது. அதுவும் என் சொந்த மகளைப் போய்க் கொல்வேனா?'

'என்னைக் கொல்வதாக மிரட்டினீர்களே?' என்றேன்.

ஸஃப்தர் என் கண்களைக் கூர்ந்து நோக்கினார். இருவரும் சற்று நேரம் உற்று நோக்கிக் கொண்டோம். பிறகு பேசினார்.

'நான் கொலை செய்தேன் என்று குற்றம் சுமத்தலாம் என்று நீ கருதுகிறாயா? மக்கள் நம்புவார்களா?'

'அது தானா விஷயம்? என்னால் நிரூபிக்க முடியாது என்பதால் நீங்கள் கொல்லவில்லை என்கிறீர்களா?'

'உன்னால் நிரூபிக்க முடியுமா?'

'வா போகலாம் ஸௌரப்.'

நான் கிளம்புவதற்காக எழுந்தேன். ஸௌரப் தோட்டத்துக்குள் என்னைத் தொடர்ந்தான். ஷாஹதா எடுத்துக்கச் சொல்லிப் பேசிய ஊஞ்சலைக் கடந்தோம். ஸரா ரூபியுடன் ஓடிக் கொண்டிருப்பாள் என்ற மாயை தோன்றியது. அழாமல் நடக்கணுமே என்று வேகமாக நடந்தேன். 'நில்லு' என்று ஸஃப்தரின் குரல் பின்னாலிருந்து கேட்டது. நான் திரும்பினேன். அவர்களின் தலைவன் ஆணைப்படி நாலைந்து அடியாட்கள் எங்களை அடிக்க வருவார்கள், சினிமாவைப் போல என்று பயந்தேன். ஆனால் ஸஃப்தர் தனியாகத் தான் நின்றிருந்தார்.

'உள்ளே வாங்க,' என்றார்.

ஸௌரப்பும், நானும் உறைந்தோம். ரகசியக் குளத்தில் வைத்திருந்த முதலைகளுக்குத் தீனி போட பாதாளக் கிடங்குக்கு அழைக்கிறாரோ என்று பயந்தேன்.

'என்னைத் தொடர்ந்து வாருங்கள். என் ஸ்டடியில் பேசலாம்,' என்றார்.

❖

வீட்டின் மற்ற அறைகளைப் போலவே ஸஃப்தரின் ஸ்டடியும் நவாப்பின் ஒப்பனையுடன் இருந்தது. காஷ்மீரிலிருந்து

தருவிக்கப்பட்ட விலையுயர்ந்த பட்டுக் கம்பளங்கள், மரத்தரையை அலங்கரித்தன. ஒரு புறம் அட்டகாசமான தேக்கு மர டெஸ்க், ஸ்டடி மேசை, பெரிய தோல் நாற்காலிகள். கருப்புத் தோல் சோபா மறுபுறம். புத்தக அலமாரிகள் முழுவதும் புத்தகங்கள் அடுக்கப்பட்டிருந்தன. சுவர் முழுவதும் புத்தகங்கள் தான். நான், ஸெளரப் மற்றும் ஸஃப்தர் அமர்ந்தோம் சோபாக்களில்.

‘சிகந்தரைப் பற்றி உங்களுக்கு எவ்வளவு தெரியும்?’ என்று ஸஃப்தர் என்னைக் கேட்டார்.

‘ஸராவுக்கு அவனை ரொம்பப் பிடிக்கும், அவனுடன் ஸ்ரீநகரில் வளர்ந்த பசுமையான நினைவுகளைப் பற்றி சூறுவாள். அவன் எளிமையானவன், ரொம்ப அப்பாவி என்பாள்.’

ஸஃப்தர் நரித்தனமாகப் பார்த்தார். என் கடைசி வார்த்தைகளைக் கேட்டதும்.

‘வேறு என்ன?’ என்றார்.

‘நீங்கள் ஸராவை அவனுடன் தொடர்பில் இருக்க விடாமல் தடுத்தீர்கள்’ ஸஃப்தர் பெருமூச்சு விட்டார்.

‘நான் தடை செய்தேன். ஏன் என்றால் சிகந்தர் டீ-ஈ-ஜே-வின் உறுப்பினர். அது காஷ்மீரைத் தனி நாடாக்க முயலும் குழு.’

‘தனி நாடு என்றால்?’ என்றான் ஸெளரப். ‘தீவிரவாதிகளா?’

‘நீ யாரைப்பார்த்துக் கேட்கும் கேள்வி என்பதைப் பொறுத்தது,’ என்றார். ஸஃப்தர், தன் தொடைகளில் கைகளைத் தடவியபடி.

‘புரியவில்லை,’ என்றான் ஸெளரப்.

‘இந்திய அரசாங்கம், டீ-ஈ-ஜே தீவிரவாத கும்பல் என்று கருதுகிறது. டீ-ஈ-ஜே மற்றும் அதன் ஆதரவாளர்கள் காஷ்மீரைச் சுதந்திரமாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளதாக நினைக்கிறார்கள்.’

‘எதிலிருந்து விடுவிக்கிறார்கள்?’ என்றேன்.

‘இந்தியாவிலிருந்து!’ என்றார் ஸஃப்தர்.

‘என்ன செய்வார்கள்? தங்கள் நாடாக மாற்றுவார்களா?’

‘டீ-ஈ-ஜே காஷ்மீரைப் பாகிஸ்தானுடன் இணைப்பது தான் சரி என்று அபிப்பிராயப்படுகிறார்கள். அதைத் தனி நாடாக ஆக்க வேண்டும் என்கிறார்கள். இப்படிப் பல பிரிவினை கும்பல்கள் வேலை செய்கின்றன. இருபதுக்கும் மேற்பட்டவர்கள்.’

‘இருபதா? ஏன் அவ்வளவு?’ என்றான் ஸெளரப்.

‘குழுக்களின் தலைவன் பதவிக்குச் சண்டை வரும். பிரிப்பார்கள். பிரித்து சொந்தக் குழுவைத் தொடங்குவார்கள்.’

‘அதிகாரத்துக்காக, இணைந்து செயல்படுவதன் சக்தியை இழக்கிறார்களா?’ என்றான் ஸௌரப்.

‘ஆமாம். யாருக்குக் காஷ்மீரிகள் மீது அக்கறை? இந்த இருபது குழுக்கள் நிஜமாகவே காஷ்மீர் மீது அக்கறை கொண்டிருந்தால், அந்தப் பள்ளத்தாக்கு இந்த நிலைமையிலா இருக்கும்?’

காஷ்மீர் நிலைமையைப் பற்றித் தெரிந்து கொள்ள சுவாரஸ்யமாக இருந்தாலும், திசை திருப்ப வேண்டியிருந்தது.

‘அங்கிள், ஸாரி. இதற்கும், ஸராவுக்கும் என்ன தொடர்பு?’

‘என் பையன்,’ ஸஃப்தர் சொன்னார். ‘ஸரா டீ-ஈ-ஜே-வுடன் ஈடுபட்டுக் கொண்டுவிட்டாள் என்பது தான். சிகந்தர் தூண்டுதலால். ஏதோ நடந்திருக்கு. இதனால் அவர்கள்...’

ஸஃப்தர் பாதியில் நிறுத்தி மூச்சுவிட்டார்.

‘போலீஸிடம் இதைச் சொல்லியிருக்கலாமே. அவர்கள் உண்மையில் என்ன நடந்தது என்று கண்டுபிடிப்பார்களே,’ என்றேன்.

‘என் பெண்ணையும் அவர்கள் தீவிரவாதி என்று மட்டம் தட்டவா?’

‘ஸரா தீவிரவாதியாக இருக்க முடியாது. அவள் புத்திசாலி. காரண காரியம் அறிந்து செயல்படுபவள். விவாதத்திலும் போராட்டத்திலும் நம்பிக்கை கொண்டவள். அவளுக்கு வன்முறை என்றாலே வெறுப்பு,’ என்றேன்.

‘யாரைப் போய் இதையெல்லாம் நம்ப வைப்பது? அவள் உடன் பிறவா தம்பியே ஒரு தீவிரவாத கும்பலின் உறுப்பினன். அவள் பாகிஸ்தான் போனாள், அது சமூக வலைதளத்தில் பதிவாகி இருக்கு, இது போதாதா, ஊடகக் கழுகுகளுக்கு?’

‘பாகிஸ்தானா?’ என்றான் ஸௌரப்.

கடந்த வருடம் ஸராவின் இன்ஸ்டாகிராம் படம் நினைவுக்கு வந்தது. ஏதோ இலக்கிய விழாவுக்குச் சென்று புகைப்படங்கள் போட்டிருந்தாள்.

‘கராச்சி லிட்ரரி ஃபெஸ்டிவல் பற்றியா பேசுகிறீர்கள்?’ என்றேன்.

என் போனில் இன்ஸ்டாகிராமைத் திறந்தேன். அந்த லிஸ்ட்டில் மூன்று படம் போட்டிருந்தாள். ஃபாத்திமா புட்டோ

நிகழ்ச்சியில் அமர்ந்து எடுத்துக் கொண்ட ஸெல்ஃபி. இரண்டாவது லிட்ஃபெஸ்டின் நுழைவாயில். கராச்சி லிட்ஃபெஸ்ட் பெயர் பலகை. மூன்றாவது அவள் நிழல்படம், கிளிஃப்டன் கடற்கரையில், மாலையில் சூரியன் அஸ்தமிக்கும் வேளை. அவளுடைய நீளமான முடி காற்றில் பறந்து கொண்டிருந்தது. நான் இந்தப் படத்தைப் பார்த்துவிட்டு என்னைத் திரும்பவும் ஏற்றுக் கொள்ளச் சொல்லி எவ்வளவு கெஞ்சினேன் என்று எனக்குத் தான் தெரியும். அப்படியே கட்டுப்படுத்திக் கொண்டு நிகழ்காலத்துக்கு நினைவைத் திருப்பினேன்.

‘இந்த டிரிப்பா?’ என்றேன்.

ஸஃப்தர் நான் பேசிக் கொண்டிருக்கும் போதே என் போனையே பார்த்தபடி இருந்தார். ‘ஸரா எல்லா லிட்ஃபெஸ்டையும் எப்போதும் விடாமல் சென்று பார்ப்பாள். பெங்களூரு, கஸௌலி மற்றும் கொல்கட்டா. ஐந்து வருடங்களுக்கு முன் ஜெய்பூருக்கு அவளுடன் சென்றேன்.’

‘நான் இவற்றைப் பார்த்ததில்லை,’ என்றார் ஸஃப்தர். குரல் மென்மையானது. ஸ்கிரீனின் புகைப்படங்களை மெதுவாகத் தொட்டுப் பெரிதாக்கினார். ‘உனக்கு இவை எப்படிக் கிடைத்தன?’

‘அவள் இன்ஸ்டாகிராமில் ஏற்றியிருந்தாள். எல்லோரும் பார்க்கும்படி,’ என்றேன்.

ஸஃப்தர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

‘நான் என் பெண்ணை ரொம்ப மிஸ் செய்கிறேன்,’ என்றார்.

இறுதிச் சடங்கு போலில்லாமல் ரொம்ப இளகிப் போயிருந்தார் மனிதர்.

‘எங்களுக்கு உதவி செய்யுங்கள். யார் ஸராவை இப்படிச் செய்தது என்று கண்டுபிடிக்கலாம்,’ என்றேன்.

தலையசைத்தார்.

‘உனக்குப் புரியவில்லை. நாங்கள் இஸ்லாமியர்கள். மக்கள் சந்தேகத்துடன் தான் ஆரம்பிப்பார்கள். நீங்கள் இருவருமே கூட அப்படித்தான். நானே என் பெண்ணைக் கொன்றிருப்பேன் என்று தானே நினைத்தீர்கள்.

சௌரபும் நானும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

‘எல்லோருமே சந்தேக லிஸ்டில் தான், அங்கிள். யார் செய்தார்கள் என்று கண்டுபிடிக்கும் வரை,’ என்றேன்.

‘போலீஸ் டெஹ்ரீக்கை ஸரா கொலையுடன் இணைத்தால், இவளைத் தீவிரவாதி என்று முத்திரை குத்தி விடுவார்கள். என்னையும் தான். இஸ்லாமிய வியாபாரி, தீவிரவாதத்தின் ஆதரவாளனாகத் தானே இருக்கணும்.’

‘நீங்கள் அப்படியா?’ என்றேன். உணர்ச்சியற்ற முகத்துடன். என்னை ஆச்சரியமாகப் பார்த்தார்.

‘உனக்கு புத்தி கெட்டு விட்டதா? எனக்கு இது போன்ற தீவிரம் பிடிக்காது. என் மாநிலத்தையே நாசம் செய்துவிட்டனர். இந்த நாட்டின் நல்ல இஸ்லாமியன் மீதும் கறை படிய வைத்துவிட்டனர்; பணம் கொடுப்பதை விடு. அவர்கள் எல்லோரையும் கொலை செய்வதற்கே நான் பணம் கொடுப்பேன்!’ என்றார் குரலில் கோபம் கொப்பளிக்க.

ஸௌரப்பும், நானும் மௌனமாக நின்றோம். ஓரளவுக்குச் சமாதானப் படுத்திக் கொண்டு ஸஃப்தர் பேசினார்.

‘நான் என்ன செய்ய வேண்டும் என்னைச் சந்தேகிக்கப்படாமல் இருக்க எனக்கு எதுவும் பெரிதாகத் தெரியாது. அவர்கள் என்ன செய்யணுமோ செய்தார்கள்.’

‘அங்கிள், ஸராவின் அறை அப்படியே இருக்கு என்றீர்களே,’ என்றேன்.

‘ஆமாம்.’

‘உங்களுக்குச் சம்மதமானால் அதைச் சோதனை போட விரும்புகிறோம்,’ என்றேன்.

❖

எங்கள் மொத்த மாளவியா நகர் அபார்ட்மெண்ட்டை விட ஸராவின் அறை பெரியது. நான்கு போஸ்டர் கொண்ட தேக்கு மரக் கட்டில். நடுவில் வேலைபாட்டுடன் இருந்தது. அதன் மீது நீல நிற எம்பிராய்டரி செய்த விரிப்பு. எனாமல் செய்த சைட்போர்ட்டில் பிரேம் போட்ட படங்கள். ராஜஸ்தானின் உயர்ந்த ஹெரிடேஜ் ஹோட்டலை நினைவூட்டும் அறை. கர்டன் கலரைத் தவிர அவள் அறையில் வேறு எந்த வித்தியாசத்தையும் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் பல வருடங்களுக்கு முன்பு வந்தபோது எப்படி இருந்ததோ அப்படியே இருந்தது. நுட்பமாக வேலை செய்யப்பட்ட கம்பளம். ஜினியா மலர்கள் பின்னப்பட்டது, இன்னமும் இருந்தது.

‘அவள் அறையைத் தினமும் சுத்தம் செய்கிறோம்,’ என்றார் ஸஃப்தர். ‘அவள் இன்னமும் இங்கே வாழ்கிறாள்.’

ஃபிரேம் போட்ட புகைப்படங்களை நோட்டமிட்டேன். குடும்பத்தாருடன் விடுமுறைக்கு சென்று எடுத்துக் கொண்டவை. இந்தியா கேட் வாசலில் ரகுவுடன் கைகோர்த்து எடுத்துக் கொண்ட புகைப்படம், குழந்தை ஸரா அப்பா அருகே நிற்கிறாள். சம்பிரதாயமான காஷ்மீர் கஃப்தான் அணிந்த பெண்ணுடன் ஒரு சிறுவனும் நின்றிருந்தான்.

‘இது தான் சிகந்தரா?’ என்றேன்.

‘ஆமாம். அது என் முன்னாள் மனைவி, ஃபர்ஜானா,’ என்றார் ஸஃப்தர். ‘அந்த ஒரே ஒரு கடந்த காலப் புகைப்படத்தை மட்டுமே இந்த வீட்டில் நான் அனுமதித்திருக்கேன்.’

ஆறு புராதான அலமாரிகள். ஸரா தன் உடைகள் மற்றும் சொந்த பொருட்களை அதனுள் வைத்திருந்தாள்.

‘அங்கிள், அவற்றைத் திறந்து பார்க்கலாமா?’ என்றேன்.

ஸஃப்தர் ஆமோதித்தார். ஸௌரப்பும் நானும் மூன்றாகப் பிரித்துக் கொண்டோம். நான் முதல் அலமாரியைத் திறந்தேன். ஸராவின் உடைகள். எங்கள் முதல் அனிவர்ஸரி வருடம், ஜோடியாகச் சேர்ந்தபின் என்பதற்காக அவளுக்கு நான் வெள்ளை, சிவப்பு ஸல்வார் கமீஸ் பரிசளித்திருந்தேன். அது அலமாரியில் இருந்தது. அவளுடைய நகை டப்பா - நெக்லஸ், தோடு, தலையில் போடும் கிளிப். பார்க்கக் கூடாததைக் குடைபவன் போன்ற ஒரு அச்ச உணர்வு.

‘என்ன கண்டுபிடிக்கப் போறே?’ என்றார் ஸஃப்தர் லேசான ஆர்வத்துடன்.

‘தெரியவில்லை,’ என்றேன், இரண்டாவது அலமாரிக்கு நகர்ந்தேன். ‘இது போல் முன்னர் எதுவும் செய்ததில்லை.’

இரண்டாவது அலமாரி. அவள் உள்ளாடைகள் அதை மூடிவிட்டு மூன்றாவது அலமாரிக்குச் சென்றேன். ஹேண்ட் பேக் மற்றும் ஷுக்கள்.

‘ஏதாவது கிடைத்ததா?’ என்றேன் ஸௌரப்பிடம்.

‘உடைகள், உடைகள், மேலும் உடைகள்,’ என்றான் ஸௌரப். நான்கு அலமாரி முழுவதும் உடைகள் நிரப்பியிருந்தாள் ஸரா.

நாற்பத்தி ஐந்து நிமிடங்களுக்குப் பின் அவள் உள்ளாடைகளைத் தவிர அனைத்தையும் தேடிப் பார்த்து விட்டோம்.

‘அதைப் பார்த்தாயா?’ என்று ஸௌரப் சுட்டிக் காட்டினான்.

‘இல்லை, வேண்டாம் என்று நினைக்கிறேன்,’ என்றேன்.

ஸௌரப் ஸஃப்தரை ஓரக் கண்ணால் பார்த்தான். ஸஃப்தர் தன் போனைப் பார்த்துக் கொண்டிருந்தார். எங்களின் வேலையத்த வேலை அவருக்கு போர் அடித்தது போல் பட்டது.

‘அங்கிள், மன்னிக்கவும்,’ என்றான் ஸௌரப். இரண்டாவது அலமாரியைக் காட்டி ‘நாங்கள் அதைப் பார்க்கலாமா,’ என்றான்.

‘என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். நான் நிறுத்தினால். என்னைச் சந்தேகப்படுவீர்கள். வெட்கமில்லை, உங்களுக்கு? என் இறந்த மகளின் பொருட்களைச் சோதிக்கிறீர்கள்?’ என்றார் ஸஃப்தர் போனைப் பார்த்தபடியே.

‘ஸாரி, அங்கிள். நாங்கள் வந்து …’ என்று ஸௌரப் ஆரம்பித்த போது அவனை அடக்கினேன்.

இரண்டாவது அலமாரியைத் திறந்தேன். ஒவ்வொரு படியிலும் கேன்வாஸ் டப்பாக்கள் இருந்தன. பிரா மற்றும் லேஸினால் ஆன உள்ளாடைகள்; சிலவற்றை டப்பாக்களில் இருந்து எடுத்தான் ஸௌரப்.

‘இதைப் பார்க்க வேண்டாம்,’ என்றேன்.

‘சரி,’ என்று அவற்றைத் திரும்ப உள்ளே வைத்தான். ஒரு டப்பாவை அலமாரிக்குள் தள்ளினேன். பின்னர் ஏதோ ஒன்று தடுத்தது.

‘என்ன அது?’ என்று என் கையை உள்ளே விட்டுப் பார்த்தேன். ஏதோ கீ பேட் போல் தட்டுப்பட்டது. ‘இது ஒரு ஸேஃப்,’ என்றேன்.

‘வெளியே இழு,’ என்றான் ஸௌரப்.

ஸஃப்தரும் பார்த்தார்.

‘என்ன அது?’

‘அங்கிள், உள்ளே ஒரு சிறிய காத்ரேஜ் ஸேஃப் இருக்கு,’ என்றான் ஸௌரப். அந்த இரும்புப் பெட்டியை அலமாரியிலிருந்து இழுக்கப் பார்த்தான். முடியவில்லை. ஸஃப்தர் எங்களருகே நடந்து வந்தார்.

‘எனக்கு இது நினைவிருக்கு. இதை ஆன்லைனில் வாங்கினாள். ஏதோ நகை, பணம் வைக்க வேண்டும் என்றாள்.’

‘இது பின்னால் தாழிடப்பட்டு வைக்கப்பட்டிருக்கு,’ என்றார் ஸௌரப்.

‘ஆமாம். நான் தான் அப்படிச் செய்து கொடுத்தேன்,’ என்றார்

ஸஃப்தர்.

‘இதன் கீ பேடு கோட் தெரியுமா, அங்கிள்?’ என்றேன்.

‘ஸஃப்தர் தலையசைத்தார்.’

‘ஏதாவது சாவி இருக்கணுமே,’ என்றான் ஸௌரப்.

‘என்னிடம் இல்லை,’ என்றார் ஸஃப்தர்.

மொத்த அறையையும் ஒரு மணி நேரம் தேடினோம். ஆனால் சாவியைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

‘உடைத்துத் தான் திறக்கணும்,’ என்றான் ஸௌரப்.

‘எப்படி?’ என்றார் ஸஃப்தர்

‘சிறிய ஸேஃப் தானே, ஒரு ஹார்ட்டுவேர் கடைக்காரர், மெடல் கட்டர் வைத்துத் திறந்து விடுவார்,’ என்றான் ஸௌரப்.

❖

‘கிளாங்!’ வெல்டிங் டார்ச்சினால் முன்னால் இருந்த பிளேட்டை வெட்டினார் கடைக்காரர். ஐந்து நிமிட வேலைக்கு ஆயிரம் ரூபாயை வாங்கிக் கொண்டு கிளம்பினார்.

அதிலிருந்தவற்றைக் காலி செய்து ஸராவின் பெட்டின் நடுவில் வைத்தேன். ஸஃப்தர், ஸௌரப், நான் என்று மூவரும் அதைச் சுற்றி அமர்ந்தோம்.

ஒவ்வொரு ஐட்டமாக எடுத்தேன். முதலில் பாஸ்போர்ட்.

‘இது ஸராவின் பாஸ்போர்ட்,’ என்றார் ஸஃப்தர்.

‘நான் லிஸ்ட் எழுதட்டுமா?’ என்றான் ஸௌரப். போனை எடுத்தபடி.

‘நிச்சயமாக,’ என்றேன்.

நான் சொல்லச் சொல்ல ஸௌரப் எழுதிக் கொண்டே வந்தான்.

‘உலக நாடுகளின் சர்வதேச கரன்ஸி. இந்திய ரூபாய் சுமார் இருபதாயிரம் அமெரிக்க டாலர் தொள்ளாயிரம். பாகிஸ்தானி கரன்ஸி, பத்தாயிரம் ரூபாய்.’

ஸஃப்தரின் போன் அடித்தது.

‘என் கோடவுனில் இருந்து கால். இதைப் பேசிவிட்டு வருகிறேன். என்ன வேண்டுமோ செய்யுங்கள். நான் என் ஸ்டடி ரூமில் இருப்பேன்.’ ஸஃப்தர் அறையை விட்டு வெளியேறினார்.

ஸஃப்தர் கிளம்பியதும் நான் ஸௌரப்பைப் பார்த்தேன்.

‘அவர் உண்மையானவராகத் தான் தெரிகிறார்.’ இல்லை ஏமாற்றுப் பேர்வழியா?’ என்றேன்.

‘சொல்ல முடியாது. ஆனால் தேடுவதைத் தடுக்கவில்லையே.’

‘நல்லது. நாம் தேடிக் கொண்டே இருப்போம். வெல்வெட் பௌச். இதில் என்ன? தோடுகள்,’ என்றேன்.

‘தங்கத்தோடு. வைரம் மற்றும் விலைமதிப்பற்ற கற்கள் பதித்த வேலைப்பாடு. அந்தக் காலத்து மாடல்,’ என்றேன்.

‘ரொம்ப விலைபிடித்ததோ?’ என்று ஸௌரப் விவரங்களைக் குறித்துக் கொண்டான்.

ஸேஃபின் மற்றவற்றையும் பார்த்தேன்.

‘பழுப்பு நிறக் காகிதப் பை,’ என்றேன். பையைத் தலைகீழாகக் கவிழ்த்தேன். நிறைய விஷயங்கள் வெளியே விழுந்தன.

‘இது என்ன?’ என்றான் ஸௌரப். மூன்று வெள்ளை காகித டப்பாக்களை எடுத்தான். சாக்லேட் டப்பாக்கள் போலிருந்தன.

‘பிரெகா நியூஸ்,’ என்றது டப்பா மேல்.

‘பிரெக்னன்ஸி கிட்ஸ் - கர்ப்பமா என்று சோதிக்க,’ என்றேன்.

‘ஆமாம். கரீனா கபூர் விளம்பரம் செய்வதைப் பார்த்திருக்கேன். கர்ப்பமாக உதவுமா?’

‘அட முட்டாளே! கர்ப்பமா என்று பரிசோதித்துச் சொல்லும் ஸரா எதற்கு இவற்றை வைத்திருந்தாள்?’ என்றேன்.

ஸௌரப் தோள் குலுக்கினான்.

ஒவ்வொரு டப்பாவிலும் ஒரு சிறிய ஸ்டிக்கர். அதில் பார்கோடு மற்றும் ‘பிரெக்கிட் ஐஎன்ஆர் 50,’ என்று எழுதியிருந்தது.

‘அவள் உறவில் இருந்தாள்,’ என்றேன். நானே என் கேள்விக்குப் பதிலளித்தேன். ‘நிச்சயம் வேறு செய்யப்பட்டிருந்தது.’

என் தொண்டையில் உருண்ட துக்கத்தை விழுங்கினேன். அடுத்த ஐட்டத்தைக் கையில் எடுத்தேன்.’

‘ஒப்போ போன் பாக்ஸ்,’ என்றேன். இதில் ஸெல் போன். ‘இதை ஆன் பண்ணு,’ என்றான் ஸௌரப்.

ஒரு நிமிடத்தில் போன் பூட்டானது. நெட்வொர்க்கில் இணைந்தது. அதில் ஸிம் கார்டு இருந்தது. நம்பர் லாக் இல்லை.

‘ஸராவின் போனா?’ என்றான் ஸௌரப்.

‘இல்லை. அதிகம், பயன்படுத்தும் போன் இல்லை. அவளிடம் ஐ-போன் இருந்தது.’

‘இது என்ன நம்பர்?’ என்றான் ஸௌரப்.

கண்டுபிடிக்க எனக்கு டயல் செய்து கொண்டேன். என் போன் அடித்தது.

‘என்ன இது? நம்பர் +92 என்று தொடங்குகிறது,’ என்றேன் போனைப் பார்த்து.

‘மச்சி, இது பாகிஸ்தான் நம்பர். பாக் ஸிம்.’

போனைத் தள்ளி வைத்தேன். பாகிஸ்தான் என்றால் கிடுகிடுத்துப் போய்விடும்.

‘அவளிடம் பாக் ஸிம்மா?’ என்றேன். ‘நம்பரை நோட் பண்ணு. போனில் ஏதாவது இருக்கா? கான்டாக்ட்ஸ்? புகைப்படம்?’ என்றான் ஸௌரப்.

போனைத் திறந்தேன். மூன்று கான்டக்ட் தான் இருந்தன. ஆங்கில எழுத்துக்கள். எஸ், ஐ. மற்றும் டபிள்யூ!

நான் புகைப்பட லைப்ரரிக்குச் சென்றேன்.

‘கராச்சி லிட்ஃபெஸ்ட். புகைப்படங்கள் இருக்கு,’ என்றேன். படங்களைப் பார்த்துக் கொண்டே வந்தேன். ‘நில்லு, ஸராவும், சிகந்தரும் எடுத்துக் கொண்ட ஸெல்ஃபி.’

‘காட்டு, என்றான் ஸௌரப். ‘அவன் மெஷின் கன் பிடித்துக் கொண்டிருக்கிறான்.’

தரையில் அமர்ந்திருந்தனர். ஹோட்டல் அறை போலிருந்தது. சிகந்தர் கையில் துப்பாக்கி.

‘அடச்சே! அவன் தீவிரவாதி,’ என்றேன்.

‘அவர்கள் சிரிக்கிறார்கள், ஸராவும் கூட,’ என்றான் ஸௌரப். எனக்குத் தலை சுற்றியது. ஸரா அவர்களில் ஒருத்தியா? டெஹ்ரீக்கா? வேறு யாராவதா?

படம் எடுத்த அறையில் ஒரு ஜன்னல் தெரிந்தது. அதிகம் தெளிவாகத் தெரியவில்லை. நிறைய வயர்கள், விளம்பரப் பலகைகள், பேனர்கள்.

‘இதுவும் பாகிஸ்தானில் எடுக்கப்பட்டதா?’ ஸௌரப் கேட்டான். நான் படத்தை ஜூம் செய்தேன். தெளிவு குறைந்தது. ஆனால் விளம்பரத்தில் இரண்டு தேவநாகரி எழுத்துக்கள் தெரிந்தன.

‘ஹிந்தி விளம்பரங்கள் வெளியே தெரிகின்றன. அவர்கள் இந்தியாவில் தான் இருந்திருக்கிறார்கள்,’ என்றேன்.

போனை ஒதுக்கிவிட்டு அடுத்த ஐட்டம் என்ன என்று பார்த்தேன்.

‘பிஸினெஸ் கார்டு,’ என்றேன். ‘உருதுவா?’ அல்லது அரபிக்?

ஸௌரப் தலையசைத்தபடி விவரங்களைக் குறித்துக் கொண்டான். அவனுக்குப் புரியவில்லை/

‘சிறிய பிளாஸ்டிக் பௌச்,’ வெள்ளைப் பொடி,’ என்றேன்.

‘டால்கம் பொடியா?’ என்றான்.

‘டால்கம் பௌடரை எதற்கு ஸேஃப்பில் வைக்கிறாள்? ருசித்துப் பார்,’ என்றேன்.

‘உனக்கென்ன பைத்தியமா? அது ஸையனைடாக இருக்கலாம். இந்தத் தீவிரவாதிகளை நம்ப முடியாது.’

ஸரா தீவிரவாதி கிடையாது, என்று சொல்ல வந்தேன். ஆனால் ஸரா லோன், அற்புதமான பெண் என்று நினைத்தால், ஸேஃபில் எதற்கு இதை எல்லாம் வைத்திருக்கிறாள்?

‘பித்தளைக் குப்பியா? புல்லெட்டா?’ என்றேன்.

ஸௌரப் அந்த சக்தி வாய்ந்த புல்லெட்டை எடுத்தான்.

‘ஆமாம்,’ என்றான் ஸௌரப். ‘வேறு என்ன?’

‘பாகிஸ்தான் சில்லரைக் காசுகள்.’

‘சரி, போட்டோ எடுக்கலாம்.’

ஸௌரப் தன் போனை எடுத்து ஸேஃபில் இருந்த ஐட்டங்களைப் படமெடுத்தான்.

‘எனக்குத் தெரிந்த ஸரா இது இல்லை,’ என்றேன்.

‘மச்சி, பெண்கள் மனதில் என்ன நடக்குது என்று யாராலும் சொல்ல முடியாது,’ என்று புல்லெட்டை ஜவம் போட்டு எடுத்தான்.

ஸஃப்தர் தன் போன்காலை முடித்துவிட்டு ஸராவின் அறைக்குள் வந்தார்.

‘அடக் கடவுளே,’ என்றார். கர்ப்ப கிட் மற்றும் புல்லெட்டைப் பார்த்தார். ‘என்ன இதெல்லாம்?’

‘உங்களைக் கேட்கணும். உங்கள் வீட்டில் இருந்து எடுத்தது,’ என்றான் ஸௌரப்.

ஸஃப்தர் போனை எடுத்து ஸராவும், மெஷின் கன் பிடித்த சிகந்தரும் இருந்த படத்தைப் பார்த்தார்.

‘நான் அல்லா மீது சத்தியம் செய்கிறேன். எனக்கு இது என்ன என்று தெரியாது,’ என்றார்.

வெள்ளை பாக்கெட்டை எடுத்தார். ‘என்ன இது?’

‘தெரியவில்லை,’ என்றேன். ‘இதை உங்களால் படிக்க முடியுமா?’

‘ஹஷீம் அப்துல்லா, கமாண்டர், டெஹ்ரீக்-இ-ஜிஹாதி,’ என்றார் ஸஃப்தர்.

‘வேறு ஏதாவது?’ என்றேன்.

‘இல்லை. போன் நம்பர், விலாசம் எல்லாம் இல்லை.’

ஸஃப்தர் ஒரு நிமிடம் யோசித்துவிட்டுத் தலையசைத்தார்.

‘நீ அவளைக் காதலித்தாய்,’ என்று ஸஃப்தர் வெளியேறப் புறப்பட்டார். அது கேள்வியில்லை. ஆனாலும் நான் பதிலளித்தேன். ‘ஆமாம்.’

‘அவளும் உன்னை ரொம்ப விரும்பினாள், கேஷவ்.’

‘அப்படியா?’

‘ஒரு குடும்பத்தில் இணையணும் என்று ரொம்ப ஆசைப்பட்டாள். உன்னிடம் அது கிடைக்கும் என்று நம்பினாள். உன் பெற்றோர்களுக்கு அவளைப் பிடிக்கவில்லை என்றதும் உடைந்து போய் விட்டாள்.’

நான் மௌனமாகயிருந்தேன். இது எனக்கு எவ்வளவு வேதனை தரும் என்று யோசித்தாரா?

‘உன்னை மதம் மாறச் சொன்னதற்காக என்னுடன் ஒரு வருஷம் சண்டை போட்டாள். அவள் உன்னை இழந்துவிட்டாள்; என்னிடமிருந்தும் விலகி நின்றாள். அப்பொழுது தான் சிகந்தருடன் சேர்ந்தாள்.’

‘இருக்கலாம். நான் அவளுடன் திரும்ப இணைய முயற்சித்தேன். ஆனால் என்னை ஒதுக்கினாளே?’ என்று முணுமுணுத்தேன்.

‘நீ அவளைக் காதலித்தாலும், அவளுக்கு வேண்டியதை உன்னால் கொடுக்க முடியவில்லை-ஒரு ஸ்திரமான குடும்பம். என்னாலும் முடியவில்லை. என் மூன்று திருமணங்கள் ... ஆட்டம் கண்டு விட்டாள். அம்மாவை இழந்தாள். பிறகு சிகந்தர். பிறகு நீ, என் பாவப்பட்ட மகள் தனியாக நிறைய அனுபவித்துவிட்டாள்.’

‘ஸாரி, அங்கிள்,’ என்றேன் மென்மையாக. ‘இதெல்லாம் எனக்குச் சொல்லவே வேண்டாமே.’

ஸஃப்தர் என் பேக் பேக்கைக் காண்பித்தார்.

‘இவை போலீஸுக்கோ, ஊடகத்துக்கோ போனால் எல்லாமே முடிந்துவிடும். ஸராவைக் காதலித்தாய் என்கிறாய். அவளைத் தீர்மானமாக தீவிரவாதி என்று முத்திரை குத்திவிடுவார்கள்.’

‘நான் யாரிடமும் சொல்ல மாட்டேன். ஏன் என்றால் இது வெளியே வந்தால் கொலையாளிகள் சுதாரித்துக் கொண்டு விடுவார்கள்,’ என்றேன்.

‘மச்சி, நிஜமாவா சொல்றே? இன்னமும் கொலையாளியைத் துரத்தும் எண்ணத்தில் இருக்கே?’ என்றான் ஸௌரப். பிறகு நேரம் கழித்து. ‘ஏன்? செய்யக் கூடாதா?’ என்றேன்.

‘தீவிரவாதிகள் சம்பந்தப்பட்டிருந்தால், நம் மூளைகளைத் தெறிக்கவிட்டு விடுவார்கள்,’ என்றான் ஸௌரப். பெட்டிலிருந்து இறங்கினான்.

‘இதைப் பற்றி பிறகு பேசலாமா?’ என்றேன் ஸௌரபிடம்.

‘பேச ஒன்றும் இல்லை. நான் வீட்டிற்குப் போகிறேன்’ என்றான் ஸௌரப். பேசியபடி ஸராவின் பெட்ரூமிலிருந்து வெளியேறினான்.

‘உன் நண்பன் சொல்வது தான் சரி. இந்த ஆட்கள் பயங்கரமானவர்கள். வலிக்கத் தான் செய்கிறது. ஆனாலும் அவர்கள் தான் ஸராவைக் கொன்றார்கள் என்று ஒப்புக்கொண்டு நகர்வது தான் நல்லது,’ என்றார் ஸஃப்தர்.

நான் என் பாக்பேக்கை ஜிப்பிபை இழுத்து மூடினேன், என் பின்னால் மாட்டிக் கொண்டேன், எழுந்தேன்.

என் வாழ்க்கையில் ஒரு பிரச்சனை இருக்கு, அங்கிள், என்னால் ‘நகர்ந்து செல்லவது என்பது.’ எப்போதுமே முடியாத்து.’

# அத்தியாயம் 17

‘இன்னுமா கோபம்? கொஞ்சம் சாப்பிடு, அதையாவது செய்,’ என்றேன். உணவு இடைவேளையில் சந்தன் கிளாஸின் ஸ்டாப்ரூமில் நானும் ஸௌரபும் இருந்தோம். மூன்று நாளாக அவன் என்னுடன் பேசவில்லை. ஆபரேசன் தியேட்டர் போல் எங்கள் வீடு மௌனமாக இருந்தது. மௌனமாகத் தங்கள் வேலையில் ஈடுபட்டிருக்கும் டாக்டர்கள் போல் ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளாமலே நாங்கள் இருவரும் தினசரி வேலைகளைச் செய்து கொண்டிருந்தோம். எல்லாவிதமான வேட்டைகளையும் - விஸ்கி, ரஸகுல்லா, ரொம்ப துல்லியமான ஆபாசப் படங்கள் - அவன் கவனத்தைத் திருப்பச் செய்துபார்த்து விட்டேன். எதற்குமே அவன் மசியவில்லை, ஒரு வார்த்தை கூட பேசவில்லை. அவன் கத்துவது, திட்டுவது, பொருட்களை உடைப்பது போன்றவற்றையும் கூட செய்யவில்லை. இல்லை, ஸௌரப் பாதிக்கப்பட்டால் அவன் உள்ளுக்குள்ளேயே புழுங்குகிறான்.

அதே அறையில் சற்று தள்ளி, மேலும் இரு பயிற்சியாளர்கள் உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்.

‘நான் ஃபிரெஷ்ஷான ஷோலே பட்டூரே ஆர்டர் செய்திருக்கிறேன். குறைந்தபக்ஷம் அதிலிருந்து ஒன்று எடுத்துக் கொள்,’ என்றேன். பொரித்த பட்டூரே, மசாலா மணம் கமழும் சோலேயின் வசீகரிக்கும் வாசனை அவன் மூக்கைத் துளைத்தது. அவன் எல்லா உணர்வுகளையும் அடக்கிக் கொண்டு, உணவை அலட்சியப்படுத்தினான். ஐந்து அங்குல தடிமனான ஆர்கானிக் கெமிஸ்டிட்ரி புத்தகத்தைத் - ஜிம்மிற்குப் போய் தசைகளை வலுவேற்றிக் கொள்பவர்களுக்குக் கூட கனமானதாக இருக்கும் அது-தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தான். எந்த ஒரு குறிப்பிட்ட காரணமும் இல்லாமல் பென்ஸீன் மாலிக்யூலின் அறுகோண வடிவத்தையே முறைத்துக் கொண்டிருந்தான்.

‘நம்மை ஒரு நாளும் ஆபத்தில் நான் சிக்கவைக்க மாட்டேன், வா, கொலையாளி யார் என்பதைக் கண்டுபிடிக்க

உனக்கு மட்டும் விருப்பமில்லையா?'

'ஆர்வம் இல்லைதான், அவர்கள் மெஷீன் கன்னோடு ஸெல்ஃபி எடுத்துக் கொள்ளும் கொலையாளியாக இருந்தால்.'

'ஆஹா, கடைசியில் இந்த மனிதன் பேசிவிட்டான். உனக்கு ஆர்வமில்லை என்று என்னிடம் சொல்லாதே?'

'மச்சி, ஆர்வம் இருக்கிறதா இல்லையா என்பதில்லை. ஒரு டஜன் குண்டுகள் என் உடலைத் துளைப்பதை நான் விரும்பவில்லை. நீ ஒரு தீவிரவாத அமைப்பைத் தேடி விசாரிக்கப் போகிறாய் இல்லையா? விளையாட்டுக்காக மக்களைக் கொல்லும் நபர்கள்?'

'அந்த அமைப்பின் மீது எனக்கு எந்த ஆர்வமும் இல்லை. ஸராவுக்கு என்னவாயிற்று என்பதைத்தான் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.'

'ஏன்? என்றான் ஸௌரப். சற்றுத்தள்ளி அமர்ந்திருந்த அந்த இருவரும் திரும்பிப் பார்க்கும் அளவுக்குச் சத்தமாகக் கேட்டான்.'

'மெதுவாகப் பேசு,' என்றேன்.

'என்னவோ பண்ணிக்கொள். தொலைந்துபோ!'

'நான் யாரிடமாவது நெருக்கமாக இருக்க விரும்புகிறேன், கோலு. ஸராவிடம் எனக்கு அது கிடைக்கவில்லை. அவள் என்னை விட்டுப் போனவுடன் எல்லா தொடர்புகளையும் சட்டென்று துண்டித்து விட்டாள். திரும்ப இணையலாம் என்று அவள் விரும்பியபோது இந்த உலகை விட்டே போய்விட்டாள் - பல கேள்விகளுக்குப் பதில் கிடைக்காமலே.'

'ஸாரி, இந்த நெருக்கம், இணைப்பு இதையெல்லாம் நீயே செய்துகொள். நெருக்கம் என்பதற்கு உண்மையான அர்த்தம் என்ன, மச்சி?'

'அதை மறந்துவிடு.'

'எனக்குப் பெண் தோழியே இருந்ததில்லை. அதனால் இதெல்லாம் எனக்குத் தெரியாது. அவற்றை எதிர்கொள்ளவும் தெரியாது. அது நல்லதற்குத்தான்!'

'நீ எனக்கு உதவுவதாகச் சொல்லியிருக்கிறாய். இதயம்-மூளை, நினைவிருக்கிறதா?'

'மச்சி, நீ உன்னுடைய மூளையையே பயன்படுத்திக்கொள். இல்லையென்றால் அவர்கள் உன்னுடைய தலையை வெட்டி விடுவார்கள். காலேஜ் டீனுடைய மனைவியை நைட்டியில்

பார்ப்பது போல் இது ஒன்றும் எளிதானதல்ல. இது டெஹ்ரீக்-இ-ஜவ்ம்மா!'

'டெஷ்ரீக்-இ-ஜிஹாத்,' என்றேன் சிரித்துக்கொண்டே.

'ஏதோ ஒன்று. அலமாரியிலிருந்து எடுத்தவற்றை ரானாவிடம் கொடுத்துவிடு. அதெல்லாவற்றையும் அவர் பார்த்துக் கொள்வார்.'

'ஆமாம், அவர் எல்லாவற்றையும் செய்துவிடுவாராக்கும். லக்ஷ்மண் ஜெயிலில் அழுகுவதில் அவருக்குச் சந்தோஷம்.'

'அது லக்ஷ்மணின் துரதிருஷ்டம். இது மாதிரிதான் நாட்டின் வழக்குகளுக்குத் தீர்வு காண்போம் என்றால் அது நாட்டின் துரதிருஷ்டம். நமக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை.'

'எனக்குப் புரிகிறது. இது பற்றி என்ன சொல்கிறாய்-கடைசியாக நாம் போலீஸுக்குப் போவோம், ஆனால் அதற்கு முன்னால் நாம் கொஞ்சம் விசாரணை செய்வோம். ஜாக்கிரதையாக!'

'எப்படி?'

'நான் சொல்கிறேன். முதலில் அந்த சோலே-பட்டுராவைச் சாப்பிடுகிறாயா? இந்த பட்டுரே எவ்வளவு சாஃப்டாக இருக்கு, பாரேன்,' என்றேன்.

உணவு இருந்த பிளேட்டை அவன் பக்கம் நகர்த்தினேன். தன் காணாமல் போன குழந்தையைப் பலவருஷங்களுக்குப் பிறகு கண்டுபிடித்ததைப் போல் ஸௌரப் தட்டைப் பார்த்தான்.

'நான் காலை உணவு கூட சாப்பிடவில்லை,' என்றான் ஸௌரப்.

'ஏன்?'

'நான் பாதிக்கப்பட்டிருக்கிறேன் என்பதை உனக்குக் காண்பிப்பதற்காக,' என்ற ஸௌரப், பட்டுரேவைப் பிட்டுத் தின்னத் தொடங்கினான். ஒரு குகை மனிதனைப் போல், பத்து அங்குல நீளமுள்ள உப்பிய பட்டுரேவை சில வினாடிகளில் பிய்த்துத் தின்றான்.

'சாப்பாட்டில் உன் கோபத்தைக் காட்டாதே,' என்றேன்.

'டியூஷன் வாத்தியார்களான நம்மால் எந்தவிதமான விசாரணையை மேற்கொள்ள முடியும்?' ஸௌரப் கேட்டான்.

முதலாவதை முடிக்குமுன்பே இரண்டாவது பட்டுரேவைத் தன்பக்கம் இழுத்துக் கொண்டான்.

'எதுவும் பெரிதாக நான் திட்டம் போடவில்லை. நான் சும்மா

சகந்தரிடம் மட்டும் பேச விரும்புகிறேன். என்ன இருந்தாலும் அவன் ஸராவின் குடும்பத்தைச் சேர்ந்தவன் இல்லையா?'

'ஓ, மாற்றாந்தாயின் பிள்ளையா? போனின் பாஸ்வேர்டு போல ஏகே 47-ஐ தூக்கிக் கொண்டு அலைகின்ற அவனா?'

'அவனுடன் நாம் முதலில் போனில் பேசிப்பார்க்கலாம்.'

'போ, அதெல்லாம் வேண்டாம், மச்சி. ஒரு தடவை உன் போன் நம்பர் அவர்களுக்குக் கிடைத்துவிட்டால் பிறகு உன்னைத் தொடர ஆரம்பிப்பார்கள்.'

'பாகிஸ்தான் சிம்மிலிருந்து அவனைக் கூப்பிடுவோம். அதில் 'எஸ்' என்று இருப்பது அவனுடைய நம்பராகத்தான் இருக்கும்.'

'மச்சி,' என்றவன் மௌனமாக இருந்தான்.

'என்ன?'

ஸௌரப் கையைத்தூக்கி, என்னைக் காத்திருக்கும்படி சொன்னான். ஐந்து வினாடிகளுக்குப் பிறகு ஒரு பெரிய ஏப்பம் விட்டான். அந்த இரு டீச்சர்களும் எங்களை அருவருப்புடன் பார்த்தார்கள்.

'நல்லா இருக்கே,' என்றேன்.

'எப்படியானாலும், நீ அவனைப் போனில் கூப்பிடலாம். ஆனால் நான் முன்னமே சொன்னதுபோல் காரணமேயில்லாமல் நீ கத்தியைக் கையில் எடுக்கிறாய் என்று உனக்குச் சொல்லி வைக்கிறேன்.'

❖

என்னுடைய அறையில் கட்டிலில் கம்பளியைப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தோம்.

'யெஸ்' என்பது அவன் தான் என்று உனக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டான் ஸௌரப்.

'நாம் கண்டுபிடிப்போம்,' என்றேன். அந்த நம்பரை டயல் செய்தேன். ஒவ்வொரு முறை அடிக்கும்போது என் இதயத்துடிப்பின் வேகம் அதிகரித்தது. யாருமே போனை எடுக்கவில்லை.

பத்துமுறை அடித்தபிறகு நான் அழைப்பைத் துண்டித்தேன். தலையை ஆட்டினேன்.

'பதில் இல்லையா?' என்றான் ஸௌரப்.

'ஆமாம், ஒருவரும் பேசவில்லை!'

‘இத்துடன் ஸரா லோன் புலன்விசாரணை ஒரு முடிவுக்கு வருகிறது. குட்நைட்,’ என்றான் ஸௌரப். படுக்கையில் சரியாகப் படுத்துக்கொண்டு கம்பளியால் உடலை மூடிக் கொண்டான்.

‘இன்னொருமுறை முயற்சி செய்து பார்க்கிறேன்,’ என்றேன். திரும்பவும் டயல் செய்தேன். ஒருவரும் எடுத்துப் பேசவில்லை.

‘பண்ணிக் கொண்டேயிரு. யாருமே எடுக்கப்போவதில்லை,’ என்றான் போர்வைக்குள்ளிருந்து. ‘மச்சி, வேறு பக்கத்தைப் பற்றி யோசி-நான் ஏற்கெனவே சொன்னமாதிரி டின்டர் பக்கத்தை முயற்சி செய். பணம் இல்லாமலேயே உன்னோடு படுக்க யாராவது வருவார்கள்.’

நான் அவனை அலட்சியப்படுத்திவிட்டு, போனைத் தள்ளி வைத்தேன்.

‘உன் அறைக்குப் போய் தூங்கு ஸௌரப்.’

‘இல்லை, மச்சி, தீவிரவாதிகளைப் பற்றி இவ்வளவு பேசியபிறகு தனியாகப் படுத்துக் கொள்ள எனக்குப் பயமாக இருக்கிறது!’ என்றான்.

‘கோலு, உன் உடம்பின் அளவைப் பார். தனியாகப் படுத்துக் கொள்ள நீ எப்படி பயப்படலாம்?’

ஸௌரப் பதில் சொல்லவில்லை. தூங்குவது போல் பாசாங்கு செய்தான்.

கட்டிலுக்கருகில் இருந்த விளக்கை அணைத்தேன். அவன் அருகில் படுத்துக் கொண்டு மேல் கூரையில் அசையாமல் இருந்த மின் விசிறியைப் பார்த்துக்கொண்டிருந்தேன். ஏராளமான எண்ணங்கள் என் மண்டைக்குள் ஓடின. ஸராவை எனக்கு உண்மையிலேயே தெரியாதா? யாருக்கோ உரியவளான அவளுக்காக உருகி கற்பனை பண்ணிக் கொண்டிருக்கிறேனா? அல்லது நாங்கள் பிரிந்தபிறகு அவள் மாறிவிட்டாளா? என் பெற்றோர் அவளை அவமதித்ததால் அவள் அடிப்படைவாதியாகிவிட்டாளா? ஏன் சிகந்தர் அவளைத் துன்புறுத்த வேண்டும், குறிப்பாக அவன் மீது அவள் ரொம்பவும் பாசம் வைத்திருந்த போது?

சில நிமிஷங்களுக்குப் பிறகு குற்ற உணர்வு என்னுள் பரவியது. ஸஃப்தர் சொன்னதை நினைத்துப் பார்த்தேன் - ஒரு நிலையான குடும்பம் வேண்டும என்று ஸரா நினைத்தது, என்னுடைய குடும்பத்தின் நிராகரிப்பு அவளை எவ்வளவு தூரம் பாதித்திருக்கும் போன்றவற்றை. குழம்பிப்போய் புரியாமல்

விழித்திருந்து, என்னவெல்லாம் நடந்திருக்கக்கூடும் என்பதை யோசிக்க ஆரம்பித்தேன்.

போனின் சத்தமான அழைப்பு, எண்ண ஓட்டத்தைக் கலைத்தது.

‘கழிசடை, அந்த பாகிஸ்தானி போன் அடிக்கிறது’ என்றான் ஸௌரப். போர்வைக்கடியிலிருந்து குதித்து அறையைச் சுற்றி ஓடினான் - யாரோ அவன் தலைமீது ஒரு பக்கெட் கரப்பான் பூச்சிகளைக் கொட்டியது மாதிரி இருந்தது.

‘நாம் என்ன செய்யவேண்டும், மச்சி?’ என்றான்.

‘பயப்படாதே, அவன் தான் திரும்பக்கூப்பிடுகிறான்.’

‘ஒரு பாகிஸ்தானி போனிலா?’ பாகிஸ்தானி போன்களை எடுத்த அந்த நொடியில் அவை வெடித்து உங்களைக் கொன்று விடுவது போல் கத்தினான்.

பேசாமல் இருக்கும்படி விரலை வாயில் வைத்து சமிக்ஞை செய்தேன்.

போனை எடுத்தேன்.

‘அஸ்-ஸலாம்-அலைகும்!’ அடுத்த பக்கத்திலிருந்து ஒரு ஆண்குரல் கேட்டது.

‘ஹலோ, அஸ்-ஸலாம்-அலைகும், ஸாரி, வா-அலைகும் ஸலாம்,’ என்றேன்.

அந்த ஆள் மௌனமாக இருந்தான்.

‘இது சிகந்தரா?’ என்று கேட்டேன்.

‘யார், ஜனாப்,’ என்றான்.

‘நீ ஸராவின் போனில் கூப்பிட்டிருக்கிறாய், சரியா?’

‘யார் பேசுவது? உங்களுக்கு இந்த போன் எங்கே கிடைத்தது?’

‘நான் ஸராவின் நண்பன்.’

‘உங்கள் பெயர் என்ன?’

‘கேஷவ்,’ என்றேன்.

என் பெயரை நான் சொன்னதும் ஸௌரப் தன் புருவங்களை நெரித்துக் கொண்டான். அவன் கத்தக் கூடாது என்பதற்காக என் கையை அவன் வாய் மீது வைத்துப் பொத்தினேன்.

‘உஷ்...நான் சொல்லியாக வேண்டும் அவனிடம். இல்லாவிட்டால் அவன் பேசமாட்டான்,’ என்று ஸௌரபிடம் கிசுகிசுத்தேன். திரும்பப் பேச ஆரம்பித்தேன்.

‘நான் கேஷவ், ஸராவின் நண்பன். நீ சிகந்தரா? இறுதிச் சடங்கின் போது நாம் சந்தித்திருக்கிறோம்!’

‘சந்தித்திருக்கிறோமா?’

சரி. அப்போ அது சிகந்தர்தான்.

‘உனக்கு நினைவுக்கு வருகிறதா? ஸராவின் ராஜஸ்தானி நண்பன்!’

‘ஆமா சொல்லியிருக்கிறாள்.’

‘அப்படியா? சொல்லியிருக்கிறாளா?’ என்னைப் பற்றி என்னவென்று சொல்லியிருப்பாள் என்று யோசித்தேன்.

‘இந்த போன் உங்களுக்கு எப்படி கிடைத்தது?’

‘சிகந்தர் பாய், நாம் சந்திக்கலாமா?’

நான் ஸௌரபின் வாயை மறுபடியும் மூடவேண்டியிருந்தது - ஏனெனில் நான் சந்திக்கலாம் என்றவுடன் அவன் வாயைத் திறக்க முயற்சித்தான்.

‘ஏன்?’ என்றான் சிகந்தர்.

‘ஸராவின் மரணத்தைப் பற்றி சில கேள்விகள் கேட்க வேண்டும்.’

‘அதற்கு என்ன இப்போது? கொலையாளி சிறையில் இருக்கிறான்!’

‘அந்த வாட்ச்மேன் அதைச் செய்யவில்லை!’

‘அதுபற்றி எனக்கு எதுவும் தெரியாது.’

‘நாம் ஒரே ஒருமுறை சந்திக்கலாமா?’

‘வேண்டாம்,’ என்றான் அவன். போனைத் துண்டித்தான். ஸௌரபின் வாயிலிருந்து என் கையை எடுத்தேன்.

கண்களை அகலத் திறந்த ஸௌரப் என்னை முறைத்தான்.

‘என்ன?’ என்றேன்.

‘ஒரு தீவிரவாதியைச் சந்திக்க விரும்புகிறாயா?’

‘அவன் ஸராவின் குடும்பத்தில் ஒருவன், எப்படியானாலும் அவன் பேசவும் போவதில்லை. பார்க்கவும் போவதில்லை,’ என்றேன்.

‘நல்லது. நாம் முட்டுச்சந்தை அடையவேண்டுமென்று விரும்பினேன். அதனால் கொலை வழக்கைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறாயே, அதை நிறுத்து!’

‘அதற்கு மாற்றாக என்ன செய்ய வேண்டும்? ஆர்வமே

இல்லாத மாணவர்களுக்கு மிகவும் கஷ்டமான நுழைவுத் தேர்வை எப்படி எழுதுவது என்று சொல்லிக் கொடுக்க வேண்டுமா?’

‘அதுவும் வேலை, மச்சி!’

ஓப்போ போனை எடுத்து மறுபடியும் சிகந்தருக்குப் போன் போட்டேன். மூன்று முறைக்குப் பிறகு அவன் எடுத்தான்.

‘சந்திக்க விரும்பவில்லை என்று சொல்லிவிட்டேனே. மறுபடியும் என்னைக் கூப்பிடவே வேண்டாம்!’ என்றான் சிகந்தர்.

‘என்னைச் சந்திக்க மறுத்தால் எனக்கு இருக்கும் ஒரே வழி இதுதான். ஸரா வீட்டிலிருந்து நான் கண்டுபிடித்த பொருட்களையெல்லாம் போலீஸில் ஒப்படைக்க வேண்டியதுதான்!’

சிகந்தர் மௌனமானான். அவனை நான் உடனே பார்க்க வேண்டுமென்று ஸௌரப் கையை வேகமாக ஆட்டினான். போனை ம்யூட்டில் போட்டேன்.

‘இப்போ என்ன?’ என்றேன்.

‘நீ அவனை பயமுறுத்துகிறாயா? ஒரு தீவிரவாதியை.’ இதைச் சொன்னபோது ஸௌரபின் குரலில் பதற்றம் தெரிந்தது.

‘பதற்றப்படாதே,’ என்று சொல்லிவிட்டு சிகந்தரிடம் பேசினேன். ‘சிகந்தர், லைனில் இருக்கிறாயா?’

‘ஆம்,’ என்றான்.

‘போலீஸுக்குப் போவதில் எனக்கு விருப்பமில்லை. தவிர நீ செய்யும் வேலைகளிலும் எனக்குத் துளிகூட ஆர்வம் இல்லை. ஸராவின் வாழ்க்கையில் உள்ள ஒவ்வொருவருடனும பேசி கொலையாளி யார் என்பதைக் கண்டுபிடிக்க விரும்புகிறேன்!’

‘என்னுடைய ஆபாவை நான் கொல்வேன் என்று நினைக்கிறாயா? அவள் மீது என் உயிரையே வைத்திருந்தேன்!’

‘நான் அப்படிச் சொல்லவேயில்லையே, சும்மா உன்னை சந்திக்கத்தான் விரும்புகிறேன். அவளுடைய அப்பாவையும் நாங்கள் பார்த்தோம்!’

‘நாங்களா? உங்களுடன் வேறு யார் இருக்கிறார்கள்?’

‘என்னுடைய நெருங்கிய நண்பன் ஸௌரப் மட்டும்தான்!’

‘தயவு செய்து என் பெயரை மட்டும் சொல்லாதே,’ என்று சத்தமாகவும் தெளிவாகவும் சொன்னான் ஸௌரப், அதனால் மறுபடியும் அவன் வாய்மீது என் கையை வைத்தேன்.

❖

பஹர்கஞ்ச், வீடியோ கேம்களுக்குச் சிறந்த ஒரு பின்னணியாக இருக்கும். அந்தத் தெருக்களில் அடிபட்டுக் கொள்ளாமல் போவது என்பது ஒரு சவாலான விஷயம். மிகக் குறுகிய சந்துகளில் நானும் ஸௌரபும், ஆட்டோ ரிக்ஷாக்கள், சைக்கிள் ரிக்ஷாக்கள், மாடுகள், கழுதைகள், மோட்டார் பைக்குகள், விற்பனை செய்பவர்கள் இவற்றோடு ஆயிரக்கணக்கான பாதசாரிகளையும் சமாளித்து முன்னே சென்றோம். இறுதியாக நேம்சந்த் பக்கோடா கடையை அடைந்தோம். முன்னமே தீர்மானித்திருந்தோம் - அங்கு சந்திப்பதாக. அந்தக் கடை சிவ்மந்திருக்கும் க்வாதாம் ஷரிஃப் வழிபடுஇடத்திற்கும் - இது நிச்சயமாகத் தற்செயலாக தீர்மானிக்கப்பட்டது தான் - இடையில் இருந்தது.

ஒருவெளிர் நிற பதானி சூட் அணிந்திருந்த சிகந்தர் எங்களுக்கு முன்னால் கடைக்கு வந்திருந்தான். அவன் முகத்தில் சிறிது தாடி வளர்ந்திருந்தது. அவனுடைய ரோஸ் வண்ணக் குழந்தை முகத்தை மறைக்க வளர்த்துக் கொண்டிருக்கலாம். அவன் கால்களை மாற்றி குதித்துக் கொண்டிருந்தான். கடைக்கு வந்த ஒவ்வொருவரையும் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான்.

இன்னும் எங்களை அவன் கவனிக்கவில்லை.

‘மச்சி, இப்போது கூட நாம் இங்கிருந்து போய்விடலாம்,’ என்றான் ஸௌரப். ‘அவனுடைய குர்த்தாவுக்குள் அவன் ஒரு துப்பாக்கியை ஒளித்திருக்கலாம். நம்மை அவன் கொல்லக்கூடும்!’

‘அவன் எதற்காக அதைச் செய்ய வேண்டும்?’

‘காரணமே இல்லாமல் கூட அதைச் செய்யலாம். அவனுடைய பக்கோடாக்களுக்குப் போதுமான சட்னியை நாம் வைக்காமல் இருப்பது போல - ஏதாவது ஒன்று.’

‘சட்னி?’

‘நாம் அங்கு பக்கோடா சாப்பிடப் போறோம் தானே? இந்தக் கடையில் பிரமாதமான பக்கோடா கிடைக்கும்.’

தலையை ஆட்டிவிட்டு, ‘நான் உள்ளே போகிறேன்,’ என்றேன்.

‘நான் இங்கு இருக்கிறேன். எதைப் பற்றி உங்களுக்குப் பேச வேண்டும்?’ என்றான் சிகந்தர், நாங்கள் அவனை நோக்கி வருவதைப் பார்த்து.

‘நாம் ஆரம்பிப்பதற்குமுன் சாப்பிட ஏதாவது ஆர்டர் செய்யட்டுமா?’ என்று கேட்டேன்.

உணவு, ஸௌரபை பிஸியாக வைக்கும், அவன் பயத்தைக் குறைக்கும். 3 கிலோ எல்லாம் கலந்த பக்கோடாவும், மூன்று கப் இனிப்பு மசாலா டீயும் ஆர்டர் செய்தோம்.

வெயிட்டர் உடனே ஆர்டர் செய்தவற்றைக் கொண்டு வந்தான். காலிபிளவர், வெங்காயம், உருளைக்கிழங்கு, மிளகாய் தவிர பாலக் பக்கோடாக்கள் - எல்லாம் நன்றாகப் பொரித்து மசாலா மணத்துடன் இருந்தன. இந்தப் பக்கோடாக்களை விட ருசியாக, ஆரோக்கியமில்லாததாகக் காய்கறிகள் வேறு எந்த விதத்திலும் கிடைக்காது.

சிகந்தர் அதைத் தொடவேயில்லை. ஸௌரப் ஒவ்வொன்றிலிருந்தும் எடுத்துச் சாப்பிட்டான்.

‘நீ சாப்பிடவில்லையே?’ என்று ஸௌரப் அவனிடம் கேட்டான். ‘சிறிது சாப்பிட்டுப் பார்!’

யாரையாவது பார்த்து ஸௌரபுக்குப் பயம் ஏற்பட்டால் அவர்களிடம் குழைந்து பேச ஆரம்பிப்பான்.

‘எங்களுக்கு உன்னுடைய உதவி தேவை. ஸராவின் வழக்குக்குத் தீர்வு கண்டுபிடிக்க நாங்கள் முயற்சிக்கிறோம்,’ என்றேன் நான்.

‘அவன் செய்வான். அவனை நான் பின்தொடர்வேன்’ என்றான் ஸௌரப் பச்சை மிளகாய் பக்கோடாவைக் கடித்தபடி.

‘என்னால் என்ன வகையில் உதவ முடியும்?’ என்றான் சிகந்தர்.

‘நீ அவளுக்கு நெருக்கமானவன் தானே?’ என்றேன்.

‘ஆமா. எனக்கு இரண்டாவது அம்மாவைப் போன்றவள்!’

‘டெஹ்ரீக்-இ-ஜிஹாத்திலிருந்து யாராவது கொன்றிருப்பார்களா?’ அவனுடைய அமைப்பின் பெயரைச் சொன்னவுடன் சிகந்தர் எழுந்து நின்று கொண்டான். ஸௌரப் திரும்பி அவன் முகத்தை என் தோளில் மறைத்துக் கொண்டான்.

‘நான் போக வேண்டும்,’ என்றான்.

‘ஏன்?’ என்றேன். ‘இப்போது தான் நாம் சந்தித்திருக்கிறோம். உட்கார். ப்ளீஸ், ஐந்து நிமிஷங்கள் மட்டும் தான்!’

சிகந்தருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இருந்தாலும் உட்கார்ந்தான். ஒரு கப் டீயை அவன் முன்னால் நகர்த்தினேன். தீவிரமாகத் தலையாட்டி மறுத்தான் சிகந்தர்.

‘டெஹ்ரீக் பற்றி உங்களுக்கு யார் சொன்னது?’ என்றான். ‘ஆபாவைத் தவிர உங்களுக்கு எதன் மீதும் ஆர்வம் இல்லை என்று நான் நினைத்தேன்!’

‘எனக்கு இல்லை. கடைசியாக நீ எப்போது ஸராவுடன் பேசினாய்?’

‘அவள் இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்னால். அவள் என்னைக் கூப்பிட்டாள்!’

‘நீங்கள் என்ன பேசிக் கொண்டீர்கள்?’

‘அது உங்களுக்குத் தேவையானது இல்லை. சகோதரன்-சகோதரிக்கிடையிலான பேச்சு!’

‘மாற்றாந்தாயின் மகன், சரியா?’ என்றான் ஸௌரப். ஒரு சூடான காலிஃப்ளவர் பக்கோடாவைச் சுவைத்தவாறு. சிகந்தர் அவனை முறைத்துப் பார்த்தான்.

‘மாற்றாந்தாய்களுக்குப் பிறந்தவர்கள் என்றாலும் நெருக்கமாக இருக்கலாம் தானே?’ சிகந்தர் சொன்னான்.

‘நிச்சயமாக,’ என்றான் ஸௌரப் அவனுக்கே உரித்தான சமாதானமாகப் போகும் தொனியில். ‘ஏதாவது சாப்பிடேன். சிகந்தர் பாய், இந்த மிளகாய் பக்கோடா பிரமாதமாக இருக்கு!’

ஸௌரபை அலட்சியப்படுத்திவிட்டு என்னைப் பார்த்தான் சிகந்தர்.

‘கொஞ்ச நாளாக என்னைப் பார்க்கவில்லை என்று ஆபா சொன்னாள். தவிர...நான்...ஒரு நல்ல வேலையைத் தேடிக் கொள்ள வேண்டும் என்றாள்!’

‘இல்லாவிட்டால் நீ என்ன வேலை செய்கிறாய்? சொல்லலாம் என்றால் தயங்காமல் என்னிடம் சொல்,’ என்றேன்.

‘ஏதோ கிடைக்கிற சில்லறை வேலை, சில நேரங்களில் டெல்லி, சிலநேரம் ஸ்ரீநகரில்.’

‘என்ன மாதிரியான சில்லறை வேலை?’

‘டிரக்குகளில் சரக்குகளை ஏற்றுவது. காஷ்மீர் வியாபாரிகளுக்கு நாடு பூராவும் சாமான்களை அனுப்புவதற்கு உதவி செய்வது. அந்த மாதிரியான வேலைகள்.’

‘பதட்டப்படாதே. ஆனால் உனக்கு டெஹ்ரீக்-இ-ஜிஹாதுடன் தொடர்பு இருக்கிறதா?’

‘இதற்கு பதில் சொல்ல நான் விரும்பவில்லை. உங்களுக்கு அது பற்றி என்ன அக்கறை?’

‘ஸராவுக்கு டெஹ்ரீக்குடன் தொடர்பு இருந்ததா என்பது

மட்டும் எனக்குத் தெரிய வேண்டும். அதை மட்டுமாவது சொல், சிகந்தர்!'

'இல்லவே இல்லை.'

'அப்படியானால்...,' நான் ஆரம்பித்தவுடன் சிகந்தர் மறுபடியும் எழுந்து கொண்டான்.

'என்ன? ஏன் எழுந்து விட்டாய்?' என்று கேட்டேன்.

அவன் பதில் சொல்லவில்லை. மாறாக ஒரு துப்பாக்கியை வெளியே எடுத்தான்.

ஸௌரபின் வாய் பிளந்து கொண்டது. சிகந்தர் எங்களிடம் சொல்லாத போதும் அனிச்சையாக ஸௌரப் இரு கைகளையும் தூக்கிக் கொண்டான் - பல சினிமாக்களைப் பார்த்த விளைவால், அவனுடைய ஒருகையில் வெங்காய பக்கோடா இருந்தது.

'சிகந்தார் பாய், நாம் சும்மா பேசிக் கொண்டிருக்கிறோம். என்ன தேவை இப்போது...'முடிந்தவரையில் அமைதியான குரலில் கேட்டேன்.

'வாயை மூடு, ஹராமி. எல்லாம் போதும். உங்களுக்கும் ஆபாவுக்கும் இருந்த தொடர்பு எப்போதோ முடிந்துவிட்டது என்று எனக்குத் தெரியும். இப்போது என்ன கலாட்டா இங்கு செய்து கொண்டிருக்கிறீர்கள்?'

என் முகத்திற்கு நேராகத் துப்பாக்கியைக் காட்டினான்.

மாரடைப்பு ஏற்பட்டது போல் இருந்தது. சமாதானம் செய்வதற்காக உள்ளங்கைகளை விரித்துக் காண்பித்தேன்.

'ஸாரி, உன்னைப் பதட்டமடையச் செய்துவிட்டேன். நான் உன்னுடன் பேசுவதற்கு மட்டும் தான் வந்தேன்.'

'நான் போறேன். என்னைப் பின் தொடர வேண்டாம், புரிகிறதா?'

சிகந்தர் அந்தக் கடையை விட்டுப் போகும்போது வெயிட்டர்கள், சாப்பிட வந்தவர்கள், கடைக்காரர் என்று எல்லாரும் அவரவர் இருக்குமிடத்தில் அப்படியே உறைந்து போய் இருந்தார்கள். வெளியில் இருந்த சந்தை அடைந்த பிறகு துப்பாக்கியைக் குர்தாவுக்குள் போட்டுக் கொண்டான். ஒரு சில நொடிகளில் பஹர்கஞ்ச் கூட்டத்தில் மறைந்துவிட்டான்.

'அவன் போய்விட்டான், உன் கைகளை நீ கீழே போடலாம்.' என்றேன் ஸௌரபிடம்

'ஊம்ம்...' ஸௌரப் முனகினான். அவன் கைகள் தூக்கியபடியே இருந்தன.

‘வாயில் இருப்பதை விழுங்கு.’

விழுங்கிவிட்டு ஸௌரப் பேசினான்.

‘என்ன கழிசடை அவன்?’ ஸௌரப் கத்தினான். ‘எனக்கு அப்பா அம்மா இருக்கிறார்கள். தே...பயல். கேஷவ் நான் இனிமேல் உன்னுடன் வரமாட்டேன். நாம் ட்யூஷன் எடுப்பவர்கள். நாம் ஜேம்ஸ் பாண்டின் மருமகன்கள் இல்லை.’

‘நாம் நன்றாக இருக்கிறோம். அவன்தான் கோழை. ஓடிவிட்டான்.’

‘அவன் எக்கேடோ கெடட்டும். நாம் பக்கோடா சாப்பிடலாம் என்று வந்தால் அவன் நம்மை பக்கோடாவாக ஆக்கியிருப்பான்.’

பில் கொண்டுவரும்படி கடைக்காரருக்கு சமிக்ஞை செய்தேன்.

‘பரவாயில்லை ஸார்..., ஃப்ரீ என்று நினைத்துக் கொள்ளுங்கள்’ என்ற கடைக்காரர், நாங்கள் வெளியே வரும் வரை மூச்சை அடக்கிக் கொண்டிருந்தார்.

# அத்தியாயம் 18

பக்கோடா சொதப்பல் முடிந்து ஒரு வாரம் ஆகியிருக்கும். நாங்கள் டிவியில் ரியாலிட்டி ஷோ பார்த்துக் கொண்டிருந்தோம். சின்னப் பெண்கள் மேக்கப் அணிந்து ஐட்டம் பாடலுக்கு நடனமாடினர். ஸௌரபின் கண்கள் ஸீஸன் ஃபினாலேயில் உன்னிப்பாக இருந்தது. நான் என் போனைக் குடைந்தபடி புரோக்ராமைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

'உன் போனைக் கொடு,' என்றான் ஸௌரப். நான் அவனைப் புறக்கணித்தேன்.

'இதை ஏன் பார்க்கிறே? இந்த ஷோ ரொம்ப தொந்தரவாக இருக்கு,' என்றேன். என் கண்கள் என் போனிலேயே இருந்தன.

'எது தொந்தரவு என்று சொல்கிறேன்,' என்று ஸௌரப் என் போனைப் பறித்தான்.

'என்ன இழவுடா கோலு?'

'ம்ம்... ஒன்றும் இல்லை. என் லிங்க்ட்-இன் புரொஃபைலை அப்டேட் பண்ண!'

'அப்டேட் பண்ண ஒண்ணும் இலேலை. அதே அபத்தமான ரெஸ்யூமே தான்.'

'புது புகைப்படம் போடலாமா?'

'சனியன். உன் போனில் ஏன் ட்விட்டர் பக்கம் திறந்திருக்கு?'

ஒரு சிறிய பெண் இடுப்பை அசைத்தாள், 'முன்னி பத்னாம் ஹுயா' என்றது டிவி. நீதிபதிகளும், பார்வையாளர்களும் பலமாகக் கைதட்டி ஆரவாரித்தனர்.

'இந்த சனியனெல்லாம் சட்ட பூர்வமானதா?' என்றேன், ஸௌரபின் கேள்விக்கு பதிலளிக்காமல்.

'பதில் சொல்லு, மச்சி.'

'சும்மா தான்,' என்றேன். 'அப்டேட் செய்ய, நாட்டு நடப்பை அறிய.'

'என்னால் இங்கே பார்க்க முடிகிறது. நீ ட்விட்டரில்

டெஹ்ரிக்-ஈ-ஜிஹாத்தைத் தேடியிருக்கே.’

‘நானா?’

ஸௌரப் டிவியை அணைத்தான். என் காபி மேசைக்கருகே வந்து அமர்ந்து என்னை நேருக்கு நேர் பார்த்தான். அவன் கனம் தாங்காமல் காபி மேசை கிறீச்சிட்டது.

‘மச்சி, நான் நிஜமாகத்தான் கேட்கிறேன்,’ என்றான் ஸொரப். என் கண்களை வசியம் செய்வது போல் பார்த்தான்.

நான் கீழே பார்த்தேன்.

‘நீ அந்த சைகோவின் துப்பாக்கியைப் பார்த்தாய் தானே? இந்தக் கேஸில் இனி இறங்காதே.’

‘நான் சும்மா போனைக் குடைந்து கொண்டிருந்தேன்.’

‘தீவிரவாத கும்பலின் குரூப்பைத் தேடுவது என்பது குடைவதா?’

‘நான் ஆர்வமானேன். இங்கே பாரு, நமக்கு ஏற்கெனவே தெரிந்த விஷயம் சிகந்தர் டெஹ்ரீக்கைச் சார்ந்தவன். நான் ஸராவையும், டெஹ்ரீக்கையும் பற்றி விசாரித்த போது ஓடிவிட்டான்.’

ஸௌரப் உதடுகளில் விரலை வைத்தான்.

‘உஷ், மச்சி, நான் சொல்வதைக் கேளு. நீ கொஞ்சம், கொஞ்சமாகப் பைத்தியமாகி விடுகிறாய்.’

‘என்ன?’ என்றேன்.

‘ஏதோ இழவு நடந்தது. தீவிரவாதிகள் ஸராவைக் கொன்றனர். கதை முடிந்தது. இனி இதைப் பற்றி நினைக்காதே. எப்போதும் இனி எந்த ஊகமும் வேண்டாம். ஆராய வேண்டாம். உன் தலையிலிருந்து அழித்து விடு.’

‘எப்படி?’ என்றேன். ‘வேறு எதைப் பற்றியும் யோசிக்க முடியவில்லை. வேறு எதுவும் அர்த்தமுள்ளதாகப் படவில்லை. எனக்கு அக்கறையும் இல்லை.’

‘புதிய வேலை?’

இல்லை என்று மறுத்தேன்.

‘எனக்குப் புது வேலை வேணும். ஆனாலும் நான் அதைக் கண்டுகொள்ளவில்லை’

‘புது பெண்?’

‘இந்த மனநிலையில் இல்லை. ஒருத்தியே நிறைய வலியைக் கொடுத்துவிட்டாள்.’

‘டிண்டர் மச்சி. வலியில்லாத காதல் எனக்கு டிண்டரில் இரண்டு மேட்ச் கிடைத்தது.’

‘அப்படியா? என்ன ஆச்சு?’

‘ஒன்றும் இல்லை. நாங்கள் பேச ஆரம்பித்தவுடன் இன்மேட்ச் செய்துவிட்டார்கள்.’

‘ஏன்? எதுக்கு?’

‘அவர்கள் உண்மையை மதிக்கிறார்களாம்.’ நான், ‘நல்லது’ என்றேன். நான் என்ன தேடுகிறேன் என்று கேட்டார்கள். நான் உண்மையைச் சொன்னேன்.’

‘என்ன சொன்னே?’

‘செக்ஸ் என்று சொன்னேன். இல்லை உடல் சம்பந்தப்பட்டது என்றேன். கையால் உதவினால் கூடப் போதும் என்றேன்,’ என்றான். உணர்ச்சியற்ற முகத்துடன்.

‘என்ன?’ என்றேன். ‘நீ என்ன சொன்னே?’

‘அதான் சொன்னேனே. உண்மை.’

நான் உரக்கச் சிரித்தேன். ‘அதன் பிறகு?’

‘என்னை டெலிட் செய்து விட்டார்கள், கிராதகிகள். உண்மையாம் பெரிய பருப்பு.’

இங்கே வா, என் ‘உடல் சம்பந்தம்’ என்று சொன்ன டார்லிங்கே,’ என்று அவனை இறுகத் தழுவினேன்.

‘நகரு. ஸீரியஸாக இரு,’ என்றான் ஸௌரப்.

‘நான் ஸீரியஸாக தான் இருக்கேன்,’ என்றபடி சிரித்தேன். ‘எப்படி கையால் உதவினால் கூடப் போதும் என்று சொன்னாய்? இப்படியேவா?’

‘நான் வெளியேறி விடுவேன். கேஸா, நானா, நீயே முடிவு செய்,’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’ என்றேன். சிரிப்பு முகத்திலிருந்து மறைந்தது.

இருவரும் ஒரு நிமிடத்திற்குப் பேசிக் கொள்ளவில்லை. ஸௌரப் டேபிளில் இருந்து எழுந்தான். ‘எனக்கு விடை கிடைத்துவிட்டது. நான் இந்த வீக் எண்டு காலி செய்கிறேன்,’ என்றான்.

‘என்ன ஸெண்டி டிராமா இது?’ என்றேன். அவன் கையைப் பிடித்து இழுத்து அமர்த்தினேன்.

‘என்ன?’ என்றான் என்னைப் பார்த்து.

‘கேஸை விட்டு ஒழி. நான் ஏற்கனவே நிறைய இழந்து

விட்டேன். உன்னையும் இழக்கத் தயாராக இல்லை.'

'அப்படியா, மச்சி? எனக்காக இதைச் செய்வாயா?'

'சரி, ரொம்ப அலையாதே. டிவியைப் போடு. முன்னி பத்னாம் பெண் ஜெயித்தாளா என்று தெரியணும்.'

❖

'மாணவர்கள் 'சேரும்' எண்ணிக்கை சரிந்துவிட்டது. ஒப்புக் கொள்ள முடியாது,' என்றார் சந்தன்.

மலிவான கோலோன் ஸெண்ட், பான் மஸாலா மற்றும் அருவருப்பு என்பவை கலவையாக அந்த அறையில் மணத்தது. வாரம் மீடிங் நடத்தினால் தான் கார்ப்பரேட் என்ற பந்தா என் ப தை எகனாமிக் டைம்ஸில் சந்தன் படித்துவிட்டார். அவருக்கு அது பிடித்துப் போய்விட்டது. சந்தன் கிளாஸெஸ் சர்வாதிகாரம், கார்பரேட் அல்ல என்ற உண்மையை ஒதுக்கிவிட்டார். சனிக்கிழமைகளில் 8 மணிக்கு நாங்கள் ஆஜர் ஆக வேண்டும். வகுப்புகள் தொடங்க இரண்டு மணி நேரம் முன்பே சந்தன் இந்த மீட்டிங்குகளுக்கு சூட்டு அணிந்து வருவார். தென்னிந்திய திரைப்படத்தில் வரும் வில்லனின் அடியாள் போல் தெரிந்தார். தன் பெண்ணின் திருமணத்திற்கு வருவது போல் ஆடம்பரமாக வருவார்.

கிளாஸ் ஆசிரியர்களிலிருந்து, பியூன் மற்றும் ஸெக்ஸி ஷீலா வரை, அனைவருக்கும் இந்த மீட்டிங் வெறுப்பைத் தான் அளித்தது.

'சூப்பர் ஸார்,' பிரிஜ் சௌபே, ரசாயன ஆசிரியர் சொன்னார் முதல் மீட்டிங்கில்.

'நாம் புரொஃபெஷனல் ஆகிவிட்டோம்,' என்றார் மோகன் என்ற புல்லி ஸார். அவர் டெல்லியில் பிரபலமான வேதியல் ஆசிரியர். புல்லி பாடத்தை எல்லாவற்றையும் விட சிறப்பாக நடத்துவார்.

கூழைக் கும்பிடு போட்டு சந்தன் அரோராவுக்கு ஐஸ் வைப்பது என்பது ஒரு கலை. ஸெக்ஸி ஷீலாவுக்கு நிஜமான பணியே அவருக்கு அடி பணிவது தான். மற்ற ஆசிரியர்களும் போட்டி போட்டுக் கொண்டு காக்கா பிடிப்பார்கள். எங்களை விட எல்லோரும் சிறப்பாகச் செய்தனர். ஆனாலும் போலி முகஸ்துதி சந்தனை அன்று வசீகரிக்கவில்லை.

'மாணவர்கள் நம்பரைப் பாருங்கள். போன குவார்ட்டரில் 402, இப்போது 376 ஆகச் சரிந்துவிட்டது.' அவர் பேசும்போது

பானின் எச்சில் பறந்து என் மணிக்கட்டில் விழுந்தது. ஸௌரப் பார்த்துவிட்டு முகத்தைச் சுளித்தான். பரிதாபப்பட்டு ஒரு டிஷ்யூவை என் பக்கம் நீட்டினான்.

'மிஸ்டர் ஸௌரப் மஹேஸ்வரி,' என்றார் சந்தன் அரோரா.

'யெஸ் ஸார்,' என்ற ஸௌரப் நிமிர்ந்து அமர்ந்தான்.

'கவனம் செலுத்துங்கள்,' என்றார் சந்தன்.

'செலுத்துகிறேன், ஸார்.'

'என்ன வகுப்பு நடத்துகிறீர்கள்?'

'மன்னிக்கவும், ஸார்.'

'என்ன சப்ஜெக்ட்?'

'ரசாயனம். இதற்குத் தானே ஸார் என்னை அமர்த்தினீர்கள்.'

'எல்லா 'கேஸ்' லாவும் சொல்லு,' என்றார் சந்தன்.

எட்டு ஆசிரியர்கள், மற்றும் ஸெக்ஸி ஷீலா ஒருவரை ஒருவர் சங்கடமாகப் பார்த்துக் கொண்டோம்.

'ஸீரியஸாவா, ஸார்?'

'ஆமாம். என் மக்களுக்கே விஷயம் தெரியுமா, தெரியாதா என்ற டெஸ்ட்.'

பாயில்ஸ் லா, சார்ல்ஸ் லா, கிராஹாம்ஸ் லா ஆஃப் டிஃப்யூஷன், அவோகேட்ரோஸ் லா, டால்டன்ஸ் லா ஆஃப் பார்ஷியல் பிரெஷர். ஒவ்வொன்றையும் விளக்கணுமா ஸார்?' என்றான் ஸௌரப்.

'தேவையில்லை,' என்று சந்தன் உறுமினார். 'ஏன் எண்ணிக்கை சரிந்தது? என்ன விளக்கம்? நடத்துவதன் தரம் குறைந்துவிட்டதா?' யாரும் ஒரு வார்த்தையும் பேசவில்லை.

'எல்லோருடைய சம்பளத்திலிருந்தும் பத்திலிருந்து - இருபது சதவிகிதம் குறைக்கிறேன், இந்த மாதம்,' என்றார் சந்தன்.

'என்ன?' என்று கட்டுப்படுத்த முடியாமல் கேட்டேன். எல்லோரும் என்னை அதிர்ச்சியாகப் பார்த்தனர். ஹிட்லரின் முகத்துக்கு நேராக, மீசை சிரிப்பு வருது என்று சொல்லிவிட்டது போல் பார்த்தனர்.

'புரியவில்லையா? வியாபாரம் குறைந்தால், உங்கள் சம்பளமும் குறையும்.'

'எண்ணிக்கை உயர்ந்த போது சம்பளத்தைக் கூட்டித் தந்ததாக ஞாபகம் இல்லையே,' என்று முணுமுணுத்தேன். அவர்

கேட்டிருக்க முடியாது.

‘என்ன சொன்னே?’ என்றார் சந்தன்.

‘ஒன்றும் இல்லை, ஸார். நிறைய கோச்சிங் கிளாஸஸ் திறந்து விட்டார்கள். ஆன்லைன் ஆப்ஸ்களில் ஜே.ஈ.ஈ. படிக்க வசதி இருக்கு. நாம் குழந்தைகள் போட்டிக்காகத் தயார் செய்யும் போது நாமும் போட்டியிலிருந்து தப்ப முடியாது.’

‘நீங்கள் சந்தன் கிளாஸஸை விற்கிறீர்களா? நண்பர்களை அழைத்து வரும்படி கூறுகிறீர்களா? அப்படித் தான் புது மாணவர்களைச் சேர்க்க முடியும்,’ என்றார் சந்தன்.

‘நாங்கள் ஆசிரியர்கள் ஸார், எங்கள் பதவிக்கு நாங்கள் போய் ...’ என்றான் ஸௌரப்.

என்ன பெரிய பதவி, மண்ணாங்கட்டி? இது தடி எடுப்பது போன்ற விஷயம். தே...பையா! புரியுதா?

டெல்லியின் வழக்கமான வார்த்தையை சந்தன் உபயோகித்ததும் ஸெக்ஸி ஷீலா, முகம் சிவந்தாள். நான் கற்பனை செய்தேனா என்று தெரியாது. ஆனால் இந்த கெட்ட வார்த்தை சொல்வது ஆண்மையின் கம்பீரம் என்று அவள் நினைத்திருக்கக் கூடும்.

ஸௌரப் என்னைப் பார்த்தான். நான் வார்த்தைகள் இல்லாமல், டெலிபதி மூலம் அவனை அமைதியாக இருக்கும் படி பணித்தேன்.

சந்தன் தொடர்ந்தார். ‘உங்களை ஆசிரியர் என்று சொல்லிக் கொள்ளாதீர்கள். இது என்ன கல்லூரியா - பட்டமோ, டிப்ளோமாவோ வழங்க? இது கோசிங் செண்டர். மாணவர்கள் தேர்வில் வெற்றி பெற தயார் செய்கிறோம். அதிலிருந்து பணம் சம்பாதிக்கிறோம்.’

அனைவரும் தலை கவிழ்ந்தனர்.

‘வெளியே செல்லுங்கள் அனைவரும்! இம்முறை இது சம்பளக் குறைப்பு. எண்ணிக்கை அதிகரிக்கவில்லையென்றால் அடுத்த முறை வேலையை விட்டுத் தூக்கிவிடுவேன். இந்த குவார்ட்டர் ஒவ்வொரு ஆசிரியரும் பத்து மாணவர்களைச் சேர்க்கவேண்டும், கண்டிப்பாக. திரு. கேஸ் லா, முக்கியமாக நீங்கள். புரிந்ததா?’

‘யெஸ், ஸார்,’ என்றான் ஸௌரப்.

❖

‘நான் அவனை வெறுக்கிறேன்,’ என்று நடைபாதையில் ஆத்திரமாகக் கிசுகிசுத்தான். ‘அந்த ஜிஹாதி சிகந்தரை வைத்து இவனைப் போட்டுத் தள்ளினால் என்ன?’

நான் சிரித்தேன்.

‘என்னால் முடிந்தால் செய்வேன். ஆனால் அந்த அத்தியாயம் முடிந்துவிட்டது. நான் என் சகோதரனைத் தேர்ந்தெடுத்தேன்,’ என்று அவன் முடியைப் பாசமாகக் கலைத்தேன்.

❖

‘அவள் பதிலளித்தாளா?’ என்றான் ஸௌரப்.

‘ஆமாம். முதலில் அவள் தான் செய்தி அனுப்பினாள்,’ என்றேன். என் போனை வெறித்துப் பார்த்தேன். டிண்டர் ஆப்பைப் புரிந்து கொள்ள முயற்சித்தேன். எனக்கு ஒரு மேட்ச் கிடைத்திருந்தது.

‘நீ அதிர்ஷ்டசாலி, மச்சி. அவள் பெயர் என்ன?’

‘சோனியா,’ என்றேன்.

சனிக்கிழமை இரவு படுத்திருந்தோம். ஸௌரப் எனக்கு டிண்டர் வகுப்பு நடத்தினான். எப்படி ஸ்வைப் செய்து மேட்சுகளுடன் பேச வேண்டும் என்று.

‘இப்படித்தான் மக்கள் இந்தக் காலத்தில் காதலைத் தேடுகிறார்களா?’ என்றேன். ஸராவை ராண்தேவூவில் சந்தித்ததை நினைத்துப் பார்த்தேன். இன்று என்ன நடக்கும்? என் படத்தை வலதா, இடமா எதை அவள் தேய்த்திருப்பாள்?

‘பேசிக் கவர்வது எல்லாம் செத்திருச்சு மச்சி. என்ன வேண்டுமோ கேட்டுப் பெற்றுக் கொண்டு, நகர்ந்துவிடு, சீக்கிரம்,’ என்றான் ஸௌரப்.

‘அவள் செய்தி அனுப்பினாள்.’ ‘ஹே வாட்ஸப்?.’

‘அதுவே பெரிய விஷயம். அவள் தொடங்கி வைத்துள்ளாள். நீ மெஸேஜ் அனுப்பு,’ என்றான் ஸொரப்.

நான் ‘ஹை’ என்று பதில் போட்டேன்.

‘சந்திக்கலாமா?’ என்று கேட்டாள்.

‘நீ அதிர்ஷ்டமானவன், மச்சி. இவ்வளவு சீக்கிரம் சந்திக்கக் கேட்கிறாளே?’ என்றான். ஸௌரப் என் போனைப் பார்த்து.

‘நான் சரி என்று சொல்லட்டுமா?’ என்றேன்.

‘கண்டிப்பா. உனக்கு டேட் கிடைத்துவிட்டது.’

நான் நிச்சயம் என்றேன்.

என் வாழ்வின் புதிய காதலியின் பதிலுக்காகக் காத்திருந்தேன்.

ஐந்து நிமிடங்களுக்குப் பின் பதிலளித்தாள்.

‘ஒரு மணி நேரத்துக்கு ஐந்தாயிரம்; பிஜே மற்றும் ஒரு ஸ்டிரெயிட் ஷாட் அனுமதி உண்டு.’

நான் ஸௌரப்புக்கு ஸ்கிரீனைக் காட்டினேன்.

‘என்ன?’ என்று ஸௌரப் மெஸேஜைப் படித்தான்.

‘ஓ பணத்துக்கு விற்பவளா? ஸாரி, மச்சி. அன்மேட்ச் செய். பார்த்தாலே பிரச்சனை என்று தெரிகிறது.’

நான் சோனியாவை அன்மேட்ச் செய்தேன். எங்கள் காதல் கதை ஆறே நிமிடங்களில் முடிந்துவிட்டது. நான் விளக்கை அணைத்தேன். ஸௌரப் இன்னமும் என் அறையில் தான் தூங்கினான்.

‘நான் சோர்வாக இருக்கேன், குட் நைட்,’ என்று இருட்டில் ஸௌரபிடம் சொன்னேன்.

‘குட்நைட், மச்சி,’ ஆனால் ஒன்று?’

‘என்ன?’

‘சோனியா பேரம் பேசியிருப்பாள் என்று நினைக்கிறாயா?’

❖

நான் வகுப்பறையில் தனியாக அமர்ந்திருந்தேன். ஸௌரப் உள்ளே நுழைந்து கதவைச் சாத்தினான்.

‘என்ன விஷயம்?’ என்றேன்.

‘சந்தன் என்னை எச்சரித்தார்,’ என்றான் ஸௌரப்.

‘எச்சரிக்கைன்னா?’ என்றபடி விடைகள் எழுதிய தாளிலிருந்து முகத்தை நிமிர்த்தினேன்.

‘நான் எந்தப் புது மாணவனையும் சேர்க்கவில்லை,’ என்றான் ஸௌரப். ‘அடுத்த மாதம் நான் எந்த மாணவனையும் கூட்டி வரவில்லை என்றால் வேலையை விட்டுத் தூக்கிவிடுவேன் என்கிறான்.’

‘நானும் தான் எந்த மாணவனையும் கூட்டி வரவில்லை. நான் ஒருவனைப் போய்விடு என்றே சொல்லிவிட்டேன்.’

‘அப்படியா?’

‘அவன் ஃபேஷன் படிக்க ஆசைப்பட்டான். அப்படிப்பட்டவன் எப்படி ஜே.ஈ.ஈ. தேர்வு பெறுவான்?’

‘மச்சி, சந்தன் உன்னைக் கொன்று விடுவார்.’

‘கவலைப்படாதே,’ என்றேன். ‘மொத்த பணமும் (வருடத்துக்குண்டானது) கட்டிவிட்டான். திரும்பப் பெறமுடியாது. சந்தனுக்குப் பணம் போகாது. ஆனால், மாணவன் இங்கே ஒரு வருடம் வீணடிக்க மாட்டான் தானே.’

பிஸ்வாஸ், சந்தன் கிளாஸஸ் பியூன் டிரேயில் தேநீருடன் வந்தான். இருவரும் ஒவ்வொரு கோப்பையை எடுத்துக் கொண்டோம்.

‘பிஸ்வாஸ், கொஞ்சம் பிஸ்கட் கிடைக்குமா?’

‘சந்தன் ஸார், இனி பிஸ்கட்டுகளை வழங்க மாட்டாராம்,’ என்றான் பிஸ்வாஸ்.

‘ஏன்? எதுக்கு?’ என்றேன்.

‘பணம் சேமிக்க என்றார். அவர் என்ன சொல்கிறார் என்று எனக்கு எப்படித் தெரியும்?’ பிஸ்வாஸ் கூறிவிட்டு வெளியேறினான்.

நாங்கள் மௌனமாகத் தேநீர் அருந்தினோம். சந்தன் எப்போது எங்களை வேலை விட்டுத் தூக்கப் போகிறார் என்று அஞ்சினோம்.

மாணவர்களின் விடைத் தாள்களைத் திருத்தத் தொடங்கினேன்.

ஸௌரப் கொஞ்சம் நேரத்திற்குப் பின் பேசினான்.

‘மச்சி, எனக்கு இன்ஜினியர் ஆகவே விருப்பம் இல்லை. என் பெற்றோர்களுக்கு வேண்டும் என்பதால் தான் படித்தேன். எனக்கு விருப்பமில்லாததைப் படித்ததற்கு எனக்கு இது தேவை தான்.’

விடைத்தாள்களிலிருந்து கண்களை எடுக்காமலேயே முகம் சுளித்தேன்.

‘நான் ஒன்று சொல்லலாமா?’ என்றான் ஸௌரப். ‘ரொம்ப பரபரப்பாகாதே.’

‘என்ன?’ என்றேன்.

‘நான் கேஸை மிஸ் செய்கிறேன்.’

‘ஸராவின் கேஸா?’ என்றேன் ஸௌரப்பிடம்.

‘ஆமாம். இது என்னை பரபரப்பாக வைத்திருந்தது. ஏதோ

நல்ல விஷயம் செய்கிறோம் என்ற பெருமை. ஒரு குறிக்கோள் இருந்தது.'

'நிஜமாவா?'

'நான் லக்ஷ்மனுடைய போனை ஹாக் செய்தபோது, ஸக்ஸேனாவின் ஊனத்தைக் கண்டுபிடித்தபோது.'

'ஆமாம். நீதான் அவற்றைச் செய்தே. நான் அதனால் தான் கேஸிலிருந்து விலகினேன். நீயின்றி என்னால் தனித்து இயங்க முடியாது.'

நான் விடைத்தாள்களுக்கே சென்றேன்.

'அந்த ஜிஹாதி நம் முகத்தின் மீது துப்பாக்கியை வைத்தான். அதனால் தான் நான் உன்னைத் தடுத்தேன்,' என்றான் ஸொரப்.

'ஆமாம். எனக்குத் தெரியும்.'

ஸௌரப் தலையசைத்து மௌனமானான். கடைசி தேர்வுத் தாள்களைத் திருத்தினேன். 'நீ ஏன் டெஹ்ரீக்-ஈ-ஜிஹாதியை ட்விட்டரில் தேடினே?'

'என்ன?' என்று நிமிர்ந்தேன். 'இதைப் பற்றி திடீரென்று ஏன் பேசறே, கோலு?'

'சும்மா ஆர்வம் தான். ஏன் ட்விட்டர்?'

'டெஹ்ரீக் மற்றும் சிகந்தர் பற்றி தெரிந்து கொள்ளத் தான்; இந்த ஸ்தாபனங்கள் ட்விட்டரில் ஆர்வமாக இருப்பார்கள்.'

'ஓகே. அந்த வெள்ளைப் பொடி என்ன என்று கண்டுபிடித்தாயா?'

பேனாவை மூடினேன். விடைத் தாள்களை ஒரு பக்கமாக அடுக்கினேன். ஸொரப்பின் கண்களைப் பார்த்தேன்.

'நிஜமாவா, ஸௌரப்?'

'என்ன?'

'இல்லை. நான் கண்டுபிடிக்கவில்லை. நீ தான் கேஸில் வேலை செய்வதிலிருந்து தடுத்து விட்டாயே? நினைவில்லையா?'

'சிகந்தரின் ஸெல்போன் ரெக்கார்டுகள்? ரானா அவற்றை விசாரிக்க உதவுவார்.'

'எதற்குக் கேட்கிறாய், ப்ரோ?'

ஸௌரப் காலிக் கோப்பையை மேசையில் அடித்தான்.

'எது மோசம் என்று சொல்ல முடியவில்லை. நாம் இந்தக் கேஸில் வேலை செய்தால் ஜிஹாதி நம்மைக் கொன்றுவிடும் என்ற அச்சமா? அல்லது சந்தன் கிளாஸஸில் மெதுவாகச்

சாவதா?’ என்றபடி ஸௌரப் அறையை விட்டு வெளியேறினான்.

❖

அடிக்கடி வரும் கெட்ட கனவினால் எழுந்தேன். ஒவ்வொரு இரவும், ஸரா தன் கொலையாளியிடமிருந்து தப்பிக்கப் போராடுவது போலவும், கொலையாளி அவள் கழுத்தை நெறிப்பது போலவும் கனவு கண்டேன்.

நேரத்தைப் பார்த்தேன். மூன்று மணி.

ஸௌரப் விழித்துக் கொண்டிருந்தான். என் படுக்கை அருகே அமர்ந்து லாப்டாப்பில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான்.

‘என்ன செய்யறே?’ என்று கேட்டேன்.

‘சிகந்தர் ஸ்ரீநகரில் இருக்கான். என்னால் கண்டிப்பாகச் சொல்ல முடியும்,’ என்றான் ஸௌரப்.

நான் எழுந்து உட்கார்ந்தேன்.

‘யாரு? என்ன?’

‘சிகந்தர். அவனுடைய படம் ஒரு குரூப்பில் இருக்கு. டெஹ்ரீக் அக்கொண்ட் வைத்திருப்பவர்கள் அதை ட்விட்டரில் ஏத்தியிருக்கான். இப்பொழுது எடுத்தது போலிருக்கு. கண்டிப்பாகத் தெரியும்.’

‘வாவ்!’ என்றேன் படத்தைப் பார்த்தபடி. டெஹ்ரீக்-ஈ-ஜிஹாதி கொடியுடன் சிகந்தரும், ஆறு இளம்பையன்களும் நின்று கொண்டிருந்தனர். பின்னால் மலை தெரிந்தது.

‘எப்படிக் கண்டுபிடித்தே?’ என்றேன்.

‘அரபியில் தேடினேன். நம் பிஸினஸ் கார்டில் என்ன எழுதியிருந்ததோ அதைப் போட்டேன். ஸேஃபிலிருந்து எடுத்தோமே, கூகிள் டிரான்ஸ்லேடர் உபயோகிக்கக் கொஞ்ச நேரம் பிடித்தது. பல அக்கௌண்டுகளில் தேடினேன். ஆனால் பாரேன். அவர்கள் இப்பொழுது தான் இரண்டு நாட்களுக்கு முன் ஏத்தியிருக்கிறார்கள்.’ நான் கிசுகித்தேன். ‘ஏன்?’

‘ஏன் போஸ்ட் செய்திருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது.’

‘இல்லை கோலு! நீ ஏன் இதைத் செய்கிறாய்?’

‘இது ஒன்று தான் என் வாழ்வில் அர்த்தமுள்ளதாக இருக்கு. நாம் நெருங்கிவிட்டோம் என்று நினைக்கிறேன். இப்போ விடக் கூடாது.’

‘நிச்சயமாகத் தான் சொல்றியா?’

ஸௌரப் விரலை இதயத்தின் மீது வைத்து தலையசைத்தான்.

# அத்தியாயம் 19

‘இந்தப் பௌடர் உங்களுக்கு எங்கே கிடைத்தது?’ என்றார் ரானா.

‘கிளாஸில் சில மாணவர்களிடமிருந்து பறிமுதல் செய்தது. இது என்ன?’

ஸராவின் ஸேஃபில் கிடைத்த பொடியை ஒரு வத்திப்பெட்டியில் ஒரு டீஸ்பூன் போட்டு எடுத்து வந்தேன். ‘ஹௌஸ் காஸ் வில்லேஜில் இரண்டாவது மாடியிலிருந்த மூன்ஷைன் என்ற நைட்கிளப்புக்கு நான், ரானா மற்றும் ஸௌரப் வந்திருந்தோம். இரவு பத்து மணிக்கு பதினைந்து வாடிக்கையாளர்கள் தான் இருந்தனர். நள்ளிரவுக்குப் பிறகு தான் சூடு பிடிக்கும். பெண்கள் வரவில்லையே என்று ரானா புலம்பியபோது மேனேஜர் இதைச் சொல்லித் தான் சமாதானம் செய்தார்.

‘இது போதை பொருள் கோகெய்ன். தெரியாத அப்பாவி மாதிரி நடிப்பதை நிறுத்து. நீ இதைப் பயன்படுத்துகிறாயா?’

‘இல்லை, ஸார். கோகெயின் என்றால்?’ என்றேன்.

‘ஆமாம், பணக்கார ஹௌஸ்காஸ் குழந்தைகள் ஒரு கிராமுக்கு ஏழாயிரம் ரூபாய் கூடக் கொடுப்பார்கள்.’

‘என்ன?’ என்றேன்.

‘பசங்களா, எனக்கு உங்களைப் பிடித்துப் போய்விட்டது. ஆனால் போதை மருந்து விஷயத்தில், நான் சும்மா இருக்க மாட்டேன். இது எங்கிருந்து கிடைத்தது என்று மரியாதையாகச் சொல்லி விடுங்கள்.’

‘சொன்னேனே. வகுப்பில் சில பசங்களிடமிருந்து.’

‘ஐஐடியில் படிக்கப் பயிற்சி பெறுபவன் கோகெயின் அடிமையா? என்ன அர்த்தம்?’

‘இது தெற்கு டெல்லி. எங்கள் கிளாஸில் படிக்க வரும் அனைத்து மாணவர்களும் படிப்பில் ஆர்வம் காட்டுவதில்லை,’ என்றான் ஸௌரப்.

‘நாங்கள் கோச்சிங் கிளாஸிலிருந்து வெளியேற்றிவிடுவோம்,’ என்றேன். இன்ஸ்பெக்டர் ராணா ஆமோதித்தார். ஆனால் நம்ப மறுத்தார்.

‘உங்களுக்குக் குடிக்க ஏதாவது ஸார்?’ என்றான் ஸௌரப். பார் டெண்டர் அருகே வந்தான்.

‘’ஆமாம். ரம் மற்றும் கோக், லார்ஜ். எல்லோருக்கும். அடக் கண்றாவியே! பெண்கள் எங்கே? இன்று அவர்களின் அப்பா அனுமதிக்கவில்லையா, என்ன?’ என்றார் ராணா.

பார் டெண்டர் பதில் பேசவில்லை. மூன்று டிரிங்க் ரெடி செய்து எங்களிடம் தந்தான்.

‘கேஸ் பற்றி என்னிடம் எதுவும் பேசவில்லை; அந்த காஷ்மீரிப் பெண் கேஸில் நீ தீவிரமாக இருப்பாயே?’ ராணா பெரிதாக மிடறு விழுங்கினார்.

‘வேலையில் பிஸி. கேஸைப் பின் தொடர நேரம் இல்லை,’ என்றேன்.

‘ஆர்வம் குறைந்துவிட்டதா? விசாரணை செய்வது எவ்வளவு கஷ்டம் என்று புரிந்ததா?’

‘ஒப்புக் கொள்கிறேன்,’ என்றேன்.

‘அப்பாவைச் சந்தித்தீர்களா? ஆணவக் கொலை கோணம் என்ன ஆச்சு? அவர் கொன்றிருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த முல்லாக்கள் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள்.’

‘ஒருமுறை சந்தித்தோம்,’ என்றேன்.

‘என்ன ஆச்சு?’

‘அவருக்கு சாட்சியம் இருக்கு. அடுத்த நாள் ஸராவின் பிறந்த நாளுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்.’

‘அப்படியா! என்ற ராணா யோசனையில் இறங்கினார். டிரிங்கை முடித்துவிட்டு கிளாஸை மேசையில் வைத்துவிட்டு, அசிங்கமாக, ‘ஆ, ஆ’ என்றார்.’

‘ஆமாம், அதனால் திரும்பவும் ஒரு முட்டுச்சந்துக்கு வந்துவிட்டோம்.’ என் இதயம் படபடத்தது. போலீஸ் ஆபீஸரிடம் பொய் சொல்கிறேன். நாங்கள் ஆதாரத்தை மறைத்தோம் என்று தெரிந்தால் ராணா என்ன செய்வார் என்று யோசித்தேன். இன்ஸ்பெக்டர் என் கலக்கத்தை உணராமல் இருக்க அவருக்கு இன்னொரு டிரிங்க் ஆர்டர் செய்தேன்.

‘இந்தப் பொடி லோனிடமிருந்து கைப்பற்றியது இல்லை

என்று நிச்சயமாகத் தெரியுமா? அவர் எப்படி இவ்வளவு பணக்காரர் ஆனார்? முல்லா போதை பொருள் விற்கும் ஆசாமியாக இருக்கலாம்,' என்றார் ரானா.

நான் உறைந்தேன்.

'அவரை வாழ்க்கை முழுவதும் சிறையில் இருக்கும்படி செய்துவிடுவேன். கொலை வழக்கு இல்லை என்றால் போதைப் பொருள். நீங்கள் என்னிடம் சொல்லுங்கள்,' என்று ரானா விரலால் என்னைச் சுட்டிக் காட்டினார்.

'இல்லை ஸார்,' என்று ஸௌரப் தலையசைத்தான். 'எங்களுக்குத் தெரியாது. நான் கேஷவ்விடம் இந்த கேஸிலிருந்து விலகியே இருக்கச் சொன்னேன்.'

'ஏன்? பயமா?'

'ஆமாம்,' என்றான் ஸௌரப் உதடுகளைக் கடித்தபடி சொன்னான். 'எங்கள் தொழில் மீது கவனம் இல்லை என்ற வருத்தம்.'

'நல்லது. சும்மா சுத்தக் கூடாது,' என்றார் ரானா. போன் பீப் அடித்து அழைத்தது. 'எனக்குப் போகணும். அவசர வேலை.'

'இன்னொரு குற்றமா ஸார்?' என்றான் ஸௌரப்.

'இல்லை. என் மாமியாரின் பிறந்த நாள். நான் டின்னருக்கு வீட்டுக்கு வருவேன் என்று சொல்லியிருந்தேன். மறந்துவிட்டேன். பரிசு கூட வாங்கவில்லை. ஐயோ! இரவு பூரா மகளும், அம்மாவுமாக என் தலையைக் கடித்துக் குதறி விடுவார்கள்.'

❖

தண்ணீர் ஃப்ளஷ் செய்யும் சத்தத்தில் பேசவே முடியவில்லை. சத்தம் கேட்கலை.

'இது ஏழு லட்சம். கழிப்பறையில், போய்விட்டது. நாம் அதை விற்றிருக்கலாம்,' என்றான் ஸௌரப்.

'வேலை சரியான திக்கில் போகவில்லை. அதற்காகப் போதை மருந்து கடத்தலில் இறங்கும் அளவுக்குத் தாழ்ந்து போகவில்லை,' என்று கைகளைக் கழுவினேன்.

'ஐஐடி கனவு கூட ஒரு போதை தானே?'

'ஆமாம். ஆனால் அது சட்டபூர்வமானது. வீட்டில் ஆர்கானிக் கெமிஸ்ட்ரி புத்தகங்கள் வைத்திருப்பதில் தவறில்லை. ஆனால் வீட்டில் யாராவது நூறு கிராம்

கோகெயினைக் கண்டெடுத்தால் பத்து வருஷம் ஜெயில் களிதான்.'

கழிப்பறையிலிருந்து வெளியே வந்தோம்.

'அடுத்து என்ன?' என்றான் ஸௌரப்.

'நான் சொன்ன மாதிரி தான். நான் ஸ்ரீநகர் செல்கிறேன். எந்த அபாயகரமான நடவடிக்கையிலும் இறங்க மாட்டேன். ஆனால் என்னால் முடிந்ததைக் கண்டுபிடிப்பேன்.'

'நான் என்ன செய்வது?'

'இங்கே இரு. நான் கூறியது போல் அநாவசிய அதிரடி தேவையில்லை. இங்கிருந்தே கேஸை அலச உதவி செய்.'

'உன்னை எப்படித் தனியாக அனுப்ப முடியும்?'

'நான் பார்த்துக் கொள்கிறேன். நாம் போனில் தொடர்பில் இருப்போம்.'

சோபாவில் அமர்ந்து டிவியைப் போட்டோம். டாய் ஸ்டோரி, ஆங்கிலப்படம் ஓடிக் கொண்டிருந்தது. பார்க்க ஆரம்பித்தோம். ஒரு காட்சியில் வுட்டி மற்றும் பஜ் லைட்இயர், இரண்டு பொம்மைகள், ஆப்த நண்பர்கள், சண்டை போட்டுக் கொண்டனர். ஆனால் இருவரும் மிஸ் செய்கின்றன. 'யூ ஹேவ் காட் எ ஃபிரெண்ட் இன் மீ' பாடல் பின்னால் ஒலித்தது.

**'**என்னில் உனக்கொரு நண்பன் உண்டு

உனக்காக நான் எதையும் செய்வேன்

சேர்ந்தே அனைத்தையும் சந்திப்போம்

ஏன் என்றால் என்னில் உனக்கொரு நண்பனுண்டு

என்னில் உனக்கொரு நண்பன் உண்டு**.'**

கடைசியில் நட்பாகி இருவரும் அழுதபடி இறுக்கக் கட்டிப்பிடிக்கிறார்கள்.

ஸௌரப் கண்களைத் துடைத்தபடி என்னைப் பார்த்தான்.

'நானும் வரேன்,' என்றான்.

'என்ன? ஆனால் -,' என்றேன்.

'மீன, மேஷம் பார்க்காதே. நானும் காஷ்மீர் வருகிறேன். நான் எல்லா புங்கிங்கும் செய்கிறேன்.'

'ஆனால், கோலு -'

காஷ்மீர் மண்ணில் சொர்க்கம் என்கிறார்களே! நான் இப்போ சந்தன் கிளாஸில் - மண்ணின் நரகத்தில் வசிக்கிறேன்.

எதுவும் இதைவிட நன்றாக இருக்கும். முடிவு செய்து விட்டேன். நான் வரேன்.’

‘ஸௌரப் நான் சொல்வதை-’

‘உஷ்ஷ். தீர்மானம் ஆகிவிட்டது.’

நான் ஸௌரப்பை பார்த்தேன். அவனுடைய குண்டு உருண்டை முகம் பிக்ஸார் பட டெடி பேர் போலிருந்தது.

‘ஐ லவ் யூ,’ என்றேன்.

‘என்னை யாராவது கொலை செய்தால், கேஸை இப்படி எடுத்து நடத்துவியா?’

‘கொலையாளியிடம் என்னைக் கொன்றுவிடு என்று சொல்லுவேன்,’ என்றேன்.

ஸௌரப் சிவந்தான். நான் சிரித்தேன்.

‘இது போன்ற மட்டமான செண்டி வரிகளைச் சொல்லி என்னை மடக்காதே. நானும் முட்டாள்தனமாக உன்னுடன் காஷ்மீர் வருகிறேன்,’ என்றான் ஸௌரப்.

❖

‘லீவா? எதுக்கு? அப்படின்னா? என்றார் சந்தன் அரோரா. அதிகம் சுவைத்த பான் மஸாலாவைத் துப்பினார், அதற்காகவே தனியாக வைக்கப்பட்ட குப்பைத் தொட்டியில். அவர் அலுவலகத்தில் அவர் மேசை எதிரே அமர்ந்திருந்தோம். அகலக் கண்கள் மின்னல் வேகத்தில் என்னையும், ஸௌரப்பையும் மாறி, மாறி பார்த்தன.’

‘ஹாலிடே சார்,’ என்றேன். ‘ஸௌரப்பும் நானும் சேர்ந்து ஹாலிடே போக விருப்பப்படுகிறோம்.’

அவர் சொத்தை எழுதிக் கொடுக்கச் சொன்னது போல் விழித்தார்.

‘எதற்கு ஹாலிடே?’ என்றார் சந்தன். ‘அதுவும் இரண்டு பேரும்? கிளாஸஸ் என்ன ஆகும்?’

‘எங்களுக்கு ஆஃப்ஸைட்டு மாதிரி ஸார். இருவரும் மாணவர்களைச் சேர்ப்பது பற்றி திட்டமிடப் போகிறோம்,’ என்றான் ஸௌரப். ‘மற்ற ஆசிரியர்களிடம் ஸப்ஸ்டிடியூஷன் (மாற்று வகுப்பு) பற்றி பேசி விட்டோம்.’

‘இது பீக் டைம்,’ என்று சந்தன் இறைந்தார். ஸெக்ஸி ஷீலா கீ போர்ட்டிலிருந்து கண்களில் நட்சத்திரம் மின்ன அவரைப் பார்த்தாள்.

‘எந்தத் தடையும் இல்லாமல் பார்த்துக் கொள்கிறோம், ஸார்,’ என்றேன்.

‘எனக்கு அக்கறை இல்லை. புது மாணவர்களைப் பற்றி என்ன? உங்கள் நம்பர் என்ன?’

‘நம்பரா?’

‘நீங்கள் சேர்த்த மாணவர்கள். உங்கள் சிபாரிசு. திரு. மஹேஸ்வரி?’

‘இதுவரையா? நீங்கள் தான் மீட்டிங்கில் சொன்னீர்களே?’ என்றான் ஸொரப்.

சந்தன் தலையசைத்தார்.

‘அதன் பிறகு ஜீரோ தான், ஏறத் தாழ,’ என்றான் ஸௌரப்.

‘ஜீரோவா? பார்த்தாயா? இதில் உனக்கு ஹாலிடேவா?’

‘நாங்கள் திரும்ப வந்து டார்கெட்டுகளை முடிக்கிறோம்,’ என்றேன்.

‘எங்கே போகப் போகிறீர்கள்?’

‘ஸ்ரீநகர்.’

‘காஷ்மீர்?’

‘ஆமாம், ஸார்.’

‘ஏன்? சாக விருப்பமா?’

‘இல்லை, ஸார்,’ என்றேன். ‘அது முழுமையான மாநிலம், அங்கே கோடிக் கணக்கில் மக்கள் வாழ்கிறார்கள்.’

‘எல்லாம் தீவிரவாதிகள்.’

‘அது தவறு ஸார்,’ என்றேன்.

‘ஏன் ஸ்ரீநகர்?’ நீங்கள் என்ன? ஹனிமூன் செல்லும் ஜோடியா?’ ஸௌரப்பும், நானும் பதில் பேசவில்லை. பதில் இல்லை. எங்கள் மௌனத்தை சம்மதம் என்று பொருள் கொண்டார்.

‘அப்படியா? நீங்கள் இருவரும், அது என்ன? ஏதோ சொல்வார்களே, செக்ஷன் 377?’

‘ஸார், இல்லை,’ என்றேன். ஸௌரப் ஆடிப்போய் விட்டான். அவனுக்கு செக்ஷன் 366 என்னவென்று புரியவில்லை.

‘பிறகு எதற்கு ஸ்ரீநகர்? எங்கே தங்குகிறீர்கள்?’

‘ஷெல்டர் ஹவுஸ்போட், ஸார்,’ என்றான் ஸௌரப்.

‘ஹவுஸ் போட்டில் தங்குகிறீர்களா? நிஜமாகவா? இது

ஹனிமூன் தானே, கண்டிப்பாக?’

ஸெக்ஸி ஷீலா, ஹனிமூன் வார்த்தையைக் கேட்டு உஷாரானாள். இன்வாயிஸ் பிரிண்ட் செய்யும் பாவனையில் இருந்தாள். சந்தன் தன் மனைவியை விட்டுவிட்டு எங்கோ தனிமையில் அழைத்துச் செல்வார் என்று நம்பினாளா? யாருமே யாருக்குமே ஜே.ஈ.ஈ. நடத்தாத இடம்?

தங்கும் இடம் முடிவாகவில்லை - என்று நினைத்திருந்தேன் ஸௌரப் பக்கம் திரும்பினேன்.

‘ஏன் ஹவுஸ் போட்டில் தங்குகிறோம்?’

‘அதுதான் மலிவு விலை. நல்ல ரெவ்யூ. பாதுகாப்பான இடம். அதனால் புக் செய்தேன்.’

‘ஏதாவது நடுவான இடம் பாரு என்று சொன்னேன்,’ என்றான் ஸௌரப். ‘இது ஜீலம் ஆற்றில், நகரின் நடுவில் இருக்கு.’

சந்தன் அரோரா சிரித்தார்.

‘இது தான் நடக்கும் ஷீலா மேடம். பசங்களுக்குப் பெண்கள் கிடைக்காவிட்டால்.’ அவளைப் பார்த்துக் கண்ணடித்தார்.

ஆமாம். காதல் மன்னன் பேசிவிட்டார். இன்வாய்ஸ் போடும் கள்ளக் காதலி - வெட்கப்பட்டுச் சிரித்தாள்.

‘ஸார், நாங்கள் ‘கே’ ஜோடி கிடையாது.’

‘நீங்கள் அப்படியிருந்தாலும் ஓகே. யோகா செய்து சரி பண்ணிடலாம்.’

‘சரியா?’ என்றேன் என்ன யோகா பயிற்சி என்று யோசித்தேன்.

‘ஸார், நாங்கள் கே கிடையாது,’ என்றான் ஸௌரப்.

‘கே என்றாலும் எந்தத் தவறும் இல்லை,’ என்றேன்.

‘என்னிடமிருந்து உங்கள் ரகசியத்தை மறைக்க வேண்டாம்.’

‘சந்தன் ஸார், எங்களுக்கு இரண்டு வாரங்கள் லீவு வேணும். நாங்கள் அங்கே என்ன செய்கிறோம் என்பது உங்களுக்கு சம்பந்தம் இல்லாத விஷயம்,’ என்றேன்.

என் வீராப்பைப் பார்த்து சந்தன் கொஞ்சம் வருந்தினார் கடுப்பானார். ஒரு பைலைத் திறந்து வேலை செய்யும் பாவனையில் இருந்தார்.

‘நீங்கள் போக முடியாது. பீக் ஸீஸன். எனக்கு எல்லா ஆட்களும் தேவை,’ என்றார். இருவரையும் நிமிர்ந்து கூடப்

பார்க்கவில்லை.

‘ஸார், இரண்டு வருடங்களாக, நாங்கள் லீவே எடுக்கவில்லை,’ என்றான் ஸௌரப்.

‘நானும் தான். சந்தன், சந்தனுக்கு வருவார். தினமும்,’ என்று சந்தன் தன்னைப் பற்றியே மூன்றாம் மனுஷனைக் குறிப்பிடுவது போல் பேசினார்.

‘நல்லது ஸார். ஆனால் நாங்கள் இரண்டு வாரம் போகணும். அதனால் உங்களுக்கு ஒரு பிரச்சனையும் நேராது,’ என்றேன்.

சந்தன் என்னை ஆச்சரியமாகப் பார்த்தார். கிட்டே வருமாறு சைகை செய்தேன். அவர் முன்னால் சாய்ந்தார்.

‘நாங்கள் திருமதி சந்தன் அரோராவைக் கேட்கணுமா?’ என்று கிசுகிசுத்தேன்.

‘என்ன?’ வாய் கோணியது.

‘எங்களுக்குத் தெரியும். ஷீலா மேடமும் நீங்களுமான கதை. உங்களுக்கு ஹவுஸ் போட் கூடத் தேவையில்லை. அலுவலகமே போதும்,’ என்றேன்.

அவர் முகம் பழுப்பிலிருந்து, ஆப்பிள் சிவப்பாக மாறியது. பின்னர் வினாடிகளில் கத்திரிப்பூ கலரில் இறுகியது.

‘நான்...நான்...’ சந்தனுக்கு வார்த்தைகள் வரவில்லை.

‘எங்கள் லீவு திங்கள் தொடங்குகிறது. உங்களுக்கு ஓகே தானே, ஸார்?’ என்றேன்.

‘ஆமாம்,’ என்றார். வாய் இன்னும் சரியாக வேலை செய்யவில்லை. ‘ஷீலா, இவர்களின் லீவை கம்ப்யூட்டரில் பதிவு செய்.’

‘நன்றி, ஸார்,’ என்றான் ஸௌரப். நாங்கள் எழுந்தோம்.

‘காஷ்மீரில் உலர்ந்த பழங்கள் பிரபலம். அவற்றைச் சாப்பிடுங்கள்,’ என்றார் சந்தன், நாங்கள் அலுவலகத்தை விட்டு வெளியேறும் போது.

# அத்தியாயம் 20

‘நமக்கு ஒரு படகு வீட்டை நீ புக் செய்திருப்பாய் என்று இன்னும் கூட என்னால் நம்பமுடியவில்லை,’ என்றேன். நகர்ந்து செல்லும் பெல்டிலிருந்து என் சூட்கேஸை எடுத்துக் கொண்டேன்.

காஷ்மீருக்குப் போகும் விமானங்களில் ஒரு டஜனுக்கும் மேற்பட்ட பாதுகாப்பு சோதனைகளுக்குப் பிறகும் நாங்கள் பகலில் சரியான நேரத்தில் வந்தடைந்தோம். ஸ்ரீநகரில் அந்த ஷேக்-உல்-அலாம் சர்வதேச விமான நிலையத்தில் பயணிகளை விட சிஐஎஸ்ஃப் மற்றும் ராணுவ வீரர்கள் அதிகமாக இருந்தார்கள்.

‘என்னை நம்பு. உனக்குப் பிடிக்கும்,’ என்றான் ஸௌரப். ‘நான் டிரைவரைக் கூப்பிடுகிறேன்,’ தன் போனை வெளியே எடுத்தவன் அதன் திரையை முறைத்துப் பார்த்தான்.

‘என்ன?’ என்றேன்.

‘நெட்வொர்க் இல்லை. உன்னுடைய போனை உபயோகிக்கட்டுமா?’ என்றான்.

என்னுடையதிலும் சிக்னல் இல்லை. போனை அணைத்து விட்டு இருமுறை திருப்பிப் பார்த்தோம். நெட்வொர்க் இல்லை. ‘உங்களிடம் ப்ரீபெய்டு கார்டுகள் இருக்கிறதா?’ என்று மற்றொரு பயணி கேட்டார்.

‘ஆம்,’ என்றான் ஸௌரப். ‘டெல்லியில் இருந்தபோது நான் ஒன்று வாங்கியிருந்தேன். போஸ்டு பெய்டுக்கு அதைப் பிறகு மாற்றவில்லை.’

‘நானும் தான்,’ என்றேன்.

‘மற்ற மாநிலங்களின் ப்ரீ பெய்டு கார்டுகள் இங்கு ஜம்மு-காஷ்மீரில் வேலை செய்யாது. பாதுகாப்பு காரணங்களுக்காக.’

நவீனமான அந்த விமான நிலையத்திலிருந்து வெளியே வந்தோம். எங்கள் பெயரைத் தாங்கிய ஒரு இதய வடிவ அட்டையை ஒருவன் வைத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தேன்.

‘நிஜமாகத்தானா ஸௌரப்?’ என்று ஸௌரப்பிடம்

கேட்டேன்.

‘நல்ல சேவை, இல்லையா?’ என்றான்.

❖

விமான நிலைய சாலையில் வடக்குப்புறமாக நகரின் மையப் பகுதிக்கு எங்கள் கார் சென்றது. வெள்ளையான க்ரீம் ரோல் வடிவத்தில் இருந்த விமான நிலையக் கட்டிடத்தை விட்டு வெளியே வந்தவுடன் எங்களைச் சுற்றி மலைகள் இருப்பதைக் கவனித்தோம். அந்த நகருக்கு, பின்னால் இருக்கும் ஒரு திரைபோல் ஏப்ரல் மாதத்தில் சூரிய ஒளி பனிமூடிய சிகரங்களின் ஊடே பளிச்சென்று தெரிந்தது. மையப் பகுதியை நாங்கள் அடைந்தபோது மெட்ரோ இல்லாத எல்லா இந்திய நகரங்களும் போல் இருந்தது.

குளிர் பானங்கள், ஸெல்போன்கள், உள்ளாடைகள், நுழைவுத்தேர்வு அளிக்கும் பயிற்சி வகுப்புகள் போன்றவற்றிற்கான விளம்பரப் பலகைகள் எல்லா இடங்களிலும் காணப்பட்டன. இவைதான் இந்தியா என்பது எனக்குப் புரிந்தது. சௌகரியமான உள் ஆடை அணிந்து முயற்சி எடுத்துப்படி உன் போனுடன் விளையாடு, கோக் குடி, இவற்றைத் திரும்பச் செய்.

‘இந்தியாவில் இருக்கும் மற்ற இடங்களைப் போல் தான் இதுவும் இருக்கு,’ என்னைப் போலவே நினைத்த ஸௌரப் சொன்னான்.’

‘இது தான் இந்தியா,’ என்றேன் தோளைக் குலுக்கியபடி.

‘இவர்களுக்கென்று தனியாக அரசியல் சாசனம், கொடி போன்றவை கிடையாதா?’

டிரைவரைக் காண்பித்து வாயில் ஒரு விரலை வைத்து சமிக்ஞை காட்டினேன். காஷ்மீரில் அரசியல் பேசினால் பிரச்சனையை எதிர்கொள்ள நேரிடும் என்று சொன்னதைக் கேட்டிருக்கிறேன். எனக்கு எந்தப் பிரச்சனையும் தேவை இல்லை. எங்கள் ஸெல்போன்கள் வேலை செய்தால் போதும்.

❖

‘அஸ்-ஸலாம்-அலைகும், ஸௌரப் பாய், கேஷவ் பாய், நான் நிஸாம்,’ முப்பது வயதிலான, மெல்லிய உடல், தாடி, இஸ்லாமிய தொப்பி அணிந்தவன் படகு வீட்டின் நுழைவாயிலில் எங்களை வரவேற்றான்.

‘வாருங்கள். என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள்.

உங்களுடைய அறையைக் காட்டுகிறேன்,' என்றான்.

ஸ்ரீநகரின் மையப் பகுதியில் ஜீலம் நதியின் வலதுபக்கக் கரையில் எங்கள் படகு வீடு கட்டப்பட்டிருந்தது. ஸரா தன் குழந்தைப் பருவத்தைக் கழித்த வசீர் பாக் இதற்கு அருகில் தான் உள்ளது. கம்பெனிக்குச் சொந்தமான அரை டஜன் படகு வீடுகள் - ஒவ்வொன்றிலும் மூன்று, நான்கு அறைகளுடன் - அங்கு இருந்தன. நாளின் பெரும்பாலான நேரம் அவை கரையில் கட்டப்பட்டிருக்கும். ஒரு மிதக்கும் ஹோட்டல் போல் அவை இருந்தன. எங்களுடைய அறைக்கு நிஸாம் எங்களை அழைத்துச் சென்றான். என்னுடைய ஹாஸ்டல் அறை அளவில், மரத்தால் ஆனது. இரட்டைக் கட்டில் இருந்தது.

'இது இல்லை. தனித்தனி கட்டில்கள் உள்ள ஒரு அறை வேண்டும்,' என்றேன்.

'சாதாரணமாக ஜோடிகளாக இங்கு வருவார்கள், அவர்கள் தனித்தனி படுக்கைகளை விரும்புவதில்லை. ஆனால், வாருங்கள். அடுத்த படகில் அம்மாதிரி ஒரு அறை இருக்கிறது,' என்றான் நிஸாம்.

'நாங்கள் தனித்தனி அறைகளைக் கூட புக் செய்திருக்க முடியும்,' என்றேன்.

'இரு மடங்கு கட்டணம் கொடுத்திருக்க வேண்டும்,' என்றான் ஸௌரப்.

தனிமையை விட பணம் முக்கியத்துவத்தைப் பெறுகிறது என்று எண்ணிக் கொண்டேன்.

'உங்களுக்கு எது தேவையோ அதைச் செய்ய நிஸாம் இங்கு இருக்கிறான்,' என்று சொன்னான் நிஸாம். எங்களுக்கான அறையை அடைந்தேன்.

'என் ஸெல்போன் வேலை செய்யவில்லை,' என்றேன்.

'புது சிம்கார்டு வேலை செய்ய ஒரு வாரம் ஆகும்!'

'என்ன?' என்றேன்.

'இந்திய அரசாங்கத்தின் விதிகள். எங்களால் என்ன செய்ய முடியும்? அவர்களுக்கு என்ன வேண்டுமோ அதைச் செய்கிறார்கள்,' என்றான் நிஸாம்.

'நான் எனக்குத் தெரிந்தவர்களுடன் எப்படி தொடர்பு கொள்வேன்?' என்றேன்.

நிஸாம் ஸௌரப்பை பார்த்தான்.

'உங்கள் பிஸியான நண்பனிடம் ஓய்வாக இருக்கச்

சொல்லுங்கள். அவர் ஸ்ரீநகருக்கு விடுமுறையில் வந்திருக்கிறார்.'

'நாங்கள் தொடர்பில் இருக்க வேண்டும்,' என்றேன்.

'படகில் வைஃபை இருக்கிறது. பாஸ்வோர்டு படுக்கை அருகில் இருக்கும் மேசையில் இருக்கு,' என்றான் நிஸாம்.

'எப்படி போன் செய்வது? சிம் கிடைக்க ஏதாவது வழி உண்டா?'

தன் பாக்கெட்டிலிருந்து நிஸாம் ஒரு போனை எடுத்தான்.

'இந்த போனுடைய சிம்மை எடுத்துப் பயன்படுத்துங்கள்,' என்றான்.

'உன்னுடைய சிம்மா, நிஸாம் பாய்?' என்றான் ஸொரப்.

'இது என்னுடைய இன்னொரு போன். இந்த பிரச்சனை வரும் என்பதால் இரண்டு மூன்று போன்கள் வைத்திருப்போம்.'

❖

'அவள் பிறந்து வளர்ந்த வீட்டைப் பற்றி ஸரா என்னிடம் சொல்லி இருக்கிறாள். நாளைக்கு சிகந்தரைத் தேடிப் போகும் முதல் இடம்,' என்று சொன்னேன்.

தால் ஏரிக் கரையில் மாலையில் நடப்பதற்கு வந்திருந்தோம். எண்ணற்ற பல போட்டோக்களிலும் பாலிவுட் சினிமாக்களிலும் காஷ்மீரைப் பற்றி சொல்லும் போது இந்தப் பின்னணி தான் காண்பிக்கப்படும். ஸரா பிறந்து வளர்ந்து மகிழ்ச்சியாக இருந்த ஸராவின் நகரத்திற்கு வந்திருக்கிறேன் என்பதை மறக்க முயற்சி செய்தேன். இந்தக் காற்றை சுவாசித்திருப்பாளா? இந்த நீரைத் தொட்டிருப்பாளா? நான் யோசித்தேன்.

'ஸஃப்தர் அங்கிள், சரியான விலாசம் தானே உன்னிடம் கொடுத்தார்?' என்று கேட்டான் ஸௌரப்.

'ஆமாம். ரொம்ப நாளுக்கு முன்னால் அவரிடம் இருந்தது; அதைத்தான் கொடுத்தார். சிகந்தரும் அவன் குடும்பமும் அங்குதான் இருப்பார்களா அல்லது வேறு இடத்திற்குப் போயிருப்பார்களா என்று கவலையாக இருக்கிறது. வஸீர்பாக் விலாசம் மட்டும் தான் ஸஃப்தரிடம் இருந்தது.'

'நாம் சீக்கிரம் கண்டுபிடிக்கலாம்.'

பதின்ம வயதில் இருந்த சில காஷ்மீர் சிறுவர்களைக் கடந்து சென்றோம். ஒரு பெஞ்சில் உட்கார்ந்திருந்தார்கள். போனை

வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அருகில் சென்று இரவு உணவுக்கு ஏதேனும் விடுதியைக் காண்பிக்கச் சொன்னேன்.

'அஹ்தூஸ் ரெஸ்டாரண்டுக்குப் போகலாம். அங்கு நல்ல வாஸ்வான் கிடைக்கும்,' என்று சற்றே எட்டிப்பார்த்த தாடியை உடைய சிறுவன் சொன்னான்.

'தேங்க் யூ,' என்றேன். அவனுக்கு அழகான நீலநிறக் கண்கள் இருந்தன.

ஸௌரபும் நானும் போவதற்குத் திரும்பும்போது அவன் கேட்டான்.

'நீங்கள் இந்தியாவிலிருந்து வருகிறீர்களா?' என்றான்.

அந்தக் கேள்வியைக் கேட்டு வியப்படைந்தேன். அவனைத் திரும்பிப் பார்த்தேன்.

'ஆம். நீ இல்லையா?' என்றேன்.

'நான் காஷ்மீரி,' என்றான். அவன் நண்பர்கள் சிரித்தார்கள். ஒருவன் கையைத் தட்டினான்.

போகலாம் என்பது போல் ஸௌரப் என் கையைக் குத்தினான். 'ஆனால் காஷ்மீர் இந்தியாவின் ஒருபகுதிதானே? என்று கேட்டேன்.

'நாங்கள் இந்தியாவை வெறுக்கிறோம்,' என்றான் மற்றவன்.

நான் முட்டைக் கோஸை வெறுக்கிறேன், நான் கேட்டை வெறுக்கிறேன், என்பது போன்ற இயல்பான குரலில் சொன்னான்.

'வெறுக்கிறாயா?' என்று கேட்டேன்.

'போகலாம், வா!' என்றான் ஸௌரப். அவன் முகத்தில் பயப்படுகிறான் என்பது எழுதி ஒட்டியிருந்தது.

'உணவு விடுதி சொன்னதற்கு நன்றி. நாங்கள் போக வேண்டும்,' என்றான்.

ஸௌரபின் வார்த்தைகளைக் கேட்டு சிறுவர்கள் சிரித்தார்கள்.

'எங்களைப் பார்த்து பயப்பட வேண்டாம். நாங்கள் தீவிரவாதிகள் இல்லை,' என்றான் முதலில் பதில் சொன்ன சிறுவன்.

'கடவுள் மீது சத்தியமாக நாங்கள் இல்லை,' என்றான் இரண்டாமவன்.

அவர்கள் இயல்பான தொனியில் பேசினார்கள். இது மாதிரி

இவர்களுக்கு முன்பும் நடந்திருக்க வேண்டும் என்பது புரிந்தது. ஒரு கூட்டமாகப் பெஞ்சில் உட்கார்ந்திருக்கும் காஷ்மீரி இஸ்லாமியச் சிறுவர்கள்; சுற்றுலாப் பயணிகள் நிச்சயமாக அவர்களிடமிருந்து விலகி இருக்கவே விரும்புவார்கள்.

‘நான் ராஜஸ்தானி. ஆனால் நான் இந்தியனும் கூட,’ என்று சொல்லி அவர்களைப் பார்த்து புன்முறுவல் செய்தேன். ‘உங்கள் நாட்டை வெறுக்காதீர்கள்.’

‘இந்தியா எங்களுடைய நாடு அல்ல. இந்தியா எங்கள் மீது அக்கறை காட்டவில்லை.’

கைமுட்டியால் என் விலா எலும்பில் குத்தினான் ஸௌரப்.

‘போகலாம் என்றேனே, வா கிளம்பு,’ என்றான். ஸௌரப் சொன்னது சரிதான். காஷ்மீரில் அரசியல் பேசக்கூடாது என்று எனக்குப் போட்டுக் கொண்ட உத்தரவை நானே மீறுகிறேன்.

‘உங்கள் பெயர்கள் என்ன?’ ஸௌரபை அலட்சியப்படுத்திவிட்டு நான் சிறுவர்களிடம் கேட்டேன்.

‘நான் கரீம், அவன் சசிப்,’ பச்சைக் கண்களை உடைய அந்த முதல் பையன் மற்றவர்களக் காட்டிச் சொன்னான். மற்ற மூவரும் போனை நோண்டிக் கொண்டு மௌனமாக இருந்தார்கள்.

‘நீங்கள் என்ன செய்கிறீர்கள்?’

ஒருவர் மற்றவரைப் பார்த்து விழித்தார்கள்.

‘படிக்கிறீர்களா?’ என்றேன்.

‘இல்லை’ என்று தலையை ஆட்டினார்கள்.

‘இல்லை. நாங்கள் எதுவும் செய்யவில்லை. எந்த வேலையுமே கிடைக்கவில்லை,’ என்றான் கரீம்.

‘வேலை பார்க்காதவர்கள் போவதற்கு சினிமா தியேட்டர்கள் கூட கிடையாது,’ என்று ஒருவன் சொன்னதற்கு எல்லோரும் சிரித்தார்கள்.

என்னை ஸௌரப் இழுத்துக் கொண்டு போனபோது கரீமின் பச்சைக் கண்கள் என்மீதே இருந்தன.

❖

‘நீ ஏன் அந்தச் சிறுவர்களுடன் நேற்று பேசினாய்?’ என்று ஸௌரப் கேட்டான். ஆற்றின் இடதுபுறம் வசீர்பாக் நோக்கிச் சென்று கொண்டிருந்தோம். ஃபலக் ரெஸ்டாரெண்டு இருந்த சந்துக்குள் சென்றேன்; ஸராவின் பழைய வீட்டு விலாசத்திற்கான

ஒரு அடையாளம் அது.

‘தெரிந்து கொள்ள ஆவலாக இருந்தேன். நாம் இந்தியாவிலிருந்து வருகிறோமா என்பதை அவன் எப்படிக் கேட்டான் என்று பார்த்தாயா?’

‘நீ ஒருவேளை வெளிநாட்டுக்காரன் மாதிரி இருக்கிறாயோ?’

‘தால்-ரொட்டியைப் போல் நான் படு லோகல். பிறகு அவன் சொல்கிறான்,’ ‘நான் இந்தியன் இல்லை, நான் காஷ்மீரி’ என்று இந்த மக்களுக்கு என்ன தான் ஆயிற்று?’

‘ஏன் இவ்வளவு ராணுவ வீரர்கள் இங்கு இருக்கிறார்கள் என்பது இப்போது உனக்குப் புரிகிறதா? அவர்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். அவர்கள் இங்கு இல்லையென்றால் நம்மை யாராவது பின்தொடர்கிறார்கள் என்பது போல் எனக்குப் பயமாக இருக்கிறது,’ என்றான் ஸௌரப். தெரு முனையைச் சுட்டிக் காண்பித்தான். தெருவில் நடப்பவர்கள் ஒவ்வொருவரையும் உன்னிப்பாக நான்கு ராணுவ வீரர்கள் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

‘இந்த இந்திய ராணுவத்தைத் தான் இங்குள்ளவர்கள் வெறுக்கிறார்கள். அவர்கள் தாம் எதிரிகள். ஸரா இது பற்றி என்னிடம் சொல்லியிருக்கிறாள். ஆனால் நாம் நேற்று பார்த்தது வேறு ஏதோ ஒன்று,’ என்றேன்.

‘நன்றி கெட்ட மனிதர்கள். ராணுவம் மட்டும் இங்கு இல்லாவிட்டால் பாகிஸ்தான் இந்த இடத்தில் கலகத்தையும் குழப்பத்தையும் ஏற்படுத்தும்.’

‘அது அவ்வளவு எளிதானதல்ல,’ என்றேன். ‘மக்கள் உண்மையில் ராணுவத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்டிருந்தால் நம்மால் ஏதாவது செய்திருக்க முடியும். சரி போகட்டும். அது தானே ஃபலக்?’

உணவு விடுதிக்கு அருகில் இருந்த பீடா கடைக்காரரிடம் அந்த விலாசத்தைக் காண்பித்தோம்.

‘உங்களுக்கு ஸிக்கந்தரைப் பார்க்க வேண்டுமா? சிகந்தர் லோன்?’ என்று கேட்டார் கடைக்காரர். இரண்டு வெற்றிலைகளை எடுத்து அவற்றில் சுண்ணாம்பைத் தடவினார்.

‘ஆமாம். அவன் இங்குதான் இருக்கிறானா?’ என்று நான் கேட்டேன்.

‘உங்களுக்கு அவனிடத்தில் என்ன வேலை ஆக வேண்டும்?’ என்று அவர் கேட்டார். சிறிது பாக்குச்சீவல்களையும் சோம்பு,

ஏலக்காயையும் வெற்றிலைகளில் வைத்தார்.

‘டெல்லியிலேயே அவனை எங்களுக்குத் தெரியும். அவன் எங்கள் நண்பன்,’ என்றேன். அதிர்ச்சியாக என்னைப் பார்த்தான் ஸௌரப். சலனமில்லாமல் சிரித்தேன்.

‘அப்போ எங்கே இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்குமே?’ இரண்டு வருஷங்களுக்கு முன்பு வரை அவனும் அவன் அம்மாவும், இங்குதான் இருந்தார்கள். இப்போவெல்லாம் அடிக்கடி வருவதில்லை, எப்பவாவதுதான் என்றார்.

‘இப்போ எங்கே இருக்காங்க?’ என்றான் ஸௌரப்.

ஃபர்ஸானா பேகம் ராஜ்பாக்கிற்குப் போனதாக நான் கேள்விப்பட்டேன். அஹ்தூஸ் ஹோட்டலுக்கு அருகில்.’

‘அவள் மகன் என்ன ஆனான்?’

‘சிகந்தர் எப்போதும் ஓடிக் கொண்டே இருக்கிறான். கொஞ்ச நாட்களுக்கு வீட்டுக்கு வருவான். ராணுவமும் போலீஸும் அவனைத் துரத்துகிறார்கள். உங்களுக்குத் தெரிந்திருக்குமே. உண்மையில் நீங்கள் அவனுடைய நண்பர்கள் தானா?’

‘ஆமாம், நாங்கள் நண்பர்கள் தான்,’ என்றேன்.

‘உங்களுக்காக என்னுடைய ஸ்பெஷல் பீடாவைத் தயாரிக்கட்டுமா?’

❖

‘எத்தனை ராஜ்பாக் கடைக்காரர்களாயிற்று இதுவரை?’ என்று கேட்டேன்.

‘ஐம்பதுக்கும் மேல். இரண்டு நாட்கள் வீணாயிற்று.’

அது மாலைப் பொழுது. படகு வீட்டின் பொது இடத்தில் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். அந்த இடத்தை எங்களுடன் பகிர்ந்து கொண்டவர்கள் தேன்நிலவுக்கு வந்திருக்கும் அன்பான ஒரு சர்தார் ஜோடி. இருபது அடி நடந்து அவர்கள் அறைக்குப் போவதற்கு அவர்களுக்குப் பொறுமையில்லை. ஏரியைப் பின்திரையாகக் கொண்டு தன் புது மனைவியை ஸெல்ஃபி எடுத்துக் கொண்டே முத்தம் கொடுக்க அவன் வற்புறுத்திக்கொண்டிருந்தான்.

அந்தப் பெண் சற்று சங்கடப்பட்டு நெளிந்தாள். இன்னும் தன் புது கணவனைப் புரிந்துகொள்ள முயற்சித்தவளாக; திருமண

ஆப் மூலமாகப் பார்த்து நிச்சயிக்கப்பட்டு நடந்த திருமணம் போல் தோன்றியது. அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்காமல் நான் முகத்தை வேறுபக்கம் திரும்பிக் கொண்டேன்.

‘நாம் வேறு என்ன செய்ய முடியும்?’ என்றேன்.

‘கேபிள் டிவி கடைகள்,’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’

‘செய்தித்தாள் விற்பவர்கள், அக்கம் பக்கத்தில் வேலை செய்பவர்களிடம் கேட்போம்,’ என்றான்.

‘டாக்டர்கள், குழாய் ரிப்பேர் செய்பவர்களையுமா?’

‘அதையும் செய்யலாம். நாளைக் காலை சீக்கிரம் கிளம்பலாம்.’

‘நன்றி, ஸௌரப். நீ இல்லாமல் என்னால் இதைச் செய்திருக்க முடியாது.’

‘வாயை மூடு. காரணமில்லாமல் உணர்ச்சி வசப்படாதே. நாம் யார்? தேன்நிலவு கொண்டாட வந்திருப்பவர்களா?’

நான் சிரித்தேன்.

‘உனக்குக் களைப்பாக இல்லையா, எந்த வெற்றியும் இல்லாமல் தேடிக்கொண்டே இருப்பதற்கு?’ என்று கேட்டான்.

‘சந்தன் அரோராவின் முகத்தைப் பார்ப்பதை விட நிச்சயம் இது தேவலைதான்! ஏய், உடனே அங்கே பார்க்காதே. அந்த சர்தார் ஆனாலும் ரொம்ப பரபரப்புடன் தான் தெரிகிறான்.’

‘அவனுடன் ஸெல்ஃபி எடுத்துக் கொள்ள விரும்புவதாகச் சொல்லி அவனைத் தொந்தரவு செய்யலாமா, அதே மாதிரி உட்கார்ந்து கொண்டு?’ என்றேன்.

❖

மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு கேபிள் ஆப்பரேட்டர் தேவதை போல் எங்களுக்குக் கிடைத்தான். ஃபர்ஸானா லோன், சரியா? ரெசிடென்ஸி ரோடில் சிவப்புக் கட்டிடம், மூன்றாவது மாடியில் அவள் வசிக்கிறாள்,’ என்றான்.

‘நிச்சயமாக உனக்குத் தெரியுமா?’

‘நிச்சயமாகத் தெரியும். அவள் எப்போதுமே தாமதமாகத்தான் பணம் கட்டுவாள். எனக்கு அவளைத் தெரியும். என்னை நம்புங்கள்.’

❖

அந்த வீட்டுக்குச் சென்று அழைப்பு மணியை அடித்தோம்.

கருப்பு புர்க்கா அணிந்த ஐம்பதை நெருங்கிய ஒரு பெண்மணி கதவைத் திறந்தாள். அவள் முகம் மட்டும் தெரிந்தது.

‘ஜி, ஜனாப்,’ என்றாள்.

‘ஃபர்ஸானா மேடம் தானே?’

‘ஆமாம்.’

‘நான் கேஷவ். ஸராவின் நெருங்கிய நண்பன்.’

எதுவும் பேசாமல் எங்களை மேலும் கீழும் பார்த்தாள்.

‘உங்கள் மகள் ஸரா?’ என்றேன். முதல் மனைவியின் மகள் என்று சொல்வது பொருத்தமாக இருக்கலாம்; நான் அவ்வளவு நுட்பமாகச் சொல்ல விரும்பவில்லை.

உள்ளே நுழைய விடாமல் அவள் கை மறித்தது. அடுத்து என்ன செய்வது என்பது பற்றி அவள் யோசித்தாள்.

‘ஒரு வேளை உங்களுக்கு என்னை நினைவு இல்லையோ? நான் அவளுடன் படித்துக் கொண்டிருந்தேன், காலேஜில்,’ என்றேன்.

‘ஸரா பதினைந்து வருஷங்களுக்கு முன்னால் அவளுடைய அப்பாவுடன் எங்களை விட்டுப் போய்விட்டாள். அதற்குப் பிறகான அவளுடைய வாழ்க்கையைப் பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது.’

‘எனக்குத் தெரியும். உங்களைப் பற்றி அவள் என்னிடம் சொல்லியிருக்கிறாள். தவிர சிகந்தர் பற்றியும்.’

‘உனக்கு என்ன வேண்டும்? அவள் தான் இப்போது போய்விட்டாளே?’

‘நாங்கள் உள்ளே வந்து உங்களுடன் பேசலாமா? ஸரா மற்றும் சிகந்தர் பற்றி. உங்களுடன் சில விஷயங்களைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.’

ஸௌரப்பைச் சுட்டிக் காட்டினாள்.

‘அவன் யார்?’ என்றாள்.

‘என்னுடைய நல்ல நண்பன் ஸௌரப். நாங்கள் டெல்லியிலிருந்து வந்திருக்கிறோம். ஒருவாரமாயிற்று. உங்களைக் கண்டுபிடிக்க.’

அவள் கண்களைச் சுருக்கினாள்.

‘நீங்கள் ராணுவத்திலிருந்து வருகிறீர்களா? என்னிடம் பொய் சொல்கிறீர்களா?’

‘இல்லை, ஆன்ட்டி,’ என்றேன். என் கைப்பையை எடுத்தேன்.

‘என்னுடைய ஐஜடியின் மாணவ ஐடியைப் பாருங்கள். ஸரா படித்த அதே காலேஜ். இது என்னுடைய தற்போதைய விஸிட்டிங் கார்டு. ஒரு கோச்சிங் சென்டரில் நான் பாடம் எடுக்கிறேன்.’

அவள் தயக்கத்துடன் இருந்தாள். நான் என் போனை எடுத்தேன். ஐந்து வருஷங்களுக்கு முன்னால் எடுத்த போட்டோவைத் தேடினேன்.

‘இதோ பாருங்கள், ஆன்ட்டி. நானும் ஸராவும் காலேஜ் கேன்டீனில் எடுத்துக் கொண்ட போட்டோ!’

போர்ன்விடா கப்போடு நானும் ஸராவும் போட்டோவில் இருந்தோம். அவரவர் தனித்தனியாக முடிக்க வேண்டிய வேலை மறுநாள் இருந்தது. இரவு பூரா விழித்திருந்து வேலை செய்து பிராஜெக்டை முடித்திருந்தோம். பகல் வரை படுக்கையில் அணைத்துக் கொண்டு படுத்திருந்தோம். எனக்குத் தலை சுற்றுவது போல் இருந்தது. அவளை மறக்கவில்லை என்றால், எப்படி அவள் நினைவை என்னிடமிருந்து அழிக்கப் போகிறேன்? அவளுடைய எல்லா போட்டோக்களையும் நீக்கிவிட வேண்டும் என்று சபதம் செய்து கொண்டேன். எல்லாவற்றையும்.

‘உள்ளே வாருங்கள், இது ஒரு சின்ன வீடு. அது பற்றி பரவாயில்லைதானே?’ என்றாள் ஃபர்ஸானா.

# அத்தியாயம் 21

‘அல்லா ரெஹாம்,’ உள்ளங்கைகளை மேலே தூக்கியவாறு மௌனமாகப் பிரார்த்தனை செய்தாள் ஃபர்ஸானா. இரண்டு கப் காஹ்வா டீ குடிப்பதற்கிடையில் ஸரா மரணம் பற்றி அதுவரை சேகரித்த தகவல்களை மறுபடியும் கூறினேன்.

‘அவ்வளவுதான். ஸராவுடன் சிகந்தர் இருக்கும் போட்டோ ஒன்று, இருக்கிறது. அதனால் அவனைச் சந்தித்தேன். ஆனால் அவன் ஓடிவிட்டான், என்றேன்.

‘ஸராவின் அப்பா அவர்கள் உறவை வெட்டும் வரை அவர்கள் இருவரும் ஒன்றாகவே இருந்தார்கள்,’ என்றாள்.

‘அவளுக்கு சிகந்தர் மீது எப்போதும் அக்கறை உண்டு.’

‘ஒரே தாய் வயிற்றுப் பிள்ளைகள் இல்லை அவர்கள் இருவரும். ஆனாலும் நான் பார்த்தவரை, கூடப் பிறந்தவர்களை விட நெருக்கமாக இருந்தார்கள்,’ என்றாள் அவள்.

தலையை ஆட்டியவாறு அவளைப் பார்த்துப் புன்னகைத்தேன்.

‘ஆனால் இது வாழ்க்கை. ரத்த சம்பந்தம் இல்லாவிட்டாலும் மனிதர்கள் சில நேரங்களில் மிக நெருக்கமாகிறார்கள். உன்னைப் பாரேன். நீயும் ஸராவும் பிரிந்துவிட்டீர்கள். ஆனால் நீ இங்கு இருக்கிறாய்; உண்மையைத் தேடி அலையும் ஒரே ஆள் நீ தான்.’

‘ஆன்ட்டி, எங்களுக்கு உதவுவீர்களா?’

‘என்னாலே, ஒரு கிழவியால என்ன உதவி செய்ய முடியும்?’

காலி கப்புகளை ஒரு தட்டில் வைத்துவிட்டு எழுந்தாள்.

‘நான் செய்கிறேன், ஆன்ட்டி,’ என்றான் ஸொாரப். அவளிடமிருந்து டிரேயை வாங்கி சமையலறையில் கொண்டு வைத்தான்.

‘நாங்கள் கட்டாயம் ஸிக்கந்தரிடம் பேசியாக வேண்டும். என்னை மன்னியுங்கள். ஆனால் அவன் எங்களைக் கண்டு ஓடிப்போனால் அவன் மீது தான் சந்தேகம் ஏற்படும்.’

‘என்ன சந்தேகம்?’

‘யார் ஸராவைக் கொன்றான் என்ற சந்தேகம்,’ என்றேன்.

‘உனக்கென்ன மூளை கலங்கிவிட்டதா?’ என்றாள்; சத்தமாகச் சிரித்தாள்.

குழப்பத்தோடு பார்த்தேன்.

‘ஸராவைப் பற்றி உனக்கு நன்றாகத் தெரியும் என்று தான் நினைத்தேன். சிகந்தர், ஸரா ஆபாவுக்கு ஒரு கெடுதலும் நினைக்க மாட்டான்.’

‘ஆனால் குற்றவாளி என்று சந்தேகிக்கப்படும் ஒரு நபர் அவன்,’ என்றேன்.

‘அப்படி இருக்க முடியாது,’ என்றாள் தலையாட்டிக் கொண்டே. ‘அவனுடைய சொந்த அம்மாவான என்னைக் கொல்வதற்குச் சமம் அது.’

‘அவன் செய்யவில்லை என்றால் எங்களுடன் பேசலாமே, அவன் ஏன் எங்களை விட்டு ஓட வேண்டும்?’

‘அவன் பயந்து போயிருப்பான். சின்னப் பையன் அவன்,’ என்றாள் ஃபர்ஸானா. அவள் கண்களில் குளம் கட்டி கண்ணீர் நின்றது. சமையலறையிலிருந்து திரும்பிய ஸௌரபும் நானும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம்.

‘அவன் எங்களைப் பயமுறுத்தினான், ஆன்ட்டி. அவனிடம் ஒரு துப்பாக்கி இருந்தது. அவன் ஒன்றும் சின்னப் பையனில்லை,’ என்றேன்.

எழுந்து அறையில் இருந்த சின்ன ஜன்னலருகே போனாள் ஃபர்ஸானா. வெளியில் தெரிந்த அடுக்குமாடிக் குடியிருப்பை வெறித்துப் பார்த்தாள். தன்னைச் சுதாரித்துக் கொண்டு, பிறகு பேசினாள்.

‘அவன் மனதளவில் வளரவில்லை. ஐந்தாம் வகுப்பு முடிந்தவுடன் அவன் பள்ளியை விட்டு விலகி விட்டான். குறைவான…’

‘குறைவான ஐக்யூ?’ என்றேன்.

‘ஆமாம், முட்டாள் என்று தான் அவனைக் கூப்பிடுவார்கள். உயரமாகப் பருமனாக வளர்ந்தான். மனவளர்ச்சியில் மட்டும் அவன் குழந்தை தான்.’

நான் அவள் பேச்சுக்குத் தலையாட்டினேன், அவள் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தபடியே பேச்சைத் தொடர்ந்தாள்.

‘பிறகு, ஸராவின் அப்பா எங்களை விட்டுப் போனார்.

கணக்குப் பிரிவில் இருந்த அந்தச் சூனியக்காரி ஜைனாபுடன் சேர்ந்தார். அவள் எங்கள் எல்லோரையும் அழித்துவிட்டாள். ஸிக்கந்தருக்கு அவனுடைய அப்பாவும் இல்லை, ஸரா ஆபாவும் இல்லை. அது அவனைப் பாதித்தது. இரண்டு முறை தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தான். நல்லவேளையாக அல்லா காப்பாற்றினார்.'

திரும்பி வந்து எங்களருகே உட்கார்ந்தாள். 'என்னை மன்னித்துவிடுங்கள், ஆன்ட்டி. நீங்கள் அனுபவித்த துயரம் எனக்குப் புரிகிறது. ஆனால் எங்களுக்கு, உதவுங்கள் ஸிக்கந்தரை எங்களிடம் பேசச் சொல்லுங்கள்.'

'ஆஹா, நான் சொல்வதை அவன் கேட்பானா என்ன? எதுக்கும் பிரயோசனமில்லாத அந்த அடிப்படைவாதிகளோடு சுற்றிக் கொண்டிருக்கிறான். ஒரு வேலையை எடுத்துக் கொள் என்று அவனிடம் பலமுறை சொன்னேன். உலகிலேயே மிக புத்திசாலியான பிள்ளையாக நீ இல்லாவிட்டால், போகிறது, அப்போதும் ஒரு கடை வைக்கலாமே என்றேன். ஆனால் அவன் எதையுமே செய்யவில்லை.'

'அடிப்படைவாதிகளா?' என்றேன்.

'விடுதலை வேண்டும் என்று முழங்கும் இந்த கட்டார் முல்லா வகையினர். நாங்கள் எல்லோரும் இந்தியாவை வெறுக்கிறோம். ஆனால் துப்பாக்கியைக் கையில் வைத்துக் கொண்டு பயமுறுத்த மாட்டோம். சில நேரங்களில் விதியை ஏற்றுக் கொண்டுதான் ஆகவேண்டும்!'

'விதியா? ஆன்ட்டி. இந்தியா நமது நாடு.'

'ஆனால், காஷ்மீர் எங்கள் மாநிலம். எங்களுடைய அடையாளம். எங்களுடைய எல்லாமுமே.'

'ஆன்ட்டி, ஒவ்வொரு மாநிலமும் இப்படிப் பேசினால், என்ன நடக்கும்?' என்று கேட்டான் ஸௌரப்.

'காஷ்மீர் மற்றவற்றிலிருந்து வேறு மாதிரியானது,' என்று உறுதியாகச் சொன்னாள் ஃபர்ஸானா. 'யாருமே தீர்க்க விரும்பாத ஒரு பிரச்சனை நாங்கள். ஒரு அரசியல் கருவியாக மட்டுமே நாங்கள் பயன்படுத்தப் படுகிறோம்.'

நானே எனக்கு நினைவூட்டிக் கொள்ள வேண்டியிருந்தது. காஷ்மீர் அரசியலுக்குள் நுழையவே கூடாது. அது ரொம்பக் குழப்பமானது, எந்தவகையிலும் அதைப் புரிந்து கொள்ள முடியாது.

'இப்போ சிக்கந்தர் எங்கே, ஆன்ட்டி?'

‘பத்து நாளைக்கு முன்னால் இங்கே இருந்தான். பிறகு, எதற்கும் பிரயோசனமில்லாத டெஹ்ரீக் நண்பர்களுடன் பஹல்காமிற்குப் போயிருக்கிறான். அங்கிருந்து தான் நேற்று என்னைக் கூப்பிட்டான்.’

‘அவன் நம்பரை எங்களுக்குக் கொடுக்க முடியுமா? எங்களிடம் இருப்பது உபயோகத்தில் இல்லை,’ என்றேன்.

‘அவன் நம்பரை மாற்றிக் கொண்டே இருப்பான். எப்படி ஆனாலும் மறைப்பதற்கு என்னிடம் எதுவுமில்லை. என் போனைப் பார். கடைசியாக அவன் தான் கூப்பிட்டான்.’

புர்க்கா பாக்கெட்டிலிருந்து அவள் போனை எடுத்துக் கொடுத்தாள். புர்க்காவுக்குப் பாக்கெட் இருக்கும் என்று எனக்குத் தெரியாது.

சிகந்தர் நம்பரை டயல் செய்தேன்.

‘ஸலாம், அம்மி-ஜான்,’ போனை எடுத்த சிகந்தர் பேசினான்.

‘ஹை, சிகந்தர். நான் கேஷவ்,’ என்றேன்.

மறுபக்கத்தில் அமைதி.

‘சிகந்தர், நாம் பேச வேண்டும்!’

‘ஹராமி, உனக்கு அம்மாவின் போன் எப்படி கிடைத்தது?’

‘ஃபர்ஸானா ஆன்ட்டி, இப்போது எங்களுடன் இருக்கிறாள்.’

‘ஹுதா கஸம், அம்மாவுக்கு ஏதாவது ஆச்சுன்னா, உங்க எல்லோரையும் பூண்டோடு அழிப்பேன்.’

‘நாங்கள் இப்போது தான் ஒன்றாக காஹ்வா குடித்தோம்.’ ஃபர்ஸானாவிடம் போனைக் கொடுத்தேன்.’

‘உங்களுக்கு வணக்கம் சொல்கிறான்,’ என்றேன்.

‘வாழ்த்துக்கள், கண்ணா,’ என்றாள் ஃபர்ஸானா. ஃபர்ஸானாவிடமிருந்து போனை எடுத்துக் கொண்டேன்.

‘ஒன்றும் கவலைப்படவேண்டாம்,’ என்றேன்.

‘அன்றைக்கு நான் உன்னைக் கொலை செய்திருக்க வேண்டும்,’ என்றவன் பல கெட்ட வார்த்தைகளைச் சொல்லித் திட்டினான்.

தனியாகப் பேசுவதற்காக வீட்டிற்கு வெளியே வந்து மாடிப்படிகளில் நின்றேன்.

‘கேள், உன்னோடு பேசுவதற்காக நாங்கள் இவ்வளவு தூரம் வந்திருக்கிறோம்.’

‘ஏன்?’

‘மெஷின் கன்னோடு நீயும் ஸராவும் இருக்கும் போட்டோ ஒன்று என்னிடம் இருக்கிறது. தவிர, அவள் அலமாரியிலிருந்து நான் சில பொருட்களைக் கண்டுபிடித்தேன். டெல்லியிலுள்ள என் நண்பர்களிடம் சொல்லி அவற்றை போலீஸில் ஒப்படைக்கச் சொல்லட்டுமா?’

‘என்ன பொருட்கள்?’ என்று அவன் கேட்டபோது அவன் குரல் இயல்பாக இருந்தது.

‘உன்னைப் பெரிய அளவில் மாட்டிவிடப் போதுமான சான்றுகள். அதனால் எங்களைச் சந்தித்துவிடு, மறுபடியும் என்னைத் திட்டாதே. தவிர, ஒரு தீவிரவாதி, சகோதரியைக் கொலை செய்தவன் என்று இன்று இரவு டிவியில் செய்தி வரும்.’

அவன் பேசாமல் இருந்தான்.,

‘சிகந்தர்?’ என்றேன்.

சிறிது மௌனத்திற்குப் பிறகு, ‘பஹல்காமுக்கு வா,’ என்றான்.

❖

‘மூன்று காஹ்வா. கொதிக்கக் கொதிக்க,’ என்று வெயிட்டரிடம் சொன்னான் ஸௌரப். குங்குமப்பூ, லவங்கப்பட்டை, ஏலக்காய் போட்டு கொதிக்க வைத்த க்ரீன் டீ காஷ்மீரில் பிரசித்தம். இப்போதைக்கு குறைந்த பக்ஷம் 6 கப் டீ குடித்தான். காஷ்மீரிக்கள் குடிப்பதுபோல் தேனும் பொடித்த உலர் பழக் கொட்டைகளும் கலந்த டீயை விரும்பினான்.

‘தேன் போதும், கோலு,’ தன்னுடைய டீயில் 1/2 ஜாடி தேனை ஊற்றிக் கொண்டிருந்தவனிடம் சொன்னேன்.

‘தேன் உடம்புக்கு நல்லது தானே?’ வெயிட்டர் நகர்ந்த பிறகு ஸௌரப் சொன்னான்.

‘சரி, கோலு, உடம்புக்கு நல்லது என்பவை கூட அளவோடு இருந்தால் தான் நல்லது. குறைவான அளவில்.’

‘உதாரணமாக, காதல்?’ ஸௌரப் கேட்டான். அவன் சொல்லவந்தது எனக்குப் புரிந்ததால் நான் மௌனமாக இருந்தேன். காஹ்வாவைச் சிறிது குடித்த பிறகு அவன் பேச்சை மாற்றினான்.

‘ஸ்ரீநகரை விட இங்கு குளிர் அதிகம்,’ என்றான். குண்டும் குழியுமாக வளைந்து வளைந்து சென்ற ரோட்டில் ஸ்ரீநகரிலிருந்து பஹல்காம் வரும் பஸ் பயணத்திற்கு 3 மணி நேரம் ஆயிற்று. பஹல்காமின் முக்கிய மார்க்கெட்

பகுதியிலிருந்த தனா பானி என்ற உணவகத்திற்கு நாங்கள் வந்திருந்தோம். ஒரு பொது இடத்தில் ஸிக்கந்தரைச் சந்திக்க விரும்பினேன். குறிப்பாக நிறைய போலீஸ் மற்றும் ராணுவ வீரர்கள் கண்ணில் படும் இடம். வெளியே ரோடில் சீருடை அணிந்த ஒரு டஜன் ராணுவ வீரர்களை எண்ணினேன். மறுபடியும் சிகந்தர் தன் துப்பாக்கியை எடுக்க முயற்சிக்காமல் இருப்பதற்கு இவர்கள் போதும்.

‘இதை நாம் சீக்கிரம் முடிக்க வேண்டும். இங்கு, இருப்பதை என் சகோதரர்களிடம் நான் சொல்லவில்லை,’ என்றான் சிகந்தர்.

‘சகோதரர்கள்?’ என்றேன்.

‘என்னுடைய மக்கள், அது உங்களுக்குத் தேவையற்றது. ஆபாவைப் பற்றி உங்களுக்கு என்ன தெரிய வேண்டும்?’

ஸராவின் அலமாரியிலிருந்த பொருட்களின் போட்டோக்களை அவனிடம் காண்பித்தேன்.

‘இவற்றைப் பற்றி விவரமாகச் சொல். எந்த இடத்தில் இந்த போட்டோவை எடுத்தே? ஏன் ஸராவிடம் பாகிஸ்தானி ரூபாய் நோட்டுகளும் சிம்கார்டும் இருந்தன?’ என்று கேட்டேன்.

‘நாங்கள் அந்த போட்டோவை டெல்லியில் எடுத்தோம். என்னுடைய ஹோட்டலில். அது ஒரு சபிக்கப்பட்ட போட்டோ.’

‘ஏன் சபிக்கப்பட்டது?’

‘பரவாயில்லே, அதை விடு.’

‘மேலே சொல். பாகிஸ்தானி பொருட்கள் அவளிடம் எப்படி வந்தன?’

சிகந்தர் பெருமூச்சு விட்டான்.

‘ஆபா பாகிஸ்தானுக்குப் போனாள். ஏதோ புத்தகக் கண்காட்சியோ என்னவோ?’

‘கராச்சி இலக்கிய விழாவா?’ என்று கேட்டேன்.’

‘ஆமாம். அதனால் தான் அவளிடம் பாகிஸ்தான் ரூபாய்களும் சிம் கார்டுகளும் இருந்தன. இது என்ன பெரிய விஷயம்?’

‘பெரிய விஷயம் இது தான்,’ என்ற ஸௌரப் தொடர்ந்தான்.

‘அவளிடம் ஏன் டீலர்களிடம் இருக்கும் அளவு போதை மருந்து (கோகெயின்) பொட்டலம் இருந்தது? தவிர ஒரு துப்பாக்கி குண்டு?’

‘எனக்குத் தெரியாது,’ என்று சொன்னான் கடுப்பாக.

நான் ஸௌரப்பைத் திரும்பிப் பார்த்தேன். 'இவன் எதையோ மறைக்கிறான் இல்லையா?' என்றேன்.

'நிச்சயமாக அவன் மறைக்கிறான்,'என்றான் ஸௌரப்.

'நான் ஆபாவைக் கொல்லவில்லை. சரியா?' என்று சொன்ன சிகந்தர் முஷ்டியால் மேஜையைக் குத்தினான். காலியான காஹ்வா கப்புகள் நடனம் ஆடின.

'பிடிவாதம் செய்வதால் குற்றமற்றவன் என்று நிரூபிக்க முடியாது,' என்றேன்.

'அதே போல் துப்பாக்கிகளைக் காட்டி எங்களை பயமுறுத்துவதாலும். எங்களுடைய டெல்லி நண்பர்கள் எங்களுக்கு ஏதாவது நேரிட்டால் எல்லாச் சாட்சியங்களையும் கொடுத்து விடுவார்கள்,' என்று ஏற்கெவனே இட்டுக் கட்டிவைத்திருந்த கதையை ஸௌரப் சொன்னான்.'

'நீ மறுபடியும் ஆயுதம் கொண்டு வந்திருக்கிறாயா?' என்று கேட்டேன். சிகந்தர் எழுந்து நின்று கைகளைத் தூக்கினான்.

'நீயே பார்த்துக் கொள். என்னிடம் எதுவுமில்லை. முக்கிய மார்க்கெட் பகுதியில் ராணுவம் அவ்வப்போது ஆட்களைப் பரிசோதிக்கிறார்கள். நான் அந்த அளவுக்கு முட்டாள் இல்லை.'

'நல்லது, உட்கார்,' என்றேன். 'இவை எல்லாவற்றையும் ஏன் ஸரா அலமாரியில் வைத்திருந்தாள் என்பதை எங்களிடம் சொல்!'

'சிகந்தர் சற்று முற்றும் பார்த்தான். இரண்டு மேஜைகள் தள்ளி சிலர் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அவன் வேகமாகச் சொன்னான், 'நான் தப்பான செயல்களைச் செய்திருக்கிறேன். ஆனால் நான் ஸரா ஆபாவிற்கு ஒரு கெடுதலும் செய்யவில்லை.'

'நீ செய்யவில்லை என்றால் உன்னுடைய ரகசியங்கள் எங்களிடம் பத்திரமாக இருக்கும்,' என்றேன்.

'ஹஷீம் அப்துல்லாவிற்காக நான் வேலை செய்கிறேன். அவர் யாரென்று உங்களுக்குத் தெரியும் என்று நம்புகிறேன்,' ஏதோ பில் கேட்ஸ் அல்லது முகேஷ் அம்பானியைப் பற்றி பேசுவது போல் சிகந்தர் சொன்னான்.

'மன்னிக்கவும், தெரியாது. யார் அவர்?' என்று கேட்டேன்.

'டெஹ்ரீக்-இ-ஜிஹாதின் தலைவர் அவர். வாழ்க்கைக்கு ஒரு பொருத்தமான குறிக்கோளை அவர் எனக்குக் கொடுத்திருக்கிறார். எப்படி தீவிரமான ஆசையோடு வாழ்வது என்பதை எனக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார். எனக்கு எல்லாமே ஹஷீம்பாய் தான்!'

குற்றமற்ற மனிதர்களைக் கொல்வதும் நீ வாழும் நாட்டை வெறுப்பதும் தகுதியான குறிக்கோளாக ஆகமுடியாது என்று அவனிடம் சொல்ல நினைத்தேன். ஆனால் அரசியல் பேசுவதில்லை என்ற என் உத்தரவு நினைவுக்கு வந்தது, மௌனமாக இருந்தேன். ‘ஆஸாத் காஷ்மீரில் ஹஷீம்பாய் இருக்கிறார்,’ என்று சிகந்தர் சொல்லிக் கொண்டிருந்தான்.

‘பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு காஷ்மீர் என்பதைத் தானே சொல்கிறாய்?’ என்று கேட்டான் ஸௌரப்.

‘அப்படித்தான் இந்தியா முழங்குகிறது. ஆனால் உண்மையில் நாங்கள் தங்கியிருக்கும் இடம் இந்தியா-ஆக்ரமிப்பு காஷ்மீர்.’

அரசியல் கிடையாது, என்று மறுபடியும் எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

‘அதைவிடு. உன் கதையைச் சொல்.’

‘தெஹ்ரீக்கில் ஒரு இளநிலை ராணுவவீரனாக நான் தொடங்கினேன். ஏதோ ஒன்றைப் பெரிதாகச் செய்வதற்கான வாய்ப்பை ஹஷீம்பாய் எனக்குக் கொடுத்தார்.’

எங்கள் கண்களைப் பார்ப்பதை அவன் தவிர்த்தான்.

‘என்ன தவறு?’ ஸௌரப் கேட்டான்.

‘நான் ஸரா ஆபாவை ஏமாற்றினேன்.’

‘தெளிவாகச் சொல்,’ என்றேன். சிகந்தர் பற்றிய ஏதோ ஒன்று எனக்கு எரிச்சலூட்டியது. உண்மையிலேயே அவன் முட்டாளா அல்லது அப்படி நடிக்கிறானா?

‘கராச்சியில் இலக்கிய விழாவை நடத்தும் ஆட்களைத் தனக்குத் தெரியும் என்று ஹஷீம் அலி சொன்னார். இந்தியாவிலிருந்து சிலரை, முக்கியமாக புத்திசாலியான மாணவர்களை அழைக்க அவர்கள் விரும்புவதாகவும் சொன்னார்; அமைதியாக இருப்பதாகக் காட்டிக் கொள்வதற்காக. என்னால் போக முடியவில்லை. என்னுடைய பாஸ்போர்ட்டில் மிகக் குறைவான அளவே பாகிஸ்தான் முத்திரைகள் இருக்க வேண்டும் என்றார். யாரையாவது அனுப்ப முடியுமா என்று என்னிடம் கேட்டார்.’

‘அப்போ நீ ஸரா பெயரைச் சொன்னாயா?’

‘ஆமாம். ஸரா ஆபாவிற்குப் புத்தகங்களைப் படிப்பதற்கு மிகவும் பிடிக்கும். இந்தியாவில் பல இலக்கிய விழாக்களில் அவள் பங்கேற்றிருக்கிறாள். நான் அவளைக் கேட்டேன். தேர்ந்தெடுத்த மற்ற சில மாணவர்களுக்குச் செய்வது போல்

ஸராவுக்கும் பயணச் செலவு, தங்கும் வசதியை அவர்களே செய்து தருவார்கள் என்றார்கள். இதைக் கேட்டதும் ஸரா ஆர்வத்தோடு சம்மதித்தாள்.'

'அதனால் தான் அவள் பாகிஸ்தானுக்குப் போனாளா?'

'ஆமாம். கராச்சியில் ஹஷீம்பாய் அவளைச் சந்தித்தார். எனக்குச் சில பரிசுகளை அவளிடம் கொடுத்தனுப்பினார். இழுத்துச் செல்லும் ஒரு பெட்டியில் துணிகளுடன் கொறிப்பதற்குச் சிலவற்றையும் வைத்து அவளிடம் கொடுத்தார்.'

'பிறகு?' என்றான் ஸௌரப், அவன் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையையும் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டே.

'ஏர்போர்ட் போகும் வழியில் காரில் அந்தப் பெட்டியை அவர்கள் மாற்றிவிட்டார்கள். துணிகளுக்கு அடியில் (கோகெய்ன்) போதைப் பொருளை வைத்துக் கொடுத்தனர். 8 கிலோ இருக்கும்.'

'ஓ, எட்டு கிலோ கோகெய்னா? அது ரொம்ப அதிகம் இல்லையா?' என்றான் ஸௌரப்.

'5 கோடி ரூபாய் மதிப்பு இருக்கும். டெஹ்ரீக் நிதி திரட்டுவதற்கான வழிகளில் இதுவும் ஒன்று. டெஹ்ரீக் அமைப்புக்கு என்னுடைய முதல் காணிக்கை,' என்றான் சிகந்தர்.

நான் பெருமூச்சு விட்டேன். சந்தன் கிளாஸஸில் வகுப்பு எடுப்பதைவிட மோசமான பணி இடங்கள் இந்த உலகில் இருக்கின்றன என்று நினைத்துக் கொண்டேன். தங்களுக்கான பணத்தேவையைப் போதைப் பொருள் கடத்தி விற்பது மூலம் பெறுகின்ற அமைப்புகள் போன்றவை.

'உன்னுடைய சொந்த சகோதரியைப் போதை மருந்து கடத்துவதற்காக நீ பயன்படுத்திக் கொண்டாய் இல்லையா?'

'அது அவ்வளவு பெரிய குற்றம் என்று எனக்கு அப்போது தெரியவில்லை. தவிர, ஹஷீம்பாய் எல்லாவற்றையும் பக்காவாகத் திட்டம் போட்டிருந்தார். சுங்கச்சாவடியில் அவளை யாரும் சந்தேகிக்கவில்லை. அந்தப் பொருட்களை அவள் வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டாள்.'

'அதனால் அது சரியாகிவிட்டதா? அதிகாரிகள் அவளைப் பிடித்திருந்தால் அவள் ஜெயிலில் வாழ்க்கையைக் கழித்திருக்க நேரிடும்.'

'ஐஐடியில் படிக்கும் ஒரு பெண், புத்தக விழாவிலிருந்து திரும்பி வருபவள் என்பதாலும் யாரும் அவளைச் சந்தேகிக்க

மாட்டார்கள் என்று ஹஷீம்பாய் என்னிடம் சொன்னார்.’

‘நீ புரிந்து கொண்டு தான் பேசுகிறாயா?’ அவர்கள் அவளைக் கையும் களவுமாகப் பிடித்திருந்தால்?’ என்று நான் சொன்ன போது என் குரல் உயர்ந்து கேட்டது.

அவன் அதற்கு பதில் சொல்லவில்லை.

வளர்ந்து நிற்கிற முட்டாளும் அருவருக்கத்தக்கவனுமான இவனை அடிக்கும் உணர்வையும் என் கோபத்தையும் கட்டுப்படுத்திக் கொள்ள நீண்ட பெருமூச்சு எடுத்துக்கொண்டேன்.

ஸௌரப் என் மணிக்கட்டைப் பிடித்து அழுத்தினான். என் கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்கான சமிக்ஞை அது.

‘சரி, அப்புறம் என்ன நடந்தது?’ என்றான் ஸௌரப்.

‘ஆபாவிடமிருந்து அந்தப் பையைப் பெற்றுக் கொள்ள அங்கே போனேன். ஆனால் நான் போவதற்குள் அவள் அதைத் திறந்துவிட்டாள்.’

‘ஓ, அந்த போதை மருந்துகளைக் கண்டுபிடித்து விட்டாளா?’ என்றேன்.

‘ஆமாம். என்னை நிறைய திட்டினாள், அடித்தாள், நான் யாருக்காக வேலை செய்கிறேன் என்பதைச் சொல்லும்படியாக ஆயிற்று. ஹஷீம் பாய் ரொம்ப நல்ல காரியங்களைச் செய்து வருகிறார் என்பதை அவளுக்குப் புரியவைக்க முயற்சி செய்தேன்.’

‘அவள் என்ன சொன்னாள்?’

‘நான் சொல்வதைக் கேட்க மறுத்தாள். இந்த ஆட்களுடன் எனக்கிருக்கும் தொடர்பைத் துண்டிக்கச் சொன்னாள். அந்தப் பையை எடுத்துக் கொண்டு போய் காவல் நிலையத்தில் நான் கொடுக்க வேண்டும் என்றாள்.’

‘நீ போனாயா?’

‘இல்லை. ஹஷீம்பாயை மாட்டி வைக்க நான் விரும்பவில்லை.’

‘அப்போ அதற்கு அவள் ஒத்துக்கொண்டாளா?’

‘இல்லவே இல்லை. ஆனால் நான் அவளிடம் பொய் சொன்னேன். இந்த ஒரு பையை மட்டும் கொடுத்துவிட்டால் அவர்கள் என்னை விட்டுவிடுவார்கள், பிறகு நான் அந்த அமைப்பிலிருந்து வெளியேறுகிறேன் என்றேன்.’

‘ஆனால் நீ அப்படி செய்யவில்லை தானே?’

தரையை வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான்.

‘எங்களுடைய பெரிய பணிக்காக என்னால் வெளியேற முடியவில்லை,’ என்றான். அந்தப் பெரிய பணி என்ன என்று புரியவில்லை.

‘போதை மருந்தை விற்கும் ஒருவருக்கு வேலை செய்வது சரி என்று கூட நினைக்கிறாயா?’

‘எங்களுக்கு வேறு வழியில்லை. நாங்கள் அதிகாரமிக்க அரசாங்கங்களோடு போர் புரிகிறோம். மிகப் பெரிய நன்மையைச் செய்வதற்காக, சில சமயங்களில் ஒரு சிறிய அளவு தவறைச் செய்யலாம்,’ என்றான். ஏற்கனவே ஒத்திகை பார்த்த சொற்கள் குரலில் தொனித்தது.

‘ஹஷீம் இதைச் சொன்னாரா?’

‘ஆமாம். அந்த நேரத்தில் எனக்கு இது விளங்கவில்லை. ஸரா ஆபா ஒரு பொட்டலத்தை வைத்துக் கொண்டாள். எப்படியாக இருந்தாலும் இப்போது நான் டெஹ்ரீக்கில் போதை மருந்து தொடர்பான பணிகளைச் செய்வதில்லை, தேர்வு செய்யும் குழுவில் இருக்கிறேன்.’

தேர்வு செய்யும் குழு என்று அவன் சொன்னது எனக்குக் கேட்டது. உடனே எனக்குத் தோன்றிய உணர்வு - வேலைக்கு ஆள் எடுக்கிறார்களா, நான் விண்ணப்பிக்கலாமா என்பது தான். இங்கு வேலை செய்வதற்கு வாய்ப்பே இல்லை என்பது புரிந்தவுடன் என்னையே நான் திட்டிக் கொண்டேன்.

‘அவள் இறப்பதற்கு முன்னால் அவளுடன் தொடர்பில் இருந்தாயா?’

‘அதிகமில்லை. எப்போதாவது மட்டுமே போனில் பேசினேன். இந்த முட்டாள்தனங்களை மறந்துவிட்டு நல்ல வேலையைத் தேடிக் கொள்ளச் சொன்னாள். உண்மையில் ஒருமுறை அவள் உங்களை உதாரணம் காட்டினாள். ஆனால், டெஹ்ரீக்கை நான் விடவில்லை என்பது அவளுக்குத் தெரியாது.’

‘என்னை உதாரணமாகவா?’ ஆவலுடன் கேட்டேன்.

‘அவள் சொன்னாள். சிகந்தர் என்னைப் பார். என் ஆசைக்காக கேஷவுடன் இருந்தேன். ஆனால் எதார்த்த வாழ்வு முக்கியம் என்பது எனக்கு அப்போது புரியவில்லை. அது எங்கேயும் என்னை அழைத்துச் செல்லவில்லை. முடிவாக, எதார்த்த வாழ்வுக்காக ரகுவை நான் தேர்வு செய்தேன்.’

‘எதார்த்தம்?’

‘எனக்கும் முழுவதும் புரியவில்லை. இப்போது அவள் ரகுவை அதிகமாகக் காதலிக்கிறாள்,’ என்றான். ‘ஆனால் இறுதியில் எதார்த்த வகையில் அவரைத் தேர்வு செய்ததாகச் சொன்னாள். அவருடைய குடும்பத்தாருக்கு ஸராவால் எந்தப் பிரச்சனையும் இருக்காது என்பது போல்.’

‘இதை ஏன் உன்னிடம் அவள் சொன்னாள்?’

‘சில நேரங்களில் நம் இதயம் நம்மைத் தவறான இடங்களுக்கு இட்டுச் செல்கிறது - என்பது எனக்குப் புரிவதற்காகச் சொன்னாள். டெஹ்ரீக்கிடம் என் இதயம் இருந்தது. என் மூளையைப் பயன்படுத்தி நான் வேறு வேலையைத் தேடிக் கொள்ள வேண்டுமென்று அவள் விரும்பினாள்.’

‘அப்படியா?’ என்றேன், அவளுடைய இதயம் தவறாக இட்டுச் சென்ற இடம் நான் தான் என்பது எனக்குப் புரிந்தது. ஆனாலும் அதைக் கேட்பதற்கு மகிழ்ச்சியாக இருந்தது - அவள் இதயம் தேர்வு செய்தது என்னைத்தான் என்பதும், எதார்த்தவாதியை அல்ல என்பதும்.

‘நல்லது,’ என்றான் ஸௌரப். ‘எங்களுக்கு உதவக்கூடிய விஷயம் ஏதாவதுச் சொல்கிறாயா?’

‘இல்லை. எனக்கு எதுவும் தோன்றவில்லை. இதை எல்லாம் நான் யாரிடமும் சொன்னதில்லை. நான் இப்போது போகலாமா?’

நான் தலையசைத்தேன். போவதற்காக எழுந்தான் சிகந்தர்.

‘மன்னிக்கவும். இன்னும் ஒரு கேள்வி.’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’

‘ஸராவுடன் இருக்கும் ஸெல்ஃபியை எங்கே எடுத்தே?’

‘ஸரா ஆபா என்னைப் பார்க்க டெல்லி வந்தபோது!’

‘அப்போ உன்கிட்டே ஏன் மெஷீன் கன் இருந்தது?’

‘புதிதாகத் தேர்வு செய்பவர்களுக்கு அதை எப்படிப் பயன்படுத்துவது என்பதைக் காண்பிப்பதற்காக.’

‘உட்கார், சிகந்தர்,’ என்றேன் நான். சில சமயங்களில் நம் இதயம் தவறான இடங்களுக்கு இட்டுச் செல்கிறது என்பதை மறுபடியும் மறுபடியும் என் மனம் எண்ணிப் பார்ப்பதை நிறுத்திவிட்டுக் கொலை வழக்குக்குக் திரும்பி வந்தேன்.

‘ஏன்?’ என்றான். கைகளைக் கட்டியபடி நின்று கொண்டிருந்தான்.

‘எங்களை முட்டாள்கள் என்று நினைத்தாயா?’

‘ஏன், என்ன நடந்தது?’

‘டெஹ்ரீக்கை விட்டு விலகியதாக ஸராவிடம் சொன்னேன் என்றாயே?’

‘ஆமாம்.’

‘அப்படியானால், உன்னைத் தேடி வந்த அவள், கையில் மெஷீன் கன்னுடன் உன்னைப் பார்த்திருக்கிறாள். அப்போ எப்படி அவள் போட்டோவில் சிரித்துக் கொண்டு இருப்பாள்?’ என்று கேட்டேன்.

‘நான் போக வேண்டும்.’

‘இந்த போட்டோ சபிக்கப்பட்டது என்று நீ தானே சொன்னாய். ஏன்?’ என்றான் ஸெளரப்.

சிகந்தர் தலையைப் பிடித்துக் கொண்டு வலியில் துடித்தான்.

‘எனக்கு ஒற்றைத் தலைவலி மண்டையைப் பிளக்கிறது. என்னை மன்னிக்கவும்.’

‘நாங்கள் இன்னும் முடிக்கவில்லை. என்னை நம்பு. போலீஸ் உன்னைக் கேள்வி கேட்டு துன்புறுத்துவதைவிட, கேள்வி கேட்க எங்களுக்கு அனுமதி கொடு,’ என்றேன்.

‘எனக்கு இப்போது ரெஸ்டு எடுக்க வேண்டும். நாம் பிறகு பேசலாமா?’

‘எப்போ, நாளைக்கா?’

தலையை ஆட்டினான். குழந்தையைப் போல் மூக்கை உறிஞ்சி மூச்சு விட்டான்.

‘ஆமாம், நாளைக்கு என்னைக் கூப்பிடுங்கள்,’ என்று சொன்ன சிகந்தர் உணவு விடுதியை விட்டு வெளியேறினான்.

❖

‘இன்னும் கொஞ்சம் கம்பளி உறைகளை நாம் கொண்டு வந்திருக்கலாம்,’ என்றான் ஸெளரப். சூட்டிற்காக உள்ளங்கைகளைத் தேய்த்துக் கொண்டான். பஹல்காமில் நாங்கள் தங்கியிருந்த கி ஹவன் ஹோட்டலின் புல் தரையில் குளிர்காய தீ மூட்டியிருந்தனர். டின்னருக்குப் பிறகு நாங்கள் இருவரும் அதன் அருகே அமர்ந்திருந்தோம்.

‘சிகந்தர் பற்றிய ஏதோ ஒன்று சரியில்லை,’ என்றேன்.

‘அவசரப்படாதே. அவனுக்குச் சற்று நேரம் கொடு. அவன் தானாகவே முன்வந்து சொல்வான்,’ என்றான் ஸெளரப்.

‘நம்மிடமிருந்து அவன் நழுவுகிறான். அப்பாவி போலவும் முட்டாள் போலவும் அவன் நடிக்கிறான். ஆனால் அவன் அப்படி இல்லை,’ என்றேன் உறுதியாக.

‘ஒரு வேளை அவன் பயந்து நடுங்குகிறானோ?’ என்றான் ஸௌரப்.

‘உளறாதே. அவனை எதிர்த்து உண்மையை வரவழைக்கும் நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன்.’

‘என்ன உண்மை?’ என்றான் ஸௌரப். அவன் முகம் தீக்கொழுந்தின் வெளிச்சத்தில் ஜொலித்தது.

‘அவனுக்குக் குடும்பம் உள்ளது. உணர்ச்சி பூர்வமான பலவற்றைச் சொல்வான், சற்று முட்டாள் போலவும் இருப்பான், ஆனால் மாற்றாந்தாயின் அந்தச் சிறுவன் குற்றமற்றவன் இல்லை. அவன் தான் முக்கியமாகச் சந்தேகிக்க வேண்டிய நபர்.’

‘எது உன்னை இப்படிச் சொல்ல வைக்கிறது?’ என்றான்.

அவன் நெருப்புக்கு மிக அருகில் இருந்தான். எந்த நேரமும் தீ அவனை எரித்துவிடுமோ என்று தோன்றுகிறது.

‘நெருப்பிலிருந்து நகர்ந்து உட்கார், ஸௌரப்,’ என்றேன்.

‘சரிதான்,’ என்று சொன்னவன் மூன்று அங்குலம் பின்னால் நகர்ந்தான்.

‘இப்படித்தான் நடந்திருக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன். சிகந்தர் ஒரு தீவிரவாதியாகிவிட்டான். ஸராவுக்கு அது தெரிந்துவிட்டது. பல முறை அவனைத் தடுக்க முயற்சித்திருக்கிறாள்; ஆனால் அவன் கேட்கவில்லை. முடிவாக அவளுக்குப் பொறுமை போய்விட்டது. போலீஸுக்குப் போகத் தீர்மானித்து விட்டாள்.’

‘அதற்குள் சிகந்தர் வந்து அவளைக் கொன்றுவிட்டான், அப்படித்தானே?’ என்று கேட்டான்.

‘ஆம்.’

‘அப்படி இருக்கலாம். அவள் ஏன் ஜன்னல் கதவைத் திறந்து வைத்திருந்தாள் என்பதை இது விளக்குகிறது. அப்படியானால் தன் தம்பிக்காக அதைத் திறந்து வைத்திருக்கிறாள், சரி தானே?’

விரல்களைச் சொடுக்கு போட்டேன். ‘அதே தான்.’

‘அந்த போட்டோ? அதில் ஏன் ஸரா சிரித்துக் கொண்டிருக்கிறாள்?’

‘ஒரு வேளை மன அழுத்தம் அதிகமாவதாக அவள்

உணர்ந்திருக்கலாம். இல்லை, சற்று இரு, போலீஸுக்குத் தேவையான சாட்சியங்களை அவள் தேடிக் கொண்டிருக்கலாம்.'

'அதனால் தான் துப்பாக்கி குண்டையும் போதை மருந்தையும் தன்னிடம் வைத்திருந்தாளோ?'

'ஆமாம். சரியாகச் சொன்னாய். அதே தான். அவள் சாட்சியங்களைச் சேகரித்துக் கொண்டிருந்தாள். போலீஸுக்குப் போக அவள் விரும்பியிருக்கிறாள், ஏனெனில் அவளுடைய தம்பி அந்த அமைப்பிலிருந்து விலகுவதாக இல்லை. இதைத் தெரிந்து கொண்ட சிகந்தர் அவளைக் கொன்றுவிட்டான்.'

'ஆனால், சகோதரி மீது அவன் ரொம்பவும் பாசம் வைத்திருந்தானே?' என்று கேட்டான் ஸௌரப்.

'ஒரு மிகப் பெரிய நல்ல செயலுக்காக' அவளைக் கொல்வது தப்பே இல்லை என்று ஹஷீம்பாய் சொல்லியிருப்பார் என்றால், இந்த முட்டாள் என்ன செய்திருப்பான் என்று நீ நினைக்கிறாய்?'

பேசுவதற்கு முன்னால் கன்னத்தைச் சொறிந்து கொண்ட ஸௌரப், 'கொல்வது,' என்றான்.

'ஒரு சில வினாடிகள் நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம். ஒன்றோடொன்று சேர்ந்து கணக்கு சரியாகிவிட்டது - அது அது அந்தந்த இடத்தில் பொருந்தியது. நாங்கள் ஹை ஃபைவ் என்று கைகளை உயர்த்திக் கொண்டோம்.

'நாம் அவர்களைப் பிடித்துவிட்டோம். இன்ஸ்பெக்டர் ராணாவைக் கூப்பிடு. அவருடைய உதவி நமக்குத் தேவை.' என்று சொன்னேன். ஆம், கொலைகாரன் என்னிடம் தான் இருக்கிறான். நெருப்பின் கொழுந்து என் முகத்தை மட்டுமல்ல என் உள் உறுப்புகளையும் சூடாக்கியது.

# அத்தியாயம் 22

‘அவனோடு பேசிக்கொண்டிரு. கேள்விகள் எதுவும் கேட்காதே. நட்போடு இருக்க முயற்சி பண்ணு,’ என்றான் ஸௌரப்.

நான் தலையாட்டினேன். ஹவ்வன் ஹோட்டலின் வரவேற்பு அறைக்கு வந்திருந்தோம். ஹோட்டல் போனிலிருந்து சிகந்தர் நம்பரைப் போட்டேன்.

‘ஸலாம், சிகந்தர் பாய்!’ யாரோ போனை எடுத்தவுடன் நான் சொன்னேன்.

‘யார் ஸார்?’ என்ற குரல். ஸிக்கந்தருடையது அல்ல.

‘சிகந்தர் அங்கு இருக்கிறானா? நான் கேஷவ். அவனுடைய நண்பன்.’

‘நீங்கள் ஸிக்கந்தரின் நண்பரா!’

‘ஆமாம்,’ என்றேன்.

‘நீங்கள் பஹல்காமில் இருக்கிறீர்களா?’

‘ஆமாம்.’

‘உங்களால் இங்கு மூன் வ்யூ ரிஸார்ட்டுக்கு வரமுடியுமா?’

‘சிகந்தர் எங்கே?’

‘அவன் இங்கு தான் இருக்கிறான். நீங்கள் வருவீர்களா?’

‘நிச்சயமாக வரேன். நீங்கள் யார்?’ என்று கேட்டேன்.

‘அஹமது. சீக்கிரமாக வாருங்கள், ப்ளீஸ்.’

❖

ஹீவனிலிருந்து சுமார் ஒரு கிலோ மீட்டர் தள்ளியுள்ள மூன்வ்யூ ரிஸார்ட்டுக்கு நானும் ஸௌரபும் நடக்கத் தொடங்கினோம். முதல் நாள் இரவு இன்ஸ்பெக்டர் ரானாவைக் கூப்பிட்டு சந்தேகத்துக்குரிய முக்கிய நபர் சிகந்தர் தான் என்பதை விளக்கமாகச் சொன்னோம். ‘ஏய், நீங்கள் ஸரா கேஸைத் திரும்பவும் தொடங்கியிருக்கிறீர்களா? காஷ்மீருக்கு போயிருக்கிறீர்களா? பயித்தியக்காரப் பசங்க’ என்பது தான்

அவர் முதலில் சொன்னது. அதிருஷ்டவசமாக நாங்கள் சொல்லிய முழுக்கதையையும் அவர் கேட்டார். கடைசியாக வேறு எதற்காக இல்லாவிட்டாலும் எங்களுடைய பாதுகாப்பிற்காக உதவுவதாகச் சொன்னார். ‘பயங்கரமான அந்த இடத்தை விட்டு சீக்கிரமாக வெளியேறுங்கள். காஷ்மீர், ஹௌஸ் காஸ் இல்லை. தவிர ஸிக்கந்தரை இனிமேல் தனியாகச் சந்திக்க வேண்டாம்.’ என்று சொல்லிவிட்டு போனை வைத்தார்.

இப்போது ராணாவை நான் கூப்பிட்டேன்.

‘மூன் வ்யூ ரிஸார்ட்டுக்கு அவனைப் பார்க்க நாங்கள் போய்க் கொண்டிருக்கிறோம்,’ என்று சரிவில் ஏறுவதால் மூச்சிரைக்கச் சொன்னேன்.

‘நான் ஏற்கனவே பஹல்காம் போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர் ஸரஃபிடம் சொல்லியிருக்கிறேன். உங்களுக்குத் தேவைப்படும்போது அவர் உடனே வருவார்.’

‘எங்களுடன் அந்த இடத்திற்கு அவர் இப்போது வரவேண்டும்,’ என்றேன்.

‘சற்று பொறு. பதட்டமாக இருக்கிறாயா?’ என்றார். நான் சரிவில் ஏறிக் கொண்டிருக்கும்போது.

‘ஆமாம். சற்று பதட்டமாகத்தான் இருக்கிறேன். அவன் போனை யாரோ அஹமத் என்பவன் எடுத்துப் பேசினான். எங்களை மூன் வ்யூ ரிஸார்ட்டுக்கு வரும்படி சொன்னான்,’ என்றேன்.

‘ஓ, அப்படியானால் இன்னும் சிலரும் அவனுடன் இருக்கிறார்களா?’

‘ஆமாம்.’

‘அப்படியானால் நிச்சயமாக ஸரஃப் முதலில் அந்த இடத்திற்குப் போகட்டும். நீங்கள் அங்கு தனியாகப் போகவேண்டாம். நீங்கள் முட்டாள் பசங்க. காஷ்மீருக்குப் போவதற்கு முன்னால் நீங்கள் என்னிடம் சொல்லியிருக்க வேண்டும்.’

‘எங்களை மன்னியுங்கள், ஸார். அவருக்காக நாங்கள் காத்திருக்கிறோம்,’ என்றேன்.

‘கேள், கேஷவ்.’

‘சொல்லுங்கள், இன்ஸ்பெக்டர்.’ நாங்கள் மிகப் பெரிய ஆபத்தை நோக்கிச் சென்று ஒரு வேளை இந்தக் கேஸுக்கான தீர்வையும் கண்டுபிடித்து விடுவோம் என்பதால் அவர் எங்களுக்கு நன்றி சொல்லி, புகழ்ந்து பேசுவார் என்று

நினைத்தேன்.

'போலீஸ் அவனைப் பிடித்தவுடன் முதலில் என்னைக் கூப்பிடு. ஊடகத்திற்கு முதன் முதலில் நான் தான் சொல்வேன். ஸரஃப் யாருடனும் பேசுவதை நான் விரும்பவில்லை!' என்றார்.

❖

தலைநரைத்திருந்த ஸரஃப் அவரை விடப் பழமையாகத் தெரிந்த போலீஸ் ஜீப்பிலிருந்து இறங்கினார், இரண்டு கான்ஸ்டபிள்கள் பின் தொடர. சந்தேகம் ஏழாமல் இருக்க அவர்கள் மூவரும் சீருடையில் இல்லாமல் சாதாரண உடைகளில் வந்திருந்தனர். மூன் வ்யூ ரிஸார்ட்டுக்கு வெளியே காலியாக இருந்த இடத்தில் அவர்கள் மூவரையும் சந்தித்தோம்.

'அமைதியாக இருங்கள். ஹோட்டலுக்குச் சாதாரணமாக வருபவர்கள் போல் இருங்கள்,' என்றார் ஸரஃப்.

சுருண்ட தாடியோடு முப்பது வயது மதிக்கத்தக்க ஒருவன் வரவேற்பு மேஜையருகே நின்றிருந்தான்.

'நான் கேஷவ். இங்கு அஹமத் என்பது யார்?'

'நான் தான் அஹமத்,' என்றான் அந்த நபர். 'நான் இங்கு மேனேஜர். ஸிக்கந்தரைப் போனில் கூப்பிட்ட அவருடைய நண்பரா நீங்கள்?' என்றான்.

'ஆம்,' என்றேன்.

கூட நின்றிருந்த போலீஸ்காரர்களையும் ஸௌரபையும் பார்த்து, 'இவர்கள் எல்லாம் யார்?' என்று கேட்டான்.

'என்னுடைய நண்பர்கள். சிகந்தர் எங்கே?' என்றேன்.

'என் பின்னால் வாருங்கள்.'

இரண்டாம் மாடியில் இருக்கும் ஒரு அறைக்கு நானும் அஹமதும் சென்றோம். மற்றவர்கள் எங்களைப் பின்தொடர்ந்து வந்தார்கள். மூன் வ்யூ ரிஸார்ட்ஸ் நடைபாதைகளில் சூரிய வெளிச்சம் அதிகம் இல்லை, குளிர் தாக்கியது. கோடியில் இருந்த அறையை அவனிடமிருந்த சாவியைப் போட்டுத் திறந்தான். மேலே இருந்த மஞ்சள் விளக்கைப் போட்டான்.

சிகந்தர் படுக்கையில் கிடந்தான்; அவன் முகம் பூராவும் ரத்தம்; அருகில் அவன் துப்பாக்கி.

அதிர்ச்சியில், ஸௌரப், 'ஓ' என்று கத்தினான்.

ஸிக்கந்தரின் முகத்தின் கீழ்ப்பகுதி அடையாளம் தெரியாத வகையில் சேதமடைந்திருந்தது. அவன் உடலிலிருந்து

துர்நாற்றம் வீசியது. அதோடு அந்த அறையில் இருந்த பழைய கார்ப்பெட்டிலிருந்து வீசிய மக்கிய நாற்றமும் சேர்ந்து மூச்சு முட்டியது. அவனுடைய உப்பிய முகத்தைப் பார்த்ததும் நான் உறைந்து போனேன். சுற்றியிருந்த எல்லோரும் ஸ்லோ மோஷனில் நகருவது போல் இருந்தது. மற்ற எல்லா ஒலியையும் அடக்கிவிட்டு ஏதோ ஒரு பயங்கர சத்தம் என் காதை அடைத்தது. ஸரஃப் டிவி ரிமோட்டை எடுப்பது போல் ஸிக்கந்தரின் மணிக்கட்டைப் பிடித்துப் பார்த்தார்.'

'செத்துவிட்டான்,' என்றார். இன்ஸ்பெக்டர் ஸரஃப். 'தன் வாயில் வைத்துச் சுட்டுக் கொண்டிருக்கிறான்.'

'நான் இதில் தலையிட விரும்பவில்லை. அதனால் தான் உங்களைக் கூப்பிட்டேன்,' என்ற அஹமத்,' எனக்கு இருப்பது இந்த ஒரே ஒரு ஹோட்டல் மட்டுமே. இங்கு ஒருவன் தற்கொலை செய்து கொண்டான் என்ற செய்தி பரவினால்...!'

குறுக்கிட்டுப் பேசினார் ஸரஃப். 'இந்த உடலை எப்போது கண்டுபிடித்தீர்கள்?'

'விடுதியைச் சுத்தம் செய்யும் பணியாளர்கள் மூன்று மணி நேரத்திற்கு முன்னால் கண்டுபிடித்தார்கள். அவர்களை வாயைத் திறக்காமல் இருக்கும்படி நான் சொன்னேன். இந்த செல்போனை வைத்துக் கொண்டு யாராவது கூப்பிடுவார்களா என்று காத்துக் கொண்டிருந்தேன். அப்போது தான் நீங்கள் கூப்பிட்டீர்கள்!'

'அவன் எப்போது இங்கு முதலில் வந்தான்?'

'ஐந்து நாட்களுக்கு முன்னால். அவன் உடலை இனிமேல் நீங்கள் பார்த்துக் கொள்கிறீர்களா? அல்லது அவன் குடும்பத்துக்குச் சொல்ல முடியுமா? போலீஸ் இங்கு வருவதை நான் விரும்பவில்லை. தயவு செய்யுங்கள்,' என்று குரல் நடுங்கக் கூறினான் அஹமது.

'நாங்கள் போலீஸ்,' என்றார் ஸரஃப். தன் ஐ.டி. கார்டை எடுத்துக் காண்பித்தார்.

ஸரஃபின் கால்களில் விழுந்தான் அஹமது.

'எனக்கு இது பற்றி எதுவும் தெரியாது, ப்ளீஸ் ஸார்.'

அவன் தோள்களைப் பிடித்து அவனை மேலே தூக்கினார் ஸரஃப்.

'அவன் யார், என்ன செய்கிறான் என்பது உனக்குத் தெரியுமா?'

'தெரியாது ஸார்,' என்றான் அஹமத்.

இன்ஸ்பெக்டர் அவனை ஓங்கி அறைந்தார். ஏன் இப்படி போலீஸ் அலைகிறார்கள், எல்லோரையும் பிடித்தவுடன் அடிக்க வேண்டுமென்று? குறிப்பாக ஏழைகள் மற்றும் வக்கற்றவர்களை, என்று நினைத்துக் கொண்டேன்.

'இவர்கள் தீவிரவாதிகள் என்று உங்கள் எல்லோருக்கும் தெரியும், இருந்தாலும் அவர்கள் தங்குவதற்கு இங்கு ரூம் கொடுத்திருக்கிறீர்கள். நீங்கள் போலீஸுக்குத் தகவல் தெரிவிப்பதில்லை,' என்றார் இன்ஸ்பெக்டர்.

அஹமதின் கண்களில் நீர் நிரம்பியது.

'ஸார், உள்ளூர்காரர்களான எங்களுக்கு வேற வழியே கிடையாது.' கைகளைக் கூப்பியபடி தொடர்ந்தான். 'எப்போ வேணா வருவாங்க, போவாங்க. மறுத்தால் எங்களிடம் துப்பாக்கியைக் காட்டுவார்கள். அவர்களை இங்கு தங்க அனுமதித்தால் போலீஸும் ராணுவமும் துப்பாக்கியைக் காட்டுவார்கள். நாங்கள் என்னதான் செய்ய முடியும்? எனக்கு சின்னக் குழந்தைகள் இருக்காங்க, ஸார்?'

'நீயும் இந்தியாவை வெறுக்கிறாயா?' என்றார், ஸரஃப் அப்படியே இருந்தாலும் அஹ்மத் அதை ஏற்றுக் கொள்வான் என்பது போல்.'

'இல்லை, ஸார். இந்திய சுற்றுலாப் பயணிகள் மூலம் தான் எனக்குப் பணம் கிடைக்கிறது. நான் ஏன் அவர்களை விரோதித்துக் கொள்ள வேண்டும்?'

ஸிக்கந்தரைக் காட்டியவாறு, 'இந்த ஆள் கடந்த 4 நாட்களாக என்ன செய்தான்?' என்றார் இன்ஸ்பெக்டர்.

'ஒவ்வொரு நாளும் சில மணி நேரங்கள் அவன் வெளியே போவான். விடுதி வாசலில் சில சிறுவர்களை அவ்வப்போது சந்திப்பான்.'

'புதிதாகத் தீவிரவாதிகளைச் சேர்த்துக் கொள்ளவா?'

'எனக்கு அதுபற்றி எதுவும் தெரியாது, ஸார்,' என்றான் அஹமது.

'அந்த அறையில் எதையாவது பார்த்தீர்களா?'

'நாங்கள் எதையும் தொடவில்லை. நீங்கள் எதை வேண்டுமானாலும் சோதனை போடலாம்,' என்றான் அஹமது.

'கேஷவ்? நீங்கள் இங்கு இருக்கிறீர்களா?' கேட்டார் இன்ஸ்பெக்டர். என் முகத்திற்கு நேராக விரல்களை மேலும் கீழும் ஆட்டினார். அவர் ஏற்கனவே மூன்று முறை என்பெயரைச் சொல்லி அழைத்திருக்கிறார், அதற்குப் பிறகு தான் நான்

அவரைக் கவனித்தேன். ஸிக்கந்தரின் சேமடைந்த முகத்தை மறுபடியும் பார்த்தேன். இந்த முகத்தோடு தான் நான் நேற்று பேசியிருக்கிறேன்.

‘ஸாரி, இன்ஸ்பெக்டர், என்ன அது?’

‘சந்தேகத்துக்குரிய முக்கிய ஆள் இறந்துவிட்டான்.’

‘ஆமா...ம்,’ என்னால் தெளிவாகப் பேசமுடியவில்லை. ஸௌரப்பின் முகம் கோணலாக மாறியது. வேகமாகக் குளியலறைக்கு ஓடினான்; வாந்தி எடுக்கும் சத்தம் கேட்டது.

‘ஆம்புலன்ஸைக் கூப்பிடு. உடலை எடுத்துச் செல்!’ என்று ஒரு கான்ஸ்டபிளிடம் சொன்னார் ஸரஃப். இன்னொருவரைப் பார்த்து, ‘ஏதாவது தற்கொலைக் கடிதம் கிடைக்கிறதா என்று ரூமில் தேடிப்பார்,’ என்றார்.

அருகே உள்ள நாற்காலியில் உட்கார்ந்தேன். ஸௌரப்பின் வாந்திச் சத்தம் என்னைக் குமட்டியது. கான்ஸ்டபிள் தலையணையைத் தூக்கிப் பார்த்தான், டெஸ்கின் டிராயர்களைத் திறந்து பார்த்தான்.

‘இங்கிருந்து எல்லோரும் வெளியே போனால் என்னால் நன்றாகத் தேட முடியும்,’ என்றான் கான்ஸ்டபிள்.

❖

முன் பகுதியிலிருந்த சோபாவில் நானும் ஸௌரபும் உட்கார்ந்திருந்தோம். இருவராலும் பேசமுடியவில்லை. எங்களுக்கு எதிரில் உட்கார்ந்திருந்த இன்ஸ்பெக்டர் யாருடனோ போனில் பேசினார். அறையைச் சோதனை செய்த கான்ஸ்டபிள் 1/2 மணி நேரம் கழித்து கீழே வந்தான். அவன் கையில் ஒரு காகித உறை இருந்தது.

‘அவனுடைய பாக்கெட்டில் இது இருந்தது. அதில் ‘ஹஷீம்பாயுக்கு’ டெஹ்ரீக்கில் என் சகோதரர்கள் யாரிடமாவது கொடுக்கவும், என்னைத் தேடி அவர்கள் வருவார்கள் என்று எழுதியிருக்கிறது,’ என்றான்.

ஸரஃப் அதைத் திறந்தார். அதனுள் ஒரு காகிதம் இருந்தது. அதில் இணையதள முகவரி கையால் எழுதப்பட்டிருந்தது.

www.Bit.Ly/AlvidaTehreek என்று எழுதியிருந்தது.

‘இது என்ன?’ என்றார் ஸரஃப்.

‘இது சுருக்கப்பட்ட ஒரு இணையதொடர்பு. நாம் இதைப் போட்டுப் பார்க்கலாம்,’ பேசுவதற்குக் குரலை சிரமப்பட்டு

சரிப்படுத்திக் கொண்ட ஸௌரப் சொன்னான்.

ஹோட்டலிலுள்ள கணினியில் அந்த முகவரியை டைப் செய்தான். அந்தப் பக்கம் ஒரு தனியான யூடியூப் வீடியோவைக் காட்டியது. சிகந்தர் உடல் கிடந்த அதே அறையில் உட்கார்ந்திருக்கும் ஸிக்கந்தரைக் காட்டியது. சில பிரார்த்தனைகளைச் சொன்னபிறது அவன் கேமராவைப் பார்த்துப் பேசினான்.

‘ஹஷீம்பாய், என்னை மன்னித்து விடுங்கள். நான் உங்களைக் கைவிட்டு விட்டேன். என்னைச் சிலர் பின்பற்றுகிறார்கள். நான் செய்யாத ஒரு குற்றத்திற்காக அவர்கள் என்னைப் போலீஸில் ஒப்படைப்பார்கள். என் சொந்த ஆபாவைக் கொலை செய்ததாக. அல்லா கஸம், ஸரா ஆபா எனக்கு மற்றொரு தாய் போன்றவள். நான் எதுவும் செய்யவில்லை.’

‘ஆபாவைப் பற்றி மேலும் சொல்வதற்கு மட்டுமல்ல, டெஹ்ரீக் செயல்பாடுகள் மற்றும் இலக்குகளைப் பற்றியும் தெரிவிப்பதற்காக என்னைப் பிடிக்கும் போலீஸ் மேலும் மேலும் துன்புறுத்துவார்கள். அந்தச் சூழ்நிலையில் இருக்க நான் விரும்பவில்லை. உங்கள் எல்லோரையும் அபாயத்தில் சிக்கவைப்பதை விட என் உயிரைக் கொடுக்க நான் தயார். நீங்கள் கற்றுக் கொடுத்தது போல் சிறந்த காரணத்துக்காக என்னைப் பலியாக்கிக் கொள்வதில் நான் மகிழ்ச்சியடைகிறேன்.’

‘இறுதியாகக் காஷ்மீர் விடுதலையாகும்போது உங்கள் முகத்தில் மலரும் சிரிப்பைப் பார்க்க நான் இருக்கமாட்டேன் என்பதை நினைத்து வருந்துகிறேன். ஹஷீம்பாய், உங்களையும் டெஹ்ரீக் குடும்பத்தையும் நான் விரும்புகிறேன். தயவுசெய்து என் அம்மாவைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். நீங்கள் செய்வீர்கள் என்பது தெரியும்.’

‘ஸரா ஆபா, உங்களை விரைவில் மேல் உலகில் சந்திக்கிறேன். நீங்கள் போனபிறகு உயிர் வாழ்வதற்கான ஒரு காரணம் மேலும் குறைகிறது.’

‘மற்றவர்களுக்கு ஹீதா ஷஃபீஸ்,’

சிகந்தர் மேலும் ஒரு பிரார்த்தனையை முணுமுணுத்தான். சில வினாடிகளுக்குப் பிறகு ஒரு துப்பாக்கியை எடுத்தான். அதன் முனையைத் தன் வாயில் வைத்துக் கொண்டான். அடுத்து என்ன நிகழும் என்ற எதிர்பார்ப்பால் என் கண்கள் துடித்தன, முகம் விறைத்தது.

ஆனால் அவன் கையை அசைத்தான். அத்தோடு வீடியோ நின்றது. ஏனென்றால் பதிவு செய்வதை நிறுத்திவிட்டு, வீடியோவைப் பதிவேற்றி, தொடர்பை உண்டாக்கிய பிறகு தான் அவனால் தன்னைச் சுட்டுக் கொள்ள முடியும்.

வீடியோ முடிந்தவுடன் வாயைப் பிளந்தபடி ‘ஆ’ என்றான் ஸௌரப்.

‘தற்கொலைக் கடிதங்கள் ஸௌரப் ஹை-டெக்காக ஆகிவிட்டன,’ என்றார் ஸரஃப்.

❖

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு கான்ஸ்டபிள்களும் விடுதிப் பணியாளர்களும் அவன் உடலை ஆம்புலன்ஸில் ஏற்றினார்கள்.

‘பிணவறைக்கு அவனை எடுத்துச் செல்லுங்கள். யாரிடமும் எதையும் சொல்ல வேண்டாம். அவன் அம்மாவுக்கு மட்டும் தெரியப்படுத்துங்கள்,’ என்றார் ஸரஃப்.

விடுதியை விட்டு ஆம்புலன்ஸ் சென்ற பிறகு அஹ்மத்தைப் பார்த்துப் பேசினார் இன்ஸ்பெக்டர்.

‘இறந்தவன் ஒரு கோள்மூட்டி. இங்கு புலன் விசாரணை எதுவும் தேவையில்லை. உன் விடுதியைச் சுத்தம் பண்ணிக்கோ. அவனைப் போல் யாராவது இங்கு தங்குவதற்கு வந்தால் எங்களுக்குத் தெரியப்படுத்து!’

‘கட்டாயமாக ஸார். நன்றி அல்லா காயர்.’ அஹமத் விடுதிக்குள் சென்று மறைந்தான். அவருடன் வந்த இரு கான்ஸ்டபிள்களும் ஜீப்பில் ஏறிக்கொண்டார்கள். வாகனம் நிறுத்துமிடத்தில் நான், ஸௌரப் மற்றும் ஸரஃப் மட்டுமே நின்றிருந்தோம்.

கன்னத்தைச் சொறிந்தவாறு ‘தன் சகோதரியை அவன் கொன்றிருப்பான் என்று தோன்றவில்லை,’ என்றார் ஸரஃப்.

நான் தலையாட்டினேன்.

‘அவர்கள் இறுதியில் பொய் சொல்லமாட்டார்கள்.’ ஜீப்பில் ஏறிக்கொண்டே சொன்னார் ஸர்ஃப். ஜன்னல் வழியாகத் தலையை வெளியே நீட்டினார்.

‘நான் ஒரு வார்த்தை சொல்லலாமா?’ என்றார்.

‘நிச்சயமாக, ஸார்,’ என்றேன்.

‘எல்லோரும் புலன் விசாரணை செய்துவிட முடியாது. எதற்கு நமக்குத் தகுதி இருக்கிறதோ அதை மட்டும்

செய்யவேண்டும்.’

❖

‘ஏதாவது சொல், மச்சி. நாள் முழுவதும் நீ எதுவுமே பேசவில்லை,’ என்றான் ஸௌரப்.

‘திரும்பப் போவதற்கு ப்ளேன் டிக்கட் பார்த்தாயா, இல்லையா?’ என்றேன்.

பஹல்காமிலிருந்து ஸ்ரீநகருக்குப் போகும் பஸ், மலைப்பாதையில் வளைந்து வளைந்து சென்றது. நான் கண்களை மூடிக் கொண்டேன். காஷ்மீரின் நீலவானம், பனி படிந்த சிகரங்கள் போன்ற எதுவுமே இப்போது முக்கியமாகத் தோன்றவில்லை. எனக்கு வீட்டுக்குப் போகவேண்டும்.

‘டெல்லிக்குப் போக தினமும் ஆறு ப்ளேன்கள் உள்ளன. திரும்பிப் போவது ஒரு பிரச்சனையே இல்லை,’ என்றான் ஸௌரப்.

நாங்கள் திரும்பவும் மௌனமானோம். என்ஜினீயராகவும் ஒரு டீச்சராகவும் நான் பிரயோசனமில்லை என்பது எனக்குத் தெரியும். துப்பறிவதிலும் சொதப்பியிருக்கிறேன் என்பது இப்போது எனக்குப் புரிந்தது. இதனால் தானோ ஸரா என்னை விட்டு விலகினாள்? தொடர்ச்சியாக எல்லாவற்றையும் இழப்பவனாக என்னை அவள் பார்த்திருக்க வேண்டும். முன்பு முடிப்பதாகச் சொன்ன எதையும் நான் செய்யவில்லை. இப்போது அவளைக் கொலை செய்தது யார் என்பதைக் கண்டுபிடிப்பதாகச் சொன்னதையும் என்னால் செய்து காட்ட முடியவில்லை.

‘என்ன நினைக்கிறாய், மச்சி,’ என்றான் ஸௌரப் 1/2 மணி நேரத்திற்குப் பிறகு.

‘சந்தன் கிளாஸஸில் இன்னும் நமக்கு வேலை இருக்கும் என்று நம்புகிறேன்.’

❖

என் ஸ்வெட்டர்களைத் தூக்கி சூட்கேஸில் போட்டேன். ‘டிக்கெட்டுகளை வாங்கிவிட்டாயா? நான் துணிகளைப் பெட்டியில் அடைத்துவிட்டேன்!’ என்றேன்.

‘இன்டர்நெட் வேலை செய்யவில்லை. நிஸாம் பாயின் சிம் அல்லது வைஃபை இரண்டுமே கிடைக்கவில்லை.’

‘அப்படியா, ஏர்போர்ட்டில் வாங்கிக் கொள்ளலாம்,’

என்றேன்.

ஸௌரப்பின் உடைகள் இன்னும் அங்கேயே மாட்டப்பட்டிருந்ததைப் பார்த்தேன்.

‘என்ன இது? உன் துணிகளை எடுத்து வைக்கவில்லையா?’ என்றேன்.

ஸௌரப் என் முன்னால் வந்து நின்றான் வெள்ளை நிற ஸ்வெட்டரில் துருவக்கரடி போல் தெரிந்தான். துருவக்கரடி தன் பாதங்களை என் தோள் மீது வைத்தது.

‘முதலில் ஸரா, பிறகு சிகந்தர். பயமாக இருக்கிறது. ஆனால் அதற்காக இப்படி பயந்து போய் ஓடணுமா?’ என்று ஸௌரப் கேட்டான்.

‘நான் ஒன்றும் பயப்படவில்லை. நான் ஏன் போகிறேன் என்றால் இதைச் செய்வதற்கான தகுதி எனக்கில்லை என்பதால்தான். அல்லது வாழ்க்கையில் எதைச் செய்வதற்குமே என்றும் சொல்லலாம்.’

‘முட்டாள்தனம். நமக்குச் சற்று பின்னடைவு அவ்வளவுதான். அதனால் நாம் இதை விட்டு விலக வேண்டாம்.’

நான் தோளைக் குலுக்கினேன். ‘எப்படியானாலும் இங்கு செய்வதற்கு நமக்கு ஒன்றுமில்லை.’

‘ஏன்? நாம் இன்னும் அந்தக் கொலையாளியைக் கண்டுபிடிக்கவில்லையே?’

அவனிடமிருந்து நகர்ந்து படுக்கையில் போய் உட்கார்ந்தேன். அவனைப் பார்க்காமலே நான் பேசினேன்.

‘நம்மால் முடியாது. நமக்கு அத்தனை சாமர்த்தியம் இல்லையே?’

ஸௌரப் என் அருகில் வந்து அமர்ந்தான்.

‘நாம் உண்மைக்கு வெகு அருகில் வந்துவிட்டோம்!’ என்று மெதுவான குரலில் சொன்னான்.

‘இல்லை. நாம் நெருங்கி வரவில்லை. நாம் ரொம்பவும் மோசமாகத் தப்பு செய்துவிட்டோம். என்னால் தான் சிகந்தர் இறந்து போனான்.’

வாயை அகலமாகத் திறந்த ஸௌரப், ‘என்ன?’ என்றான்.

‘போலீஸிடம் சொல்வதாக அவனை நான் ரொம்பவும் மிரட்டினேன். அதனால்தான் அவன் தற்கொலை செய்துகொண்டான். அவன் ஸராவைக் கொலை செய்யாத போதும்.’

‘அவன் ஒரு தீவிரவாதி. அவன் ஒரு கோள்மூட்டி, அப்படித்தான் இன்ஸ்பெக்டர் ஸரஃப் சொன்னார்.’

‘அவன் ஸராவின் சகோதரன். இதற்காக என்னை எப்பவாவது மன்னித்திருப்பாளா? தவிர அவன் அம்மா வேறு அவனுக்காக வீட்டில் காத்துக்கொண்டிருப்பாள்...’

என் கை மீது தன் கையை வைத்தான் ஸௌரப்.

‘சிகந்தர் தான் செய்திருப்பான் என்றும், என்னிடம் சாட்சியம் இருக்கிறது என்றும் உண்மையில் நான் நினைத்தேன். நாம் நினைத்ததை அதோடு சேர்த்துவிட்டோம்,’ என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

‘எனக்குக் கொஞ்சம் கூட சந்தேகமேயில்லை!’

‘கோலு, நான் இதைச் செய்ய விரும்பினேன். ஸராவுக்காக மட்டுமல்ல. ஒரு தடவையாவது ஜெயிக்க வேண்டுமென்று எண்ணினேன். சே, நான் எப்போதுமே வெற்றியடையப் போவதில்லை.’

வெறுப்புடன் என் சூட்கேஸை உதைத்தேன். பெட்டியின் மூடி திறந்து கொண்டது. ஸராவின் அலமாரியில் இருந்து எடுத்த பொருட்கள் அடுங்கிய பொட்டலம் திறந்து கிடந்த மேல் மூடியின் அடியிலுள்ள பையில் இருந்தது.

‘இது எல்லாம் முட்டாள் தனமானவை,’ அந்தப் பொட்டலத்தைக் காண்பித்துச் சொன்னேன். ‘நாம் யாரென்று நம்மை நினைத்துக் கொண்டிருக்கிறோம்? நம் நாட்டு ஹோம்ஸ் மற்றும் வாட்ஸன் ஜோடியென்றா? தோற்றுப் போகும் எனக்கு பாடி ஷாப்பில் கோடிங் வேலை கூட கிடைக்கவில்லை, சிக்கலான ஒரு கொலை வழக்கில் என்னால் எப்படி தீர்வு காணமுடியும்?’

‘தோற்பவன் என்று சொல்வதை நிறுத்து, மச்சி, நீ அப்படி இல்லை.’

‘பிரமாதமாக எதையாவது நான் சாதித்ததை நீ பார்த்திருக்கிறாயா?’

‘ஐஐடியை முடித்திருக்கிறாயே?’

‘அது அதிர்ஷ்டவசத்தால் நடந்தது. மதிப்பெண்கள் போடுவதில் தவறு ஏற்படும். கணினியில் ஏற்பட்ட பிழை.’

‘போதும், நிறுத்து, மச்சி.’

‘ஒரு குற்றமற்றவனை நாம் கொன்றுவிட்டோம்!’

‘ஒரு தீவிரவாதி இறந்துவிட்டான். நாம் நாட்டுக்கு நல்லது

செய்திருக்கிறோம்.’

‘நான் ஸௌரப்பைப் பார்த்தேன். அவன் தோளைக் குலுக்கினான்.

‘தே... பையன், எப்படிக் கொல்வது என்று இன்னும் நிறைய பேருக்குச் சொல்லிக் கொடுத்திருப்பான்.’

‘சரி, எப்படியானாலும் இப்போ நாம் செய்வதற்கு என்ன இருக்கிறது?’ பெருமூச்சு விட்டபடி அவனைக் கேட்டேன்.

‘அடிப்படைக்குச் செல்வோம். ஸரா விட்டுப்போயிருக்கும் டிஜிட்டல் தடயங்களைப் பார்ப்போம். அவளுடைய இன்ஸ்டாகிராம் தகவல்களை நாம் சரியாகப் பார்க்கவில்லை.’

‘அங்கு எதுவும் இல்லை. எந்த ஒரு இருபது வயது பெண்ணின் தகவல்கள் போல் தான் உள்ளன.’

‘மறுபடியும் அவற்றைப் பார்ப்போம், நமக்கு இப்போது தெரிந்திருப்பவற்றின் அடிப்படையில். கோகெய்ன், துப்பாக்கி குண்டு போன்ற பெரிய பொருட்களைப் பார்த்த பிறகு நாம் பாதை மாறி விட்டோம். அதிலிருந்த மற்றவை பற்றி ஆராயவில்லையே?’

‘எது மாதிரியானவை?’

‘கர்ப்பத்தை உறுதி செய்யும் சாதனங்கள்,’ என்று சொல்லிய ஸௌரப் அவள் அலமாரியிலிருந்து எடுத்தவற்றைக் காட்டினான்.

‘எந்தப் பாதுகாப்பும் இல்லாமல் அந்தத் தே...பையன் ரகுவும் ஸராவும் உடல் உறவு கொண்டிருக்க வேண்டும். வேறு என்ன?’

ஸௌரப் என்னை உற்றுப் பார்த்தான்.

‘மச்சி, அமைதியாக இரு. அவள் இப்போது இறந்துவிட்டாள். நீ அவளைக் காதலித்தாய்.’

‘ஸாரி, நான் மன அழுத்தத்தில் இருக்கிறேன்,’ என்று முணுமுணுத்தேன்.

‘அப்போ, இந்தக் காதணிகள்? இவற்றைப் பற்றி நாம் இதுவரை யோசிக்கவேயில்லை. ரொம்ப விலையுள்ளதாக இருக்கும்,’ என்றான் ஸௌரப்.

அவற்றை என் கைகளில் வைத்துக்கொண்டேன். ஒவ்வொரு காதணியிலும் 10 ரூபாய் நாணய அளவுக்கு ஒரு பெண்டண்டு தொங்கியது. அவற்றில் வைரம், நீலம் மற்றும் விலை உயர்ந்த கற்களும் பதிக்கப்பட்டிருந்தன. அந்தப் படகு வீட்டின் அறைக்குள் ஜன்னல் வழியாக வந்த சூரியவெளிச்சம் அவற்றின் மீது பட்டபோது அந்தக் கற்கள் ஜொலித்தன.

நிஸாம் கதவைத் தட்டினான்.

‘ஸார், நான் உள்ளே வரலாமா?’ என்றான்.

‘ஓ,’ என்று சொல்லி தலையை நிமிர்த்தினேன்.

‘கட்டாயம் உள்ளே வாங்க, நிஸாம்,’ என்று சொன்ன ஸௌரப் கர்ப்பத்தை உறுதி செய்யும் கருவிகள் நிறைந்த அந்தப் பெட்டியின் மீது ஒரு தலையணையை வைத்தான்.

‘இன்டர்நெட் வேலை செய்கிறது என்பதைச் சொல்ல வந்தேன். நேற்று கல் எறிதல் நிகழ்ந்த பிறகு அரசாங்கம் இன்டர்நெட்டை நிறுத்திவிட்டது. இப்போது திரும்ப இணைப்பு கிடைத்துவிட்டது,’ என்றான் நிஸாம்.

‘என்ன?’ இன்னுமா கல் எறிகிறார்கள்? என்றேன்.

‘அதைப் பற்றிக் கேட்காதீர்கள், ஜனாப். நாங்கள் களைத்துப் போய்விட்டோம். போனவாரம் இந்திய ராணுவம் குற்றமற்ற இரண்டு பையன்களை இழுத்துச் சென்றதற்கு மக்கள் சும்மா எதிர்ப்பு தெரிவித்தார்கள். அவ்வளவுதான். ஆனால் இத்தகைய செய்தி கிளம்பினால் சுற்றுலாப்பயணிகள் வருவது குறைந்துவிடும். நான் கஷ்டப்படுவேன்,’ என்றான் நிஸாம்.

‘எனக்குப் புரிகிறது. இருந்தாலும் இன்டர்நெட் தொடர்பு கிடைத்தது பற்றி சந்தோஷம்!’ என்றேன்.

என் கையில் இருந்த காதணிகளை அவன் பார்த்தான்.

‘மாஷா அல்லா,’ என்றான் நிஸாம். ‘என்ன அழகான ஜிமிக்கிகள். அண்ணிக்காக வாங்கிச் செல்கிறீர்களா?’

‘அண்ணி இறந்துவிட்டாள்,’ என்று சொல்லவந்தவன் நிறுத்திக் கொண்டு அவனைப் பார்த்துச் சிரித்தேன்.

‘இவை காஷ்மீரில் செய்பவை தானே?’ என்றேன்.

‘ஆம். 100 சதவீதம் இவை காஷ்மீரில் செய்யப்படுபவைதான்.’ கையை நீட்டி, ‘நான் பார்க்கலாமா?’ என்றான்.

படுக்கையில் என் அருகில் உட்கார்ந்தான் நிஸாம். காதணிகளைக் கையில் எடுத்துக் கொண்டு கண்களுக்கு அருகில் வைத்துப் பார்த்தான்.

‘ரொம்ப அழகான வேலைப்பாடு. ரொம்ப விலை உயர்ந்ததாக இருக்கவேண்டும். இது போன்றவை காஷ்மீரில் மட்டும்தான் உங்களுக்குக் கிடைக்கும்.’

‘அவை ஒரு நண்பருடையது,’ என்றான் ஸௌரப்.

‘இதே மாதிரி இன்னொரு ஜோடி வாங்க வேண்டும். எங்கே கிடைக்கும்?’

‘இப்போதெல்லாம் எந்த டிஸைனையும் இந்தியா பூரா எல்லோரும் காப்பியடித்துச் செய்கிறார்கள். ஆனால் நிஜமான அசல் நகை இது போல் வேண்டுமென்றால் ஸ்ரீநகரிலுள்ள மிகப் பெரிய கடைகளில் தான் கிடைக்கும்.’

‘அவை எவை?’ என்றான் ஸௌரப்.

‘உள்ளூர் நகைக்கடைக்காரர்களின் லிஸ்டை என்னால் கொடுக்க முடியும். ஷெல்டர் படகு வீட்டிலுள்ள நிஸாம் அனுப்பியதாகச் சொல்லுங்கள். உங்களுக்கு அவர்கள் உதவுவார்கள், நல்ல கவனிப்பு தருவார்கள்,’ என்றான் நிஸாம்.

‘தேங்க்ஸ்’ என்றேன்.

‘எதிர்ப்பு தெரிவித்தது என்ன ஆயிற்று,’ என்று கேட்டு நிஸாமின் கவனத்தைக் காதணிகளிலிருந்து திருப்புவதற்கு ஸௌரப் பேச்சை மாற்றினான்.

‘தற்காப்புக்காகத் திரும்பித் தாக்கியதாக ராணுவம் சொன்னது. எப்போதும் போல் கல்குண்டுகளைப் பயன்படுத்தி அவர்கள் சுட்டார்கள். சில சிறுவர்களின் காதுகளை அவை தாக்கியது. அவர்களுக்குக் காது கேட்காமல் போகலாம். இது நிலைமையை மேலும் மோசமாக்கியது. இன்னும் அதிகமாக ராணுவத்தை மக்கள் வெறுத்தார்கள். ராணுவம் இன்டர்நெட்டைத் துண்டித்தது. இது இப்படியே சுழன்று கொண்டே இருக்கும்,’ எதுவும் செய்ய இயலாத நிலையில் ‘யா ஹீதா, எப்போது இது முடியும்?’ என்றான்.

‘இன்று இரவு என்ன சாப்பாடு?’ அதிக நேரம் ஆவதற்குமுன் அரசியல் கூடாது என்ற என் கொள்கையைப் புதுப்பித்துக் கொண்டு அவனிடம் கேட்டேன். ஆனால் நிஸாம் நிறுத்துவதாக இல்லை.

‘இந்தியாவின் மற்ற இடங்களில் எல்லாம் எப்படி அமைதி நிலவுகிறது? ஏன் எங்களால் மட்டும் ஒரு வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை, கேஷவ் ஜி?’

‘நம்மால் முடியும், நிச்சயம் முடியும். அது போகட்டும். நகைக்கடை லிஸ்டை நாளைக்குக் கொடுக்கிறீர்களா?’

‘ஓ,’ என்ற நிஸாம், அவ்வளவு சாதாரண விஷயத்திற்கு நான் உடனே தாவியதைக் கண்டு ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்தான். அனுபவஸ்தர்களாலும் உலகத் தலைவர்களாலும், 70 வருடங்களாகத் தீர்க்க முடியாமல் இருந்த காஷ்மீர் பிரச்சனைக்கான ஒரு தீர்வுக்கு வெகு அருகில் நாங்கள் இருந்தோம்; அதை நான் குறுக்கே புகுந்து தடுத்தது போல்

இருந்தது அவன் பார்வை.

‘டின்னர் சாப்பிடும் போது தருகிறேன். சமையலறையில் என்ன இருக்கிறது என்று நான் போய்ப் பார்க்கிறேன். இன்று நாங்கள் ஸ்பெஷல் பிரியாணி தயாரிக்கிறோம்,’ என்றான்.

காதணிகளை என்னிடம் கொடுத்துவிட்டுப் போனான் நிஸாம், என்னைப் பார்த்து ஸௌரப் சிரித்தான்.

‘என்ன?’ என்றேன்.

‘இன்டர்நெட் இணைப்பு கிடைத்துவிட்டது. அடுத்த விமானத்துக்கு டிக்கெட் எடுக்கவா?’

‘வெயிட் பண்ணு.’

‘ஏன்?’

‘சில நகைக்கடைகளுக்குப் போகலாம் என்று நினைக்கிறேன்.’

‘ஏன்?’ என்றான் ஸௌரப் நமுட்டுச் சிரிப்புடன்.

‘ஒரு வேளை, என் அண்ணிக்கு ஒரு ஜோடி காதணிகள் வாங்குவதற்காக,’ என்று சொல்லி அவனைப் பார்த்து கண்ணடித்தேன்.

‘டிண்டர் அண்ணி என்றா சொன்னாய்?’

இருவருமே அந்த நாளுக்கான முதல் சிரிப்பைச் சிரித்தோம்.

# அத்தியாயம் 23

‘ஒரு பிரச்சனையும் இல்லை. இதே மாதிரி உங்களுக்குச் செய்து கொடுக்கிறோம். ஆம், எங்களுக்கு நிஸாம் பாயைத் தெரியும். அவருடைய படகு வீடுகளிலிருந்து நிறைய பேர் இங்கு வருவார்கள்.’

‘ஆம், அவர் தான் அனுப்பினார். எப்படி இருந்தாலும் இதே மாதிரி உங்களால் செய்ய முடியும் என்று எனக்குத் தெரியும். ஆனால் இந்தக் குறிப்பிட்ட காதணிகளை நீங்கள் தான் செய்தீர்களா?’ என்று கேட்டேன். காலையிலிருந்து நாங்கள் வந்திருக்கும் நாலாவது கடை. சையது ஹமீத் பாரா என்ற இடத்தில் இருந்த அக்கடையின் பெயர் அகூன் ஜுவல்லர்ஸ்.

‘ஸார், இதை விடச் சிறப்பாக எங்களால் செய்து தரமுடியும். என்ன விலைக்கு இதை வாங்கினீர்கள்?’ என்றான் விற்பனையாளன்.

‘நீங்கள் இதைச் செய்யவில்லை, இல்லையா?’ என்று சொன்ன ஸௌரப் போவதற்குத் திரும்பினான்.

‘இருங்கள், ஸார்,’ என்றான். கடைப்பையன் ஒருவனிடம் சமிக்ஞை செய்ய, அவன் சுடச்சுட இரு கப் காஹ்வா சாயும், பேரிச்சம் பழங்களையும் கொண்டுவந்தான்.

‘எங்களுடைய விருந்தாளியாக இருங்கள், ஜனாப்.’

‘நீங்கள் எதையும் வாங்க வேண்டுமென்ற கட்டாயமில்லை,’ என்றான் அவன்.

‘இவை ஸ்ரீநகரில் செய்யப்பட்டவையா என்று உங்களால் சொல்ல முடியுமா?’ என்று கேட்டேன்.

ஒரு காதணியை எடுத்துப் பார்த்தான்.

‘நிச்சயமாக. எந்த இடத்தில் இதைச் செய்திருந்தாலும், இது காஷ்மீரி வேலைப்பாடு தான். இந்த டிஸைனின் நுணுக்கத்தை வைத்து என்னால் உறுதியாகச் சொல்ல முடியும்.’

இஸ்லாமியக் குல்லாவும் வெள்ளைக் குர்தாவும் அணிந்து ஒரு முதியவர் - கடைச் சொந்தக்காராக இருக்கும் ஒரு

மூலையிலிருந்து எழுந்து எங்களை நோக்கி வந்தார்.

‘என்னிடம் காட்டுங்கள்,’ என்றார். முகத்தருகில் கொண்டு வந்து கண்களைச் சுருக்கிக் கொண்டு அதைப் பார்த்தார். சட்டைப் பையிலிருந்து ஒரு பூதக்கண்ணாடியை எடுத்தார்.

‘இல்லை, இது எங்களுடையது இல்லை. ஆனால் இது இந்தப் பகுதியில் விற்கப்பட்டது தான், இதைச் செய்தவர்கள் யார் என்று எனக்குத் தெரியும்!’ என்று அவற்றை நன்றாகப் பார்த்துவிட்டு அவர் சொன்னார்.

‘தேங்க்யூ,’ என்றேன்.

‘எங்களுக்கு ஒரு வாய்ப்பு கொடுங்கள். இதை விடச் சிறப்பாகச் செய்து கொடுக்கிறோம்,’ என்றார் அவர்.

‘அவனுடைய மனைவி அதே கடைக்கு நாங்கள் போகவேண்டுமென்று ஆசைப்படுகிறாள்,’ என்று ஸௌரப் வெட்கத்துடன் சிரித்தான். உப்பி இருந்த அவனுடைய சிவப்பு ஸ்வெட்டரில் அவன் நிஜமாகவே பெண்டாட்டி தாசனாகத்தான் தெரிந்தான்.

‘ஓ, அப்படியானால் அது உங்கள் இஷ்டம்,’ என்றார். ‘அந்தக் கடையின் சொந்தக்காரர்; அவர் குரலில் சற்றே ஏமாற்றம் வெளிப்பட்டது.’

‘அங்கிள், யார் இதைச் செய்தது என்பதைக் கண்டுபிடிக்க எங்களுக்கு உதவுகிறீர்களா?’ என்றேன்.

‘இவை ரொம்ப விலை உயர்ந்தவை. அதனால் மிகப் பெரிய நகைக்கடையாகத்தான் இருக்க வேண்டும். அவற்றில் கடையின் முத்திரை இருக்கிறதா?’ என்று கேட்டுவிட்டு விற்பனையாளரிடம் மைக்ரோஸ்கோப்பைக் கேட்டார்.

அவன் கடைக்குப் பின்புறம் சென்றான்.

‘இதன் விலை எவ்வளவு இருக்கும்?’ என்று அவரைக் கேட்டேன்.

‘3 அல்லது 4 லக்ஷம் ரூபாய்கள்,’ என்றார். ‘என் பெயர் ஹஃபீஸ்,’ என்றார்.

நாங்கள் கை குலுக்கினோம்.

ஒரு காம்பௌண்டு மைக்ரோஸ்கோப்பை அவன் கொண்டு வந்தான். ஒரு காதணியை எடுத்து மைக்ரோஸ்கோப்பின் அடியில் அவர் வைத்தார். மேலிருக்கும் கண்ணாடி வழியாகப் பார்த்தார். மேலும் கீழுமாகக் காதணியை அசைத்தார், அவர் தலையை ஆட்டினார்.

‘இன்னொன்றைக் கொடுங்கள்,’ என்று கேட்டார். லென்சுக்கு அடியில் இரண்டாவதை வைத்தார்.

‘நிறைய நகைக்கடைக்காரர்கள் அவர்களுடைய இனிஷியல் போல் கடையின் முத்திரையைப் பதிப்பார்கள்,’ என்றார். ஒரு கண்ணால் பார்த்துக் கொண்டே. ’ ‘இதோ இருக்கே, எஸ். ஜே,’ என்றார்.

‘எஸ் ஜே என்றால் என்ன?’ என்றேன்.

எங்களிடம் ஹஃபீஸ் காதணிகளைக் கொடுத்தார்.

‘பார்க்கலாம், எஸ்.ஜே என்பது சோனா ஜ்வல்லர்ஸாக இருக்கலாம். என் நண்பன் தான் அதன் சொந்தக்காரன். ஹனுமான் மந்திருக்கு எதிரில் எஸ்.கேம் சிங் ஜ்வல்லர்ஸும் இருக்கின்றன. எனக்குத் தெரிந்தவரை எஸ்.ஜே. இனிஷியல் இருக்கக் கூடிய கடைகள் இவைதான்,’ என்றார்,

நிஸாம் கொடுத்த லிஸ்டைப் பாக்கெட்டிலிருந்து ஸௌரப் எடுத்தான். ‘லால் சௌக்கில் ஷப்னம் ஜ்வல்லர்ஸ் என்று ஒரு கடை இருக்கிறது. ஸ்ரீநகர்-லடாக் நெடுஞ்சாலையில் ஸௌகத் ஜ்வல்லர்ஸ் என்ற ஒரு கடையும் இருக்கிறது,’ என்றான் ஸௌரப் லிஸ்டைப் பார்த்தபடி.

‘நீங்கள் தேடுவது நல்லபடியாகக் கிடைக்கட்டும். அதே கடையை உங்களால் கண்டுபிடிக்க முடியாவிட்டால் நாங்கள் உங்களுக்காகக் காத்திருக்கிறோம். நீங்கள் எப்போது வேண்டுமானாலும் வரலாம்,’ என்று சிரித்தபடி சொன்னார் ஹஃபீஸ்.

❖

‘இல்லை, இது இங்கு சோனா ஜ்வல்லர்ஸில் இதைச் செய்யவில்லை,’ என்று அதைக் கையில் எடுத்தவுடன் கடைக்காரர் சொன்னார்.

‘இது எங்கள் கடையின் பொருள் அல்ல,’ என்றாள் ஹிஜாப் அணிந்திருந்த ஷப்னம் ஜ்வல்லர்ஸ் கடை விற்பனைப் பெண்.

இனிஷியல்ஸ் எஸ்.ஜே உள்ள நான்கு கடைகள் எங்களைத் திருப்பி அனுப்பிவிட்டன.

‘இன்னும் மூன்று எஸ்.ஜேக்கள் இருக்கு,’ என்றான் ஸௌரப். தேடுவதைச் சற்றே நிறுத்திவிட்டு, சாலையோரக் கடையில் ரஸ்கு சாப்பிட்டு காஹ்வா குடித்தோம்.

‘சரி, கடைசியாக சில கடைகளுக்குப் போவோம். இல்லாவிட்டால் டெல்லிக்குத் திரும்ப, டிக்கெட்

எடுத்துவிடலாம் என்று நினைக்கிறேன்,' ரஸ்கை டீயில் முக்கியபடி கூறினேன்.

❖

'உங்களுடைய கடையில் இதைச் செய்திருக்கிறீர்களா என்பது எனக்குத் தெரிய வேண்டும்,' ஷௌகத் ஜுவல்லர்ஸ் கடைக்காரரிடம் காதணிகளைக் கொடுத்து விட்டுச் சொன்னேன். மேஜைக்குப் பின்னால் காலை மடித்து அவர் உட்கார்ந்திருந்தார். பிரகாசமான விளக்குகளால் ஜொலித்த நகைகள் சுவர்களில் பிரதிபலித்தன.

'இவையா?' என்று சொல்லிக் காதணிகளைக் கையில் எடுத்துப் பார்த்தார். அதன் மீது விரலை வைத்துத் தடவினார்.''

'ஆமாம், நிச்சயமாக,' என்று சொல்லி அவர் மகிழ்ச்சியாகச் சிரித்தார். 'இது ஷௌகத் நகைக்கடையின் மிக நேர்த்தியான வேலைப்பாடு.'

நான்கு நாட்கள் அலைச்சலுக்குப் பிறகு கிடைத்த 'ஆமாம்' என்ற பதிலால் நான் நிலைகுலைந்து போய்விட்டேன்.

என்னுடைய வெளிப்படையான நிம்மதியைப் பார்த்து அந்தக் கடைக்காரர் திடுக்கிட்டுப் போனார்.

'என்ன ஆயிற்று? நான் ஷௌகத்,' என்று கையை நீட்டினார்.

நான் அவர் கையைக் குலுக்கினேன். 'உங்களைப் பார்த்ததில் எவ்வளவு சந்தோஷம் என்பதை என்னால் சொல்ல முடியவில்லை.'

ஷௌகத் சிரித்தார்.

'உண்மையில் எனக்குத் தான் சந்தோஷமாக இருக்கிறது. வேறு ஏதாவது நகை வேண்டுமா? நீங்கள் சரியான இடத்திற்குத்தான் வந்திருக்கிறீர்கள்.'

அந்த நாளின் ஆறாவது கப் காஹ்வா டீயை எங்களுக்குக் கொடுத்தார். விளக்கு வெளிச்சத்தில் அந்தக் காதணிகளை உற்றுப் பார்த்தார்.

'என்ன ஒரு நேர்த்தியான வேலைப்பாடு, பிரமாதம்,' என்றார்.

'யாருக்காக இதைச் செய்தீர்கள்?' என்று கேட்டேன்.

'எனக்குப் புரியவில்லை. உங்களுடையது இல்லையா?'

'என் ஃபிரெண்டினுடையது. அவள் இப்போது இல்லை!'

ஷௌகத் தன் காதுமடலை வலது கையால் தொட்டுக்கொண்டு ஒரு பிரார்த்தனையை முணுமுணுத்தார்.

‘ஸாரி, வருத்தப்படுகிறேன். என்ன ஆயிற்று அவளுக்கு?’

நானும் ஸௌரபும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம்.

‘விபத்து,’ என்றான் ஸௌரப்.

‘யா ஹுபதா. நான் என்ன செய்ய வேண்டும் உங்களுக்கு?’

‘அவளுடைய அறையிலிருந்து அவள் பெற்றோர்கள் இதை எடுத்தார்கள். அவர்களுக்கு இதை அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. ஸ்ரீநகருக்கு நாங்கள் வரவேண்டியது இருந்தது. யார் அவளுக்கு இதைக் கொடுத்திருக்க முடியும் என்று எங்களைக் கண்டுபிடிக்கச் சொன்னார்கள்,’ என்று சொன்னேன்.

‘பெற்றோர்களைப் பற்றி உங்களுக்குத் தெரியுமே,’ என்றான் ஸௌரப். ஆனாலும் அவன் சொன்னது எனக்கும் புரியவில்லை. ‘பெற்றோர்களைப் பற்றி உங்களுக்குத் தெரியுமே’ என்று சொன்ன உடனே, அதை நிரூபிக்க நீங்கள் ஏதாவது சொல்ல வேண்டுமே. சற்றுத் தயக்கத்தோடு ஷௌகத் எங்களைப் பார்த்தார்.

‘மகள் இறந்து போனதில் அவர்கள் ரொம்பக் கலவரத்தில், அதிர்ச்சியில் இருக்கிறார்கள். இது உங்களுக்கே நன்றாகப் புரியும். அவர்களுக்கு எங்களால் ஆன உதவியைச் செய்ய நாங்கள் நினைக்கிறோம்,’ என்றேன்.

‘தவிர ஒரு நல்ல கடையை நாங்கள் கண்டுபிடித்திருப்பதாக தோன்றுகிறது. மச்சி, நம்ம வீட்டுத் தேவைகளுக்கும் ஒரு நல்ல கடை கிடைத்திருக்கிறது இப்போது,’ என்றான் ஸௌரப் என்னிடம்.

கடைக்காரர் இதை நம்பியதாகத் தோன்றியது. தலையை ஆட்டினார். அவர் தலைக்கு மேல் இருந்த அலமாரியிலிருந்து ஒரு மைக்ரோஸ்கோப்பை எடுத்து மறுபடியும் காதணிகளைப் பரிசோதித்தார்.

‘இது நிச்சயமாக எங்களுடையதுதான். கடை முத்திரை இருக்கு,’ மைக்ரோஸ்கோப்பில் குனிந்து பார்த்து விட்டுச் சொன்னார்.

‘அதனால் தான் இங்கு தேடிவந்தோம். எஸ்ஜே,’ என்றான்

மைக்ரோஸ்கோப்பை ஷௌகத் நீக்கி வைத்தார்.

‘ஆமாம். ஆனால் அவற்றை விற்ற நினைவு எனக்கில்லை. என் இரு மகன்களில் யாராவது ஒருவனாக இருக்கலாம். அல்லது முக்கிய விற்பனையாளரான என் மருமகனாக இருக்கலாம்.’

‘அவர்களைக் கேட்க முடியுமா?’ என்று கேட்டேன்.

‘இப்போது தான் பாங்க் வேலையாகப் போயிருக்கிறார்கள். சீக்கிரம் திரும்பி வருவார்கள். நீங்கள் இங்கே காத்திருக்கலாம்.’

இரண்டு மணி நேரத்திற்கு மேல் நாங்கள் ஷௌகத் நகைக்கடையில் காத்துக் கொண்டிருந்தோம். ஃபார்ச்சூனர் காரிலிருந்து மூன்று பேர் இறங்கினார்கள். இருபதுகளில், குறுந்தாடிகளில் இருந்தார்கள்.

‘ஏன் இவ்வளவு லேட்?’ என்று வாட்சைக் காண்பித்தார் ஷௌகத்.

‘ராணுவம் ரோடுகளை மூடிவிட்டது. முழு சோதனை நடக்கிறது. எல்லா இடங்களிலும் குழப்பம், போக்குவரத்து நெரிசல்,’ என்று ஒருவன் சொன்னான்.

‘என்ன எழவோ ஆகட்டும். அந்த இந்திய ராணுவத்துக்கு,’ என்றான் மற்றொருவன்.

‘சற்று மரியாதையாகப் பேசு. விருந்தாளிகள் இருக்கிறார்கள்,’ என்று சொன்ன ஷௌகத் எங்களைச் சுட்டிக் காட்டினார்.

‘ஹாய், நான் மோஷின், ஷௌகத் சித்தப்பாவின் மருமகன்,’ ராணுவத்தைத் திட்டிய அந்த இளைஞன் சொன்னான். ‘ஸாரி, உங்களைப் புண்படுத்தவேண்டுமென்று...!’

‘பரவாயில்லை. நான் கேஷவ். இது ஸௌரப்.’

‘நான் அலி. இது என் சகோதரன் சலீம்,’ என்றான் மற்றொருவன்.

‘இவர்கள் என் மகன்கள்,’ என்று சொல்லி ஷௌகத் சிரித்தார். எங்களுடைய காதணிகளைப் பற்றி ஷௌகத் அவர்களிடம் கேட்டார்.

ஒவ்வொருவராக அவற்றை உற்றுப் பார்த்தார்கள்.

‘நான் விற்றதாக எனக்கு நினைவில்லை,’ என்றான் அலி.

‘நானும் தான்,’ என்றான் மோஷின்.

‘எனக்குக் காட்டு,’ என்ற சலீம் அவற்றைக் கைகளில் எடுத்துக் கொண்டான். ‘இவற்றை எப்போது வாங்கினீர்கள்?’

‘கடந்த சில ஆண்டுகளுக்குள்,’ என்றேன்.

‘இது பழமையானதாகத் தெரிகிறது, ஆனால் அப்படி இல்லை. பழைய காஷ்மீர் டிசைனில் அதே மாதிரி நன்றாகச் செய்யப்பட்டது. ஓ, இப்போது எனக்கு நினைவுக்கு வருகிறது,’

என்றான் மோஷின்.

‘என்ன நினைவுக்கு வருகிறது?’ என்று நானும் ஸௌரபும் ஒரே நேரத்தில் கேட்டோம். எங்களுடைய அதிர்ச்சியையும் அவசரத்தையும் கண்டு எல்லோரும் எங்களைப் பார்த்தனர்.

‘அர்ரே, அந்த மனிதன் ராணுவவீரன் போல் இருந்தான். நல்ல உயரமும் பருமனுமாக விறைப்பாக இருந்தான். தன் பாட்டியின் காதணிகளைப் போல் செய்ய வேண்டும் என்றான்,’ மோஷின் சொன்னான்.

‘நீ இதைப் பற்றி பேசியது எனக்கு நினைவுக்கு வருகிறது. ஆனால் அந்த ஆள் யாரென்று எனக்கு நினைவில்லை,’ என்றான் அலி.

‘எனக்கு நினைவு இருக்கிறது,’ என்ற மோஷின், ‘அவன் முழுவதும் பணமாகவே கொடுத்தான். கேஷ் விற்பனைப் புத்தகத்தை என்னிடம் கொடு,’ என்றான்.

டிராயரைத் திறந்தான் அலி. கார்பன் காபியுள்ள நோட்டுப்புத்தகத்தை எடுத்தான். பிங்கும் வெள்ளையுமான காகிதங்களில் கிறுக்கலான கையெழுத்துக்கள் காணப்பட்டன. மோஷினிடம் அதைக் கொடுத்தான்.

‘இதன் விலை மூன்று லட்சத்திற்கு மேல் இருக்கும். அதிக மதிப்புள்ள விற்பனைகளில் என் கையெழுத்தில் எழுதியவற்றை நான் தேடிப் பார்க்கிறேன்,’ என்றான் மோஷின். வேகமாகப் பக்கங்களைப் புரட்டினான். ஒரு நோட்டு முடிந்ததும் இரண்டாவது நோட்டை அலி அவனிடம் கொடுத்தான்.

ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு ஒரு குறிப்பிட்ட பக்கத்தைப் பார்த்துவிட்டு தன் விரல்களால் சுட்டிக் காட்டினான்.

‘ஒரு வருஷத்துக்கு முன்னால்,’ என்றான் மோஷின். நோட்டுப் புத்தகத்தை ஷௌகத்திடம் காண்பித்தான். அந்தப் பக்கத்தில் இதே காதணிகளின் டிசைன் வரையப்பட்டிருந்தது.

‘சரி தான்,’ என்றார் ஷௌகத். ‘ஆமாம், பார், ரூ. 3,80,000. வைரம், நீலம், குந்தன், 24 கேரட் தங்கம். ரூ. 2,00,000 முன்பணமாக கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு வாரத்திற்குப் பிறகு மே மாதம் 28-ம் தேதி 2017ல் டெலிவரி. மிச்சத்தொகையும் கொடுத்தார். எல்லாம் பணமாக.’

ஷௌகத்தைக் குழப்பமாகப் பார்த்தேன்.

‘போன வருஷம் மே மாதம் யாரோ வாங்கியிருக்கிறாரா?’

‘ஆம்,’ என்றான் மோஷின்.

‘யார்?’

மோஷின் நோட்டுப் புத்தக்ததை மறுபடியும் பார்த்தான். தலையை அசைத்தான்.

‘அவர் பெயர் சொல்லவில்லை.’

‘தொடர்புக்கு ஏதாவது விலாசம் உண்டா?’

‘இல்லை. அவர் முன்பணம் கொடுத்தார். தற்காலிக ரசீது கொடுத்தோம். ஒரு வாரத்திற்குப் பிறகு வந்து மீதித் தொகையைக் கொடுத்துவிட்டுக் காதணிகளைப் பெற்றுக் கொண்டார்.’

‘இவ்வளவு விலை உயர்ந்த பொருட்களை வாங்குபவர் பெயர் கூட தெரியாமலா விற்பீர்கள்?’ என்றான் ஸௌரப்.

‘எங்களுடைய வியாபாரத்தில் எல்லா வகையான வாடிக்கையாளர்களும் உண்டு. சிலர் எங்களுடைய குடும்ப நண்பர்களாவார்கள். மற்றவர்கள் எதையும் சொல்லாமல் இருப்பார்கள். நாங்கள் அதற்கு மதிப்பு கொடுக்கிறோம்,’ என்றார் ஷௌகத், தன் வெண்தாடியைத் தடவிக்கொண்டு.

‘அவன் எப்படி இருந்தான் என்று சொல்ல முடியுமா?’ என்றேன்.

‘சொல்கிறேன். அழகாக இருந்தான், காஷ்மீரி போல் இருந்தான். நல்ல கோதுமை நிறம். 6 அடி உயரம் இருப்பான், அவன் ராணுவ வீரன் போல் இருந்தான் என்று சொன்னேனே?’

‘அவன் சீருடையில் வந்தானா?’ என்று கேட்டான் ஸௌரப்.

‘இல்லை. அவன் நடை, பாவனை தான். அவர்களுக்கென்று ஒரு தனி தோரணை உண்டு, இல்லையா?’ மோஷின் சொன்னான்.

‘இப்போது நினைவுக்கு வருகிறது. இரண்டாவது முறை வந்தபோது அவன் பச்சை நிற ராணுவ வண்டியில் வந்தான்,’ என்று முடித்தான்.

ஸௌரப் கடையைச் சுற்றிப் பார்வையைச் செலுத்தினான். மேற்கூரையில் கேமராக்கள் இருப்பதைப் பார்த்தான்.

‘ஷௌகத் பாய், போன வருஷ மே மாதத்திய சிசிடிவி பதிவுகள் உங்களிடம் இருக்குமா?’ என்று ஸௌரப் கேட்டான்.

‘இல்லை,’ என்றான் சலீம். ‘அந்தப் பதிவுகள் இரண்டு மாதங்களுக்கு மட்டும் தான் இருக்கும். ஏன், ஏதாவது பிரச்சனையா?’

‘ஆம். இருக்கிறது தான். ஆனால் ரொம்ப முக்கியமானது ஒன்றும் இல்லை. அந்த ஆளைப் பார்க்க முடியுமோ என்று

நினைத்தேன்...’

‘ஸாரி, 60 நாட்களுக்கு மேல் ஆனவற்றை கேமரா அழித்துவிடுகிறது,’ என்றான் சலீம்.

‘தேங்க்யூ,’ என்றேன் கைகளைக் கூப்பி வணக்கம் தெரிவித்தேன். ஸௌரப்பும் நானும் கிளம்பினோம்.

‘எங்களிடமே நீங்கள் திரும்பக் கொடுத்தால் நான் ஒரு நல்ல விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்,’ என்றார் ஷௌகத்.

❖

ஸௌரப் திரும்பிப் படுத்தவுடன் வலுவற்று இருந்த அந்தப் படகு வீட்டின் கட்டில் கிறீச்சிட்டது. அப்போது நடுநிசி. என் லேப்டாப்பை மடியில் வைத்துக் கொண்டு இலக்கில்லாமல் இணையதளங்களை மேய்ந்தேன்.

‘ரூ.3,80,000 மதிப்புள்ள காதணிகள். யார் இவ்வளவு உயர்ந்த பரிசைத் தருவார்கள்? என்றான் ஸௌரப்.

‘பெற்றோர். ஆனால் அவர்களில்லை.’

‘அல்லது ஒரு காதலன்?’ கேட்டான் ஸௌரப்.

‘ரகு? அவனாக இருந்தால் அவனிடமே கேட்க என்னால் முடியும்,’ என்றேன்.

‘ஆனால்,’ நல்ல வெள்ளை நிறமாக 6 அடி உயரத்தில் கட்டுமஸ்தான உடலுடன்’ என்று மோஷின் சொன்னானே? அவை ரகுவுக்குப் பொருந்தாதே? என்றான் ஸௌரப்.

‘அழகாக வேறு இருந்தான் என்றானே. அப்போ நிச்சயமா அது ரகு இல்லை.’

‘சிகந்தர்?’ என்றான் ஸொரப்.

‘இவ்வளவு விலை உயர்ந்த பரிசை யாரும் சகோதரிக்குக் கொடுப்பதில்லை. தவிர சிகந்தர் ஒல்லியாகக் குட்டையாக இருப்பான். மோஷின் சொன்னது போல் இல்லை!’

‘ஒரு வேளை சிகந்தர் யாரையாவது அனுப்பியிருக்கலாம்.’

‘ஏய், ரகு பணக்காரன். ஏன் வேறு யாரையாவது அனுப்பியிருக்கக் கூடாது?’

‘என்னால் அதுபற்றி சுலபமாக ரகுவுடன் பேசித் தெரிந்து கொள்ள முடியும்.’ போனை எடுத்து வாட்ஸ் அப் மூலம் ‘ஹை’ என்று ரகுவிற்கு அனுப்பினேன்.

‘ஹே, கேஷவ், ரொம்ப நாளாயிற்று. என்ன விஷயம்?’

ஒரு நிமிஷத்திற்குள் அவன் பதில் அனுப்பினான்.

‘உன்னிடம் ஒரு விஷயம் கேட்க வேண்டும்!’

‘சொல்,’ என்றான் ரகு.

‘எங்கே இருக்கிறாய்?’

‘நான் சான்பிரான்ஸிஸ்கோவில். இப்போ தான் வந்தேன்.’

‘ஓ. ரொம்பத் தொலைவில்.’

‘ஆமாம். ஒரு முதலீட்டாளர் சந்திப்புக்காக வந்திருக்கேன்?’

‘இப்போது அங்கே நேரம் என்ன?’ என்றேன்.

‘ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு பதில் அனுப்பினான்.’

‘பகல் 2 மணி.’

‘ஸாரி, பிஸியாக இருக்கே போல் உள்ளதே.’

‘பரவாயில்லை. கொஞ்ச நேரம் பேசலாம். என் மீட்டிங் இன்னும் தொடங்கவில்லை.’

‘ஸராவுக்கு அதிக விலையான பரிசு ஏதாவது கொடுத்த நினைவு இருக்கா?’

‘இல்லையே. அவளுக்கு விலை மதிப்புள்ள பொருள் பிடிக்காது. ஒரு ஐ போன் கொடுத்தேன். அது நினைவு இருக்கு.’

‘எப்போ?’

‘அவளுடைய கடைசி பிறந்த நாள் அன்று. ஏன், என்ன ஆயிற்று. அந்த வழக்கில் இன்னும் வேலை செய்கிறாயா?’

‘கொஞ்சம். அதிகமில்லை. அப்போ நகை ஒன்றும் இல்லை, சரியா?’ என்றேன்.

‘இல்லவே இல்லை. போன் தொடர்பான ப்ளூ டூத் ஸ்பீக்கர், ஹெட்போன்கள் போன்றவை தான்.’

‘தேங்க்ஸ்,’ என்று டைப் செய்தேன்.

தோற்றுப் போனவன் என்று நினைத்துக் கொண்டேன்.

‘ஏன்? என்னாயிற்று?’ என்று அவன் அனுப்பினான்.

‘ஸௌரபிடம், ‘என்ன பதில் அனுப்புவது?’ என்றேன்.

‘அவள் பெற்றோர்கள் அந்தக் காதணிகளைப் பற்றிக் கேட்டார்கள் என்று சொல்,’ என்றான் ஸௌரப்.

‘அவர்களே போனில் அவனிடம் கேட்டிருப்பார்களே? பொறு. எனக்கு ஒரு ஐடியா தோன்றுகிறது!’

திரும்பவும் ரகுவிற்கு டைப் செய்தேன்.

‘அவளுடைய ஹாஸ்டல் ஃபிரண்டு ஸனம் ரஸ்டான் என்னைக் கூப்பிட்டாள். பரிசாகக் கிடைத்த ஒரு ஜோடி காதணிகளை ஸரா வைத்திருந்தாள் என்றாள்.’

‘அப்படியா?’ என்றான் ரகு. ‘நான் கொடுக்கவில்லை. வேறு யாராவது தோழி கொடுத்திருக்கலாம்.’

‘அவை ரொம்ப விலை உயரந்தவை. மூன்று லட்சத்திற்கு மேல் இருக்கும், அவற்றின் விலை.’

அவற்றை போட்டோ எடுத்து அவனுக்கு அனுப்பினேன். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு அவன் பதிலனுப்பினான்.

‘ஏகப்பட்ட வேலைப்பாடுகள் இருக்கின்றன. நண்பர்கள் யாரும் கொடுத்திருக்க முடியாது.’

‘அது சரிதான்!’

‘ஒரு வேளை அவளுடைய பெற்றோர்கள்? அல்லது யாராவது ஒரு உறவினர்?’

‘இருக்கலாம். அவளுடைய பெற்றோர்களிடம் கொடுத்து விடுகிறேன்,’ என்றேன்.

‘உன்னால் முடியுமா? அப்படியானால் தயவு செய்து செய்,’

‘நிச்சயமாக. தேங்க்ஸ். எப்போ திரும்பி வருகிறாய்?’

‘இன்று பிற்பகலுக்கு மேல். வேலை ரொம்ப அதிகம் இருக்கு, உடனே திரும்பணும்.’

‘இப்போதானே அங்கு போய் சேர்ந்திருக்கே?’

‘ஆமாம். 6 மணி நேரத்திற்காக மட்டும் வந்தேன். உடனே திரும்பியாகணும்.’

‘ஒரு சில மணி நேரங்களுக்காக இந்தியாவிலிருந்து அமெரிக்கா போவது என்பது பைத்தியம் பிடிக்கச் செய்யும் டிரிப், இல்லையா?’ என்றேன்.

‘ஓ, பயங்கர வேலை பளு, அதற்கிடையில் இந்தப் பயணம் வேறு - ஒரு சில மணி நேரங்களுக்காக இந்தியாவிலிருந்து அமெரிக்கா போவது என்பது.’

‘எனக்கு இது பழக்கமாகிவிட்டது. எப்போதுமே இப்படிப் பயணம் செய்து கொண்டிருக்கிறேன். சரி, என் மீட்டிங்கிற்கு நான் தயாராக வேண்டும்.’

‘ஓகே. ஜாக்கிரதை!’

‘ஹே, கேஷவ்,’ என்று சில நொடிகளுக்குப் பிறகு ரகு அனுப்பினான்.

‘சொல்.’

‘தேங்க்யு. முன்னாடி நான் ரொம்ப மோசமாக உன்னைப் பத்தி நினைத்திருந்தேன். ஆனால், இப்போ தேங்க்யூ உதவி புரிவதற்காக; இப்போது வரை நீ செய்ததற்கும் செய்து கொண்டிருப்பதற்கும் நன்றி.’

‘நான் எதுவும் செய்யவில்லையே. உண்மையைச் சொல்வதானால் நான் இதுவரை மோசமாகத் தோற்றிருக்கிறேன்!’

‘நீ எப்போதுமே முயற்சி செய்து கொண்டிருக்கிறாய். வெளிப்படையாகச் சொல்வதானால் இப்பவும் நான் ரொம்ப பயந்து போயிருக்கிறேன். என் பெற்றோர்களும் கதிகலங்கிப் போயிருக்கிறார்கள். நான் என்ன செய்கிறேன் என்பதைத் தொடர்ந்து கண்காணித்து வருகிறார்கள். ஆனால் நீ பயப்படவில்லை. நன்றி.’

‘ஒன்றும் பிரச்சனையில்லை. நானும் உன்னைத் தவறாகத்தான் எடை போட்டேன். நீ ஒரு நல்லவன்,’ என்றேன்.

‘நண்பா, நன்றி வாழ்த்துக்கள்.’

என்ன பதில் அனுப்புவது என்று எனக்குப் புரியவில்லை. சிரிப்பு முகங்கள் (ஸ்மைலி) அனுப்பினேன்.

‘கட்டித் தழுவி, முத்தமும் அனுப்புவாயா அவனுக்கு?’ என்றான் ஸௌரப் என் பதிலைப் பார்த்து.

என் போனைத் தள்ளி வைத்துவிட்டு, ‘என்ன?’ என்றேன்.

‘என்ன நடக்கிறது இங்கே - இரண்டு மாஜி காதலர்களுக்கிடையே காதல் திருவிழாவா?’

‘உன்னை விட்டுவிட்டு ரகுவுடன் பேசுகிறேன் என்று உனக்குப் பொறாமையாக இருக்கிறதா, நண்பா?’ என்றேன்.

‘என்ன உளர்றே?’ என்றான்.

‘உனக்குப் பொறாமை இருக்கு நண்பா. நீ என் கோலு, எனக்கு உன் மேல் பிரியம் அதிகம்!’

‘வாயை மூடு. விஷயத்துக்கு வா. ரகு கொடுக்கவில்லையென்றால் ஸராவுக்கு அந்தக் காதணிகளைக் கொடுத்தது யார்?’ என்றான்.

என் தலையைச் சொறிந்து கொண்டேன்.

‘எனக்குத் தெரியவில்லை. இப்போ நாம் என்ன செய்வது?’

‘ஸக்ஸேனா ஒருவேளை கொடுத்திருப்பானோ?’

‘கிண்டல் செய்கிறாயா? இவ்வளவு விலை உயர்ந்தவற்றை வாங்கும் அளவுக்கு எந்த ஐஐடி பேராசிரியரும் பணக்காரரும் அல்ல, காதல் வயப்பட்டவரும் அல்ல.’

‘அப்படியானால்!’ கேட்டான் ஸௌரப்.

‘ஸராவின் வாழ்க்கையில் யார் இருக்கிறார்கள் என்பதை நாம் கண்டுபிடிக்க வேண்டும், எப்படியாக இருந்தாலும்.’

என் போனில் இன்ஸ்டாகிராமைத் திறந்து ஸௌரபிடம் காண்பித்தேன்.

‘என்ன?’ என்றான்.

‘மறுபடியும் அவளுடைய சமூக வலைதளப்பக்கங்களைப் பார்க்க வேண்டும் என்றாயே, நாம் அதைச் செய்யலாம்,’ என்றேன்.

‘ராணுவ வீரன் போல் உயரமாகக் கட்டுக்கோப்பான உடல் உடையவன் யார் இருக்கிறான் என்று தேடு.’

‘சரி, ஸார்,’ என்று ஸௌரபுக்கு ஒரு ஸல்யூட் அடித்தேன். ‘வெள்ளை நிறமாகவும் அழகாகவும் கூட.’

‘உன்னைவிட அழகானவன் வேறு யார். கேஷவ், மச்சி, சரியா?’ என்று சொல்லிச் சிரித்தான் ஸௌரப்.

‘ரொம்ப நக்கலா? கவனத்தைச் செலுத்து. இந்தத் தகவல்களை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.’

ஸராவின் போஸ்டுகளை ஒவ்வொன்றாக ஸௌரப் பார்த்தான்.

‘சரி, அவள் இறப்பதற்கு முன்னால் போட்ட கடைசி போஸ்டு - ஹைதராபாத் ஹாஸ்டலில் இருக்கும் ரகுவின் போட்டோ.’

‘அதற்கு என்ன தலைப்பு போட்டிருக்கு?’ என்றேன் நான்.

‘பிறந்த நாட்கள் மகிழ்ச்சியானவை அல்ல. நீ அடிபட்டுத் தொலைவில் இருக்கும் போது. என்னுடைய ரகு, உன்னைப் பார்க்காமல் வருத்தமாக இருக்கிறேன்,’ என்றான் ஸௌரப்.

நான் தலையசைத்தேன்.

‘உண்மையில் நாம் ஸராவின் போஸ்ட்டுகளைத் தொடக்கத்திலிருந்து பார்க்கலாம். அவள் இன்ஸ்டாகிராமில் இணைந்ததிலிருந்து. இல்லாவிட்டால் நமக்கும் எதுவும் புரியாது,’ என்றேன்.

‘ஓகே,’ என்ற ஸௌரப், ‘செப்டம்பர் 13, 2013-ல் அவளுடைய கணக்கு ஆரம்பித்து முதல் போஸ்டு செய்திருக்கிறாள்.’

‘நாங்கள் அப்போது ஒன்றாக இருந்தோம். அது

எங்களுடைய படமா?’

‘அது ரூபி; அவளுடைய நாயுடன் இருக்கும் படம்,’ என்றான்.

‘அப்படியா, அடுத்தது?’

‘ஒரு மாதத்திற்குப் பிறகு, காஷ்மீர் பற்றி அவள் எழுதிய ஒரு பிளாக்.’

‘அதன் தலைப்பு என்ன?’

**‘**காஷ்மீரில் அமைதி திரும்புவதை நாம் ஏன் விடவே கூடாது**.** அதைத் திறப்பதற்கு வேறு ஒரு இடத்திற்குச் செல்ல வேண்டும். தேடட்டுமா?’ ஸௌரப் கேட்டதற்கு தலையசைத்து மறுப்பு தெரிவித்தேன்.’

‘அடுத்த போஸ்டு என்ன?’

‘மேலும் ஒரு மாதத்திற்குப் பிறகு, அவளுடைய ஹாஸ்டல் அறையின் படம். அதன் தலைப்பு ‘அறை எண் 105-ல் இருக்கும். பெண் - என்னுடைய இடம் - என்னுடைய உலகம்.’

‘ஓ. எனக்கு நினைவுக்கு வருகிறது. ரொம்ப அழுத்தத்தோடு, அப்போது தான் ஆல்வாரிலிருந்து அவள் திரும்பியிருந்தாள்.’

‘பிறகு 2014 ஜனவரி முதல் தேதி ஒரு மேற்கோள்’- ‘எதையாவது இழந்தால், அதை இழப்பு என்று எண்ணாதே நீ பயணம் செய்ய வேண்டியதற்கான பாதையில் உன்னைச் செலுத்த உனக்குக் கிடைத்த பரிசு என்று ஏற்றுக் கொள்,’ என்று படித்தான் ஸௌரப்.

‘சரிதான். அதற்கு முந்தைய நாள் இரவு தான் - புது வருஷத்திற்கு முந்தைய நாள் - நாங்கள் பிரிந்தோம், நினைவிருக்கிறதா?’ என்றேன்.

‘அடுத்த போஸ்டு ஏப்ரல் 2014-ல் ஒரு மீட்டிங்கில் அவள் இருக்கும் படம். அதற்கான வாசகம், ‘உலக செயற்கை அறிவுத்திறன் மாநாட்டில் வியப்பும் உத்வேகமும் அடைந்தேன்!’

‘அங்குதான் அந்தக் களவாணி ரகுவை அவள் சந்தித்தாள். எனக்குத் தெரியும்.’

‘அந்தக் களவாணியை இப்போ உனக்குப் பிடிக்கும், அவனுக்கு ஸ்மைலிகள் கூட அனுப்புவாய் என்று நான் நினைத்தேன்!’

‘வாயை மூடு, ஸௌரப். இதற்குப் பிறகு என்ன?’

‘அடுத்த மாதம், ஒரு படம், ரகுவும் அவளும் மற்றுமொரு மீட்டிங்கில்.’

‘அதன் தலைப்பு என்ன?’

‘என் நல்ல நண்பன் ரகு. ஐஐடிக்குப் பிறகு தன்னுடைய சொந்த ஆர்டிபிஸியல் இன்டெலிஜென்ஸ் கம்பெனியை ஆரம்பித்திருக்கிறான். இவ்வளவு ஊக்கம் அளிக்கக் கூடிய ஆட்கள் இருக்கும் அதே காலேஜில் படிப்பதற்கு அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்.’

‘நல்ல நண்பனா? பேமானி!’ என்றேன்.

‘மச்சி, இது ஊக்கத்தைத் தருவதாக இருக்கிறது. சொந்த ஏஐ கம்பெனியை ஆரம்பித்திருக்கிறானே!’

அவனுடைய பெரியதாக இருந்த பின்பக்கத்தை என் காலால் உதைத்தேன்.

‘ஆ, வலிக்கிறதே. சரி அடுத்த போஸ்டு - இரு ஜோடி பாதங்கள் உள்ள படம், பீச்சில். சேர்ந்து பயணம்.’

‘அப்படியென்றால் இப்போது தான் அதைச் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். அவை ஸரா மற்றும் ரகுவின் பாதங்கள் தாம். உடல் உறவுக்குப் பிறகு இருக்கலாம்.’

‘மச்சி, கவனத்தைச் சிதறவிடாதே. நாம் எதையோ கண்டு பிடிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறோம்.’

‘ஸாரி,’ என்றேன். ஒரு பெருமூச்சுவிட்டேன். ‘இது ரொம்ப கஷ்டமாக இருக்கு. சரி, மேலே பார்!’

‘கொஞ்ச நாட்களுக்கு ஒன்றுமில்லை. பிறகு ஜெய்பூர் இலக்கிய விழாவிலிருந்து படங்கள்.’

‘அங்கு போக அவளுக்கு எப்போதுமே விருப்பம். நாங்கள் கூட ஒரு முறை சென்றோம்.’

‘அடுத்தது 2015, பிப்ரவரி 9-ல்.’

‘அது அவள் பிறந்தநாள்!’

‘ஆம். அதைத்தான் சொல்கிறது - பிறந்த நாள் ஸ்பெஷல் ரொம்ப பிஸி. ரகசிய பயணத்திட்டம் கோவாவுக்கு ‘பே’யின் (bae) பிளான்.’

ஸ்மைலிகள், முத்தம் கொடுக்கும் இமேஜ்கள், அணைக்கும் இமேஜ்கள். பல ஆச்சரியக் குறிகள்!

‘காதலில் இருக்கும் முட்டாள்கள். மேலே பார்!’

‘கேரளாவில் குடும்பத்தோடு கழித்த சில போஸ்டுகள். பிறகு காஷ்மீர் கைவேலைப்பாடுகள் பற்றிய ஒரு ப்ளாக். அதற்குப் பிறகு பெங்களூர் இலக்கிய விழா படங்கள்!’

‘பிறகு?’ என்றேன்.

‘சரி, இதைப் பார். 2016- பிப்ரவரி 9. ஒரு பரிசுப்பெட்டி. சாக்லேட்டுகள், ஒயின், பிஸ்கட்டுகள், ப்ளூடூத் ஹெட்போன்கள், என்னை வியப்பில் மூழ்கடித்து என்னை மறுபடியும் கெடுக்கிறான்.’

‘மச்சி, ரகுவை ஏன் அவள் ‘பே’ (bae) என்கிறாள்?’

‘காதலனைச்சிலர் அப்படி அழைப்பார்கள்’

‘பே? கடுமையாகச் சொல்வது போலில்லை?’

‘ஹிந்தியில் மட்டும் தான். அது சரி, அடுத்த போஸ்டு என்ன?’

2016 ஆகஸ்டு 15, மற்றுமொரு காஷ்மீர் ப்ளாக் படம். காஷ்மீரில் உள்ள ராணுவ கேம்பிலிருந்து சிறப்புத் தகவல் சுதந்திர தினத்தன்று.‘’

‘நிறுத்து. புது தளத்தில் அந்த ப்ளாக்கைத் திறந்துபார்!’

‘ஸராவின் பள்ளத்தாக்கு பற்றிய நினைவுகள்’ என்ற தலைப்பிலிருந்த வலைப் பக்கத்தைப் பார்த்தான் ஸௌரப். அதன் பின்னணியில் பனிமூடிய சிகரங்கள் தெரிந்தன.

காஷ்மீரிலுள்ள பாரமுல்லா மாவட்டத்திலுள்ள ஒரு ராணுவ கேம்பிற்கு ஸரா போவதை அந்த வலைப்பக்கம் விவரித்தது. அந்தப் பகுதி ராணுவ கமாண்டரின் அனுமதியைப் பெற்று பல்வேறு சேவைகளில் ஈடுபட்டுள்ள ராணுவ வீரர்களை அவள் பேட்டி கண்டாள். தங்களுடைய தினசரி வேலைகள், சிறப்புப் பணிகள், மீட்டெடுக்கும் பணிகள், பொதுவாக அந்தப் பள்ளத்தாக்குப் பகுதியைப் பாதுகாப்பாக வைப்பது - போன்றவை. அவர்களில் ஒருவன் சொன்னான், ‘இது கடுமையான பணி. ஆனால் அந்தப் பகுதியைச் சார்ந்த மக்களின் அவமதிப்பையும் விரோதத்தையும் எதிர்கொள்வது தான் மிகவும் மோசமானது.’

அந்த வலைப்பக்கத்தில் கேம்ப் தொடர்பான சில படங்களும் இருந்தன. மிகப் பிரமாதமான சூரிய அஸ்தமனத்தைப் பின்னணியாகக் கொண்ட ஒரு கேம்ப், ஒரு வீரன் டீ குடித்துக் கொண்டிருக்கிறான். ஒரு ஆபீசர் சீருடையில் தெரிகிறார். ஆபீசர் ரே-பான் கண்ணாடியை அணிந்து இந்திய தேசியக் கொடிக்கு அருகில் கர்வத்துடன் நிற்கிறார்.

‘நல்ல படம்,’ என்றான் ஸௌரப்.

‘ஆமாம்,’ என்று சொன்னேன். பிறகு சற்று நேரம் மௌனமாக இருந்தேன். அந்த ஆபீஸரின் படத்தை விரலால் தட்டினேன்.

‘ஸௌரப், யார் இது?’

‘யார்?’

‘ரே-பான் அணிந்திருக்கும் இவன். நல்ல உயரமாக இருக்கிறான், இல்லையா?’

‘ஆமாம். ஓ இவன்தான் வெண்ணிறமும் அழகும் உடையவன்?’

‘பார்க்கத் தெரிந்த முகமாக இருக்கிறதே. அவனை எங்கேயோ நான் பார்த்திருக்கிறேன்,’ என்றேன்.

‘நிச்சயமாகத்தான் சொல்கிறாயா?’ கேட்டான் ஸௌரப்.

‘நூறு சதவிகிதம் உண்மை தான்!’

‘ஸராவுடனா?’

‘இல்லை...ஆமாம், ஸராவின் ஈமச்சடங்கின் போது பார்த்தேன். ஸஃப்தர் அங்கிள் என்னை அவமதித்தது நினைவிருக்கிறதா? இந்த ஆள் ஸராவின் அப்பாவிற்கு அருகில் நின்றுகொண்டிருந்தான். வேலையை விட்டு ஈமச்சடங்கில் பங்கேற்பதற்காக இவ்வளவு தூரம் வந்ததற்கு அவர் அவனுக்கு நன்றி சொன்னார்.’ நான் தீவிரமாக யோசித்தேன்; ‘ஃபையஸ். ஆம் அவன் பெயர் ஃபையஸ்.’

‘இந்தப் பெயரை நீ முன்னால் கேட்டிருக்கிறாயா?’

‘ஆமாம். ஸரா ஒரு முறை அதைச் சொல்லியிருக்கிறாள். அவன் கேப்டன் ஃபையஸ்கான். பள்ளியில் அவன் ஸராவுக்கு ஸீனியர். அவர்கள் குடும்ப நண்பர்கள்.’

ஸௌரப் ராணுவ ஆபீசரின் படத்தைப் பெரிதாக்கிப் பார்த்தான்.

‘அவன் அவற்றை வாங்கியிருக்கலாமோ?’

‘ஷௌகத் ஜவல்லர்ஸ் பார்த்தால் உறுதிபடுத்துவார்கள்!’ என் போனிலிருந்து ஸௌரப் அந்தப் படத்தை போட்டோ எடுத்தான்.

ஸராவின் இன்ஸ்டாகிராம் பக்கத்திற்குத் திரும்பிப் போனான் ஸௌரப். ‘அந்தப் பக்கத்திற்குப் பிறகு கராச்சி இலக்கிய விழாவின் போட்டோக்கள் உள்ளன,’ என்றான்.

‘அவற்றை நம் ஏற்கனவே பார்த்துவிட்டோம்.’

‘அதற்குப் பிறகு 2017 பிப்ரவரி 9-ந் தேதி அவள் பிறந்த நாள் வரையில் வேறு ஒன்றுமில்லை. பிறகு ஐபோன் 7 ப்ளஸ் படம் இருக்கிறது.’

‘ரகு அவளுக்கு தான் கொடுத்ததாகச் சொன்னது,’ என்றேன். ஸௌரப் அந்தப் படத்தைப் பெரிதாக்கிப் பார்த்தான்.

‘என்ன செய்கிறாய்?’

‘நல்ல போன். எவ்வளவு ஜிபி சேமிப்பு இருக்கும் என்று பார்த்தேன்.’

‘நிஜமாகத்தான் சொல்கிறாயா, கோலு. வேலையில் தீவிரம் காட்டு!’

‘ஸாரி, அடுத்தது 2017, ஏப்ரல் 3. ஒரு படகு வீட்டிலிருந்து எடுக்கப்பட்ட உதயசூரியன் படம். அதன் ஹேஷ் டேக் ‘ஓட்டத்தோடு செல்கிறேன்!’

‘வியப்பாக இருக்கிறதே. அதற்கு அப்புறம்?’

‘அதற்குப் பிறகு ஆறு மாதங்கள் வரை அவள் ஒன்றையும் போஸ்டு செய்யவில்லை. 2017 நவம்பரில் ஒரு மேற்கோளின் படம் - ‘சில ஞாபகங்கள் எப்போதும் உள்ளன’ என்பது தான் கடைசி போஸ்டு.’

‘மேற்கோள்களின் மீது ஸராவுக்கு ரொம்ப விருப்பம்,’ என்று சொல்லி பெருமூச்செறிந்தேன். அவளுடைய புன்முறுவல் பூத்த முகம் மனதில் தோன்றியது. அவள் நினைவு என்னைச் சோகத்தில் ஆழ்த்தியது. என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு, ‘பிறகு என்ன இருக்கு?’ என்றேன்.

‘2017-ன் கடைசி நாள் - புத்தாண்டுக்கு முந்திய தினம். அவள் ஒரு கறுப்புக்கலர் புடவையில் இருக்கிறாள். ஓ, அப்போதுதான் நீ அவளை சந்தனுடைய மொட்டை மாடியிலிருந்து கூப்பிட்டாய். அந்த இரவு நடந்த டிராமாவெல்லாம் நினைவிருக்கிறதா?’

‘துரதிருஷ்டவசமாக எல்லாமே நினைவு இருக்கிறது. மேலே பார்!’

‘எதுவுமில்லை. அதற்குப் பிறகு அவளுடைய கடைசி போஸ்டு - பிளாஸ்டர் கட்டு போட்ட ரகுவின் கால்’ - சொல்லிவிட்டுக் கொட்டாவி விட்டான். என் போனைக் கொடுத்தான். ‘இப்போது மணி காலை இரண்டு!’

‘அந்தக் காதணிகளைப் பற்றி ஷௌகத்திடம் கேட்க வேண்டும்.’

‘உடம்பைக் கொஞ்சம் படுக்கையில் தள்ளலாம், ஷெர்லாக் ஜனாப், எப்போ விழித்துக் கொள்கிறோமோ அப்போ அதைச் செய்யலாம்.’

❖

‘அது அவன் தான்,’ என்றேன். சாப்பாட்டு மேஜையில் போனை

வைத்தேன் - ஸௌரப் பார்ப்பதற்காக.

‘அந்த வலைப்பக்கத்தில் இருந்த ராணுவ ஆபீஸரா? அவன் பெயர் என்ன?’

‘ஃபையஸ். அவன் தான் அந்தக் காதணிகளை வாங்கி இருக்கிறான். நான் மோஷினுடன் பேசியதைப்பார். நான் ஃபையஸின் போட்டோவை வாட்ஸ்அப்பில் அனுப்பியிருந்தேன்.’

ஸௌரப் என் போனைப் பார்த்தான்.

‘நிச்சயமாக அவன்தான்,’ என்று மோஷின் பதில் அனுப்பியிருந்தான்.’

‘ஓ... ஸ்கூலில் ஸராவுக்கு ஸீனியரான அவன் எதற்கு அவளுக்கு அவ்வளவு விலை உயர்ந்த காதணிகளை வாங்க வேண்டும்?’

‘தவிர, அவளுடைய காதலனுக்கு அது பற்றி ஏன் ஒன்றுமே தெரியவில்லை?’ என்றேன் நான்.

நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம். மேலே என்ன செய்வது என்று ஒரே குழப்பமாக இருந்தது.

‘நாம் ஃபையஸைப் பார்க்க முயற்சி எடுப்போம்!’

‘எப்படி?’ என்றான் ஸொரப்.

‘ஸஃப்தர் அங்கிளுடன் பேசிப் பார்க்கிறேன். அவனுடன் தொடர்பில் இருக்கலாம்.’

# அத்தியாயம் 24

‘கேம்ப் கேட்டுவரை என்னால் உங்களை அழைத்துச் செல்ல முடியும். ஆனால் 1/2 கிலோ மீட்டர் தள்ளி தான் டாக்ஸியை பார்க் செய்ய முடியும். அது ராணுவ விதி,’ என்றான் டாக்ஸி டிரைவர். ஸ்ரீநகரிலிருந்து இரண்டு மணிநேரப் பயணத்திற்குப் பிறகு நாங்கள் பாரமுல்லாவை அடைந்திருந்தோம். பாரமுல்லா ராணுவ முகாமின் நுழைவாயிலில் இன்னோவா டாக்ஸியிலிருந்து இறங்கிக் கொண்டோம். ஆலிவ் பச்சை சீருடையில் ரேபான் கண்ணாடி அணிந்திருந்த காப்டன் ஃபையஸ் எங்களுக்காகக் கேட் அருகே நின்றிருந்தான்.

‘வாருங்கள் கேஷவ்,’ என்றான். ஈமச்சடங்கில் நான் பார்த்தது நினைவில் இருந்ததை விட சற்று அதிக உயரமாக இருந்தான் - ஒரு வேளை ராணுவ பூட்சுகள் அணிந்திருப்பதால் இருக்கலாம். சட்டைப் பாக்கெட்டில் பல மெடல்களைக் குத்திக் கொண்டிருந்தான். நாங்கள் கை குலுக்கினோம். சரியாகச் சொல்வதானால் என் கையை தன் கையால் அழுத்தினான்.

ஸௌரபைப் பார்த்து, ‘இவன் உன் நண்பன், ராணுவ முகாமைப் பார்க்க ஆவலாக இருக்கிறான், சரியா?’ என்றான் ஃபையஸ்.

‘ஆம்,’ என்று தலையை ஆட்டி, ஸௌரபை அவனுக்கு அறிமுகப்படுத்தினேன். ஃபையஸின் நம்பரை ஸஃப்தரிடமிருந்து பெற்றுக்கொண்டு இந்தச் சந்திப்பிற்கு ஏற்பாடு செய்திருந்தேன். இந்திய ராணுவத்தை விரும்பும் ஒரு விசிறி ஸௌரப், காஷ்மீரில் விடுமுறையில் இருக்கும் போது ராணுவ வசதிகளை அவன் பார்க்க விரும்புவதாகச் சொல்லியிருந்தேன்.

முகாமின் வாயிலிலிருந்து சிறிது தள்ளியிருந்த விருந்தினர் சந்திக்கும் (டென்டு) ஹாலுக்கு ஃபையஸ் எங்களை இட்டுச் சென்றான். டென்டு உள்ளே அரைவட்ட மேசையைச் சுற்றியிருந்த மூங்கில் நாற்காலிகளில் உட்கார்ந்தோம். மண்தரை மீது ஒரு காஷ்மீரி கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது.

‘இதுதான் எங்களுடைய எளிமையான வாசஸ்தலம். இங்கிருந்து கொண்டு தான் நம் நாட்டைக் காப்பதற்கு நாங்கள்

முயற்சி செய்கிறோம்,’ என்றான்.

‘அதற்காக நன்றி. கேஷவ் சொன்னது போல் ராணுவத்தின் மீது தீவிர மதிப்பு கொண்டவன் நான்,’ என்றான் ஸௌரப்.

‘எங்களை மதிப்பதற்கு நன்றி,’ என்ற ஃபையஸ் தலையைச் சற்று குனிந்து வணக்கம் தெரிவித்தான். ஒரு தட்டில் உலர் திராட்சை, பாதாம் கொட்டைளோடு காஹ்வாவை எடுத்துக் கொண்டு வந்தான் ஒரு ஜவான்.

‘தயவு செய்து இதெல்லாம் வேண்டாம். ஏற்கனவே நாங்கள் உன் மேல் எங்களைத் திணித்துக் கொண்டுள்ளோம்,’ என்றேன்.

‘அதெல்லாம் ஒன்றுமில்லை. இங்கு இப்போது போர் அடிக்கிறது. ராணுவத்தில் இல்லாதவர்களை வரவேற்பது மகிழ்ச்சியாக இருக்கிறது.’

ஸரா பக்கம் நான் பேச்சைத் திருப்பவேண்டும். அதனால் காஹ்வாவை குடித்துக் கொண்டே இயல்பாகக் கேட்டேன்.

‘இந்த இடத்தைத் தான் ஸரா தன் வலைப்பக்கத்தில் குறிப்பிட்டிருந்தாளா?’

‘ஆமாம்,’ என்றான் ஃபையஸ். ‘அவள் ஆத்மா சாந்தியடைய கடவுள் அருள் புரியட்டும். என்ன புத்திசாலித்தனமும் நேர்மறையான குணங்களும் கொண்டவள் அவள்.’

‘அவளுடன் பள்ளியில் படித்தாயா?’ என்று கேட்டேன்.

‘நான் அவளுக்கு ஸீனியர். அவர்கள் குடும்ப நண்பர்கள்!’

‘ஈமச்சடங்கின் போது நான் உன்னைப் பார்த்தேன். நாம் பேச வில்லை. நான் ஸராவின் அப்பாவிடம் பேச வந்தபோது நீ அவருடன் இருந்தாய்.’

‘ஆமாம். எனக்கும் உன்னை நினைவில் இருக்கிறது. என்ன சோகமான நாள் அது,’ என்றான். ஃபையஸ் அவனுடைய குரலில் பாசாங்குத்தனம் இருக்கிறதா என்று பார்த்தேன், ஆனால் கண்டுபிடிக்க முடியவில்லை. கூலிங்கிளாஸ் அவன் கண்களை மறைத்திருந்தது. அவனை ஆழம் காண்பது சிரமமாக இருந்தது.

மேலும் சிறிது காஹ்வா குடித்தேன். என் வலது கன்னத்தைத் தேய்த்தேன் - நாங்கள் ஏற்கனவே தீர்மானித்தபடி. அது ஸௌரபுக்கு ஒரு சமிக்ஞை - அவன் டாய்லெட்டுக்குப் போவதாகக் கூறிவிட்டுக் கிளம்பினான்.

‘நானும் ஸராவும் காதலில் இருந்தோம் என்பது உனக்குத் தெரியும் தானே?’ என்றேன், ஸௌரப் வெளியேறியவுடன்.

‘ஆம்,’ என்றான் ஃபையஸ். ‘அந்த நேரத்தில் நானும் அவளும்

அவ்வளவாகத் தொடர்பில் இல்லை.'

'எப்போ அவளைக் கடைசியாகச் சந்தித்தாய்?' கேள்வி கேட்கும் தோரணையில் இல்லாமல் ரொம்ப இயல்பான குரலில் கேட்டேன்.

'ஓ, அது கூட எனக்கு நினைவில்லை. ஒரு வருஷத்துக்கு முன்னால், ஒரு வேளை டெல்லியில் அவளுடைய வீட்டில் இருக்கலாம்!'

'நீ அதற்குப் பிறகு அவளைப் பார்க்கவில்லையா? அவள் இறந்ததை மட்டும் தான் கேள்விப்பட்டாயா?'

'எப்போதாவது ஒன்றிரண்டு முறை ஹலோ சொல்லியிருக்கலாம். பெரிதாக ஒன்றுமில்லை. ஏன் கேட்கிறாய்?'

நான் தலையை ஆட்டினேன்.

'நான் இன்னும் அதிர்ச்சியில் இருக்கிறேன். என்ன நடந்திருக்கும் என்று யோசிக்கிறேன்,' என்றேன்.

'அந்த வாட்ச்மேன், சரிதானே? பயங்கரம். இது எந்த விதமான பாதுகாப்பு?'

'ஆமாம். அது ரொம்ப பயங்கரம் தான்!'

'பெண்கள் பாதுகாப்பு என்பது ஒரு பெரிய பிரச்சனை ஆகிவிட்டது.'

நான் தலையை அசைத்தேன்.

என் பேன்ட் பாக்கெட்டில் வைத்திருந்த காதணிகள் என் தொடையில் குத்துவதை என்னால் உணர முடிந்தது. ஸௌரப் டாய்லெட்டிலிருந்து வந்துவிட்டான். நான் பேச்சை மாற்றினேன்.

'இங்கு தனிமையில் இருப்பது கஷ்டமாக இல்லையா, கேப்டன்?' என்றேன்.

'ஆமாம். கஷ்டம் தான். குடும்பங்களை எங்கள் கூட தங்க வைத்துக் கொள்ள எங்களுக்கு அனுமதி இல்லை,'

'உங்கள் குடும்பம் எங்கே இருக்கு?' கேட்டான் ஸௌரப்.

'இப்போது என் மனைவியும் குழந்தைகளும் துபாயில் இருக்கிறார்கள். என் மச்சினன் அங்கு இருக்கிறான்!'

'ஓ,' என்று சொல்லி நன்றாக நிமிர்ந்து உட்காரந்தேன். சௌரபும் நானும் பார்வையைப் பரிமாறிக் கொண்டோம்.

'என்ன?' என்று ஃபையஸ் கேட்டான்.

'ரொம்ப இளமையாகத் தெரிவதால் கல்யாணம் ஆகிவிட்டது

என்பதை நம்ப முடியவில்லை!' என்றான் ஸௌரப்.

'நன்றி, எனக்கு வயது 31. எனக்கு மூன்று வயதில் இரட்டை ஆண் குழந்தைகள்,' என்றான் ஃபையஸ் சிரித்துக்கொண்டே.

'என்னால் ஊகித்திருக்கவே முடியாது,' என்றேன்.

'ராணுவம் ஒருவரை உடல்நலத்துடன் வைக்கிறது!'

'உன் மனைவி துபாயில் வசிக்கிறாளா?'

'இல்லை. தன் சகோதரனுடன் இருப்பதற்காக ஆறு மாதங்களுக்குப் போயிருக்கிறாள். அதற்குப் பிறகு ஸ்கூலுக்குப் பிள்ளைகளை அனுப்பவேண்டும். ராணுவம் எங்களுக்கு டெல்லியில் ஒரு வீடு கொடுத்திருக்கு. அதில் தான் நாங்கள் வசிக்கிறோம்.'

'நல்லது. ராணுவ வீரர்களுக்கு நல்ல வசதிகளைச் செய்வதில் அக்கறை காட்டுகிறது,' என்றேன்.

'அர்ஜயன் விஹாரில் அது சிறிய ஃபிளாட். ஆனால் எங்களுடையது கீழ்தளம், ஒரு சிறு தோட்டத்துடன், குழந்தைகளுக்கு அது வசதியாக இருக்கு!'

'டில்லியில் தோட்டம் என்பது ஒரு ஆடம்பரம்,' என்றான் ஸௌரப்.

'ராணுவத்தில் இருப்பவர்களின் குடும்பங்களுக்கான ஒரு பெரிய குடியிருப்பு அது. எங்களுக்கு அது மிகவும் உதவியாக இருக்கு. ஸல்மா அங்குள்ள பெண்களைச் சந்திப்பாள். அவர்களுடன் இல்லாமல் எல்லையில் பணிபுரியும் கணவன்மார்களைப் பற்றி புகார் செய்து கொள்வார்கள்,' என்றான் ஃபையஸ் சிரித்தபடி.

'அடிக்கடி டெல்லி போவாயா?' என்றேன்.

'எப்போது என் பணி அனுமதிக்கிறதோ அப்போது போவேன். ஆனால் அது அதிகம் இல்லை.'

'குடும்பத்தினரை ரொம்பவும் மிஸ் பண்ணுவீர்களே,' என்று சொல்லிக்கொண்டே ஸௌரப் கை நிறைய பாதாமை அள்ளிக் கொண்டான்.

'நான் தினமும் அவர்களை மிஸ் பண்ணுவேன்,' பெருமூச்சு விட்டபடி சொன்னான் ஃபையஸ். 'ஒவ்வொரு நொடியும்.'

அவன் கண்ணாடியைக் கழற்றினான். அவனுடைய வெளிர் நிறக் கண்களில் சோகம் நிரம்பியிருந்தது. தன் மொபைல் போனை எடுத்துத் தன் குடும்பப் போட்டோவைக் காண்பித்தான். உலகின் மிக உயரமான புர்ஜ் காலிஃபா கட்டிடத்திலிருக்கும்

இரு மகன்களுடன் அவன் மனைவி நின்றிருந்தாள். மகன்கள் கைகளில் கோன் ஐஸ்க்ரீம் இருந்தது.

‘ராணுவத்தில் இருப்பது ரொம்ப கஷ்டம்,’ என்றேன்.

‘ஆமாம். கஷ்டமானதுதான். ஆனால் என் நாட்டிற்காக என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.’

இடது கையில் இருந்த கடைசி பாதாமை வாயில்போட்டுக் கொண்டான் ஸௌரப், வலது கையில் உலர் திராட்சைகளை எடுத்துக் கொண்டே, ‘உங்களுடைய பேச்சு ஊக்கமூட்டுவதாக இருக்கு!’ என்றான். ஏகப்பட்டது சாப்பிடுகிறானே என்று அவனை ஏளனமாகப் பார்த்தேன். ஆனால் அவன் அதையும் சற்றும் மதிக்கவில்லை.

‘நன்றி. தேசத்தின்பற்று மட்டும் தான், வேறொன்றுமில்லை!’ என்றான் ஃபையஸ்.

‘நாங்கள் கிளம்பவேண்டும். உங்களை ரொம்பத் தொந்தரவு செய்துவிட்டோம்,’ என்றேன்.

மூன்று பேரும் எழுந்தோம்.

‘ஒரு தொந்தரவும் இல்லை. விருந்தினர்கள் வருவது எப்போதும் மகிழ்ச்சியானது. குறிப்பாக எங்கள் பணிகளை மதிப்பவர்களை வரவேற்பது இனிமையானது. ராணுவத்தில் இல்லாதவர்களுக்கு அனுமதி உள்ள இடங்களை நீங்கள் போவதற்கு முன் நான் காண்பிக்கிறேன்,’ என்றான் ஃபையஸ்.

வீரர்களின் டென்டுகளைச் சுற்றி நடந்தோம். துப்பாக்கியால் சுடும் இடம் இருந்தது. சுற்றிப் பார்த்தபிறகு எங்களை அனுப்ப முகாம் கேட் வரையில் ஃபையஸ் வந்தான். நானும் ஃபையஸும் ஒன்றாக நடந்தோம்; எங்களுக்குச் சற்று முன்னால் ஸௌரப் நடந்தான்.

‘ஸராவின் வழக்கில் கடைசியாக என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது,’ என்றான் ஃபையஸ் என்னிடம்.

‘அதே தான். லக்ஷ்மண் சிறையில். விசாரணை இன்னும் தொடங்கவில்லை.’

‘கொலை செய்தது அவன்தானே?’ என்று கேட்டான் ஃபையஸ்.

‘சந்தேகப்படும்படியாக வேறு ஒரு நபரும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அதனால் லக்ஷ்மண் என்று தான் தோன்றுகிறது!’ என்றேன். கையைப் பாக்கெட்டில் நுழைத்தேன். விரல்கள் காதணிகளைத் தொட்டன.

‘களவாணி. அவனுக்கு ஆயுள் தண்டனை கொடுப்பார்கள் என்று நம்புகிறேன்,’ என்றான் ஃபையஸ்.

‘எந்த சமயத்திலாவது ஸரா வேறு எதையாவது பற்றி சொல்லியிருக்கிறாளா?’ என்றேன்.

கேப்டன் விறைப்பாக ஆனான். எங்கள் பேச்சில் முதல்முதலாக அவன் அசௌகரியமாக உணர்வது புரிந்தது. நொடிகளில் அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டான்.

‘ஏதாவது சொன்னாளா என்றால், எதைப்பற்றி?’

‘அவளுக்கு யாராவது விரோதிகள் என்பது போல். அல்லது ஏதாவது அபாயத்தை உணர்ந்தாளா?’

‘இல்லவே இல்லை,’ என்று ஃபையஸ் சொன்னபோது அவன் குரல் அமைதியாக இருந்தது. ‘அவள் சாதாரணமாகத்தான் இருந்தாள். வாழ்க்கையைப் பற்றி உற்சாகமாக இருந்தாள். ஏன்?’ என்று கேட்டான்

‘ஒன்றுமில்லை. நான் சொன்னது போல் நான் இன்னும் அதிர்ச்சியில் இருக்கிறேன்.’

‘நானும் அப்படித்தான். ஆனால் இந்த வாட்ச்மேன்கள் இருக்கிறார்களே, அவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டும். அவர்கள் கிராமங்களிலிருந்து வருகிறார்கள். படிப்பறிவு இல்லாதவர்கள், தனியார் பாதுகாப்பு காவலாளிகள் ராணுவ வீரர்கள் இல்லை.’

‘ஆமாம், அது சரிதான்,’ என்றேன்.

நாங்கள் முகாமின் கேட்டை அடைந்தோம். அதற்குள் டிரைவர் காருடன் அங்கு வந்தான். அதனுள் ஸௌரப் ஏறிக்கொண்டான்.

‘உனக்கு ஸிக்கந்தரை நன்றாகத் தெரியுமா?’ என்று ஃபையஸிடம் கேட்டேன்.

மறுபடியும் அவன் கண்ணாடியை அணிந்துகொண்டான்.

‘அவளுடைய மாற்றாந்தாயின் பிள்ளையையா? தெரியாது. ஸரா டெல்லிக்கு வந்த பிறகு தான் நாங்கள் அறிமுகமானோம்.’

‘அவளுக்கு அவனை ரொம்பப் பிடிக்கும்,’ என்றேன்.

‘ஃபையஸ் தோள்களைக் குலுக்கினான். ‘எல்லோரும் விரும்பக்கூடியவள் அவள். இந்த முடிவு அவளுக்கு ஏற்பட்டிருக்கவே கூடாது. சரி, உன் டிரைவர் காத்துக் கொண்டிருக்கிறான்.’

❖

‘ஏன் கரியின் மேலேயே நீ உட்கார்ந்து வெந்து கொதிக்கக் கூடாது?’ என்றேன். படகு வீட்டிலிருந்து சிறிது தொலைவிலிருந்த ஷிகாரா உணவு விடுதிக்கு வந்திருந்தோம். வெளிப்புறத்தில் சணல் பாய் விரித்து அங்கு உணவு பரிமாறப்பட்டது. ஒவ்வொரு கட்டிலுக்கும் அருகில் ஒரு அங்கீதி அல்லது கூடவே எடுத்துச் செல்லக் கூடிய ஹீட்டர் உண்டு. 3 டிகிரி செல்ஷியஸுக்கு வெகு அருகில் ஸௌரப் உட்கார்ந்திருந்தான்.

அவன் பதில் எதுவும் சொல்லவில்லை. அவன் பற்கள் படபடவென்று அடித்துக் கொண்டது.

‘சரி வா. நாம் படகு வீட்டுக்குள் போகலாம். அவர்கள் டின்னர் நன்றாக இருக்கும்,’ என்றேன்.

‘இல்லை, பரவாயில்லை. இங்கு கிடைக்கும் வஸ்வான் ரொம்பப் பிரமாதமாக இருக்கும் என்று சொன்னார்கள்!’ என்ற சொன்ன ஸௌரப் தன் கைகளில் ஊதிக் கொண்டான்.

ஸௌரப்பின் பரிதாபகரமான நிலைமையைப் பார்த்த வெயிட்டர் எங்களுக்கு இரு கம்பளிகளைக் கொண்டுவந்தான். நாங்கள் அவற்றை உடலைச் சுற்றி போர்த்திக் கொண்டோம். பத்து நிமிஷங்களுக்குப் பிறகு, பேசக்கூடிய அளவுக்கு அவன் உடலில் சூடு ஏறியது.

‘அந்த கேப்டன் பற்றி ஏதோ ஒன்று வித்தியாசமாக இருக்கு,’ என்றான்.

‘ஆமாம். ஒரு வேளை அந்தக் கம்மல்களைப் பற்றி அவன் சொல்லாததனால் இருக்குமோ? மற்றபடி ஒரு குடும்பஸ்தன், மரியாதையாக பணிவோடு, விருந்தினர்களைக் கவனிப்பவனாகத் தெரிந்தான். எல்லாம் நன்றாக இருந்தது,’ என்றேன்.

‘எப்பவாவது யாராவது ரொம்ப நன்றாக இருந்தால் அதுவே சந்தேகத்திற்குரியது தான்.’

நாங்கள் கேட்ட உணவை எடுத்துக் கொண்டு வெயிட்டர் வந்தான். அடுத்த பத்து நிமிஷங்களுக்கு எங்கள் பேச்சைச் சுத்தமாக மறந்துவிட்டான் ஸௌரப் - ஷீர்பலைப் பிய்த்துத் தின்றான், ரோகன் ஜோஷ், மேத்மாஸ், சேஃப்டு கோகுர் போன்றவற்றை வழித்துச் சாப்பிட்டுவிட்டு தட்டைக்காலி செய்தான். காஷ்மீரின் மிக உயர்ந்த விருந்து வஸ்வான் சாப்பாடு மட்டும் தான். விஸ்தாரமான வஸ்வான் விருந்தில் மூன்று டஜன்

வகை உணவுகள் உண்டு, அவற்றில் பல, இரவு முழுவதும் மிதமான நெருப்பில் சமைக்கப்பட்டவை. ஒட்டுமொத்தமாகப் பலரும் சேர்ந்து சாப்பிடக் கூடியது.

‘என் விளக்கத்தைக் கேட்க விரும்புகிறாயா?’ என்றேன்.

பதிலுக்கு ஒரு பெரிய ஏப்பம் விட்டான் ஸௌரப். ஆம் என்பதாக நான் எடுத்துக் கொண்டேன்.

‘அவனுக்கு ஸராவைப் பிடிக்கும்,’ என்றேன்.

‘காதல் மாதிரியா?’

‘ஆமாம். ஸரா காஷ்மீருக்கு அடிக்கடி வருவாள்; ஃபையஸைச் சந்திப்பாள். ராணுவம் பற்றி ஒருவலைப்பக்கம் செய்தாள்.’

‘சரி,’ என்றான் ஸௌரப்.

‘பிறகு ஒரு காட்சி, ஃபையஸுக்கு அவள் மீது காதல், ஆனால் அவள் அவனை நேசிக்கவில்லை.’

‘திரும்ப அவளும் காதலித்தாள் என்பது அதிகப் பொருத்தமாக இருக்கும். அவர்களுக்கிடையே ஒரு தொடர்பு இருந்திருக்கிறது.’

‘என்ன? எப்போ? அவள் ரகுவுடன் இருந்தாள். ஃபையஸ் கல்யாணமானவன்.’

‘ஓ, காதல் அல்லது காமம் இதெல்லாவற்றையும் பார்க்குமா? ஃபையஸ் பார்க்க அழகாக இருக்கும் ஒரு ஆள், மச்சி.’

‘ஸராவுக்கு அவனுடன், அதிலும் கல்யாணமானவனுடன் ஒரு தொடர்பா?’

அப்போது காயம் பட்ட மாதிரியான வலியை உணர்ந்தேன். அவள் ரகுவுடன் சந்தோஷமாக இருந்ததால் என்னிடம் திரும்பி வரவில்லை என்று நான் நினைத்திருந்தேன். ஆனால், நான் மட்டும் அல்ல - வேறு ஒரு ஆளுக்கும் அவள் வாழ்க்கையில் இடம் இருந்திருக்கிறது.

‘ஏனென்றால் சும்மா காதல் என்பது கொலை செய்யும் அளவுக்கு வெறியைத் தூண்டாது. ஆனால் தொடர்பு தூண்டும்.’

நான் பதில் சொல்லவில்லை. ஸரா ரகுவை ஏமாற்றி இருக்கக் கூடும் என்பதை என்னால் எளிதாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

‘கேஷவ். என்ன ஆயிற்று?’ ஸௌரப் என் காலை அசைத்தான்.

‘ஹூம், ஒன்றுமில்லை. நாம் என்ன

பேசிக்கொண்டிருந்தோம்?'

'ஸராவுக்கு கேப்டன் ஃபையஸுடன் தொடர்பு இருந்தது. நான் இதைத் திடமாக நம்புகிறேன்.'

'அப்படியானால் தொடர்பில் இருந்தபோது ஃபையஸ் அந்தக் கம்மல்களை அவளுக்குக் கொடுத்திருக்க வேண்டும்.'

'நிச்சயமாக, மற்ற விஷயங்கள் மோசமாவதற்கு முன்னால்?'

'எப்படி?'

'ஒரு வேளை ஸரா மேலும் அதிகமாக விரும்பியிருப்பாள். அவன் மனைவியிடம் சொல்லப் போவதாக அவனைப் பயமுறுத்தியிருக்கலாம்.'

'இல்லை. ஸராவுக்கு ரகு இருந்தான். அவர்களுக்குச் சமீபத்தில் தான் நிச்சயத்தார்த்தம் நடந்திருக்கிறது.'

'ரொம்ப சரி. ஒருவேளை ஸரா அதை முடித்துக் கொள்ள விரும்பியிருக்கலாம். அதற்கு ஃபையஸ் மறுப்புத் தெரிவித்திருக்கலாம்;' என்று சொன்னான் ஸௌரப், அங்கீதி கனலுக்கு மிக அருகில் கைகளை அபாயகரமாக ஆட்டிக் கொண்டே.

'ஸராவுக்கு ஒரு தொடர்பு, தன் தவறான தீர்ப்பை நினைத்து வருந்துகிறாள், திரும்பவும் ரகுவிடம் போகிறாள். கேப்டனால் இதை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. பொறாமைப்படுகிறான்!'

'அதே தான். ராணுவமுகாமில் உட்கார்ந்திருக்கிறான், சோகம், தனிமை, கோபத்தோடு!'

'அப்போது தான் அவளைக் கொல்லத் தீர்மானிக்கிறான்!'

'பிர்னி, சாஹப். இதை சாப்பிடுவதற்காக மக்கள் இங்கு கொலை கூடச் செய்வார்கள்,' என்று இனிப்புப் பிர்னியை எடுத்துக் கொண்டு வந்த வெயிட்டர் சொன்னான்.

❖

'இந்தக் கருத்து என்னவோ நல்லாத்தான் இருக்கு. ஆனா, ஃபையஸ் தான் செய்தான் என்று நம்மால் எப்படி நிரூபிக்க முடியும்?' என்றேன்.

படகு வீட்டில் சாப்பாட்டு மேஜையில் காலை உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். ஆறு ஸ்லைஸ் ரொட்டியை ஒவ்வொன்றாக எடுத்து ஆசையாக வெண்ணையைத் தடவினான்.

'நம்மிடம் அந்தக் கம்மல்கள் இருக்கிறதே,' என்றான் ஸௌரப்.

யாருக்காவது பரிசு கொடுத்தால் அது ஒரு பெரிய குற்றமா? நமக்குச் சரியான சான்று வேண்டும். பணியில் இருக்கும் ஒரு ராணுவ அதிகாரி மீது குற்றம் சாட்டுவது விளையாட்டல்ல, நம்மிடம் தக்க சான்றுகள் இல்லாவிட்டால் ரானா இதைத் தொடக்கூட மாட்டார்.'

'நாம் இப்போ என்ன செய்வது, மச்சி?' என்றான் ஸௌரப். வெண்ணைக்குப் பிறகு ஒவ்வொன்றிலும் ஜாம் தடவ ஆரம்பித்தான்.

'இவ்வளவு சாப்பிடுவதை நிறுத்துகிறாயா? போன முறை உன் எடை என்ன? தொண்ணூற்றி ஆறு கிலோவா?'

'தொண்ணூற்றி ஐந்தரை கிலோ. எப்படியானாலும் ஒரு நாளின் முக்கிய உணவு காலை உணவு தானே. அதை நன்றாகச் சாப்பிட வேண்டும்,' என்று சொன்ன ஸௌரப் ரொட்டியைச் சாப்பிடத் துவங்கினான்.

'கோலு, ஒவ்வொரு வேளைச் சாப்பாட்டையும் நீ நன்றாகத் தான் சாப்பிடுகிறாய்!'

'நீ சாப்பிடுவதே இல்லை,' என்று பெரியதாக ஒரு ரொட்டித் துண்டைக் கடித்தான்.

'என்னிடம் ஒரு திட்டம் இருக்கு. அதன் மூலம் நம்மால் தக்க சான்றுகளைப் பெறமுடியலாம். நீ மாட்டேன் என்று சொல்ல மாட்டேன் என்று எனக்குச் சத்தியம் பண்ணு.'

'சரி, அது என்ன?' ஸௌரப் இன்னொரு ரொட்டித் துண்டை எடுத்துக் கொண்டான்.

'நாம் முதலில் டெல்லிக்குத் திரும்பிப் போக வேண்டும். மேலும் இன்னும் அதிகமாக ரொட்டித் துண்டுகளை நீ சாப்பிடாமல் இருக்க வேண்டும்.'

❖

'இது ஒரு முட்டாள்தனமான திட்டம், நான் இதில் பங்கேற்க மாட்டேன்' என்றான் ஸௌரப். சீட்பெல்டுகளை நாங்கள் இறுக்கிக் கட்டிக் கொண்டோம். ஸ்ரீநகர் விமான நிலைய ஓடுபாதையில் விமானம் கிளம்பிக் கொண்டிருந்தது.

'இது ஒன்றும் அவ்வளவு முட்டாள்தனமானது அல்ல. நம்மால் இதைச் செய்ய முடியும். உண்மையாகப் பார்த்தால் இப்படி செய்தால் தான் நம்மால் சான்றுகளைச் சேகரிக்க முடியும்!'

'பணி என்றதும் நினைவுக்கு வருகிறது. நாம் அங்கு போய்ச் சேர்ந்ததும் பணி என்ற ஒன்று நமக்கு இருக்காது,' என்றான்

ஸௌரப்.

எங்களுடைய விடுமுறையை மூன்று வாரங்களுக்கு நீட்டித்திருந்தோம்.

‘என்னுடைய வயிறு கோளாறு பற்றி நீ சந்தனுக்கு ஈமெயில் அனுப்பினே தானே?’ என்றேன்.

‘ஆமாம். உள்ளூர் டாக்டரிடமிருந்து ஒரு மெடிக்கல் ரிப்போர்டு வேண்டும் என்றார். போலி கடிதத்தாளில் நான் ஒன்றைத் தயாரிக்க வேண்டும். ஸ்ரீநகரிலுள்ள ஒரு கிளினிக்கின் முத்திரைச் சின்னத்தைத் தேடவேண்டும். ஏதோ சிலவற்றைக் கிறுக்க வேண்டும். சந்தனுக்கு என்ன தெரியப் போகிறது?’

‘அதை மட்டும் தான் கேட்டிருக்கிறாரா? ஒரு வாரம் நம் விடுமுறையை நீட்டிப்பதற்கு?’

‘ஆஸ்பத்திரி படுக்கையில் நீ படுத்திருக்கும் ஒரு போட்டோ வேண்டும் என்றார்.’

‘யார் அவர்? நம் ஹாஸ்டல் வார்டனா என்ன?’

விமானப்பணிப்பெண் சாண்ட்விச்களை வழங்கினாள். ஜன்னல் வழியாக நான் வெளியே பார்த்தேன். எங்களுக்குக் கீழே தெரிந்த இமயமலைச் சிகரங்களை மேகங்கள் தழுவிக் கொண்டன. இந்த உயரத்திலிருந்து பார்க்கும்போது பள்ளத்தாக்கு அமைதியாகக் காணப்பட்டது. ஆனால், இங்கிருந்து ஒரு மனிதரையும் பார்க்க முடியவில்லை - அவர்கள் தானே எல்லாப் பிரச்சனைகளுக்கும் காரணமாக இருப்பவர்கள்.

‘ஆஸ்பத்திரி போட்டோவுக்கு நாம் எங்கே போவது?’

‘மறந்து போய் விட்டதாக சொல்வேன். அல்லது என் போன் ஜீலம் ஆற்றில் விழுந்து விட்டது. அல்லது ஆஸ்பத்திரி போட்டோ எடுக்க அனுமதிக்கவில்லை என்பேன். யார் கவலைப்படப் போகிறார்கள்?’ என்றான்.

‘நீ சொல்வது சரி. சந்தன் எக்கேடோ கெட்டுப் போகட்டும்!’

‘ஆமாம். தொலையட்டும்,’ என்றான் ஸௌரப். தன் நடு விரலைக் காண்பித்தான். விமானப் பணிப்பெண் அவனைப் பார்த்துவிட்டாள்.

‘சாரி, மேடம்,’ என்று சொல்லி விரலை மடக்கிக் கொண்டான்; என் பக்கம் திரும்பினான்.

‘இந்த சாகஸ வேலைகளுக்குப் பிறகு சந்தன் கிளாஸஸில் நாள் பூரா உட்கார்ந்திருக்க வேண்டும் என்று நினைத்தாலே

வாந்தி எடுக்க வருகிறது.'

'இந்த சாகஸம் இன்னும் முடியவில்லை. அந்த கேப்டன் வீட்டுக்குப் போய் அந்தச் சான்றை நாம் தேடி எடுக்க வேண்டும்,' என்றேன்.

'ஒரு ராணுவ வீரன் வீட்டிற்குச் சென்று சோதனை செய்து அந்த சான்றைத் தேடி எடுக்க வேண்டும் என்று இப்போதும் சொல்கிறாயா?'

'அது ஒரு காலி வீடு. டெல்லியிலுள்ள மற்ற எந்த ஒரு குடியிருப்புக் காலனி போலத்தான் அர்ஜவன் விஹாரும் இருக்கும். ஒரு ஜெனரலின் பங்களாவுக்கு இருப்பது போல ஐம்பது வீரர்கள் பாதுகாப்பிற்கு இருக்க மாட்டார்கள்!' என்றேன்.

'எப்படி நாம் உள்ளே போவது? ஜன்னலை உடைத்தா?'

'அங்கு சென்று சுற்றுமுற்றும் பார்த்துத்தான் தீர்மானிக்க முடியும்!'

'பாதுகாவலர்கள் யாராவது இருக்கக் கூடும்,' என்றான் ஸௌரப்.

'முகாமைப் போல் நுழைவாயிலில் மட்டும் தான்!'

'நம்மைப் பிடித்தால் கைது செய்து விடுவார்கள். நமக்கு வேலை போகும். வேறு யாரும் பிறகு நமக்கு வேலை தரமாட்டார்கள்,' என்றான் பயந்தவனாக.

'நீ சொல்வது சரி, எக்கச்சக்க பாதிப்புகள். முட்டாள்தனமான யோசனை. விட்டுவிடு!' என்றேன் நான்.

விமானத்தின் ஜன்னல் வழியாகப் பார்த்தேன். கீழே காய்ந்த பழுப்புநிற சமதரை தெரிந்தது. கண்களை மூடினேன். அரை மணிக்குப் பிறகு ஸௌரப் எழுப்பினான்.

'ஐஐடியில் மெகானிக்கல் எஞ்சினியர்ஸ் துறையிலிருந்து ஒரு மின்சார துளை போடும் கருவியைக் கேட்டு வாங்க உன்னால் முடியுமா? உன் ஜுனியர்கள் உனக்கு உதவுவார்களா?' என்றான்.

'ஏன்?' என்றேன். 'அதை உபயோகித்து என்னால் பூட்டை உடைக்க முடியும்!' என்றான்

'நாம் கண்டுபிடிக்கப்பட்டால் நமக்கு அதற்குப் பிறகு யாருமே வேலை தரமாட்டார்கள், என்று சொன்னாயே, அது என்னவாயிற்று' என்று அவனிடம் கேட்டேன்.

'எப்படி இருந்தாலும் இப்பவும் நமக்கு ஒருவரும் வேலை

தரப்போவதில்லை,' என்றான் ஸௌரப்.

# அத்தியாயம் 25

காரி உமிழ்வதுதான் சந்தன் தேர்ந்தெடுத்த ஆயுதம், கட்டுப்படுத்த முடியாத ஒரு தீயணைப்புக் கருவியை வைத்திருக்கும் ஒரு தீயணைக்கும் வீரன் போல் அன்று இருந்தார். பைத்தியம் பிடிப்பதற்கு முந்தைய நிலையிலிருந்து முற்றிய பைத்தியம் ஆவதற்கு இடையிலான உணர்ச்சிகளை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்.

‘இரண்டு வாரங்கள். முக்கியமான மாதங்களுக்கு இடையில் நான் உங்களை அனுமதித்தேன். ஆம், அனுமதித்தேன்,’ என்று சந்தன் கத்தியபோது குட்காவும் எச்சிலும் கலந்து அவர் வாயிலிருந்து நாலடி ரேடியஸிற்குக் கொப்பளித்தன.

‘ஸார், எனக்கு உடம்பு சரியில்லை. குடல் அழற்சியில் அவதிப்பட்டேன்,’ என்றேன். சில நிமிஷங்களுக்கு முன்னால் தான் ‘வயிறு உபாதைகள்’ என்பதைக் கூகுள் செய்து பார்த்திருந்தோம்.

‘அப்படி என்றால் என்ன?’ பீடாவை அழுத்தி மென்றபடி கேட்டார்.

‘தீவிரமான வயிற்றுப் போக்கு. வயிறையும் சிறுகுடலையும் இணைக்கும் குழாயில் வீக்கம் ஏற்படுவதால் உண்டாவது,’ என்று விக்கிபீடியாவில் படித்த முதல்வரியை அப்படியே சொன்னேன். சந்தன் என்னைப் பார்த்த போது அவர் வாய் வெறுப்பில் கோணலாக வளைந்தது.

‘வயிற்றுப் போக்கு, வாந்தி, வயிற்றுவலி ஆகியவை நோயின் அறிகுறிகள் ஜுரம், சக்தியற்றுப் போதல், நீர்வற்றிப் போதல் போன்றவையும் காணப்படும்,’ விக்கிபீடியா விளக்கத்தை ஸௌரப் சொல்லி முடித்தான்.

‘எஞ்சினியரிங்கா அல்லது மருத்துவப் படிப்பா, எதற்கு நீங்கள் சொல்லிக் கொடுக்கிறீர்கள்?’ என்றார் சந்தன். ‘மருத்துவம் படித்தவன் போல் ஏன் பேசுகிறீர்கள்?’

‘என்னை மன்னிக்கவும், ஸார்.’

‘மூன்று வாரங்கள், எங்கேயோ காணாமல் போவீர்கள்.

உங்களுடைய சம்பளத்தில் பிடிக்கப் போகிறேன்.'

அப்படியென்றால் அந்த முட்டாள் எங்களை வேலையை விட்டு நீக்கவில்லையா? நல்லதாயிற்று. சம்பளத்தில் பிடித்தம் செய்தாலும் என்னால் வாழ முடியும்.

'நிச்சயமாக, ஸார்,' என்றேன். இருமுறை இருமினேன். உடல் நிலை சரியில்லை என்றால் நீங்கள் இரும வேண்டும்.

'உங்களுடைய பயமுறுத்தல்களுக்கு நான் கவலைப்படப் போவதில்லை. எப்படியிருந்தாலும் என் மனைவி என்னை விட்டுப் போகிறாள், உங்களிடம் சொல்கிறேன்.'

'ஸாரி, ஸார்,' என்றான் ஸௌரப்.

'ஆமாம். என்னுடன் வாழ்வது சாத்தியமே இல்லை என்றாள். எனக்கு அக்கறையில்லை. அவள் போகட்டும்.'

'அவங்களுக்குத் தான் முழு இழப்பு,' என்றேன்.

'என்ன?'

'ஒன்றுமில்லை, ஸார்.'

'நீங்கள் வராத நாட்களுக்காக அதிகப்படியான வகுப்புகளை நீங்கள் எடுப்பீர்கள் என்று நம்புகிறேன்.'

'நிச்சயமாக எடுக்கிறோம், ஸார். இன்னும் சில தினங்கள் மட்டும் எங்களுக்கு லீவு வேண்டும் ஸார்,' என்றேன்.

'இன்னும் லீவா?' சந்தன் போட்ட சத்தம் வெளியிலிருந்த வகுப்புகளுக்கும் கேட்டிருக்கும்.

'சில மருத்துவப் பரிசோதனைகள், ஸார். அவனுக்குக் குணம் ஆகிவிட்டது. ஆனால் இன்னும் சில பரிசோதனைகள் பாக்கி, ' என்றான் ஸௌரப்.

'நீங்கள் ஸ்ரீநகருக்குத் திரும்பப் போகவேண்டுமா?' என்று கத்தினார் சந்தன்.

'இல்லை, ஸார். டெல்லியில்தான். இரண்டு மூன்று நாட்கள் தான்!'

'சரி, நீ போ? ஏன் மனீஷ் போகவேண்டும்?'

'ஸார், என் பெயர் ஸௌரப்,' என்றான்.

சந்தன் அவனைச் சந்தேகக் கண்களோடு பார்த்தார்.

'உண்மையாகவா?'

'ஆம். சார். மருத்துவமனையில் அவனுக்கு உதவுவதற்காக நானும் போகவேண்டும்,' என்றான்.

‘எனக்கு இன்னும் உடல் நலம் சரியாக ஆகவில்லை ஸார்,’ என்று சொல்லி ஐந்து முறை இருமினேன். சுழலும் நாற்காலியைச் சந்தன் சற்று பின்னால் தள்ளிக் கொண்டார் - என்னிடமிருந்து சில அங்குலங்கள் நகர்வதன் மூலம் என்னிடமிருக்கும் நோய்க் கிருமிகளிடமிருந்து தப்பிக்க முடியும் என்று எண்ணினார் போலும்.

❖

‘காலர் உள்ள விளையாட்டு வீரர்கள் அணியும் டீ ஷர்ட். வெள்ளை காட்டன் ஷார்ட்ஸ். இவற்றைத் தான் ராணுவ அதிகாரிகள் மாலை வேலைகளில் அணிவார்கள்,’ என்றான் ஸௌரப்.

அர்ஜுன் விஹார் நுழைவாயிலில் உள்ள காவலாளி அறைக்கு எதிர்ப்பக்கத்தில் நின்று கொண்டிருந்தோம். தௌலாகான் பகுதிக்கு அருகில் இருபது குடியிருப்பு கட்டிடங்கள் கொண்ட ராணுவ காலனியுள்ள அர்ஜுன் விஹாரின் முழு சுற்றுப்புறத்தையும் நாங்கள் நன்றாக உற்று கவனித்திருந்தோம். இரண்டு மணி நேரம், முக்கிய நுழைவாயிலுக்கு எதிரே இருந்த காவலாளி அறையைக் கவனித்தோம். மாலையில் பாதசாரிகள் அதிக அளவில் காலனிக்குள் போய்க் கொண்டும், வெளியே வந்து கொண்டும் இருந்தார்கள். அங்கே வசிப்பவர்களாகத் தெரிந்தால் ஒன்றும் சோதனை செய்யாமல் காவலாளிகள் அவர்களை அனுப்பினார்கள். விளையாட்டு உடை அணிந்து எந்த அதிகாரியாவது தன்னம்பிக்கையோடு நடந்தால் காவலாளிகள் அவர்களைக் கண்டுகொள்ளவேயில்லை. அந்தப் பிரச்சனையும் இல்லாமல் பெண்களும் குழந்தைகளும் சென்றுவந்தார்கள். ராணுவ வீரர்கள் மாதிரி இல்லாதவர்கள் அல்லது இலக்கில்லாமல் அலைபவர்களை மட்டும் நிற்கவைத்துக் கேட்டார்கள் கேட்டின் அருகில்.

‘நாம் சரியான உடைகள் அணிந்து திரும்பி வருவோம்,’ என்றேன்.

❖

மூன்று நாட்களுக்குப் பிறகு நானும் ஸௌரபும் அர்ஜுன் விஹாரின் பெரிய கேட் அருகே மறுபடியும் வந்தோம். நாங்கள் வேறு வேறு பக்கங்களிலிருந்து வந்தோம் - ஆனால் மாலையில் குறிப்பிட்ட நேரத்தில் இருவருமே மற்ற அதிகாரிகளைப் போல்

காலர் வைத்த வெள்ளை டீஷர்ட், வெள்ளை ஷார்ட்ஸ் அணிந்திருந்தோம்.

‘மாலை வணக்கம், உங்களைப் பார்த்ததில் மகிழ்ச்சி,’ என்றேன்.

ஸௌரப் பருமனாக இருந்ததால் அவன் எனக்கு ஸீனியர் என்று நாங்கள் தீர்மானித்திருந்தோம்.

‘சொல்லி வைத்த மாதிரி வந்திருக்கிறோமே, இளைஞனே, பார்த்ததில் மகிழ்ச்சி,’ என்று அவன் உச்சரித்த விதம் வினோதமாக இருந்தது. பழைய பிரிட்டிஷ்காரனின் உச்சரிப்பு என்று அவன் நினைத்திருக்கிறான். என் முதுகில் ஓங்கித் தட்டினான் - ஒரு ராணுவ கமாண்டரின் செயலை, சற்று மிகைப்படுத்திச் செய்தான்.

‘நான் இப்போது தான் மாலை நடைப்பயிற்சியை முடித்தேன், ஸார்,’ என்றேன்.

‘வா, மகனே, வீட்டிற்கு டிரிங்க்ஸ் குடிக்க வா,’ என்றான்.

நாங்கள் மிகைப்படுத்தி நடித்தோம் என்று நினைத்துக் கொண்டேன். எங்களைக் காவலாளிகள் சற்றும் லட்சியம் செய்யவில்லை.

அர்ஜவன் வில்லா உள்ளே சென்றோம். சதுரமான மையத் தோட்டத்தில் நடந்தோம். குடியிருப்புகள் அந்தப் பொது தோட்டத்தைச் சுற்றி அமைந்திருந்தன.

‘ஃபையஸின் வீட்டை எப்படிக் கண்டுபிடிப்பது?’ என்றான்

‘அவன் தரைதளம் என்று சொன்னான்,’ என்றேன்.

‘பல தரைதள ஃப்ளாட்டுகள் உள்ளன.’

‘இருபது கட்டிடங்கள், ஒவ்வொன்றிலும் இரண்டு தரைதள வீடுகள். இங்கு இருக்கும் நாற்பது வீடுகளில் ஒன்று.’

‘ஒவ்வொன்றையும் பார்க்க நேரமாகும். யாரையாவது கேட்கலாம்.’

‘வேண்டாம். சும்மா நடப்போம். பெயர்ப் பலகைகளைப் படிப்போம்.’

தோட்டத்தின் ஓரமாக நடந்தோம். விளக்குகள் எரிந்த வீடுகளை நாங்கள் தவிர்த்துவிட்டோம். அந்த வீடுகளில் மனிதர்கள் இருக்கிறார்கள் என்று அர்த்தம். ஃபையஸின் குடும்பம் துபாயில் இருப்பதாகச் சொல்லியிருந்தான்.

‘மேஜர் யாதவ். இது இல்லை!’ என்றேன்.

‘கேப்டன் அஹ்லுவாலியா. இதுவும் இல்லை.’ என்றான்.

பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு எட்டாவது கட்டிடத்தில் ஒரு தரைத்தளத்தைக் கடந்தோம். விளக்குகள் உள்ளே எரியவில்லை. அதில் பெயர் பலகையும் இல்லை. ஆனால் வட்டமான சின்னத்தில் அரேபிய எழுத்துக்கள் காணப்பட்டன.

‘அதன் பொருள் கடவுள் சிறந்தவர். இதே மாதிரி பெண்டண்டு ஸராவிடம் இருந்தது’ என்றேன்.

‘அப்படியானால் இது ஒரு முஸ்லிம் வீடு.’ என்றான் ஸௌரப். சுற்று முற்றும் பார்த்தேன். எங்களுக்கு அருகில் யாரும் இல்லை. அதன் நுழைவாயிலுக்கு அருகில் சென்றோம். தோட்டத்தில் எட்டிப் பார்த்தேன். பழசான இரட்டை ப்ராம்களைப் பார்த்தேன்.

‘அவனுடைய இரட்டை குழந்தைகளுக்கு என்ன வயது என்று சொன்னான்?’ என்று கேட்டேன்.

‘மூன்று வயது. அங்கிருப்பது இரட்டை ஸ்ட்ரோல்லர்கள். சிறு டிவின்ஸ்களுக்குப் பயன்படுத்துவது.’

‘இந்த இடம் தான். நாம் இங்கிருந்து கிளம்புவோம். நாம் மறுபடியும் வரும் ஞாயிற்றுக்கிழமை வருவோம். அன்று டி.20 ஃபைனல் மேட்ச்,’ என்றேன்.

❖

‘மேட்ச் எப்போ தொடங்குகிறது?’

‘எட்டு மணி.’

முந்தின முறை மாதிரியே அர்ஜவன் விஹாருக்குள் நானும் சௌரபும் அதே உடைகளில் கேட்டில் சந்தித்தோம். முதுகில் மாட்டிக் கொள்ளும் ஒரு பை இம்முறை எங்களிடம் இருந்தது. மேட்ச் தொடங்க இன்னும் நேரம் இருந்ததால், அந்தக் கட்டிடத்தின் பத்து மாடிகள் ஏறி மொட்டை மாடிப் பகுதியில் வந்தோம். டி.20 உலகக்கோப்பை ஃபைனல் மேட்ச்சை அர்ஜவன் விஹார் மக்கள் மும்முரமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் போது, ஃபையஸின் வீட்டிற்குள் நுழையலாம் என்று நாங்கள் தீர்மானித்தோம்.

‘இன்னும் ஒரு மணி நேரம்!’ என்றேன்.

ஸௌரப் தன் போனில் ஒரு கேம் விளையாடினான்.

‘கேண்டி க்ரஷில் லெவல் முன்னூறில் இருக்கிறேன்,’ என்றான்.

‘கேண்டி க்ரஷ்ஷா? ஏன் இப்போதெல்லாம் டிண்டர் இல்லையா?’

‘டிண்டர் தொலையட்டும்,’ போனில் கைவைத்து ஜெல்லிகளை அப்புறப்படுத்துவதில் தீவிரமாக இருந்தான்.

‘டிண்டரில் உனக்குப் பொருத்தமான ஜோடி கிடைக்கவில்லையா?’

‘ஒரு திருநம்பி கிடைத்தான்.’

‘என்ன?’

‘என்னிடம் மார்பு, பின்புறம், அப்புறம் ஒரு இதயம் இருக்கு. சந்திக்க விருப்பமா, என்றான்.’

‘நான் வாய்விட்டுச் சிரித்தேன்.

‘மூன்றில் இரண்டு பரவாயில்லை. நீ கொஞ்சம் சமாளித்திருக்கலாம்!’

‘உஷ். சத்தம் போடாதே. ராணுவ வீரர்கள் வந்து நம்மைப் பிடிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறாயா?’ என்றவன் கண்கள் போனைப் பார்த்தபடி இருந்தது.

‘ஒரு மணி நேரம் ஆயிற்று,’ சரியான நேரம் வந்தது.

❖

‘ஜாக்கிரதை,’ என்று நான் காதில் சொன்னேன்.

ஸௌரப் புதர்களை விலக்கினான். எங்களால் ஃபையஸின் தோட்டத்திற்குள் நுழைய முடிந்தது. சத்தமில்லாமல் புல்தரையில் நடந்தோம். மேட்ச் தொடங்கியாயிற்று. காலனியில் ஆள் அரவமே இல்லை. எனக்கு மேல் தெரிந்த வீடுகளைப் பார்த்தேன். அந்த இருட்டில் ஒருவரும் கண்ணில் படவில்லை.

புல்தரையில் உட்கார்ந்துக் கொண்டு, பையைத் திறந்தான் ஸௌரப். மின்சாரத் துளை போடும் டிரில் கருவி. ஒரு பேட்டரி, மூன்று டவல்களை எடுத்தான். பேட்டரியைக் கருவிக்குள் பொருத்தி சுவிட்சைப் போட்டான். டிரில்லிலிருந்து வந்த சத்தம் தூக்கிவாரிப் போட்டது.

‘சே, இது ரொம்ப சத்தம் போடுகிறதே,’ என்றேன்.

‘பொறு,’ என்றான் ஸௌரப். சுவிட்சை அணைத்துவிட்டு மூன்று டவல்களால் டிரில்லைச் சுற்றினான்.

வாசல் கதவுக்குப் போனோம். அது தோட்டத்தைப் பார்த்தவாறு இருந்தது. பூட்டைக் கண்டுபிடிக்க போன் லைட்டைப் போட்டேன்.

‘உன்னால் முடியுமா?’ இது கதவிலேயே பொருத்தப்பட்டுள்ள பூட்டு! என்று ஸௌரப்பைக் கேட்டேன்.

‘செய்யலாம். ஆனால் ஒரு முறை உடைத்துத் திறந்துவிட்டால் பிறகு புதிதாக ஒன்றைத் தான் அதில் பொருத்த வேண்டும். யாரோ கதவை உடைத்திருக்கிறார்கள் என்று அவன் வந்து பார்க்கும்போது தெரிந்துவிடும்,’ என்றான்.

‘யார் உடைத்து உள்ளே போனார்கள் என்பது அவனுக்குத் தெரியாதவரையில் பிரச்சனையில்லை. இப்போதைக்கு அவன் இங்கு வரமாட்டான்,’ என்றேன்.

ஒரு சிறிய டிரில் துண்டை பவர் டிரில்லில் பொருத்தி சாவித்துவாரத்தில் வைத்தான்.

‘ரெடியா?’ என்றான். நான் தலையசைத்தேன்.

அவன் சுவிட்சைப் போட்டான். விர்ர்ரென்று சத்தம் போட்டு அது செயல்படத் தொடங்கியது.

‘இப்பவும் சத்தம் அதிகம் தான்,’ என்றேன். அத்த டவல்கள் ரொம்ப உதவி பண்ணவில்லை.

‘உஷ். சில நொடிகள் தான். பொறு. உள்ளே பூட்டின் ஒரு பின் நகர்கிறது.’

இன்னொரு பெரிய டிரில் பிட்டைப் போட்டு வேலையைத் தொடர்ந்தான் ஸௌரப்.

‘நிறுத்து, கோலு. ரொம்ப சத்தம் கேட்கிறது.’

‘கொஞ்சம் பொறு.’ முழு கவனத்தையும் டவல் சுற்றிய அந்த மெஷின் மீது வைத்திருந்தான். ‘ஆஹா. முடிந்துவிட்டது. ஆறு பின்களும் போய்விட்டன.’

‘என்ன?’ என்று கிசுகிசுத்தேன். பைக்குள் டிரில்லை அவன் வைத்தான்.

இருட்டில் க் குமிழில் கையை வைத்துத் திருப்பினேன்.

அது சூடாக இருந்தது. வலது பக்கம் திருப்பினேன். கதவு திறந்தது.

‘வரவேற்கிறேன் கண்ணா, உள்ளே வா,’ என்றான் ஸௌரப்.

❖

ஒரு இருட்டறைக்குள் நுழைந்தோம். போன் லைட்டை அடித்துப் பார்த்தோம். போர்க் காட்சிகள் கொண்ட சில பெயிண்டிங்களும் ஒரு சோபாவும் வரவேற்பு அறையில் தெரிந்தன. ரொம்ப இருட்டில் மற்ற எதுவும் தெரியவில்லை.

‘இப்போ என்ன செய்யணும்?’ என்றான் ஸௌரப்.

‘ஒன்றுமில்லை. படுக்கை எங்கே இருக்கு என்று பார்ததுப் படுத்துத் தூங்கு. நாம் காலையில் தான் தேடவேண்டும். விளக்கை இப்போது போட முடியாது,’ என்றேன்.

‘நம்முடைய போன் டார்ச் வைத்து எதையும் செய்ய முடியாதா...?’

‘ஆ...’ தடக் என்ற சத்தம்.

‘என்ன ஆயிற்று ஸௌரப்?’

‘ஒரு மேஜையில் இடித்துக் கொண்டேன்,’ என்றான் ஸௌரப்.

நொண்டிக் கொண்டேபோய் சோபாவில் உட்கார்ந்தான்.

‘பெட்ரூம், கோலு. காலை வரை நம்மால் ஒன்றும் செய்ய முடியாது.’

❖

எனக்கருகில் படுத்திருந்த ஸௌரப் நன்றாகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். என்னுடைய காலை 5 மணி அலாரம் தொடர்ந்து அடித்தது. எழுந்து உட்கார்ந்தேன். மங்கலான வெளிச்சம் வெளியே தெரிந்தது. யாராவது கண்டுபிடித்து விடுவார்களோ என்ற பயத்தில் இரவு முழுவதும் நான் கண்களை மூடவில்லை.

அந்த அறையில் ஒரு மேஜையின் மீது கம்ப்யூட்டர் இருந்தது. அதன் மீது ஃபையஸின் பிரேம் போட்ட குடும்ப போட்டோ இருந்தது. சரியான வீட்டிற்குள் தான் இருக்கிறோம்.

‘எழுந்து உற்சாகமாக இரு, கோலு,’ என்றேன்.

அடுத்த மூன்று மணி நேரங்களில் கான் வீட்டைப் பற்றி நிறைய தெரிந்துகொண்டோம். சாகோஸ் தவிர சாதாரண கார்ன் பிளேக்ஸ் என்று இரண்டு வகை காலை சிற்றுண்டியாக உண்கிறார்கள். இரண்டு டிரேக்களில் மில்க் மெயிட் கண்டென்ஸ்டு மில்க் டப்பாக்கள், சமையலறையின் மேல் அலமாரியில் இருந்தன. அவர்கள் சிந்தால் சோப் உபயோகித்தார்கள், குழந்தைகளுக்கு ஜான்ஸன் பேபி சோப்.

இரண்டில் ஒரு பெட்ரூம் குழந்தைகளுடையது. அதில் இரண்டு தொட்டில்களும் இரண்டு அலமாரிகளும் இருந்தன. அவற்றில் தேடினோம். ஒன்றில் துணிமணிகள். மற்றொன்றில் இரும்புப் பெட்டிகளில் விளையாட்டுப் பொம்மைகள். அதில் ஒரு பெட்டியை எடுத்துப் பார்த்தான் ஸௌரப்.

‘ரொம்ப கனமாக இருக்கே?’ என்றான்.

‘உள்ளே என்ன இருக்கு?’ என்றேன்.

ஸௌரப் உள்ளே எட்டிப் பார்த்தான்.

‘கால் உடைந்த ஸ்பைடர்மேன். மீசை வரையப்பட்ட சூப்பர் மேன். இவை எல்லாம் சாட்சியங்களா?’ என்றான்.

‘பெரிய பெட்ரூமில் தேடலாம்,’ என்றேன்.

❖

‘இது பூட்டி இருக்கிறது,’ என்றேன் ஃபையஸின் பெரிய அலமாரிக்கருகில் நின்று கொண்டிருந்தேன்.

‘ஆமாம், இதுவரை பூட்டுகளை நாம உடைக்காத மாதிரி பேசறே?’ என்றான் ஸௌரப்.

தட்டையாக இருந்த ஒரு ஸ்க்ரூடிரைவரைத் தன் பையில் இருந்து எடுத்து அலமாரியின் கதவுகளுக்கிடையே நுழைத்தான். சில முறை அழுத்தமாகத் திருப்பிய பிறகு கதவுகள் திறந்து கொண்டன.

‘இந்த வேலையில் உன் திறமை அதிகமாகி வருகிறது!’

‘கைவசம் ஒரு தொழில் இருக்கு. லிங்க்ட்இன் என்ற சமூகதளத்தில் நான் இந்தத் திறமையைக் குறிப்பிடலாம் என்று தோன்றுகிறது.’

கதவைத் திறக்க நான் முன்னால் நகர்ந்தேன்.

ட்ரிரிங்ங் - அழைப்பு மணி சத்தம் தூக்கிவாரிப் போட்டது. அப்போது நேரம் 8.30.

‘யாராக இருக்கும்?’ என்று கிசுகிசுத்தான் ஸௌரப்.

‘எனக்கு ரொம்பத் தெரியுமாக்கும்,’ நான் பதிலுக்கு அவன் காதில் கிசுகிசுத்தேன்.

‘அவ்வளவுதான், நாம் மாட்டினோம், சாமி,’ என்றான். மறுபடியும் மணி அடித்தது.

‘யாரென்று பார்க்கலாம்,’ என்றேன்.

படுக்கை அறையிலிருந்து மெதுவாகக் காலடி எடுத்து வைத்து வெளியறைக்கு வந்தோம். வாசல் கதவு நோக்கி நகர்ந்தோம், எனக்கு இரண்டடி பின்னால் ஸௌரப்.

மறுபடியும் மணி அடித்தது.

‘மச்சி,’ என்று பயத்தோடு சொன்னான் ஸொரப்.

‘உஷ்…’ என்றவாறே கதவுத் துளைவழியாகப் பார்த்தேன்.

‘யார் இது?’ என்றான் ஸௌரப். விரலை என் வாயில் வைத்தேன்.

ஒரு நிமிஷத்திற்குப் பிறகு கதவுக்குப் பின்னால் இருந்த ஆள் நகர்ந்து சென்றான்.

கதவுத் துளை வழியே பார்த்துக் கொண்டே, ‘அவன் எதிர் வீட்டுக்குப் போகிறான்,’ என்றேன். எதிர்வீட்டு மணியை அழுத்தினான்.

‘அவன் அவர்களிடம் என்ன சொல்லப் போகிறான்?’ என்றான். எதிர் வீட்டுக் கதவு திறந்தது. கையில் ஒரு மூட்டைத் துணிகளுடன் வேலைக்காரப் பெண் நின்றுகொண்டிருந்தாள். மணி அடித்த ஆளிடம் அவள் அவற்றைக் கொடுத்தாள். அவற்றை எடுத்துக்கொண்டு அவன் போனான். கதவு துளையிலிருந்து கண்ணை எடுத்துவிட்டு நிமிர்ந்து நின்றேன்.

‘இஸ்திரிக்குத் துணி எடுக்க வந்திருக்கிறான்,’ என்று சொல்லிச் சிரித்தேன்.

‘அவன் என் இதயத்தின் மீது இஸ்திரி போட்டுத் தட்டையாக்கிவிட்டான். அது வெடிக்கும் என்று நினைக்கிறேன்.’

‘மீண்டும் படுக்கை அறைக்குப் போகலாம், வா,’ என்றேன்.

ஃபையஸின் அலமாரிக்குச் சென்று அதைத் திறந்தேன். ஒரு பக்கத்தில் அவன் மனைவியின் துணிகள், அதைக் கலைத்துத் தேடினேன். வேண்டியது எதுவும் கிடைக்கவில்லை. அடுத்த பக்கத்தில் ஃபையஸின் ராணுவ உடைகள், தவிர சாதாரண உடைகள், கீழ் டிராயரில் பல ஜோடி, எடை அதிகமுள்ள கறுப்பு பூட்சுகள்.

அவற்றை வெளியே எடுத்து அறையின் தரையில் அடுக்கினேன்.

‘என்ன செய்யறே?’ கேட்டான் ஸௌரப்.

‘அடியிலுள்ள பலகையில் பார்க்க வேண்டும்.’

பூட்ஸ்கள் இருந்த இடத்துக்குப் பின்னால் ஒரு ஸ்போர்ட்ஸ் பை திணித்து வைக்கப்பட்டிருந்தது. அதை வெளியில் எடுத்துத் திறந்தேன். இரண்டு டஜன் டென்னிஸ் பந்துகள் இருந்தன. பைக்குள் கையை விட்டுத் தேடினேன். ஜில்லென்று செவ்வக வடிவில் ஏதோ ஒன்று தட்டுப்பட்டது. அதை வெளியே இழுத்தேன்.

‘ஆ…’ என்று அலறினான் ஸௌரப். நூறு கிராம் தங்க பிஸ்கட் என் கையில் இருந்தது.

‘இது நிஜ தங்கம் தானா?’ என்றேன்.

‘ஆமாம், மச்சி, இன்னும் இருக்கா?’

பையைத் தலைகீழாகக் கவிழ்த்தேன். அறை முழுவதும் பந்துகள் குதித்து ஓடின. மேலும் ஒன்பது தங்கக் கட்டிகள் கீழே விழுந்தன.

‘இது ஒரு கிலோ தங்கம்,’ என்றேன். ‘என்ன மதிப்பு இருக்கும்? முப்பது லக்ஷம்?’

‘ராணுவத்தினருக்கு அவ்வளவு நல்ல சம்பளம் கிடைக்கிறதா?’

‘இல்லை, கோலு. இது களவாணித்தனம்,’ என்றேன். அந்தக் கட்டிகள் காலை சூரிய ஒளியில் பளபளத்தன.

‘அந்த விளையாட்டுப் பொம்மைகள் வைத்த பெட்டி கனமாக இருக்கிறது என்றாயா?’ என்று கேட்டேன்.

‘ஆமாம், எதுக்குக் கேக்கறே?’

குழந்தைகள் அறைக்கு ஓடினோம். ஸ்பைடர்மேன், சூப்பர்மேன் தவிர மற்ற உருவங்களுக்கு அடியில் மேலும் இருபது பிஸ்கட்டுகள் அடுக்கப்பட்டிருந்தன. அவை நிச்சயமாகப் பார்லேஜி பிஸ்கட்டுகள் இல்லை.

‘நாட்டுக்காக எதையும் செய்ய வேண்டும்,’ என்றேன்.

‘குழப்பமாக இருக்கிறது. அவன் ஏதாவது தவறான செயலில் ஈடுபடுகிறானா?’ என்றான் ஸௌரப்.

‘அவன் ஒரு வேளை கேடுகெட்ட கொலைகாரனாக இருக்கலாம், கோலு. அவனுடைய கம்ப்யூட்டரைப் பார்க்கலாம். வா! என்றேன்.’

❖

ஸௌரப் ஃபையஸின் கம்ப்யூட்டரைத் திறந்து கொண்டிருந்த போது நான் மேஜையின் நான்கு டிராயர்களைப் பார்த்தேன்.

‘இவற்றையும் சோதிக்க வேண்டும்,’ என்றேன்.

‘1800களில் இருந்தது போன்ற மெஷின் இது. திறப்பதற்கு அதிக நேரம் ஆகிறது,’ என்று கம்ப்யூட்டரைப் பார்த்து சலித்துக் கொண்டான் ஸௌரப். ‘இந்தப் பழைய குதிரையை நான் முழுவதுமாக ஹேக் செய்யப் போகிறேன்.’

டிராயர்களில் தேடிப் பார்த்தேன். மூன்று டிராயர்களில், நோட்டுப் புத்தகங்கள், பேனா, பென்சில்கள் தவிர வீட்டு உபயோகத்திற்கான அளக்கும் இன்ச்டேப், சார்ஜ்களை

இணைக்கும் கேபின்கள் போன்றவை இருந்தன. மேல் டிராயர் பூட்டப்பட்டிருந்தது.

‘இதைத் திறக்க சாவி வேண்டும்!’ என்றேன்.

‘சாவியா?’ என்று நக்கலாகச் சிரித்தான் ஸௌரப். ‘அப்படியென்றால் என்ன?’

டிரில்லைச் சுட்டிக் காட்டினான். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு அந்த மேல் டிராயர் திறந்துவிட்டது.

‘சில மருந்துகள், கொஞ்சம் பணம்,’ அவற்றைத் தள்ளிக் கொண்டே சென்றேன். ‘இவையெல்லாம் ஏய்...எல்லாமே கர்ப்பத்தை உறுதி செய்யும் சாதனங்கள்.’

‘என்ன?’ என்றான் ஸௌரப்.

ப்ரெகா ந்யூஸ் என்று எழுதியிருந்த மூன்று பொட்டலங்களை வெளியில் எடுத்தேன். என்னிடமிருந்து ஒன்றை எடுத்த ஸௌரப் அதைப் பிரித்துப் பார்த்தான். அதில் நடுவில் செவ்வக வடிவ ஓட்டையுடன் கூடிய ஒரு பிளாஸ்டிக் சுருள் இருந்தது.’

‘இதை வைத்துக் கொண்டு எப்படிப் பரிசோதிப்பார்கள்?’ என்றான்.

‘அதில் சிறுநீர் கழிக்க வேண்டும்.’

‘ஃபையஸ் அப்படிச் செய்வானா?’

‘நீ என்ன முட்டாளா, கோலு? பெண்கள் தான் செய்வார்கள். இரண்டு கோடுகள் தோன்றினால் அவள் கர்ப்பம் என்று அர்த்தம்.’

‘இது ஃபையஸின் மனைவியினுடையதாக இருக்கும்,’ என்றான் குடும்ப போட்டோவைக் காட்டியபடி.

‘ஒரு வேளை அவர்களுக்கு மூன்றாவதாக ஒரு குழந்தை வேண்டியிருந்ததோ?’

அந்த சாதனம் இருந்த பெட்டியைப் பார்த்தேன். அதன் ஒரு பக்கத்தில் ஒரு வெள்ளை ஸ்டிக்கர் இருந்தது. ஸ்டிக்கரில் பார்கோட் இருந்தது. ‘ப்ரெக் கிட் ஐஎன் ஆர் 50’ என்று காணப்பட்டது.

‘கோலு, ஸராவின் அலமாரியில் இருந்தவற்றின் படங்கள் உன்னிடம் இருக்கிறதா?’

‘ஆமாம், இருக்கு,’ என்று கம்ப்யூட்டரில் டைப் செய்தபடி சொன்னான். ‘இந்த முட்டாளுக்கு ஒரு பாஸ்வேர்டு கூட இல்லை. ஹேக்கிங் தேவையே இல்லை.’

‘உன்னால் உள்ளே நுழைய முடிகிறதா?’

‘இதோ, போகலாம். இதுதான் டெஸ்க்டாப் கம்ப்யூட்டர் என்பது,’ என்று அதன் மௌஸின் மீது ஒரு தட்டு தட்டினான்.

‘அவளுடைய அலமாரியின் போட்டோக்களை எனக்கு முதலில் காட்டுகிறாயா?’

ஸௌரப் தன் போனை என்னிடம் கொடுத்தான். ஸராவின் அலமாரியிலிருந்த பொருட்களின் போட்டோக்களைப் பார்த்தேன், குறிப்பாகக் கர்ப்பப் பரிசோதனை சாதனங்கள் உள்ளவற்றை.

அதைப் பெரிதாக்கினேன்.

‘இங்கு இருக்கும் இதே மருந்துக் கடையின் சீட்டு தான் இந்த போட்டோவிலும் தெரிகிறது,’ என்றேன்.

ஸௌரப் அந்த போட்டோக்களை அங்கு கிடைத்த பொட்டலங்களோடு வைத்துப் பார்த்தான்.

‘ஆமாம்,’ சரிதான்.

‘அவை ஒரே இடத்தில் தான் வாங்கப்பட்டிருக்கிறது,’ என்றேன்.

‘ஃபையஸ் நிறைய வாங்கியிருக்கிறான். ஸராவுக்குச் சிலவற்றைக் கொடுத்திருக்கிறான். அவர்களிடையேயான தொடர்பு நிரூபணமாகிவிட்டது. காதணிகளுக்கும் விளக்கம் கிடைத்துவிட்டது.’

‘ஸரா அப்போ கர்ப்பமாக இருந்தாளா?’ ஃபையஸின் குழந்தை?’ என்றேன்.

பயங்கர அதிர்ச்சியில் உறைந்துபோய் மேல்கூரையை வெறித்துக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்தேன்.

‘இருக்கலாம். ஆனால் என்ன ஆயிற்று?’ அவளுடைய கர்ப்பத்தை அழிக்கச் சொல்லி இருப்பானோ? இறந்த போது அப்படியானால் அவள் கர்ப்பமாக இருந்தாளோ?

கைகளால் என் காதுகளைப் பொத்திக் கொண்டேன்.

‘உனக்கு ஒன்றுமில்லைதானே, மச்சி?’ என்றான்.

நான் கொஞ்சம் கூட நினைத்ததில்லை. இந்தப் பிரபஞ்சத்திலேயே புனிதமான ஒரு ஆத்மா என்று முட்டாளைப் போல் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அவள் ஒவ்வொருவருடனும் படுத்து...

‘உஷ்...இது அப்படி நடக்கும், மச்சி!’

‘அவள் என்னிடம் சொன்னாள், ‘நான் ரகுவுடன் சந்தோஷமாக இருக்கிறேன். என்னை விட்டு விலகு,’ அதனால்

தான் அவள் திரும்பிவரவில்லை என்று நினைத்தேன்.'

நான் எழுந்தேன். ஃபையஸின் குடும்ப போட்டோவை எடுத்து, எதிர் சுவரில் தூக்கி எறிந்தேன்.

அது சுக்கு நூறாக உடைந்து சிதறியது.

'மச்சி, உன்னை கட்டுப்படுத்திக் கொள். வெளியில் உள்ளவர்களுக்குச் சத்தம் கேட்டால் நாம் செத்தோம்.'

'நான் ஏற்கனவே இறந்தாயிற்று. வா. போகலாம்.'

'நான் அவனுடைய கம்ப்யூட்டரைப் பார்த்து முடிக்கட்டுமா?'

'என்னவோ செய்,' என்றேன்.

'அந்த பிஸ்கட்டுகளைப் பொட்டலமாகக் கட்டு. இந்த ஆளை மாட்ட வைப்பதற்கு உதவக்கூடிய எதையாவது இங்கிருந்து எடுத்துக் கொண்டு போகலாம்.'

'சரி,' என்றேன். இயந்திர கதியில் தங்க பிஸ்கட்டுகளை பின்னால் மாட்டிக் கொள்ளும் பையில் போட்டுக் கொண்டேன்.

ஃபையஸ் ஸராவைக் கொன்றதா அல்லது அவளை கர்ப்பமாக்கியதா - எது என்னை அதிகம் பாதித்தது என்று எனக்குத் தெரியவில்லை.

'இந்த கம்ப்யூட்டரிலிருந்து ஒன்றும் கிடைக்கவில்லை. காப்டன் எதையெல்லாம் பார்த்தான் என்பது தான் இருக்கிறது.'

'நமக்குச் சாட்சியம் வேண்டும், ஸௌரப். நம்மிடம் போதிய சாட்சியம் இல்லை என்று போலீஸ் சொல்லக் கூடாது.'

'அவனுக்கு ஆபாசக் காட்சிகளைப் பார்ப்பதில் விருப்பம். வலைதளத்தில் நிறைய இருக்கின்றன. எனக்கும் அதில் ஒன்று பிடித்துள்ளது. வெண்மை நிறத்தில் சிறுவயதினராக இருப்பதை அவன் விரும்புகிறான்.'

'வாயை மூடு. பயனுள்ளதாக எதையாவது சொல்.'

'அமைதி, மச்சி, அமைதி. 'டெல்லியில் சிறந்த விவாகரத்து வக்கீல்கள்' என்று அவன் கூகிளில் தேடியிருக்கிறான்.'

'ஓ, அப்படியா? அப்போ ஒழுங்கான கான் குடும்பம் ஒழுங்கற்றதா?'

கம்ப்யூட்டர் பக்கங்களை நகர்த்திக் கொண்டே ஸௌரப் தொடர்ந்து பேசினான். 'வழக்கமாக ஆன்லைனில் வாங்கும் கடைகள், ஏய், இதப் பாரேன், டெல்லியின் அபார்ஷன் கிளினிக்குகளை நிறைய தேடியிருக்கிறான்.'

'என்ன?'

‘ஆமாம். 2017 டிசம்பரில், ஸரா இறப்பதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு. அந்த முட்டாள், தான் தேடியவற்றை அழிக்கமாட்டான் போல் இருக்கு.’

‘அவன் கம்ப்யூட்டரையும் எடுத்து கொண்டு போகலாம்.’

‘தேவையில்லை. என் பென்டிரைவில் இந்த விவரங்களைச் சேமித்து விட்டேன்,’ என்றான். ஒரு மெமரி ஸ்டிக்கைக் காண்பித்தான்.

‘நல்லது. வேறு ஏதாவது உண்டா?’

‘கம்ப்யூட்டரில் சில படங்களைக் கண்டுபிடித்தேன். போனில் இருந்து சேமித்தவை,’ என்று சொன்னான் ஸொரப்.

சேகரித்த போட்டோக்களைக் காண்பித்தான், காஷ்மீர் பாரமுல்லா முகாமின் பலபடங்கள். பல போட்டோக்களிலும் ஃபையஸ் ராணுவ அதிகாரிகளுடன் இருந்தான். முப்பது படங்களுக்குப் பிறகு ஃபையஸும் ஸராவும் உள்ள ஒரு ஸெல்ஃபி. ஒரு படகு வீட்டில் நின்று கொண்டிருந்தனர், ஸ்ரீநகராக இருக்கலாம், அவன் அவளை அணைத்துக் கொண்டிருந்தான். அப்போதுதான், குட்டித் தூக்கத்திலிருந்து எழுந்த காதலர்கள் போல் கேமராவை முறைத்துக் கொண்டிருந்தனர். அடுத்த படம், படகு வீட்டின் ஜன்னலிலிருந்து எடுத்த சூரிய அஸ்தமனக் காட்சி.

‘சாட்சியங்கள் இன்னும் தேவையா?’ கைத்தட்டியபடி ஸௌரப் கேட்டான்.

‘இந்த சூரிய அஸ்தமனக் காட்சியைத்தான் ஸரா தன் இன்ஸ்டாகிராமில் போட்டிருந்தாள்.’

‘ரொம்ப சரி, அப்படியானால் இந்த போட்டோக்களையும் எடுத்துக் கொள்ளலாம்.’ பென்டிரைவை கம்ப்யூட்டரில் பொருத்தி எல்லாவற்றையும் காபி பண்ணினான் ஸௌரப். முடித்துவிட்டு கம்ப்யூட்டரை அணைத்தான்.

‘போகலாம்,’ என்றேன். பாடம் எடுக்க வகுப்புக்குப் போக வேண்டும்.

‘ஒண்ணே ஒண்ணு, மச்சி, சற்று பொறு?’

‘என்ன?’ என்றேன்.

‘போவதற்குள் கொஞ்சம் சாகோஸ் சாப்பிடட்டுமா?’ என்றான்.

# அத்தியாயம் 26

சந்தன் கிளாஸஸ் முகப்பில் சந்தன் எங்களைச் சந்தித்தார். நாங்கள் தாமதமாகச் சென்றதால் முதல் வகுப்பில் பாதிநேரம் ஆகிவிட்டது.

‘இன்று என்ன நிமோனியாவா?’ என்றார் அவர். கண்கள் உப்பியிருந்தன.

‘இல்லை ஸார். அலாரம் அடிக்கவில்லை. இருவரும் நன்றாகத் தூங்கிவிட்டோம்; என்றேன்.

‘வகுப்பில் காத்திருக்கும் மாணவர்கள் என்ன ஆவார்கள்?’

‘ஸாரி, ஸார். நாங்கள் ஒரு எக்ஸ்டிரா வகுப்பு எடுக்கிறோம்,’ என்றான் ஸௌரப்.

சந்தன் வெடிப்பதற்குத் தயாராக இருந்தார்.

அவரைக் கடந்து சென்றபோது, ‘நாம் என்ன ஒரு கொலையையும் செய்யப் போகிறோமா?’ என்றான் ஸௌரப்.

‘நமக்கு முன்னால் குட்கா அதைச் செய்து விடும் என்று நம்புகிறேன்,’ என்றேன்.

பிற்பகலில் இரு வகுப்புகளுக்கிடையே நானும் ஸௌரபும் காலியாக இருந்த ஸ்டாஃப் ரூமில் சந்தித்தோம்.

‘மச்சி, ஃபையஸ் வீட்டில் நமக்குக் கிடைத்த எல்லாவற்றையும் நாம் உடனே ரானாவிடம் கொடுப்போம். அவற்றை வீட்டில் வைத்திருக்க நான் விரும்பவில்லை,’ என்றான் ஸௌரப்.

‘இன்று மாலை போவோம்,’ என்றேன்.

என் போன் அடித்தது. சந்தன் எங்காவது ஒளிந்திருக்கிறாரோ என்று சுற்றிலும் பார்த்தேன்.

‘ஓ. இல்லை! ஸௌரப்...பார்.’

என் போனில் காப்டன் ஃபையஸ் என்று மின்னியது.

‘என்ன அந்த...?’ என்றான் ஸௌரப்.

என் கை நடுங்கியது.

‘நான் என்ன செய்யட்டும்?’

‘நாம் தான் அவன் வீட்டில் பூட்டை உடைத்து உள்ளே புகுந்தோம் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டதா?’ என்றான் ஸௌரப்.

போன் தொடர்ந்து என் கைகளில் அதிர்ந்தது.

‘எனக்கெப்படித் தெரியும்?’ என்றேன்.

‘எடுத்துப் பேசு, இயல்பாக, சாதாரணமாக இரு,’ என்றான்.

‘பகல் வணக்கம், காப்டன் ஃபையஸ்,’ என்று போனை எடுத்தவுடன் சொன்னேன். கேட்பதற்காகக் காதை போனுக்கருகில் தானும் வைத்துக் கொண்டான் ஸௌரப்.

‘வணக்கம், கேஷவ், என்ன நடக்கிறது? தலைநகரம் உங்களை எப்படி நடத்துகிறது?’ என்றான் மகிழ்ச்சியாக.

‘நன்றாக இருக்கிறது ஸார். நான் வேலையில் ஈடுபட்டிருக்கிறேன். டெல்லி ரொம்ப சூடு. ஸ்ரீநகரை நினைத்துப் பார்க்கிறேன்.’

‘ஓ. நீ பிஸியாக இருப்பாய். அதிக நேரத்தை எடுத்துக் கொள்ள மாட்டேன். சில விஷயங்கள் நினைவுக்கு வந்ததால் உன்னைக் கூப்பிட்டேன்.’

‘என்ன, ஸார்?’

‘ஸராவுக்கு நான் மிகச் சிறந்த, ஸ்பெஷல் காஷ்மீர் காதணிகளைக் கொடுத்தேன்.’

நானும் ஸௌரபும் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டோம்.

‘ஓ, அப்படியா? ஸ்பெஷல் என்றால்...?’

‘அவை பாரம்பரியமான காஷ்மீரி காதணிகள். அவற்றின் விலை சில லட்சங்கள். அதற்கு தானே பணம் கொடுப்பதாக ஸரா சொன்னாள்.’

‘அவள் கொடுத்தாளா?’

‘பிஎச்டியை முடித்துவிட்டு வேலையில் சேர்ந்த பிறகு கொடு என்று சொன்னேன். இருந்தாலும் அவள் ஐம்பதாயிரம் கொடுத்தாள். நல்ல வேலையை எடுத்துக் கொண்ட பிறகு மீதி பணத்தை வாங்கிக் கொள்கிறேன் என்றேன்.’

‘ஓ,’ என்றேன்.

‘ஆமாம். ஒரு நல்ல ஸ்ரீநகர் நகைக்கடையிலிருந்து இத்தகைய பாரம்பர்ய காதணிகளை வாங்கவேண்டுமென்று அவள் எப்போதும் சொல்வாள். அதனால் அவளுக்கு உதவி

செய்வதாகச் சொன்னேன்.’

‘நல்லது. கூப்பிட்டுச் சொன்னதற்கு நன்றி. அது ஒன்றும் முக்கியமானதல்ல, ஆனாலும், நன்றி ஸார்.’

‘சரி, எப்படியிருந்தாலும், தொடர்பில் இரு. ஸௌரபுக்கு ‘ஹை’ சொன்னேன் என்று சொல்.’

‘சரி.’

‘ஜெய்ஹிந்த்’ என்று சொல்லி போனை வைத்தான்.

நான் ஸௌரபைப் பார்த்தேன். ‘பார், என்ன புத்திசாலி அவன்?’ என்றான் ஸௌரப்.

‘நாம் விசாரிக்கத்தான் வந்தோம் என்பதைக் கண்டுபிடித்திருக்கிறான் அல்லது அந்தக் காதணிகளை நாம் கண்டுபிடிப்போம் என்று நினைத்திருக்கிறான்,’ என்றேன்.

‘ஆமாம். அதற்காகத்தான் முதலிலேயே ஒரு விளக்கத்தைக் கொடுத்திருக்கிறான்.’

மௌனமாகவே சில விநாடிகள் உட்கார்ந்திருந்தோம்.

‘அவன் ரானாவை விலை பேசி வாங்கிவிடுவானா?’ என்றான்.

‘என்ன?’ என்றேன்.

‘நாம் எல்லா சாட்சியங்களையும் ரானாவிடம் கொடுக்கிறோம். ஃபையஸ் அவரைக் கூடக் கூப்பிடுகிறான். அவனுக்கு எங்கிருந்து கிடைக்கிறதோ அங்கிருந்து மேலும் தங்க பிஸ்கட்டுகள் அவருக்கும் கொடுப்பதாக உறுதிபடுத்துகிறான். லக்ஷ்மணை உள்ளே வைப்பதற்கு ரானா சம்மதிக்கிறார். ஏனெனில் அதைத்தான் அவரும் விரும்புகிறார்.’

‘ரானாவை வாங்கமுடியும் என்று நீ நினைக்கிறாயா?’ என்றேன்.

பெட்ரோல் தீப்பிடிக்குமா என்று நான் கேட்பது போல் ஸௌரப் என்னைப் பார்த்தான்.

‘நல்ல வேளை, நாம் இன்னும் ரானாவிடம் போகவில்லை.’

‘ஆமாம். அந்த ஆபத்தை நாம் எடுக்க முடியாது.’

அடுத்தகட்டமாக என்ன செய்வது என்று ஸ்டாஃப்ரூமில் மேலும் கீழும் நடந்தேன்.

‘டெல்லியில் ஃபையஸை எல்லோருடைய முன்னிலையிலும் நாம் எதிர்க்க வேண்டும். அப்போ தான் அவன் யாருக்கும் லஞ்சம் கொடுக்கவும் முடியாது, தப்பிக்கவும் முடியாது,’ என்றேன்.

‘எப்படி?’

‘எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது.’

‘அது என்ன?’

‘வீட்டில் அதைப் பற்றிப் பேசலாம்,’ என்று வாட்சைப் பார்த்தேன். டிபரன்ஷியல் ஈக்வேஷனை இப்போது போய் நடத்த வேண்டும்.

‘சரி, சற்று இரு மச்சி,’ என்றான்.

‘என்ன?’ என்றேன்.

‘சும்மா ஒரு யோசனைதான். திறந்த மனதோடு கேள். ஒரு தங்க பிஸ்கட்டை விற்றுவிட்டு வீட்டுக்கு ஒரு புதிய ஏ.ஸி. வாங்கலாமா?’

❖

ஆழ்ந்த சிந்தனையில் இருந்த ஸஃப்தர் தாடியை உருவினார். நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்ட அவருடைய வரவேற்பறையில் நானும் ஸௌரபும் அவருடன் இருந்தோம். ஸ்ரீநகரில் நடந்தவற்றைப் பற்றி அப்போது அவரிடம் சொல்லிக் கொண்டிருந்தோம்.

‘சிகந்தர் இறந்துவிட்டானா? உண்மையாகவா?’ என்றார். அவருடைய கை, அப்போது தான் சாயம் பூசப்பட்டிருந்த அவருடைய தாடியின் மீது இருந்தது.

‘ஆமாம்,’ என்றேன்.

ஸஃப்தர் தன் உள்ளங்கைகளை விரித்தபடி ஒரு பிரார்த்தனை செய்தார்.

‘யா அல்லா,’ என்றார். ‘நானும் ஃபர்ஸானாவும் ஒரே நேரத்தில் எங்கள் பசங்களை இழந்துவிட்டோம்.’

ஸௌரபும் நானும் பேசாமல் இருந்தோம்.

‘அந்தப் பிள்ளை எப்போதுமே சரியான வழியைப் பின்பற்றியதில்லை. நான் பலமுறை ஸராவிடம் சொன்னேன். ஃபர்ஸானா எப்படி இருக்கிறாள்?’ என்று கேட்டார்.

‘எங்களுக்கு உறுதியாகத் தெரியாது. அவள் ஸ்ரீநகரில் தான் இருக்கிறாள்,’ என்றேன்.

‘அவன் ஒரு தீவிரவாதியாக இருக்கலாம். ஆனால் அதனால் ஃபர்ஸானாவின் இழப்பின் வலி குறைவாக இருக்காது.’

‘அது சரிதான்,’ என்றேன்.

‘அப்படியானால் ஸராவின் கொலையில் சிகந்தருக்கு எந்தப்

பங்கும் இல்லை, சரியா?’

‘இல்லை. நான் உங்களிடம் சொன்னதுபோல் அது ஃபையஸ்தான்,’ என்றேன்.

ஸஃப்தர் தலையை அசைத்தார். ‘காப்டன் ஃபையஸ்? பதினைந்து வருஷங்களாக எனக்கு ஃபையஸின் தந்தை அப்துல் கானைத் தெரியும். அவர்கள் எங்களுக்கு நெருங்கிய குடும்ப நண்பர்கள்.’

‘அதனால்தான் அவனால் ஸராவிடம் நெருக்கமாக இருக்க முடிந்திருக்கிறது. இறுதியில் தன் முடிவு தவறு என்று அவளுக்குப் புரிந்தபோது, ஃபையஸால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை,’ என்றேன் நான்.

‘ஃபையஸ் கல்யாணமானவன். அவனுக்குக் குழந்தைகள் உள்ளன. அவர்களை என் பேரப்பிள்ளைகளாக நான் நினைக்கிறேன்.’

‘சாட்சியங்களைச் சேகரிப்பதற்காக நாங்கள் டெல்லியில் அவன் வீட்டை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்தோம்,’ என்றான் ஸௌரப். ‘அவர்கள் இருவரும் படகு வீட்டில் இருக்கும் போட்டோக்கள் எங்களுக்குக் கிடைத்தன. கர்ப்பப் பரிசோதனைக் கருவிகள் ஒரே கடையிலிருந்து வாங்கப்பட்டுள்ளன.’

‘போதும்,’ என்று ஸஃப்தர் உறுமினார். இருப்புக் கொள்ளாமல் எழுந்தவர், அறையைக் கடந்து புஸ்தக அலமாரிக்குப் போனார். எங்களுக்கு முதுகைக் காட்டியவாறு மறுபடி பேசினார்.

‘அந்தக் கழிசடை! என் மகனைப் போல் அவனைக் கருதினேன்,’ இதைச் சொன்னபோது ஸஃப்தரின் குரல் ஆத்திரத்தில் நடுங்கியது. ‘அவன் திருமணத்திற்கு நாங்கள் போயிருந்தோம். எப்படி அவனால் என்னுடைய செல்லப் பெண்ணைத் தொட முடிந்தது?’

என்ன சொல்வது என்று எங்களுக்குத் தெரியவில்லை.

‘அவன் ஒரு ராணுவ வீரன். அவன் போய் இப்படி ஒரு வேலையைச் செய்வானா? அந்தத் தீவிரவாதிகளுக்கும் அவனுக்கும் என்ன வித்தியாசம்?’

‘அவனுக்குத் தண்டனை வாங்கிக் கொடுக்கலாம், அங்கிள்,’ என்றான் ஸௌரப்.

‘அது என் மகளை எனக்குத் திருப்பித் தருமா?’ உடைந்த குரலில் ஸஃப்தர் கேட்டார்.

கண்ணீர் அவர் கண்களில் உருண்டோடியது. மறுபடியும் எங்களுக்கு அருகில் வந்து உட்கார்ந்தார். முகத்தைத் தன் கைகளில் புதைத்துக் கொண்டார்.

‘இல்லை அங்கிள், ஸரா திரும்பி வரமாட்டாள். ஆனால் அவளைக் கொன்றவனுக்குத் தண்டனை கிடைத்தால் அவள் ஆத்மா சாந்தியடையும். மெடல்கள் அலங்கரிக்க ஒரு அதிகாரியாக இப்போது அவன் சுற்றிக் கொண்டிருக்கிறான்.’

‘என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?’

‘உங்கள் வீட்டில் ஒரு பிரார்த்தனைச் சடங்குக்கு ஏற்பாடு செய்யுங்கள். ஸராவுக்கு நெருக்கமானவர்களைக் கூப்பிடுங்கள்,’ என்றேன்.

‘எதற்காக?’

‘இந்தச் சாட்சியங்களை இப்போது ரானாவிடம் கொடுத்தால் அவரை விலை பேசி விடுவானோ என்று எங்களுக்குப் பயமாக இருக்கு. எல்லோருக்கும் எதிரில் அவனிடம் கேட்டுத் தகராறு செய்து உடனே போலீஸைக் கூப்பிடலாம் என்று நினைக்கிறோம்,’ என்றான் ஸௌரப்.

‘அதை நாம் எப்படி செய்வது?’

‘பிரார்த்தனை முடிந்தபிறகு சிலரை மட்டும் டின்னர் சாப்பிடக் கூப்பிடுங்கள். ஒரே ரூமில் எங்களுடன் ஃபையஸ் இருக்கட்டும்,’ என்றேன்.

‘அதற்குப் பிறகு நாம் என்ன செய்ய வேண்டும்?’

‘டின்னர் சாப்பிடும் போது நாங்கள் அவனை எதிர்க்கிறோம்,’ ஸௌரப் சொன்னான்.

‘பிறகு போலீஸ் வந்து அவனுக்கு இனிப்பைக் கொடுப்பார்கள்!’ என்று நான் சொன்னேன்.

❖

தன் போனிலிருந்து தலையைத் தூக்கிய ஸௌரப், ‘பயமாக இருக்கிறதா?’ என்று கேட்டான்.

என் கட்டிலில் நானும் அவனும் உட்கார்ந்திருந்தோம். அடுத்தவாரம் நடக்கும் வகுப்புக்கு ஒரு டெஸ்ட் மேட்டரை என் மடிக் கணினியில் நான் டைப் செய்து கொண்டிருந்தேன்.

அதை மூடிவிட்டு நிமிர்ந்தேன். ‘இல்லை, ஆவலாக இருக்கு.’ அந்த பிரார்த்தனைச் சடங்கிற்கு இன்னும் ஐந்து நாட்கள் இருந்தன. எந்தப் பகட்டும் இல்லாமல், வருத்தம் இழையோடிய

நிலையைப் பிரதிபலிப்பது போல் ஒரு வெள்ளை அழைப்பிதழை ஸஃப்தர் எங்களுக்கு அனுப்பியிருந்தார். மேஜையின் மேலிருந்த அதை எடுத்துப் பார்த்தேன்.

‘அவள் நம்மை விட்டுப் போன நூறாவது நாள் நெருங்குகிறது. ஆனால் நாம் அவளை, ஒவ்வொரு வினாடியும் இழந்து தவிக்கிறோம். எங்கள் மகள் ஸராவின் வாழ்க்கையில் முக்கியமான ஒருவர் நீங்கள். நூறாவது நாள் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு அழைக்கிறேராம், எங்கள் வீட்டில்.

238, வெஸ்ட் எண்ட் க்ரீன்ஸ், 20-5-2018, மாலை 5.00 மணி.

உங்கள் அன்புள்ள

ஜைனாப், ஸஃப்தர் லோன்!’

‘ஃபையஸ் இதை ஏற்றுக் கொள்வானா? நூறாவது நாள் பிரார்த்தனைக் கூட்டம் என்று ஏதாவது உண்டா?’ என்றேன்.

‘துக்கப்படுவதற்கு விகிதம் ஒன்றும் கிடையாது. இது அவளுடைய பெற்றோர்களின் அழைப்பு. படிப்பதற்கு உண்மையாகத்தான் இருக்கிறது. அது சரியாக இருக்கிறது,’ என்று சொன்ன ஸௌரப் தன் போன் பக்கம் கவனத்தைத் திருப்பினான். அவன் ஒரு கட்டுரையைப் படித்துக் கொண்டிருந்தான் - சிறப்பாகத் தேர்ந்தெடுப்பதற்கு டிண்டரை எப்படி ஊடுருவுவது? என்பது தலைப்பு.

‘டிண்டரில் உன்னால் நிச்சயம் ஜோடி தேடி ஊடுருவ முடியும் என்று நினைக்கிறாயா?’ என்றேன்.

‘என்னால் செய்ய முடிந்தால்... எண்ணிப்பார். ஒவ்வொரு பெண்ணும் இடமோ வலமோ போனைத் தேய்த்தால் எனக்கு ஜோடியாக முடியும்!’

‘பிறகு உன்னுடைய நிஜ போட்டோவைப் பார்த்தவுடன் முன்பு இடது பக்கம் தேய்த்து உன்னைப் பார்த்திருப்பதாகப் புரிந்து கொள்ள மாட்டார்களா?’

‘அவர்களும் மறுபடியும் என்னை நினைத்துப் பார்க்கலாம். அவர்களைக் கடைக்குள் வரவழைத்துப் பொருட்களை அவர்கள் முன்னால் பரப்ப வேண்டும். பிறகு ஒரு வேளை அவர்கள் வாங்கக் கூடும்!’

‘நீ தான் பொருட்களா?’ என்று சிரித்தேன்.

‘என் கையில் ஒரு கவர்ச்சியான பெண் கிடைக்கக்கட்டும். அப்போது வைத்துக் கொள்கிறேன் கச்சேரியை. பிறகு நீ சிரிக்கலாம், சரியா?’

‘நான் சும்மா உன்னைக் கேலி செய்தேன்,’ என்று அவனுடைய இருகன்னங்களைப் பிடித்து இழுத்தேன்.

‘ஒரு பெண்ணுக்குக் கிடைக்கக்கூடிய ஒரு சிறந்த பொருள் நீ தான்,’ என்றேன்.

‘சரி, சரி. நீ என்னைக் கேலிப் பண்ணு. எந்தப் பெண்ணும் எனக்குக் கிடைக்கமாட்டாள் என்று எனக்கும் தெரியும் - டிண்டரோ எதுவோ?’

‘என்ன உளர்றே?’

‘இந்தியாவில் நிச்சயிக்கப்பட்ட திருமணங்களாக இருப்பதற்குக் கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும். டிண்டர் இல்லாவிட்டால் என் பெற்றோர் எனக்கு யாரையாவது நிச்சயம் செய்துவிடுவார்கள். நூற்றுக் கணக்கான வருஷங்களாக இந்தியப் பெற்றோர்கள் தான், தம் குழந்தைகளுக்கு இடமோ வலமோ தேய்ப்பவர்களாக இருக்கிறார்கள்!’

நான் சிரித்தேன்.

‘அது போகட்டும். திரு. ரிச்சி ரிச் பற்றிய செய்தியைக் கேள்விப்பட்டாயா? நீ அவனைக் கூப்பிட்டுப் பேசினாயா?’

ஸௌரப் குறிப்பிட்டது ரகுவை. ஃபேஸ்புக் பக்கத்தில் அந்தச் செய்தி துள்ளிவந்தது. உலகின் மிகப் பெரிய ஆர்டிஃபிஸியல் இண்டெலிஜென்ஸ் (செயற்கை நுண்ணறிவுத்திறன்) நிறுவனம் ரகுவின் கம்பெனியில் முதலீடு செய்துள்ளது. ரகுவின் கம்பெனியை அவர்கள் முன்னூறு மில்லியன் டாலர்களுக்கு மதிப்பீடு செய்திருக்கிறார்கள்.

‘ரிச்சி ரிச்சுக்குப் பாதி சொந்தம், மீதி முதலீட்டாளர்களுக்குச் சொந்தம். அதனால் அவனுடைய மதிப்பு நூற்றி ஐம்பது மில்லியன் டாலர்கள். ரூபாய் மதிப்பில் ஆயிரம் கோடி,’ என்றான் ஸௌரப்.

‘பொறுக்கி,’ என்றேன்.

‘ஆம். ஆயிரம் கோடிகள், உனக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். அவனுக்கும் நம் வயதுதான். இருபத்தி ஏழு.’

‘நாம் அதே காலேஜ். அதே பேட்ச். நானும் அவனும் ஒரே பெண்ணுடன் கூட பழகினோம், அவன் மதிப்பு அவ்வளவு. நான் ஒன்றுமேயில்லை. என்னைவிடப் பெரிய தோத்தாங்குளி உண்டா?’

‘மச்சி, அந்த ஆயிரம் கோடிகளைப் பத்துச் சதவிகித வட்டிக்கு அவன் விட்டால் ஒரு வருஷத்தில் மேலும் நூறு கோடி சம்பாதிப்பான்.’

‘நன்றி, ஸௌரப். நீ சொல்வது எனக்கு மேலும் மகிழ்ச்சியாக இருக்கிறது.’

‘அந்த நூறு கோடிகளை மட்டும் வட்டிக்கு விட்டால் அது இன்னொரு பத்து கோடியைப் பெற்றுத் தரும். அந்தப் பத்தையும் கூட முதலீடு செய்யலாம்.’

‘போதும், நிறுத்துகிறாயா?’

‘மச்சி, அவனுடைய வட்டிக்குக் கிடைக்கும் வட்டிக்குக் கிடைக்கும் வட்டியை விட நாம் குறைவாகச் சம்பாதிக்கிறோம்.’

‘என்னைச் சமாதானப்படுத்தியதற்கு நன்றி, கோலு!’

‘நீ, அவனைக் கூப்பிடுகிறாயா? ஃபையஸ் பற்றி அவனிடம் சொல்ல வேண்டும் என்றாயே?’

‘கடைசியாகச் செய்யப்பட்டுள்ள அவனுடைய கம்பெனியின் மதிப்பீட்டிற்கு நான் அவனுக்கு வாழ்த்துக்களைச் சொல்ல வேண்டுமா?’

‘தொலையட்டும், அதை விடு. பிரார்த்தனைக் கூட்டத்திற்கு நாம் அனைவரும் போக வேண்டும் என்பது முக்கியம் என்று சொல். உனக்கே இது தெரியும். போனவாரம் கூட அவனைக் கூப்பிடப் போகிறேன் என்றாயே!’

நான் என் போனை எடுத்தேன்.

‘சரி, அதையெல்லாம் நான் அவனிடம் எப்படிச் சொல்வது? அவனுக்கு நிச்சயம் செய்யப்பட்டவளுக்கு வேறு ஒரு தொடர்பு இருந்து, அவளுடைய அந்தக் காதலன் அவளைக் கர்ப்பிணியாக்கி விட்டான் என்றா சொல்ல முடியும்?’

‘நீ பழிவாங்க ஆசைப்பட்டாய் என்று நினைத்தேன். உன்னிடமிருந்து அவன் ஸராவை எடுத்துக் கொண்டான். உண்மையில் அவள் அவனுடைவளும் அல்ல என்று சொல்!’

நான் அதை மறுத்துத் தலையை ஆட்டினேன்.

‘அது சரியாகப் படவில்லை. அவனைக் காயப்படுத்தவேண்டும் என்ற விருப்பம் போய்விட்டது.’

‘சரி. அவற்றை அவனிடம் சொல்ல வேண்டாம். அவளைக் கொன்றவனைக் கண்டுபிடித்து விட்டோம் என்று சொல். அந்தக் கூட்டத்திற்கு அவனை வரச்சொல், மற்றவற்றை அங்கு வெளிப்படுத்துவதாகச் சொல்!’ என்றான் ஸௌரப்.

‘கட்டாயமாக, யார் அது என்று கேட்பான்!’

‘அப்போ, சொல், அது ஃபையஸ் என்று. கடவுள் சத்தியமாகக் கேட்கிறேன். நீ அவனைக் கூப்பிடப் போகிறாயா

அல்லது நான் பேசட்டுமா?’

ஸௌரப் என் போனைப் பிடுங்க முயற்சித்தான். நான் என் கையை இழுத்துக் கொண்டேன்.

ஸ்பீக்கரில் போட்டு போனில் ரகுவைக் கூப்பிட்டேன்.

‘ஹாய், கேஷவ்! ரொம்ப நாளாச்சு,’ என்றான் ரகு.

‘ஹை, ரகு, இந்தியாவில் இருக்கிறாயா?’

‘ஆமாம். நான் ஆபீஸில் இருக்கிறேன். என்ன வேணும்?’

நேரத்தைப் பார்த்தேன். இரவு பத்தரை மணி.

‘இந்த நேரத்தில் ஆபீஸா?’

‘செய்தாக வேண்டும். எனக்கு 33 புது முதலீட்டாளர்கள் கிடைத்திருக்கிறார்கள். சில குழுமங்களை நாங்கள் ஒன்றிணைக்கிறோம். அதனால் வெறித்தனமாக வேலை செய்ய வேண்டிய மாதம்.’

சே, நான் இப்போ அவனுக்கு வாழ்த்துச் சொல்லணுமா, வேண்டாமா? சற்று யோசித்தேன். வேண்டாம், முதலில் எடுத்த முடிவுபடியே பேசலாம் என்று தீர்மானித்தேன்.

‘பிரார்த்தனைக் கூட்டத்தில் நாம் சந்திக்கலாம் என்று நினைக்கிறேன்,’ என்றேன்.

‘நான் வருவதற்கு முயற்சி செய்கிறேன். இந்தப் புதிய முதலீட்டாளர்கள் எல்லாம் என் மண்டையில் தான் இருக்கிறார்கள். ஓ, பொறு, அவளுடைய அப்பா உன்னையும் கூப்பிட்டிருக்கிறாரா?’ என்று ரகு வியப்புடன் கேட்டான். வியப்படைவதற்கு அவனுக்கு உரிமை இருக்கிறது. ஸஃப்தர் என்னை வெறுத்தார். அங்கு இருப்பதற்கு எனக்கு ஒரு தகுதியும் இல்லை.

‘ஆமாம். திட்டத்தின் ஒரு பகுதி அது. ரகு, நாங்கள் குற்றவாளியைக் கண்டுபிடித்து விட்டோம். ’

‘நிஜமாகவா, என்ன?’

‘ஆமாம். கொலையாளி யார் என்று தெரிந்துவிட்டது.’

‘எப்படி? இல்லை... யார்?’

‘கேப்டன் ஃபையஸைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?’

‘ஆமாம். ராணுவ அதிகாரி. நல்ல உறுதியான ஆள். ஸரா குடும்ப நண்பன். அவர் உனக்கு உதவி செய்தாரா?’

‘இல்லை ரகு. கேப்டன் ஃபையஸ் தான் செய்திருக்கிறான். அவன் தான் கொலையாளி.’

‘என்ன?’ என்று கேட்ட ரகு மௌனமானான்.

‘ரகு?’ அழைப்பு துண்டிக்கப்பட்டதோ என்று நினைத்தேன்.

‘நான் இருக்கிறேன்,’ என்று அவன் சொன்னபோது அவன் குரல் தெளிவாக இல்லை. ‘உனக்கு நிச்சயமாகத் தெரியுமா? ஃபையஸா?’

‘ஆமாம்.’

‘ஏன்?’

‘அவன் அவளை விரும்பியிருக்கிறான்,’ என்றேன்.

‘என்ன?’

‘அவர்களிடையே தொடர்பு இருந்திருக்கிறது?’

‘நீ என்ன சொல்கிறாய்? அவர் கல்யாணமானவர் அவருக்குக் குழந்தைகள் உண்டு.’

‘எனக்குத் தெரியும். இருந்தாலும் அவர்களிடையே தொடர்பு இருந்திருக்கிறது.’

எவ்வளவு கண்ணியமாகச் சொல்ல முடியுமோ அந்த அளவுக்கு ‘தொடர்பு’ என்று வார்த்தையைப் பயன்படுத்தினேன். ஆனால் ரகுவின் சூழ்நிலையில் இருக்கும் எவனுக்குமே அது ‘உன் காதலியுடன் கள்ள தொடர்பு இருந்திருக்கிறது’ என்று தான் காதில் விழும்.

எந்தச் சத்தமும் இல்லாததால் ‘ரகு,’ என்றேன். ‘இருக்கிறாயா?’

‘ஆதாரபூர்வமான அத்தாட்சிகள்!’

‘மோசமான தே... மகன்!’

ஒரு வால் நட்சத்திரம் பூமியைக் கடந்து போயிருக்க வேண்டும் என்று நினைத்தேன். அதுதான் முதல் முறையாக அந்த மாதிரி வார்த்தைகளை ரகு சொல்லி நான் கேட்கிறேன்.

‘முட்டாள் போலீஸிடம், போகாதே,’ என்றான் ரகு. ‘நான் ரானாவைச் சில நாட்களுக்கு முன்னால் கூப்பிட்டேன்.’

‘அப்படியா?’

‘இந்த வழக்கைப் பற்றி விசாரிக்கத்தான். அவ்வப்போது அவருடன் போனில் பேசுவேன். அந்த வாட்ச்மேன் தான் குற்றவாளி என்பது அவர் எண்ணம், அவனைச் சிறையில் அடைத்து அது தொடர்பாக விசாரித்து வருவதில் அவர் நிம்மதியாக இருக்கிறார்.’

‘ஆமாம். அது அவருக்கு வசதியாக இருக்கு.’

‘அதை அவர் பெரிதாக ஊதி சர்ச்சையாக்குவார். தவிர ஃபையஸ் ராணுவத்தில் இருக்கிறார். எப்படியாவது அவர் தப்பித்துவிடுவார்!’

‘நன்றி. அதைத் தான் நானும் நினைத்தேன். அதனால்தான் அந்தப் பிரார்த்தனைக் கூட்டம்,’ என்றேன்.

ஏற்றுக்கொள்வதில் எனக்கு அதிக விருப்பமில்லை; இருந்தாலும் ரகுவைப் போன்ற புத்திசாலி, நான் நினைத்தது போலவே நினைப்பது எனக்குத் திருப்தியாக இருந்தது.

‘அவருக்கு இதுபற்றி ஏதாவது தெரியுமா?’

‘இல்லை!’

‘நல்லது. அப்படியானால் நான் நிச்சயமாகப் பிரார்த்தனை கூட்டத்திற்கு வருகிறேன். 20-ம் தேதி இல்லையா?’

‘ஆமாம்!’

‘நான் நிச்சயம் அங்கு இருப்பேன்.’

‘அங்கு பார்க்கிறேன். உன்னை,’ என்று சொல்லி நீளமான பெருமூச்சு விட்டேன். ‘மேலும் ஒன்று, ரகு,’ என்றேன்.

‘என்ன?’

‘வாழ்த்துக்கள். புதிய முதலீட்டாளர்கள் பற்றியும் கடைசியான மதிப்பீட்டையும் பற்றி படித்தேன்.’

‘ஓ, அதுவா? நன்றி,’ என்றான் ரகு.

‘எப்படியானாலும் இன்னும் ஐந்து நாளில் உன்னைப் பார்க்கிறேன்.’

‘நிச்சயமாக. கேஷவ்.’

‘என்ன?’

‘உனக்கு நன்றி.’

‘ஓ.கே. ரகு.’

‘உனக்கு நான் எப்படி திருப்பித் தருவேன் என்று எனக்குத் தெரியவில்லை,’ ஸௌரப் என்னுடன் பேச விரும்புவதாகச் சைகை காட்டினான்.

‘ஒரு நொடி பொறு, ரகு,’ என்று போனை ம்யூட்டில் வைத்தேன்.

‘என்ன?’ என்றேன்.

‘அவனால் நமக்கு நிச்சயமாகத் திருப்பித் தரமுடியும். அவனுடைய மதிப்பு ஆயிரம் கோடிகள். அவன் நமக்கு ஏதாவது

கொடுக்க முடியுமே…’ என்றான் ஸௌரப்.

‘வாயை மூடு!’ என்று சொல்லிவிட்டு ம்யூட்டிலிருந்து எடுத்தேன்.

‘ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாயே, தொடர்ந்து சொல், ரகு,’ என்றேன்.

‘ஒன்றுமில்லை. உனக்கு ஒன்றுமே திரும்பித் தரமுடியாதே என்றேன். அவனைத் தூக்கில் போடுவார்கள் என்று நம்புகிறேன். அல்லது வாழ்நாள் பூரா சிறையில் இருக்க வேண்டும்.’

‘அவர்கள் செய்வார்கள்!’ என்றேன்.

‘ஒவ்வொரு வினாடியும் நான் அவளை இழந்து தவிக்கிறேன்,’ என்றான் ரகு.

ஓகே. இதைக் கேட்க விரும்பவில்லை என்று சொல்ல நினைத்தேன். ஆனால் சொல்லவில்லை.

‘நான் அவளிடம் சொல்லியிருந்தேன். இந்தியாவை விட்டுப் போய்விடலாம் என்று. இந்த குழப்பத்தையெல்லாம் இங்கேயே விட்டுவிடலாம் என்று நான்…’ என்ற ரகு உடைந்து போனான். அவன் அழுவது எனக்குக் கேட்டது.

‘நீ எவ்வளவு சோகமாக இருக்கிறாய் என்பது எனக்குப் புரிகிறது, ரகு!’ என்றேன்.

பைத்தியம் தான்! என் முன்னாள் காதலியைக் கைப்பிடிக்க இருந்தவனுக்கு நான் ஆறுதல் சொல்லவேண்டுமா என்ன?

அவன் இன்னும் முடிக்கவில்லை. ‘எல்லாவற்றையும் அவளுக்குக் கொடுக்க விரும்பினேன் - இந்தச் சாதனைகள், வாழ்த்துக்கள் இவற்றிற்கெல்லாம் அர்த்தமே இல்லை. அவள் இல்லாமல் வாழ்க்கை முழுமையாக இல்லை,’ என்று சொன்னான்.

‘அவனுக்குப் பணம் ஒரு பொருட்டே இல்லையென்றால் நமக்கு அவன் தாராளமாகக் கொடுக்கலாமே!’ என்று என் காதுகளில் ஸௌரப் கிசுகிசுத்தான்.

அவன் வாயை மூடுவதற்காக அவன் பின்புறத்தில் உதைத்தேன். அழுது கொண்டிருக்கும் ஒருவனுடன் பேசும்போது நானும் சோகமாக அமைதியாகத் தான் இருக்க வேண்டும்.

‘இவையெல்லாம் ஒன்றுமேயில்லை. இந்தப் பணம் எல்லாம், அர்த்தமேயில்லை,’ என்று ரகு சொல்லிக் கொண்டிருந்தான். அழுவதற்குத் தோள் கொடுக்க ஒருவர் வேண்டுமானால் ரகு ஒரு மனநல மருத்துவரை நாடிப் போகவேண்டும். அது நானாக

இருக்க வேண்டுமென்பதில்லை.

‘என்னால் புரிந்து கொள்ள முடிகிறது, ரகு. யாரோ கதவைத் தட்டுகிறார்கள். நான் உன்னை டெல்லியில் சந்திக்கிறேன்,’ என்றேன்.

‘நிச்சயமாக. உன் நேரத்தை எடுத்துக் கொண்டதற்கு மன்னிக்கவும். நன்றி, ரொம்ப ரொம்ப நன்றி.’

போன் பேசி முடித்துவிட்டு ஒரு தலையணையைத் தூக்கி ஸௌரபின் தலையில் எறிந்தேன்.

‘பொறுக்கி, ஜோக் சொல்ல இதுதானா நேரம்?’

ஸௌரப் சிரித்தான்.

‘நீ நன்றாகச் சமாளித்தாய்.’

‘அப்படியா? செய்தேனா?’

‘ஆமாம். நீ சொன்னே. ஆனால் அவனை எரிச்சலூட்டும்படியாக இல்லை,’ என்று சொன்ன ஸௌரப் படுக்கையில் படுத்துக் கொண்டான்.

போனையும் லேப்டாப்பையும் ஒருபக்கமாக வைத்தேன்.

‘கோலு, உன் அறைக்குப் போய்த் தூங்கு,’ என்றேன்.

‘போவதற்கு ரொம்ப சோம்பேறித்தனமாக இருக்கு, மச்சி. குட்நைட்,’ என்று சொல்லிவிட்டுப் படுக்கைக்கு அருகில் இருந்த விளக்கை அணைத்தான்.

கண்களைத் திறந்தபடி படுத்திருந்தேன். ஸௌரப்பின் லேசான குறட்டையையும் மின்விசிறியின் விர்ர் சத்தம் தவிர வேறு எதுவும் கேட்கவில்லை. ரகுவுடன் பேசியதை அசை போட்டேன். நான் நிஜமாகவே பெரியவனாகிவிட்டேனா? அவனுடைய வெற்றியைக் கண்டு நான் பொறாமைப்படவில்லை. அல்லது அவனுக்கு நிச்சயிக்கப்பட்டவளின் கள்ளத் தொடர்பைக் கேட்டு அவன் வருந்துவதைக் கண்டு நான் மகிழ்ச்சியடையவில்லை. நான் அவனை இகழ்ச்சியாகப் பேசவில்லை, தவிர அவனைத் திசை திருப்பவில்லை. மீளாத சோகத்தில் இருக்கும் அவனுக்கு ஆயிரம் கோடிகள் ஒரு பொருட்டாகவே இல்லை. அவளில்லாமல் வாழ்க்கை முழுமை அடையவில்லை என்றானே...’

ரகுவுடன் நான் கடைசியாக பேசியது தான் மண்டையில் எதிரொலித்துக் கொண்டே இருந்தது, தலைக்கு மேல் ஓடிய மின்விசிறி சுழன்று கொண்டே இருந்தது.

அரைமணி நேரத்துக்குப் பிறகு படுக்கைக்கருகில் இருந்த

விளக்கைப் போட்டேன்.

தூக்கக்கலக்கத்தில், ‘என்ன ஆயிற்று?’ என்றான் சௌரப்.

‘எனக்குத் தூங்கமுடியவில்லை. எனக்கு எங்கேயாவது போக வேண்டும்,’ என்றேன்.

‘ஓ,’ என்று கண்களைத் தேய்த்தபடி சொன்னான்.

‘என்னுடன் வெளியில் வருகிறாயா?’

‘என்ன?’ என்றான் தூக்கக் கலக்கத்துடன்.

‘இந்தப் பிரார்த்தனைக் கூட்டம் முடியும் வரை நாம் எங்காவது போய்விடலாம். அப்போது தான் இந்தப் படபடப்பைச் சமாளிக்க முடியும்.’

‘என்ன, எங்கே?’ வகுப்புகள் என்ன ஆவது?

‘எனக்கு அது பற்றி கவலை இல்லை!’

‘என்னால் வரமுடியாது, மச்சி. நிறைய பாடங்கள் பாக்கி இருக்கு. சந்தன் என்னை வேலையை விட்டுத் தூக்க மாட்டார், இந்த உலகை விட்டே அனுப்புவார்.’

‘நல்லது. நான் நாலைந்து நாட்களுக்கு எங்கேயாவது போகிறேன்.’ படுக்கையை விட்டுக் குதித்தேன். எல்லா விளக்குகளையும் போட்டேன். அலமாரியைத் திறந்து துணிகளை எடுத்து சூட்கேஸில் வைக்க ஆரம்பித்தேன்.

‘எங்கே?’ என்றான் எழுந்து உட்கார்ந்து தலையைச் சொறிந்தபடி.

‘அப்புறமாகச் சொல்கிறேன். இப்போ நீ தூங்கு. எனக்காகச் சந்தனைப் பார்த்துக்கொள்!’

# முன்னுரை தொடர்கிறது

6E766 ஹைதராபாத் - டெல்லி இண்டிகோ விமானத்தின் உள்ளே.

'அது ஒரு கதை,' என்றேன்.

கேஷவ் சிரித்தான்.

'உங்களுக்கு சுவாரஸ்யமாக இருப்பது மகிழ்ச்சியாக உள்ளது.'

'ஆனால் கேஷவ், நீ ஒரு நல்ல நண்பன். நிஜமாகவே ஸ்ரீநகருக்குப் போய் இவற்றையெல்லாம் செய்தாயா?'

'ஆமாம். ஸௌரப், என்னுடன் வந்தான். அவன் ரொம்ப உதவியாக இருந்தான். ஆனால் ரொம்ப சாதாரணமான கோச்சிங் வகுப்பு வாத்தியார்கள் இவ்வளவு சாதித்ததே அதிகம் என்று நினைக்கிறேன்,' என்றான் கேஷவ்.

'நம்பமுடியவில்லையே. அப்புறம் என்ன ஆயிற்று? நீங்கள் பிரார்த்தனைக் கூட்டத்திற்குப் போனீர்களா?'

'அது நாளைக்கு, இல்லை, இப்போது நடுநிசியைத் தாண்டி விட்டது, அப்படியென்றால் இன்று.'

'என்ன? சில நாட்கள் ஊரைவிட்டுப் போகிறேன் என்று மட்டும் ஸௌரபிடம் சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டாயா?'

'ஆமாம். அது நாலு நாளைக்கு முன்னால் நான் வெளியில் சுற்றினேன். இப்போது வீடு திரும்பிக் கொண்டிருக்கிறேன்.'

நான் வாட்சில் தேதி, நேரம் பார்த்தேன் - காலை *1.05,* மே *20-*ந் தேதி.

'அப்படியானால் நீ எங்கு போனே?' என்றேன்.

'பல இடங்களுக்கு, என் மனதை அமைதிப்படுத்த, சந்தேகங்களைத் தெளிவு படுத்திக் கொள்ள, விஷயங்களைச் சரியாகப் புரிந்து கொள்ள.'

தெலங்கானாவிலிருந்து இந்த விமானம் வருவதால் நான் ஊகித்தேன்.

'திருப்பதி அல்லது வேறு எங்காவது?' என்றேன். கேஷவ்

சிரித்தான்.

'எங்கெல்லாம் நான் போக வேண்டுமோ, அங்கெல்லாம்,' என்றான்.

என்னிடம் சொல்ல அவன் விரும்பவில்லை என்பது புரிந்தது.

'லேடீஸ் அண்ட் ஜென்டில்மென், விமானம் இப்போது டெல்லியில் இறங்கப் போகிறது,' என்று விமான ஊழியர் அறிவித்தார்.

'உங்கள் சீட்பெல்டுகளை அணியவும்.'

விமானம் தரை இறங்கியது. புகைமூட்டத்தில் மங்கலாகத் தெரியும் விளக்குகள் டெல்லியை அடைந்துவிட்டோம் என்பதைப் புரியவைத்தது.

சில நிமிடங்களில் ஒரு சிறிய குலுக்கலுடன் தரையைத் தொட்டு ஓடுபாதையில் ஓடி நின்றது.

'நான் சொன்னதைப் கேட்டதற்கு நன்றி,' என்றான் அவன்.

'மகிழ்ச்சி என்னுடையது. அப்படியானால் இன்றைக்கு அவனை மாட்டவைக்கப் போகிறாய். ஸராவைக் கொன்றவனை ஜெயிலுக்கு அனுப்பு!'

'அப்படித்தான் நம்புகிறேன்.'

'நீ கட்டாயம் செய்வாய்.'

'தேங்க் யூ!'

'பிரார்த்தனைக் கூட்டத்தில் என்ன நடந்தது என்று பிறகு எனக்குச் சொல்வாயா?' என்று கேட்டேன்.

'ஏன்?'

'நான் முழுக் கதையையும் கேட்க விரும்புகிறேன்.'

'ஓ, 'வேண்டாம், மறுபடியும் வேண்டாம்' என்று சொன்னீர்களே அந்தக் கதையையா?

'அந்த மாதிரி சொன்னதற்காக ஏற்கெனவே நான் மன்னிப்புக் கேட்டுவிட்டேன்,' என்றேன் மந்தமாக.

சீட் பெல்டு விளக்கு அணைந்த அடுத்த வினாடி பயணிகள் எழுந்தனர், ஒருவரையொருவர் முட்டி மோதிக் கொண்டு இடைவிடாமல் நடக்கத் தொடங்கினார்கள். ஏதோ அவசரம் - வீடு பற்றிக் கொண்டு எரிகிறது என்பது போல், மற்றவர்களை விட ஐந்து வினாடிகளுக்கு முன்னால் விமானத்தை விட்டு இறங்கவேண்டும் என்பது போல் எல்லோரும் நடந்து கொண்டார்கள்.

‘கதையை முடிக்க நான் உங்களைப் பிறகு கூப்பிடுகிறேன்*!*’ என்று சொல்லிவிட்டுச் சிரித்தான் கேஷவ்.

நாங்கள் கை குலுக்கிக் கொண்டோம், போன் நம்பர்களைப் பரிமாறிக் கொண்டோம். விமானத்தை விட்டு இறங்கும்போது அவன் போன் அடித்தது.

‘ஆமாம், ரானா ஸார், சரி. நீங்கள் அனுப்பிய காட்சிகள் நன்றாக இருக்கின்றன,’ என்றான் கேஷவ். கைகளை அசைத்து விடைபெற்றோம். போனில் பேசியபடி வேகமாக என்னைக் கடந்து சென்றான்.

❖

ஏரோசிடியிலிருந்த அந்தாஸ் ஹோட்டலிலுள்ள என் அறைக்குச் சென்றேன். அதை வெஸ்டு எண்டு க்ரீன்ஸிலிருந்து *10* நிமிஷ நடையில் அடைந்து விடலாம். தூங்குவதற்கு முயற்சித்தேன். ஆனால் முடியவில்லை. இன்னும் சில மணி நேரத்தில் பிரார்த்தனைக் கூட்டம் நடைபெறப்போகிறது. சில நிமிஷங்கள் தூரத்தில் ஒரு கொலையாளி, ராணுவ அதிகாரி கைது செய்யப்படுவார்.

பலமுறை திரும்பித் திரும்பிப் படுத்தேன். இறுதியாக என் போனை எடுத்து, கேஷவுக்கு ஒரு செய்தி அனுப்பினேன்.

‘இன்றைய மாலை நல்ல அதிருஷ்டநேரமாக இருக்கட்டும், நண்பா*!*’

# அத்தியாயம் 27

‘அருமை நண்பர்களே, அமைதியைத் தேடி நாம் சந்தித்திருக்கிறோம். எது நடந்தாலும் அதை ஏற்க அமைதி தேவை. ஒவ்வொரு நொடியும் என் மகளின் இழப்பை நினைத்து வருந்தும் எனக்கும் அமைதி வேண்டும். கோபப்படாமல் இருக்கவும் ஏன் என்று கேட்டுக்கொண்டு இருப்பதற்கும் தேவை அமைதி. கடவுளின் விருப்பத்தை நம்புவதற்கு அமைதி வேண்டும்,’ எல்லோரையும் பார்த்து ஸஃப்தர் சொன்னார்.

வந்திருந்தவர்கள் - ஆண்கள், பெண்கள் என்று தனித்தனியாக அரைவட்ட வடிவில் தரையில் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்கு முன்னால் ஸராவின் கறுப்பு, வெள்ளை புகைப்படங்கள் பல ஒரு போர்டில் ஒட்டப்பட்டிருந்தன. சுமார் நாற்பது பேர் இருப்பார்கள் - வெளிர் நிற உடைகளை அணிந்திருந்தார்கள். அவர்களில் பலரும் ஸராவின் ஆன்ட்டிகளும் அங்கிள்களும், ஜைனாப் மற்றும் ஸஃப்தரின் வயதான, உடல்நலம் குன்றிய தாயின் அருகில் உட்கார்ந்திருந்தனர்.

எனக்கு மூன்று இடங்கள் தள்ளி ரகுவும் எனக்கு அருகில் ஸௌரபும் இருந்தார்கள். ஸராவின் ஹாஸ்டல் தோழிகள் சிலரை அந்தக் கூட்டத்தில் பார்த்தேன்.

ஸஃப்தர் பேசிய பிறகு ஹிமாத்ரியில் ஸராவுக்குத் தோழியான ஸனப் பேசினாள்.

‘அறை எண் 105 இப்போதும் அவளுடையது தான். எந்த நொடியிலும் ஸரா அதை விட்டு வெளியே வந்து நடப்பாள் என்று தோன்றுகிறது. ஹிமாத்ரிக்கு வெளியில் புல் தரையில் புத்தகங்களை வைத்துக் கொண்டு அவள் படிப்பதைப் பார்க்க நான் இப்போதும் தேடுகிறேன்,’ என்றாள் உணர்ச்சி பூர்வமாக.

நான் வாட்ச்சைப் பார்த்தேன் - மாலை 5.30 மணி. இன்னும் ஃபையஸ் வரவில்லை. அழைப்பிதழை அனுப்பியதோடு ஸஃப்தர் தனியாகவும் அவனுடன் பேசியிருக்கிறார். ஃபையஸும் நிச்சயமாக வருவதாகச் சொல்லியிருக்கிறான். விமான நிலையத்திலிருந்து அவனை அழைத்துக் கொண்டு வருவதற்கு

நான் சொல்லியிருந்தபடி ஸஃப்தர் கார் அனுப்பி இருக்கிறார். அவன் அர்ஜவன் விஹாருக்குப் போய் நாங்கள் உடைத்துச் சிதறியவற்றை முதலில் பார்க்க வேண்டாம் என்பது எங்கள் எண்ணம்.

'வெஸ்ட்எண்டு க்ரீன்ஸ், விமான நிலையத்திற்கு அடுத்து இருக்கிறது. நீ நேராக எங்கள் வீட்டிற்கு வந்துவிடு. ஸல்மாவும் குழந்தைகளும் துபாயில் இருக்கும்போது நீ ஏன் அங்கு போகவேண்டும்?' என்று ஸஃப்தர் ஃபையஸிடம் போனில் சொல்லியிருந்தார்.

ஸ்ரீநகர்-டெல்லி விமானம் வந்தாயிற்றா என்று போனில் பார்த்தேன். ஏற்கெனவே வந்தாயிற்று என்று தெரிந்தது.

'ஒரு வேளை அவன் வரவில்லையென்றால்...?' என்று காதில் கிசுகிசுத்தான் ஸௌரப்.

சமாதானப்படுத்தும் பாவனையில் தலையை அசைத்தேன்.

ஸனம் பேசிய பிறகு பேசுவதற்கு ரகுவை அழைத்தார் ஸஃப்தர். அவன் பேசுவதற்கு எழுந்தான். அப்போது வாசலில் ஒரு டயோடா ஃபார்ச்சூனர் வந்தது. ஃபையஸ் வந்தாயிற்று.

'ஃபையஸ் காலணிகளைக் கழற்றிவிட்டு அறைக்குள் நுழைந்ததும் ஸஃப்தர் எல்லோருக்கும் கேட்கும்படியாக ஒரு நிம்மதிப் பெருமூச்சு விட்டார். ஸஃப்தர் மற்றும் அவர் குடும்பத்தினருக்குக் கை கூப்பி வணக்கம் தெரிவித்தான்.

'என்னால் என்ன சொல்ல முடியும்?' என்ற ரகு சற்றே மௌனமாக இருந்தான். ஃபையஸ் வருவதைப் பார்த்தவுடன் அவன் கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டான். ஃபையஸ் ரகுவைப் பார்த்து புன்முறுவல்செய்தான், அதற்கு ரகு சிறிது தலையை அசைத்தான். ரகு பேசத் தொடங்கினான்.

'அவள் இழப்பை அதிகமாக யார் உணர்கிறார்கள் என்றால் அது நான் தான் என்று சொல்ல விரும்பினேன். ஒருவருடன் உங்கள் எஞ்சிய வாழ்க்கையைச் செலவழிக்கத் திட்டம் போடுகிறீர்கள், அந்த ஒருவர் திடீரென்று இனிமேல் இல்லவே இல்லை என்று ஆனால், மீதி வாழ்க்கையை வைத்துக் கொண்டு என்ன செய்வீர்கள்?'

ஆண்கள் பக்கத்தில் ஒரு ஓரத்தில் ஃபையஸ் உட்கார்ந்தான். ரகு பேச ஆரம்பித்ததும் ஃபையஸ் போனை எடுத்துத் தகவல்களைப் பார்க்கத் தொடங்கினான்.

'நான் இடிந்து போய்விட்டேன். மீண்டுவர முயற்சி செய்கிறேன். நான் அதிக நேரம் உழைக்கிறேன்; ஏனென்றால்

நினைத்துப் பார்ப்பதற்கு எனக்கு நேரம் வேண்டாம் என்று நினைக்கிறேன். ஆனால் இந்தச் சோகத்தில் நான் மட்டும் தனியாக இல்லை என்பது எனக்குத் தெரியும். இங்கு இருக்கும் எல்லோரும் - ஸராவின் பெற்றோர்கள், அவளுடைய பாட்டி, அவள் நண்பர்கள் ... எல்லோரையும் பார்க்கும்போது என் துயரம் அதிகம் என்று நான் எப்படிச் சொல்லமுடியும்? நீங்கள் எல்லோரும் இந்த துக்கத்தைத் தாங்கிக் கொண்டு, இப்பவும் வலியை உணர்ந்து கொண்டு இருக்கிறீர்கள். நாம் யாருமே இனிமேல் பழையமாதிரி இருக்க முடியாது.'

ஃபையஸின் கவனம் போனிலேயே இருந்தது. கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொள்ள, ரகு சற்று நேரம் பேச்சை நிறுத்தினான். ஸராவின் உறவுப் பெண் அவனுக்கு ஒரு டம்ளர் தண்ணீர் கொடுத்தாள். கொஞ்சம் குடித்துவிட்டு ரகு தொடர்ந்தான். 'இந்த அளவுக்கு அன்பான, நேர்மறை எண்ணம் கொண்டவளும். எல்லோருக்கும் எதையும் கொடுக்கக் கூடியவளும் கனிவும் பிரியமானவளுமான ஸராவைப் போல் ஒருவரை என் வாழ்க்கையில் நான் பார்த்ததில்லை. எனக்குக் கிடைத்த மிகச் சிறந்த பொக்கிஷம் அவள் மட்டும் தான். என் வாழ்க்கையில் நான் செய்துள்ள எல்லாவற்றையும் ஊக்குவித்தவள் அவள், எல்லாவற்றிற்கும் அவளே காரணம். மறுபடியும் யாருடனும் எனக்கு அத்தகைய ஒரு உணர்வு ஏற்படப்போவதில்லை. அவள் எங்கிருந்தாலும் அவளுக்கு ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன் - நான் உனக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். எல்லா நினைவுகளுக்கும், உன்னிடமிருந்து கற்றுக்கொண்ட எல்லா நேர்மறை எண்ணங்களுக்கும். உன்னுடைய ஆத்மாவிற்கு கடவுள் அருள் கிடைக்கட்டும்!'

ரகு தன் பேச்சை முடித்தான். கண்களை மூடி நின்றுகொண்டு இருந்தான் - துக்கம் தாங்காமல். அவனை நோக்கி நடந்தாள் ஸனம். அவன் தோள் மீது கை போட்டு உட்காருவதற்கு அவனை அழைத்துக் கொண்டு போனாள்.

மேலும் சில உறவினர்கள் பேசிய பிறகு மௌல்வி பிரார்த்தனை ஓதினார், கூட்டம் முடிவுக்கு வந்ததைத் தெரிவித்தார். போவதற்கு முன்னால் ஸஃப்தரிடம் ஒவ்வொருவராக வந்து தனிப்பட்ட முறையில் வருத்தம் தெரிவித்தனர்.

❖

இரவு 7 மணிக்கு ஒரு சிலர் மட்டுமே இருந்தனர். ஸஃப்தரை

அணைத்துக் கொள்ள ஃபையஸ் வந்தான்.

‘நானும் கிளம்புகிறேன், அங்கிள்,’ என்றான்.

‘இல்லே, இல்லே. நீ அவ்வளவு தொலைவிலிருந்து வந்திருக்கே. சாப்பிட்டு விட்டுப்போ,’ என்றார் ஸஃப்தர்.

‘அங்கிள், நான் உங்களிடம் சொன்னேன். எங்களுடைய ஆண்டு ராணுவப் பயிற்சிகள் நடந்துகொண்டிருக்கின்றன. ஒரே ஒரு நளைக்குத்தான் லீவு கொடுத்திருக்கிறார் என் மேல் அதிகாரி, அதுகூட கருணை அடிப்படையில்.’

‘ஆனால் உன் விமானம் நாளைக்குத்தானே...’

‘ஆமாம். ஆனால் நான் வீட்டிற்குக் கூட போகவில்லை. மேலதிகாரி குறுந்தகவல்களாக அனுப்பிக் கொண்டிருக்கிறார்,’ என்றான் ஃபையஸ்.

ஸஃப்தர் வருத்தப்படுவது முகத்தில் தெரிந்து. ‘அப்போ இது வீடு இல்லையா?’ இப்போதும் என் குழந்தைகளுடன் டின்னர் சாப்பிடுவதாக நான் நினைத்துக் கொள்கிறேன்,’ என்று சொல்லி ரகுவைப் பார்த்தான். ‘ரகு, நீயும் சாப்பிட்டுவிட்டுப் போ.’

‘நிச்சயமாக, அங்கிள்,’ என்றான் ரகு மரியாதையாக.

‘கேஷவ், ஸௌரப். நீங்களும் தான். ஸனம், உன் நண்பர்களை இருந்து சாப்பிடச் சொல். பெண்கள் நீங்கள் ஜைனாபுடன் சாப்பிடுங்கள்.’

ஸனம் தலையசைத்தாள்.

‘பசங்களா, வாங்க, நாம் எல்லோரும் சேர்ந்து சாப்பிடலாம்,’ என்றார்.

❖

ஸஃப்தர் லோனின் சாப்பாட்டு அறைக்குள் நுழையும் ஒவ்வொரு முறையும் நான் பிரமிப்பு அடைவேன். நுணுக்கமான வேலைப்பாடுகளுள்ள அந்த 18 பேர் உட்கார்ந்து சாப்பிடக்கூடிய மேஜையில் சாப்பிட ஐந்து பேர் மட்டுமே இன்றிரவு இருந்தோம். மேஜையின் தலைப்புறத்தில் அவர் வழக்கமாக உட்காரும் இடத்தில் ஸஃப்தர் அமர்ந்திருந்தார். அவருக்கு இடது புறம் ரகுவும், ஃபையஸும், நானும் சௌரபும் அவருடைய வலப்புற நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தோம்.

என் போனை என் மடிமீது வைத்திருந்தேன். இன்ஸ்பெக்டர் ராணாவுக்கு டைப் செய்தேன்.

‘நீங்கள் தயாரா?’

‘ஆமாம். தயார். இது எதற்கு என்று இப்போ சொல்றியா?’ என்று அனுப்பினார். மிக அவசர விஷயத்துக்காகத் தயாராக இருக்கும்படி அவரிடம் ஏற்கெனவே நான் சொல்லியிருந்தேன்.

‘வெஸ்ட் எண்ட் க்ரீன்ஸிலிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கிறீர்கள்?’ என்று கேட்டு அனுப்பினேன்.

‘நான் ஹௌஸ் காஸில் இருக்கிறேன். ஒரு 40 நிமிஷங்கள்?’

‘சரி, இப்போ நீங்கள் கிளம்பிவரலாம். 238 வெஸ்டு எண்ட் க்ரீன்ஸ்!’

‘அந்தப் பெண் ஸராவின் அப்பா வீடு தானே?’

‘ஆமாம். சில போலீஸுடன் வாருங்கள், அவளைக் கொன்றவனைக் காட்டுகிறேன், ஆதாரங்களுடன்.’

‘என்ன? யார்? எப்படி? நிச்சயமாகவா?’

‘இங்கு வாருங்கள், உங்கள் எல்லாக் கேள்விகளுக்கும் விடை கிடைக்கும்.’

போனிலிருந்து தலையை எடுத்து நிமிர்ந்து பார்த்தேன். ஸஃப்தர் என்னைப் பார்த்து லேசாகப் புன்முறுவல் செய்தார்.

‘இந்த தலைமுறையினருக்கு போன் போதைப் பொருளாகி இருக்கு. ஸராவும் அப்படித்தான் இருந்தாள்.’

‘ஸாரி, அங்கிள். நான் சாப்பிட்டாயிற்றா என்று என் அம்மா கேட்டாள்.’

‘உன் பெற்றோர்களைத் தவிர வேறு யாராலும் உன்மீது அதிக ஆசை வைக்க முடியாது,’ என்றார் ஸஃப்தர்.

கைகளில் உணவுத் தட்டுகளை ஏந்தியபடி இரண்டு பேர் பரிமாற வந்தார்கள். மஞ்சள் தால், புல்கா ரொட்டிகள், கோபி ஆலு, சிக்கன் சூப் தவிர தயிர்ப் பச்சடி - இவற்றை மேஜையில் வைத்தார்கள். அந்தச் சோகமான மனநிலையை வெளிப்படுத்தும் வகையில் வழக்கமாக இருப்பது போல் பெரிய விருந்தாக இல்லாமல் சாதாரண சாப்பாடாக இருந்தது. எங்கள் தட்டுகளில் தேவையானவற்றை பரிமாறினார்கள்.

‘நான் கூட ஃபேஸ்புக்கில் போன வருஷம் சேர்ந்திருக்கிறேன். இப்போ அவர்கள் சொல்கிறார்கள், நான் இன்ஸ்டான்கிராமில் இணையவேண்டுமென்று,’ என்றார் ஸஃப்தர்.

‘இன்ஸ்டாகிராம்,’ என்றான் ஸௌரப்.

‘ஆமாம், அதுதான். அது ரொம்ப குழப்பமாக இருக்கு. வேறு எதிலாவது நான் இருக்க வேண்டுமா?’ என்றார் ஸஃப்தர்.

‘ஸௌரபிடம் அவனுக்குப் பிடித்த ஒரு ஆப் இருக்கு. அதன் மூலம் புது நண்பர்களைப் பிடிக்கலாம்,’ என்றேன்.

‘அது என்ன?’ என்றார் ஸஃப்தர்.

‘ஒன்றுமில்லை,’ என்று சொன்ன ஸௌரப், மேஜைக்கடியில் கால்களால் என்னை உதைத்தான்.

‘ஆப்கள் தான் இப்போது உலகை ஆளுகின்றன. இப்போ இன்ஸ்டாகிராமை ஃபேஸ்புக் சொந்தமாக்கிக் கொண்டுள்ளது தெரியுமா?’ என்றான் ரகு.

‘அப்படியா?’ என்றார் ஸஃப்தர் வியப்புடன்.

‘ஆம். வாட்ஸ்ஆப்பைக் கூட,’ என்றான் ரகு. சாதத்தையும் தாலையும் ரகு ஹாஸ்டலில் சாப்பிடுவது போல் கையால் எடுத்துச் சாப்பிட்டான்.

‘எனக்கு வாட்ஸ்ஆப் ரொம்பப் பிடிக்கும்,’ என்றான் ஃபையஸ். ‘தொலைவில் உள்ளவர்களோடு தொடர்பில் இருக்க உதவுகிறது!’

பரிமாறுபவர் உணவைப் பரிமாறிவிட்டார்.

‘போகும் போது கதவை மூடிவிட்டுப்போ,’ என்றார் ஸஃப்தர். ஃபையஸ் ஸஃப்தரைப் பார்த்தான், ஓரளவு திகைப்போடு, ஆனால் சிரித்துக் கொண்டே.

‘ஸாரி, நாம் ஒருவேளை ஸராவின் வழக்கு பற்றி பேசக்கூடும். மற்றவர்கள் அதைக் கேட்க வேண்டாமே என்று நினைக்கிறேன்,’ என்றார் ஸஃப்தர்.

‘ஃபையஸ் தலையை அசைத்தான். சப்பாத்தியைப் பிய்த்து தாலில் முக்கிச் சாப்பிட்டான்.

‘அந்த வாட்ச்மேனின் வழக்கு சீக்கிரமே விசாரணைக்கு வருமா?’ என்றான் ஃபையஸ்.

‘வாட்ச்மேன் அதைச் செய்யவில்லை!’ என்றார் ஸஃப்தர், அன்னியமான குரலில்.

‘அவன் செய்யவில்லையா?’ என்றான், கையில் எடுத்த சப்பாத்தி விள்ளல் பாதியிலேயே நின்றது.

‘இல்லை,’ என்றேன். முள் கரண்டியையும் கத்தியையும் தட்டில் வைத்தேன்.

‘நிச்சயமாகத் தெரியுமா? அந்த வாட்ச்மேன் லக்ஷ்மண் இல்லையா? போலீஸ் டிவியில் சொன்னார்களே, அவன் தான் கொலை செய்தான் என்று?’ கேட்டான் ஃபையஸ்.

‘எனக்கு நிச்சயமாகத் தெரியும்,’ என்றேன். ‘உண்மையில்

கொலையாளி யார் என்பது எனக்குத் தெரியும்!’

எல்லோருடைய கண்களும் ஃபையஸைப் பார்த்தன. சப்பாத்தியை வைத்துக் கொண்டிருந்த கை நடுங்கியது.

‘ஏன் எல்லோரும் என்னை இப்படிப் பார்க்கிறீர்கள்?’ என்றான் ஃபையஸ்.

‘துரோகி, என் மகனைப் போல் உன்னை நினைத்தேன்,’ என்றார் ஸஃப்தர்.

‘நீங்கள் என்ன சொல்கிறீர்கள், அங்கிள்,’ என்றான் ஃபையஸ். ஸஃப்தர் தன் நெற்றிப் பொட்டைக் கைகளால் அழுத்தினார்.

‘கேஷவ், தொடர்ந்து சொல்,’ என்றார் ஸஃப்தர்.

‘கேப்டன் ஃபையஸ்கான், ப்ளீஸ், எழுந்து நில்,’ என்றேன்.

‘ஏன்?’ என்றான் ஃபையஸ் முதலில் தயக்கத்தோடு. ஸஃப்தர் அவனை முறைத்தவுடன் அவன் எழுந்து நின்றான்.

‘உன் உதவி தேவை!’

‘என்ன?’ என்றான் ஃபையஸ்.

‘உன்னுடைய வலிமை எனக்குத் தேவை. ஒருவேளை கொலையாளி தப்பிக்க முயற்சித்தால்!’

ஸௌரப், ரகு, ஸஃப்தர் எல்லோரும் ஒன்றும் புரியாமல் விழித்தார்கள்.

‘நீ சொன்னாய்…’ ஸஃப்தர் ஆரம்பிப்பதற்குள் நான் குறுக்கிட்டேன்.

‘அங்கிள், தேவையானவற்றை நான் பேசிவிட்டேன். கொலையாளி தானே உண்மையைச் சொல்வதற்கான நேரம் இது,’ என்றேன். ஒன்றும் புரியாமல் ஒருவர் மற்றவரைப் பார்த்தனர்.

‘நான் சொல்லவேண்டியது இதுதான்! 6E766, 2018 பிப்ரவரி 8-ம் தேதி’ என்றேன்.

‘என்ன சொல்கிறாய், மச்சி, இது இல்லையே…’ ஸௌரப் சொன்னான்.

‘ஒரு நிமிஷம், ஸௌரப்!’ என்றேன். ‘விமான நிலைய சிசிடிவி பதிவுகள் என்னிடம் இருக்கு. ஒத்துக்கொள், இல்லாவிட்டால்…’

க்றீச்சென்று சத்தம் கேட்டது, ரகு தன் நாற்காலியைத் தள்ளிக் கொண்டு எழுந்து நின்றான்.

‘எனக்கு ரெஸ்ட்ரூமுக்குப் போகவேண்டும், உடனே திரும்பி

வரேன்,’ என்றான் ரகு.

‘கேப்டன் ஃபையஸ்,’ என்றேன். ரகுவைப் பார்த்துக் கண்களை உருட்டினேன். ஒரு நொடியில் அந்தத் தகவலை ராணுவ கமாண்டோ புரிந்து கொண்டான். மின்னலைப் போன்ற வேகத்தில் நாற்காலியிலிருந்து குதித்து, பின் பக்கத்திலிருந்து ரகுவைத் தன் வலுவான கைகளால் இறுக்கிப் பிடித்துக் கொண்டான்.

‘நீ எங்கேயும் போகப் போவதில்லை,’ என்றான் ஃபையஸ், அவனுடைய கை தசைகள் உப்பி இருந்தன.

‘ஏ, நான் சும்மா டாய்லெட்டுக்குத்தான் போறேன்,’ சொன்ன ரகு கண்ணாடியைச் சரி செய்துகொண்டான்.

‘இல்லை. நீ போகக் கூடாது. உட்கார், ரகு எல்லோரிடமும் என்ன நடந்தது என்று சொல், ரகு,’ என்றேன்.

ஃபையஸ் கைப்பிடியை விட்டான். ரகு மறுபடியும் உட்கார்ந்தான்.

‘என்ன நடந்தது?’ என்று கேட்டார் ஸஃப்தர்.

‘மச்சி, என்ன?’ என்று என்னைப் பார்த்துக் கேட்டான் ஸௌரப்.

‘அவன் ஹைதராபாதில் இருந்தான்,’ என்றான் ஸஃப்தர்.

நான் ரகுவைத் திரும்பிப் பார்த்தேன்.

‘அவர்களுடைய குழப்பத்தைத் தீர்க்கிறாயா?’ என்றேன்!

# அத்தியாயம் 28

ரகு பேசுகிறான்.

எனக்கு இது தெரியும் - நான் எதைச் சொன்னாலும் என்னைக் கெட்டவன் என்று தான் தீர்மானிப்பீர்கள். இந்தக் கதையின் வில்லன் நான்தான், அது இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்கும். உங்களுடைய அனுதாபத்தை நான் எதிர்பார்க்கவில்லை. எப்படி இருந்தாலும் நான் தானே அவளைக் கொன்றேன். சைவ உணவு சாப்பிடும் ஒரு தமிழ் பிராமணப் பையன் - போண்டு என்று செல்லப் பெயரை உடையவன், உண்மையில் ஒருவரைக் கொன்றிருக்கிறான். ஆனால், முக்கால்வாசி நான் அதிலிருந்து தப்பித்து விட்டேன். சந்தேகிக்கக் கூடிய முஸ்லிம்கள் சுற்றிலும் நிறைய இருந்ததால், யாருமே ஒரு தமிழ் பிராமணனை நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. தவறான எண்ணங்களை சில சமயங்களில் பிரமாதமாகப் பயன்படுத்திக் கொள்ளமுடியும்.

என் வெறும் கைகளால் நான் அதைச் செய்தேன். அந்த இரவு இன்னும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். தூங்கிக் கொண்டிருக்கும் ஒரு நபரிடம் இதை எளிதாகச் செய்யமுடியும், ஆக்ஸிஜன் வருவதை நிறுத்திவிட்டால் உங்களுக்கு ஒரு நல்ல தொடக்கம் கிடைக்கும். தூங்கிக் கொண்டிருப்பதால் முப்பது வினாடிகளுக்கு என்ன நடக்கிறதென்றே அவர்களுக்குத் தெரியாது. அதன் பிறகு விழித்துக் கொள்வார்கள், என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்வார்கள், அத்துடன் மிகவும் பயந்துபோவார்கள். பயப்பட்டால் அது அவர்களுக்குப் பெரிய பிரச்சனையாகும். பயப்படும்போது கைகளையும் கால்களையும் அடித்து உதைத்துக் கொள்வார்கள். அதனால் அவர்கள் சக்தியை இழப்பார்கள், அதோடு எஞ்சியிருக்கும் ஆக்ஸிஜனும் குறையும். ஸரா அதுமாதிரி கலவரமடைந்தாள். பறவையைப் போன்ற அவள் உடல் கழுத்தை அழுத்திக் கொண்டிருந்த என் கைப்பிடியிலிருந்து திமிறியது. அடுத்த நொடிகளில் ஆக்ஸிஜன் குறைந்த அவள் நுரையீரல்

பலவீனமாயிற்று. ஒவ்வொரு முறை என்னை அவள் உதைக்க முயற்சித்தபோது அவள் கழுத்தைச் சுற்றி இருந்த என் கை இறுகியது. எலும்பு முறிந்த என் இடது கையின் மீது அடிப்பதற்கு முயற்சி செய்தாள். அது எந்த ஒரு வித்தியாசத்தையும் ஏற்படுத்தவில்லை. என் வாட்சில் அப்போது நான் நேரத்தைப் பார்த்தது எனக்கு நினைவில் இருக்கிறது. ஒரு நிமிஷம் பத்து வினாடிகள் கழிந்துள்ளன. மகிழ்ச்சியாக கேளிக்கைகளில் ஈடுபட்டு இருக்கும் போது நேரம் பறக்கிறது என்றால், யாருடைய கழுத்தையாவது நெறிக்கும் போது அது தவழ்கிறது. இணையதளத்தில் இதைப்பற்றி பல கட்டுரைகளை நான் படித்திருக்கிறேன். ஒரு ஆள் இறப்பதற்கு ஏழு நிமிஷங்கள் வரை ஆகலாம் என்று சொல்கிறார்கள். ஏழு நிமிஷங்கள் என்றால் நானூற்றி இருபத்தி இரண்டு வினாடிகள்.

‘சரி, ஸரா, ரொம்ப குலுக்காதே, எனக்கு பயமாக இருக்கு,’ என்று அவளிடம் சொன்னது எனக்கு நினைவு இருக்கிறது.

அவள் தன் சக்தியைச் சேமித்திருக்க வேண்டும், எதிர்த்துப் போராடுவதற்குப் பதிலாக அவள் தன் கழுத்துத் தசைகளை இறுக்கிக் கொண்டிருந்தால் அவளுடைய மூச்சுக்குழாயும் நல்ல ரத்தம் செல்லும் இதயத் தமனியும் அந்த அளவுக்குச் சுருங்கியிருக்காது. ஆனால், அவளுக்கு இதெல்லாம் தெரியாது. என்னுடைய பரிதாபமான அழகான ஸரா என்னைவிட பலமடங்கு அழகாவனளாக இருக்கலாம், ஆனால் நிச்சயமாக என்னை விட புத்திசாலி இல்லை.

வெளிப்படையாக எல்லோரிடமும் பேசிப் பழகாமல் எனக்குள், என் மூளைக்குள் மட்டுமே நினைத்து, உணர்ந்து பேசுபவன் நான். நினைப்பதை, உணர்வதை வார்த்தைகளில் வெளிப்படுத்தமாட்டேன். மூச்சுவிட அவள் துடித்துக் கொண்டிருந்தபோது அந்தக் கடைசி நிமிடங்களில் நான் அவளுடன் மனதுக்குள் முழுமையாகப் பேசிக் கொண்டிருந்தது எனக்கு நினைவில் இருக்கிறது.

ஸாரி ஸரா, நான் கேக் கொண்டுவரவில்லை. எல்லாவற்றையும் என்னால் தூக்கிக் கொண்டு வரமுடியவில்லை. பாழாய்ப்போன அந்த மரத்தில் ஏறி உன் அறைக்கு வந்தேன். நீயும் உன் மாஜியும் அத்தகைய கற்கால மனிதர்களின் வழக்கத்தில் விஷயத்தில் காதலைக் கண்டுபிடித்திருக்கலாம். அது முட்டாள்தனமானது என்று நான் கருதுகிறேன். ஆனாலும் நான் அதைச் செய்தேன். ஏனென்றால் எந்த மனிதனுக்கும் நான் சளைத்தவன் இல்லை என்பதை உன்னிடம் நிரூபிப்பதற்காக. நூறு ஆட்கள் வேலை செய்யும் ஒரு கம்பெனிக்கு நான்

சொந்தக்காரன் என்பது ஒரு விஷயமே இல்லை. இந்த உலகில் வேறு எவனுமே கொடுக்க முடியாததை என்னால் உனக்குக் கொடுக்க முடியும். என் கம்பெனியில் உனக்கு பங்கு கூடக் கொடுத்தேன். மரமேறி உன் அறைக்குள் வருவதற்கு முன்பு வரை நான் ஒரு பயங்கொள்ளி போண்டுதான் - ஒரு ஆண்மகனல்ல. ஆனால் இப்போது பார், ஒரு போண்டுவிற்கு இது ஒன்றும் மோசமில்லை, இல்லையா?

ஒரு மாதமாக என் கை மற்றும் தோள் தசைகளை உறுதியாக்கப் பயிற்சி செய்தேன். ஒரு கையைப் பயன்படுத்தி மரமேறும் பயற்சி மேற்கொண்டேன்; அதனால் ஒரு கை எலும்பு முறிந்த போதும் இன்று என்னால் ஏறமுடிந்தது. அதனால் தான் என்னால் அழுத்தமாக உன் கழுத்தை நெறிக்க முடிகிறது. நீ எதிர்ப்பது குறைந்து வருகிறது. உன்னுடைய நுரையீரல்களுக்கு அது புரிகிறது. அவை எவ்வளவு கஷ்டப்பட்டு முயற்சி செய்தாலும் ஆக்ஸிஜன் கிடைக்கப் போவதில்லை. தண்ணீரிலிருந்து வெளியே வந்த மீனைப் போல உன் உடல் சில நொடிகளுக்கு நடுங்குகிறது, பிறகு தளர்ந்துவிட்டது. உனக்கு மீன் சாப்பிடப் பிடிக்கும் இல்லையா, ஸரா? இப்படித்தான் துடிக்கும். அதனால் தான் நான் சைவ உணவு உண்பவனாக இருக்கிறேன் - பலவீனமானவன் என்பதால் அல்ல.

உன்னைக் கொல்ல நான் விரும்பவில்லை. அந்த மாதிரியான ஆள் நான் இல்லை என்பது உனக்குத் தெரியும். தீவிரவாத மட்டுமல்ல, வாக்குவாதத்தையும் நான் வெறுக்கிறேன். கேஷவ் எப்படிக் கூப்பிடுவான் என்று நினைவிருக்கிறதா? எனக்குக் கோபம் வரும்படியாக அவன் பேசுவான், ஆனால் அதற்கு ஒருநாளும் நான் இடம் கொடுக்கமாட்டேன். தவிர மனதில் தோன்றியதை உடனே செய்துவிடுபவனும் இல்லை நான். பொறாமை மற்றும் கோபத்தால் என் மனம் நிறைந்திருக்கிறது என்பதல்ல. இல்லை அது கிடையவே கிடையாது. முட்டாள்கள் மட்டுமே மனதில் தோன்றியதை உடனே செயலில் காண்பிப்பார்கள். ரகு வெங்கடேஷ் ஆகிய நான், தோசைக்கல் போன்ற கறுப்பு, சோடாபுட்டி கண்ணாடி, அசிங்கமான குழந்தைகளை உருவாக்கும் தந்தை (என் வார்த்தைகள் இல்லை), அல்லது பயங்கொள்ளி போண்டு - என்பதெல்லாம் எனக்குப் பொருந்தலாம். ஆனால் நான் முட்டாள் இல்லை. பலவாரங்களாக ஆராய்ச்சி செய்து இதற்காகத் திட்டமிட்டிருக்கிறேன். என்னுடைய திட்டப்படி போலீஸ் அல்லது வேறு எந்த மடையனாவது உன்னைக் கொன்றவனைக்

கண்டுபிடிக்க முயற்சி செய்தால் ஒரு வட்டத்திற்குள்ளேயே சுற்றிச் சுற்றி வருவார்கள். ஓ, அந்த சிறப்பான மடையன் இதைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று அலைந்து திரிவானே அவன் யாரென்று எனக்குத் தெரியும். துப்புத்துலக்க முடியாமல் வெறுத்துப் போய் ஒழிந்து போவான். ஸரா, இந்த ஒன்றுக்காக நீ என்னை நினைத்துப் பெருமைப்படலாம். இப்போது உடனே உன்னை விடுதலை செய்துவிடலாமா என்று கூட ஆசைப்படுகிறேன். என்னுடைய பிரமாதமான திட்டத்தைப் பற்றி உன்னிடம் சொல்ல விரும்புகிறேன். என் புத்திசாலித்தனத்தை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன். நீ புகழ்வதை நான் கேட்கவேண்டும் சரி, போவதற்கு இரண்டு நிமிஷங்கள் உள்ளன.

நீ அசைவதை நிறுத்திவிட்டாய். அது ஒரு நல்ல அடையாளம். நிச்சயமாக நீ அதற்குள் செத்திருக்கமாட்டாய், சும்மா மயக்கமாக இருப்பாய். எது முதலில் வேலை செய்தது என்று எனக்குத் தெரியவில்லை. உன்னுடைய இதயத்தமனிகளை நான் அழுத்தினேன் - அது மூளைக்கு ரத்தம் போவதை நிறுத்தும். அதே நேரம் உன் மூச்சுக்குழாயையும் நெறித்தேன். அதனால் உன் நுரையீரல்களில் ஆக்ஸிஜன் இல்லை. ஒருவேளை இரண்டுமே காரணமாக இருந்திருக்கலாம். நான் பயாலஜி படித்ததில்லை. தொழில் நுட்பம் தான் என்னுடையது. இன்னும் ஒரு நிமிஷம்.

நாம் ஒன்றாக இணையலாம் இன்று இரவு என்று நீ விரும்பினாய். நான் மாட்டேன் என்றேன் - கடைசி முறையாக ஒரு தடவை உடல் உறவு வைத்துக்கொள்ளலாம் என்று விரும்பியபோதும். நீ ஆச்சரியப்பட்டாய். இதைப்பார், எனக்கு நேரமில்லை, தவிர, எந்தத் தடயத்தையும் விட்டுச் செல்ல நான் விரும்பவில்லை. இதெல்லாம் இருக்கட்டும், இதுவரை இதைக் கேட்க எனக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை; அவனோடு என்னை ஒப்பிட்டால் நான் எப்படி? நான் உடல் கட்டு உள்ளவன் அல்ல. எனக்கு ஆறு பேக்கோ அல்லது ஆறு அடி உயரமுள்ள உடலோ இல்லை. எனக்கு ஆறு இன்ச் கூட இல்லை - நான் சொல்வது உனக்குப் புரியும். அவன் பெரியவனா? ஏன் இதைப் பற்றி நினைக்கிறேன் என்று எனக்குத் தெரியவில்லை. ஓகே. ஏழு நிமிஷங்களாயிற்று, பை, ஸரா.

குரல்வளையிலிருந்து என் கையை எடுத்தது எனக்கு நினைவுக்கு வருகிறது. கழுத்தை நெறுக்கியதால் கறும்சிவப்பு காயங்கள் அவள் கழுத்தில் காணப்பட்டன - பேரார்வத்தோடு முத்தமிடும் போது ஏற்படுவது போல்; அவற்றை விட சற்றே

பெரியதாக வடுக்கள். கட்டிலின் நடுவில் அவள் உடலைக் கிடத்தினேன். மேஜை விளக்கைப் போட்டேன்.

நான் அவள் அறைக்கு வந்தபோது நேரம் இரவு 1:50. தான் இப்போது நேரம் 2:45. ஐம்பத்தி ஐந்து நிமிஷங்களுக்குள் நான் சாதித்ததை நினைத்து என்னையே பாராட்டிக் கொண்டேன். நான் அவளுடன் பேசினேன், ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதாகப் பராசாங்கு செய்தேன். பிறகு கொன்றேன். எல்லாமே ஒரு மணி நேரத்திற்குள். நான் புத்திசாலி மட்டுமில்லை. மிகத் திறமையானவனும் கூட.

என்னுடைய கணக்குப்படி நான் 3:30 மணிக்குப் போக வேண்டும். அதற்கு முன்னால் சில விஷயங்களைச் செய்ய வேண்டும். ஸராவின் போனை முதலில் எடுத்தேன். அவள் கட்டைவிரலை போனின் தொடுமிடத்தில் வைத்தேன். அவள் விரல்கள் ஐஸ் குச்சிகள் போல் இருந்தன. இருந்தாலும் முதல் முறை தொட்டதுமே அது திறந்தது.

விசுவாசமான நாய்க்குட்டியைப் போல் உடனே பதில் அனுப்பக்கூடியவன் யார் என்று எனக்குத் தெரியும், அதனால் அவனுக்குத் தகவல் அனுப்பினேன். கேஷவ் ராஜ்புரோஹித்தோடு தகவல் பரிமாற்றம் செய்தேன். அவனும் அவனுடைய குண்டாக இருக்கும் அவன் நண்பனும் இருக்கும் முட்டாள்தனமான போட்டோ தெரிந்தது. நான் ஒரு தகவல் அனுப்பினேன்.

‘அப்படியானால் நீ இனிமேல் வாழ்த்து கூட சொல்லமாட்டாயா?’ அவன் பதில் அனுப்பவில்லை. மற்றொன்றை அனுப்பினேன்.

‘இன்று என்னுடைய பிறந்தநாள். உனக்கு நினைவு இருக்கும் என்று நம்புகிறேன்.’

கேஷவின் பதிலுக்காகக் காத்திருக்கும்போது படுக்கையைச் சரிசெய்தேன். ஸராவைப் புரட்டிப் போட்டு பெட்ஷீட்டை மாற்றினேன். அவள் அலமாரியில் எப்போதும் துவைத்தவை இருக்கும். ஏற்கெனவே விரித்திருந்ததை எடுத்து மடித்து என் பையில் வைத்துக் கொண்டேன். மறுபடியும் போனை எடுத்தேன். நீல டிக்குகள் காணப்பட்டன, அவன் லைனில் இருக்கிறான் என்பது புரிந்தது. எனக்கு அது தெரியும்! காதலில் தோல்வியுற்ற அந்த மடையன் ஸராவின் பிறந்தநாளன்று தூங்கமாட்டான் என்று எனக்குத் தெரியும்! இன்னும் சில தகவல்களை அனுப்பினேன்.

‘நீ வாழ்த்தவில்லையே என்று ஆச்சரியப்பட்டேன்.’

‘எப்படியானாலும் உன்னைப் பற்றி ஏன் நினைத்துக்

கொண்டிருக்கிறேன் என்று தெரியவில்லை.’

‘நீ பிஸியாக இருக்கிறாய் என்று நினைக்கிறேன்.’

அவன் பதில் அனுப்பவில்லை. நான் வாட்சைப் பார்த்தேன். இன்னும் இருபது நிமிஷங்களில் நான் இங்கிருந்து போகவேண்டும். என்ன செய்வது என்று தெரியாமல் மேலும் சிலவற்றை டைப் செய்தேன்.

‘நீ இருக்கிறாயா அங்கே?’

‘உன்னை மிஸ் பண்ணுகிறேன்.’

ஒரு நிமிஷத்திற்குப் பிறகு, அவன் டைப் செய்வது தெரிந்தது.

‘ஓ, நிஜமாகவா?’ என்று அனுப்பினான்.

‘பிரமாதம், தூண்டிலில் மீன் சிக்கிவிட்டது,’ எனக்கே நான் சொல்லிக் கொண்டேன். அப்படியும் இப்படியுமாகப் பத்து நிமிஷங்களுக்கு வேண்டாதவற்றைப் பேசிவிட்டு, ஸராவுக்கு வாழ்த்து தெரிவிப்பதற்கு அறைக்கு வருவதாகத் தகவல் அனுப்பினான்.

விசுவாசமான அந்த நாய்க்குட்டி கிளம்பி வரும்போது, எனக்கு வெளியேறுவதற்கான நேரம் வந்துவிட்டது. ஸராவின் போனை எடுத்து அதன் பவரை அணைத்தேன். திரும்பப் போட்டேன். பாஸ்கோட் கேட்டது. இனிமேல் யாராவது அவளுடைய கைவிரல் ரேகையை வைத்துத் திறக்கமுயற்சித்தால் அது வேலை செய்யாது. சார்ஜில் அதைப் போட்டேன். என் கை விரல் பட்ட இடங்களிலெல்லாம் சானிடைஸர் மற்றும் டிஷ்யூ காகிதத்தால் அழுத்தித் துடைத்தேன். பயன்படுத்திய டிஷ்யூக்களை அள்ளி என் பைக்குள் திணித்துக் கொண்டேன். ஜன்னலைத் திறந்தேன். டெல்லியின் பிப்ரவரி மாதக் குளிர் காற்று என் முகத்தில் அறைந்தது. நேரம் காலை 3.04. ‘நான் ஜேம்ஸ் பாண்டு’ என்று சொல்லிக்கொண்டேன். மாமரத்தின் கிளையைப் பிடித்து இறங்கி வெளியேறினேன்.

அவுட்டர் ரிங் ரோடுவரை நடந்து சென்றேன். உபர் டாக்ஸியைப் பிடித்துப் போய் ஒரு சாட்சியத்தை விட்டுச் செல்ல நான் ஒன்றும் முட்டாளில்லை. ஆட்டோவுக்குக் காத்திருக்கும்போது சூடு பறக்கக் கைகளைத் தேய்த்துக் கொண்டேன். பத்து நிமிஷங்களுக்குப் பிறகு ஒரு ஆட்டோ கிடைத்தது.

‘விமான நிலையம்,’ என்றேன் டிரைவரிடம்.

‘யாரையும் ஏற்றிக் கொள்வதாக இல்லை,’ வீட்டுக்குப் போகிறேன்’ என்றான்.

ஊதாகலர் இரண்டாயிரம் ரூபாய் நோட்டுகளை எடுத்து அவனுக்குக் காட்டினேன்.

‘என்ன நினைக்கிறே?’ என்றேன்.

‘ஸார். நான் வீட்டில் என்ன செய்யப் போகிறேன்?’ என்றான்.

# அத்தியாயம் 29

‘விமான நிலையமா?’ என்றான் ஸௌரப். அவன் ரொம்பக் குழப்பத்தில் இருந்தான் - ஸஃப்தர் மற்றும் ஃபையஸைப் போல.

ரகு அமைதியாக உட்கார்ந்திருந்தான் - அவனுக்கு எதிரில் இருந்த காலி நாற்காலியை முறைத்துப் பார்த்தபடி.

‘என்ன நடக்கிறது என்று எனக்குப் புரியவில்லை,’ என்றார் ஸஃப்தர் கடைசியில். ‘ஹைதராபாத்தில் ஒரு ஆஸ்பத்திரியில் அவன் அட்மிட் ஆகியிருந்தான். நான் அவன் பெற்ரோர்களிடம் விசாரித்துவிட்டேன்,’ என்றார்.

‘ரானா அவனுடைய போன் பதிவுகளைக் கைப்பற்றியுள்ளார். அன்று இரவு அவனுடைய ஸெல்போன் டவர் அப்பல்லோ ஹாஸ்பிடலைக் காட்டியது,’ ஸௌரப் சொன்னான்.

ரகு சிரித்தான். என் பக்கம் திரும்பினான்.

‘பார், இன்னும் அவர்கள் நம்பவில்லை, பார்த்தாயா, என் திட்டம் எவ்வளவு கச்சிதமாக இருந்தது என்று?’

‘ஆனால் போதுமான அளவு கச்சிதமாக இல்லை, நிச்சயமாக?’

‘மச்சி, நான் வற்புறுத்திக் கேட்கிறேன். என்ன நடக்கிறது என்று எங்களுக்குச் சொல்,’ ஸௌரப் கத்தினான்.

‘உன்னுடைய போனில் பயண ஆப் ஏதாவது இருக்கா?’

‘க்ளியர்டிரிப், மேக்மை டிரிப் ஆப் இரண்டுமே இருக்கு, ஏன்?’

‘எதையாவது ஒன்றைத் திற. பயண விவரங்களைத் தேடு, நாளை இரவு என்று வைத்துக் கொள், ஹைதராபாத்திலிருந்து டெல்லிக்கு, மறுபடியும் மறுநாள் காலை திரும்புவதற்கு.’

சில வினாடிகள் போனில் தேடினான் ஸௌரப்.

‘தினமும் பதினைந்து நேரடி விமானங்கள் உள்ளன,’ ஸௌரப் சொன்னான்.

‘ஹைதராபாத்திலிருந்து டெல்லிக்குக் கடைசி விமானம்?’ என்றேன்.

‘இண்டிகோ 6E766 ஹைதராபாதிலிருந்து இரவு 11.30க்குக் கிளம்பி இரவு 1.10க்கு டெல்லியை அடைகிறது,’ என்றான் ஸௌரப்.

ஸௌரபைப் பார்த்து சிரித்தேன்.

‘ஓ, இப்போது புரிகிறது. அவன் விமானத்தைப் பிடிக்கிறான். இரவு 1.10க்கு இங்கு வருகிறான், ஐஐடிக்குப் போகிறான்!’ என்றான்.

‘அந்த நேரத்தில் அரைமணி நேரத்துக்குள்ளாக விமான நிலையத்தை அடைய முடியும்!’

‘சே, அவன் ஆஸ்பத்திரியிலிருந்து நழுவியிருக்கிறான்,’ நழுவின திட்டம் புரிந்தவனாக ஸௌரப் சொன்னான்.

‘ஆமாம், நன்றாகத் திட்டம் தீட்டப்பட்டிருக்கிறது.’

‘ஓ, அப்படியானால் அவள் இறந்த அன்று இரவு ஸராவுக்கு நீ அனுப்பிய தகவல்கள் எல்லாம்...?’ என்றான் ஸௌரப்.

‘நிச்சயமா அது ரகு தான்,’ என்றேன்.

‘ஓ, இல்லை,’ அக்கறையோடு என்னை ஒரு பார்வை பார்த்தான் ஸௌரப்.’

‘பரவாயில்லை. இப்போது காலையில் டெல்லியிலிருந்து ஹைதராபாத்துக்குச் செல்லும் முதல் விமானம் எப்போது என்று பார்,’ என்றேன்.

‘இண்டிகோ 6உ 765 காலை 4.55க்கு டெல்லியிலிருந்து புறப்பட்டு காலை 7.05 மணிக்கு ஹைதராபாதை அடைகிறது,’ என்று சொன்னான் ஸௌரப்.

‘அவன் ஹைதராபாதைக் காலையில் வந்து அடைந்தபோது போக்குவரத்து அதிகமில்லை. அதனால், முப்பது நிமிஷங்களில் அப்பல்லோவை அடைய முடியும். நிச்சயமாக அவனுடைய படுக்கையில் காலையில் 7.45க்குள் இருக்க முடியும்.’

‘ஓ,’ என்றான் ஃபையஸ். அவனுக்கு ரகு எப்படி இதைச் செய்தான் என்பது புரிந்தது. ஸஃப்தர் விறைப்பாக மிகுந்த அதிர்ச்சியோடு உட்கார்ந்திருந்தார்.

‘அவனுடைய போன் எங்கிருந்தது என்பது பற்றி நீ சொன்னாயே...’ ஸஃப்தர் சொன்னார்.

‘ஆமாம். ரானா போன் டவர் எங்கிருக்கிறது என்று விசாரித்தார். உண்மையில் அவன் நடுநிசியில் அவளை வாழ்த்தித் தகவல் அனுப்பியிருக்கிறான். அந்தத் தகவல் பரிமாற்றங்களை அவன் உன்னிடம் காண்பித்தானே!,’ என்றான்

ஸௌரப்.

‘ஆம், எனக்குத் தெரியும்,’ என்றேன்.

‘உண்மையில் மச்சி, உனக்கு எப்படி அவன் மீது சந்தேகம்...’ என்று ஸௌரப் கேட்க ஆரம்பித்ததும் நான் தடுத்தேன்.

‘கோலு, ஞாபகம் இருக்கா? நான் பிரயாணம் செய்யப் போறேன் என்றேனே?’

‘ஆமாம், ஒரு வாரம் முன்னால்.’

‘நான் ஹைதராபாதுக்குப் போனேன்.’

‘ஏன்?’ என்று ஸௌரப் கேட்டான்.

# அத்தியாயம் 30

ஒரு வாரத்திற்கு முன்பு.

‘நீ ஒன்றும் அவனோடு உன்னை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டாம். அவன் பெரிய பணக்காரனாக இருந்தால் இருக்கட்டுமே,’ என்று மறுபடியும் எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். படுக்கையில் கிடந்தேன். ஆனால் தூக்கம் வரவில்லை. நான் ரகுவிடம் கடந்த காலத்தில் பலமுறை பேசியிருக்கிறேன். ஆனால் அது என் தூக்கத்தை இதுவரை கெடுத்ததில்லை. இப்போது இதற்குக் காரணம் அவன் சொன்னது ஏதாவது இருக்குமோ? மறைமுகமாக ஏளனம் அல்லது அவமரியாதை செய்தானோ? அவனுடன் பேசியதை மீண்டும் மனதில் ஓட்டிப் பார்த்தேன். அவனைச் சும்மா கூப்பிட்டேன். ஸராவை ஃபையஸ்தான் கொன்றான், அதை நாங்கள் கண்டுபிடித்தோம் என்பதைச் சொன்னேன். அவர்களுக்கிடையே இருந்த தொடர்பைச் சொன்னேன். கோரமான கர்ப்பப் பரிசோதனைக் கருவிகளைப் பற்றி சொல்லவில்லை. எதிர்பார்த்த மாதிரியே அவன் நடந்து கொண்டான் - ஃபையஸைக் கெட்ட வார்த்தைகளால் திட்டினான், உணர்ச்சி வசப்பட்டான். பிறகு எனக்கு நன்றி சொன்னான்; அவனிடம் இருப்பது எதற்குமே மதிப்பில்லை என்றான். அவள் இல்லாமல் வாழ்க்கை முழுமையாக இல்லை என்றும் சொன்னான்.

ஏன் அந்த வார்த்தைகள் என் மூளையில் ஆழமாகப் பதிந்திருக்கிறது? அது ரொம்பப் பழக்கமானதாகத் தோன்றியது. சிலமுறை என் மனதில் திரும்பத் திரும்பச் சொன்னேன். என் போனைப் படுக்கைக்குப் பக்கத்திலிருந்த மேஜையிலிருந்து எடுத்தேன்.

கடைசியாக நான் ஸராவுடன் வாட்ஸ் ஆப்பில் பேசியதைத் திறந்து பார்த்தேன் - என் வாழ்க்கையின் மிக விலை உயர்ந்த பொருட்களில் அதுவும் ஒன்று. அந்த நாளிலிருந்து பலமுறைகள் அந்தத் தகவல்களைப் படித்து வருகிறேன். மறுபடியும் அதைத் தள்ளிக் கொண்டே வந்தேன். நான் தேடிக் கொண்டிருந்தது கடைசியில் இருந்தது.

‘நீ இல்லாமல் வாழ்க்கை முழுமையாக இல்லை.’

ஒரு அதிர்வு என் உடல் முழுவதும் ஓடியது. இல்லை, இது தற்செயலானது என்று சொல்லிக் கொண்டேன். சௌரபைப் பார்த்தேன். நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

மறுபடியும் படுக்கையில் விழுந்தேன். அவன் ஹைதராபாதில் இருந்தான். ஹாஸ்பிடல் அதை உறுதி செய்தது. ஸெல்போன் அங்கு இருந்ததை டவர் காண்பித்தது, அப்போது என்னுள்ளிருந்த ஒரு குரல் அந்த எண்ணத்தைத் தடுத்தது. ‘அது ஃபையஸ் தான், அதில் கவனத்தைச் செலுத்து,’ என்றது.

படுக்கையில் திரும்பிப் படுத்தேன். தூங்கியே ஆகவேண்டும் என்று முடிவு செய்தேன், அப்போது வேறு ஒரு எண்ணம் உதித்தது.

‘ஃபையஸ் விவாகரத்து வக்கீல்களைத் தேடிக் கொண்டிருந்தபோது ஸராவுக்கு ஏன் தீங்கு இழைக்க வேண்டும்? அதுவும் அவள் கர்ப்பம் என்று அவனுக்குத் தெரிந்தபோது? அவளுக்காக ஸல்மாவை விட்டு விலகத் தயாராக அவன் தோன்றினான்.

நான் திரும்ப எழுந்து உட்கார்ந்தேன். க்ளியர் ட்ரிப் ஆப்பை என் போனில் பார்த்து, எல்லா விமானங்களின் பிரயாண விவரங்களைத் தேடினேன். ஹைதராபாத், மற்றும் டெல்லி, நேரவாரியாக அவற்றைப் பிரித்தேன். கடைசி விமானம் இரவு 11.30 மணி. திரும்ப வரும் முதல் விமானம் காலை 4.55 மணி. சிரமம் தான். ஆனால் செய்ய முடியும்.

சான்பிரான்ஸிஸ்கோவில் ரகு இருந்தபோது அவனுடன் பேசியதை நினைத்துப் பார்த்தேன்.

‘எனக்குப் பழக்கமாகிவிட்டது. அந்த மாதிரி பயணங்களை நான் எப்பவும் செய்கிறேன்,’ என்றான் அப்போது.

நானே இந்த பயணங்களை மேற்கொண்டு இப்படிச் செய்யமுடியுமா என்று சோதித்துப் பார்க்க விரும்பினேன். உடனே விளக்கைப் போட்டேன்.

‘என்ன ஆயிற்று,’ என்றான் ஸௌரப்.

‘என்னால் தூங்கமுடியவில்லை. எனக்கு எங்கேயாவது போக வேண்டும்.’

‘என்ன?’ என்றான் ஸௌரப்.

❖

அவன் போன மாதிரியே பயணம் செய்தேன் - ஆனால் பின்நோக்கி. டெல்லியிருந்து ஹைதராபாத்துக்குக் காலை 4.55 மணிக்கு 6ஈ 765, முதல் விமானத்ததில் புறப்பட்டேன். அது ஹைதராபாத்தை காலை 6.50க்கு அடைந்தது - சிறிது நேரம் முன்பாகவே. விமான நிலையத்திலிருந்து வெளியே வரும்போது நான் சில சிசிடிவி கேமராக்களைக் கவனித்தேன். அவற்றின் பதிவுகளைப் பார்ப்பதற்கு ரானா உதவுவார் என்று நினைத்தேன், காலை 7.05 மணிக்கு ராஜீவ் காந்தி இன்டர்நேஷனல் விமான நிலையத்தில் இருந்து வெளியே வந்தேன். ஊருக்குள் போவதற்கு பல டிரைவர்கள் தயாராகக் காத்துக் கொண்டிருந்தார்கள். என் விவரங்கள் எதையும் அவர்கள் கேட்கவில்லை, அப்பல்லோ ஹாஸ்பிடலில் என்னை இறக்கிவிட்ட டாக்ஸி டிரைவர் கட்டணத்தைப் பணமாகப் பெற்றுக்கொண்டார். அந்தக் காலை நேரத்தில் போக்குவரத்து மிகவும் குறைவாக இருந்ததால் காலை 7.29 மணிக்கு ஹாஸ்பிடல் கேட்டை அடைந்தேன். வரவேற்பு ஹாலை அடைந்தேன். அங்கு ஒரு பொது டாய்லெட்டைப் பார்த்தேன். அவன் தன்னுடைய உடைகளைக் களைந்துவிட்டு ஹாஸ்பிடலின் பச்சை நிற உடையை அணிந்திருக்க வேண்டும் - உள் நோயாளிகள் அணியும் அங்கி. நேரத்தைப் பார்த்தேன் - காலை 7.33. ஸரா இறந்த அன்று காலை 8.30க்கு ரகுவை ரானா கூப்பிட்டதை நினைத்துப் பார்த்தேன். ரானா போனில் அழைத்ததற்குச் சற்று முன்னால்தான் ரகு அங்கு வந்து சேர்ந்திருப்பான். ரானாவின் போனில் அந்தப் பேச்சைக் கேட்டேன். ஒரு நர்ஸ் வந்து அந்தப் போனை எடுத்து ரகுவிடம் கொடுத்தாள். அவளுக்கு ஒரு கிறிஸ்தவப் பெயர்.

நான் லிஃப்டில் ஏறி தனி அறைகள் உள்ள முதல் மாடியை அடைந்தேன். ஹாஸ்பிடலிலிருந்து யாரும் பார்க்காமல் வெளியேற வேண்டும் என்றால் முதல்மாடி அறை தான் - ஜன்னல் வழியாக வெளியேற வசதியாக - இருக்கும் என்று நினைத்திருப்பான்.

‘ஸார், உங்களுக்கு என்ன வேண்டும்?’ ஒரு நர்ஸ் கேட்டாள்.

‘என் நண்பன் ஒருவர் இங்கு இருந்தான். அவனுக்கு ஒரு நர்ஸ் உதவி புரிந்தாள். அவளைப் பார்க்க விரும்புகிறேன், நன்றி சொல்ல,’ என்றேன்.

‘அவள் பேர் என்ன?’

எனக்கு எதுவும் நினைவில்லை.

‘நினைவுக் கொண்டு வர முயற்சிக்கிறேன். ஜென்னி, இல்லை ஜேனி. அவள் பேச்சில் தெலுங்கு வாடை அடித்தது,’ என்றேன்.

‘ஓ, ஜேனி அந்தோனி, ஸார்,’ என்றாள் அவள். ‘இங்குதான் இருக்கிறாள். கேன்டீனில் பாருங்கள். காலை உணவு சாப்பிட அங்கு போயிருப்பாள்.’

❖

‘பத்தாயிரம் ரூபாய் டிப்ஸ் கொடுக்கும் ஒரு நோயாளியை யாரால் மறக்க முடியும்?’ நான் ரகுவின் போட்டோவைக் காட்டியவுடன் அவள் சொன்னாள்.

ஹாஸ்டல் ஸ்டாஃப் கேன்டீனை நெருங்கியவுடன் மெதுவடை மற்றும் டெட்டால் வாசனை வந்தது. அறையில் இருந்த மேடையில் பிளாஸ்குகளில் டீயும் ஸ்நாக்ஸ்களும் காணப்பட்டன. கொத்தனார்கள், ப்ளம்பர்கள், கம்பௌண்டர்கள், லேப் உதவியாளர்கள், அக்கௌண்டன்டுகள், நர்ஸ்கள்’ என்று ஹாஸ்பிடலின் எல்லா ஊழியர்களும் அங்கு இருந்த மேஜைகளில் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நான் ஜேனியுடன் பேசுவது யார் காதிலும் விழாமல் இருக்க - தனியாக ஓரத்தில் இருந்த ஒரு மேஜையில் உட்கார்ந்தேன்.

‘நீங்கள் தான் அவனைப் பார்த்துக் கொண்டீர்களா?’ என்ன, ஒருவாரம் இருந்தானா?’

‘ஐந்து நாட்கள். அவர் இங்கிருந்து போகும் போதும் அவர் கையில் கட்டு இருந்தது. அவருக்குச் செய்யப்பட்ட பரிசோதனைகள் எல்லாம் சரியாக இருந்ததால் அவர் ஹாஸ்பிடலை விட்டுப் போகலாம் என்று டாக்டர் சொன்னார்.’

‘நான் கவலைப்படக் கூடாதே என்று அவன் என்னிடம் எல்லாவற்றையும் சரியாகச் சொல்லவில்லை. அதனால்தான் உங்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்று நான் வந்தேன்.’

‘பரவாயில்லை ஸார்.’

‘அவனுக்கு உண்மையில் என்ன ஆயிற்று?’

‘இடது கையில் சிறு அளவு முறிவு. கால்களிலும் கைகளிலும் சிராய்ப்புகள். கணுக்கால் சிறிது வளைந்திருந்தது.’

‘அவன் இங்கு தங்கியிருந்தபோது வழக்கத்திற்கு மாறாக எதையாவது சொன்னானா, செய்தானா?’

‘எதுமாதிரி? அப்படி ஒன்றுமில்லை ஸார். அவர் அதிகம் பேசாத டைப் - உங்களுக்கே தெரிந்திருக்குமே? அவருடைய பெற்றோர்கள் அவரைப் பார்க்க வந்தார்கள். இல்லாவிட்டால், அவர் ஓய்வாக இருப்பார்; போனில் இருப்பார்.’

‘யாரையாவது போனில் கூப்பிட்டுப் பேசினானா?’

‘அவருக்கு நிச்சயிக்கப்பட்டிருந்த பெண்ணுடன் மட்டும். நான் அவள் போட்டோவைப் பார்த்தேன். ரொம்ப அழகாக இருந்தாள். யாரோ முஸ்லிம் பெண். அவள் இறந்துவிட்டாளாமே, அவர் சொன்னார். ரொம்ப வருத்தமாக இருக்கிறது.’

‘ஆம், அவள் ஸரா!’

‘அது அந்தப் பெண்ணின் பிறந்தநாள் போலிருக்கிறது. அவளுடன் இருக்கமுடியவில்லையே என்று இவர் கவலையாக இருந்தார். தான் அந்தப் பெண்ணுக்கு முதலில் வாழ்த்துக்கள் சொல்லவேண்டுமென்று தவித்தார். எனக்கு இன்னும் நினைவிருக்கிறது, நான் அவருக்கு உதவினேன்.’

நான் வியப்புடன் அவளைப் பார்த்தேன். ‘உதவியா?’ என்றேன்.

‘ரகு ஸார் சீக்கிரமே 9 மணிக்குள்ளாகத் தூங்கவேண்டுமென்று டாக்டர் சொல்லியிருந்தார். அவர் அந்தப் பெண்ணுக்குப் பாதி இரவில் தகவல் அனுப்ப விரும்பினார். அதனால் நான் அவருக்கு உதவி செய்தேன்.’

‘எப்படி?’ என்றேன்.

‘அன்று எனக்கு இரவு டியூட்டி. என்னிடம் அவர் தன் போனைக் கொடுத்தார். இனிய பிறந்தநாள் வாழ்த்துக்கள் தகவலை ஏற்கெனவே அவர் டைப் செய்து வைத்திருந்தார். சரியாக நடுநிசி 12 மணிக்கு செண்ட் பட்டனை அழுத்தச் சொன்னார். நான் அதைச் செய்தேன். ஸரா மேடத்துக்கு வந்த முதல் பிறந்தநாள் தகவல் ரகு ஸார் அனுப்பியதுதான். உலகிலேயே சிறந்த பாய்ஃபிரண்டு அவர் தானே, ஸார்?’ என்றாள்.

‘ஆமாம்,’ என்று சொல்லி ஒரு நிம்மதிப் பெருமூச்சு விட்டேன்.

‘நிச்சயமாக அவன்தான்!’ என்றேன்.

# அத்தியாயம் 31

ரகு கைகளைத் தட்டினான்; அந்தச் சத்தம் எல்லாரையும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

‘என்ன? கேஷவின் கடுமையான உழைப்பை யாராவது பாராட்ட வேண்டாமா?’ என்று சொன்ன ரகு பெரிதாகச் சிரித்தான்.

‘அதில் சிரிப்பதற்கு என்ன இருக்கு?’ என்றான் ஸௌரப்.

‘இந்த முட்டாளை நான் குறைவாக மதிப்பிட்டுவிட்டேன்,’ என்றான் ரகு.

‘இல்லை, மூடனே, உன்னை ரொம்ப அதிகமாக மதிப்பிட்டுக் கொண்டாய்,’ என்றான் ஸௌரப்.

‘சரி, ஆனால், அவனை யார் அடித்து உதைத்தது?’ கேட்டார் ஸஃப்தர்.

‘அங்கிள், ஆயிரம் கோடி ரூபாய் மதிப்புள்ள ஒரு கம்பெனியை உருவாக்க முடிந்த ஒருவனால், தன்னைத் தாக்க ஒரு குண்டர் கும்பலை ஏற்பாடு செய்ய முடியாதா?’ என்று கேட்டேன்.

‘நல்ல அட்டகாசமான வேலை, கைகால் முறிவு போன்றவை,’ என்றான் ஸௌரப்.

‘ஜனாதிபதியின் தங்கப்பதக்கம் வாங்கியவனாயிற்றே,’ என்றேன்.

‘தன்னுடைய போனை ஜேனிக்குக் கொடுக்கிறான், குட்நைட் சொல்கிறான், ஜன்னல் வழியாக ஏர்போர்ட் தப்பிச் செல்கிறான், டெல்லிக்குப் பறக்கிறான், சில மணி நேரங்களில் திரும்பிவருகிறான். சரி, விமான டிக்கெட்டுகள்?’ என்றான் ஸௌரப்.

‘ஏர்போர்ட்டில் காசு கொடுத்து வாங்குகிறான். போட்டோ உள்ள ஆதார் கார்டின் பிரதி, அதில் அவன் போட்டோ ஆனால் வேறு பெயர்,’ என்றேன்.

‘ஓ, எல்லாவற்றையும் நன்றாகத் திட்டமிட்டிருக்கிறான்,’

என்றான் ஸௌரப்.

‘நல்ல புத்திசாலி, இல்லையா, ஃபையஸ்?’ என்றேன்.

முஷ்டியை மடக்கிக் கொண்டு ஃபையஸ் ரகுவை முறைத்தான்.

‘ஏன் ரகு? ஏன் அவளைக் கொன்றாய்?’ என்று ஃபையஸ் முஷ்டியை மடக்கி கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக்கொள்ள முயற்சித்தான். ரகு அதற்குப் பதில் சொல்லவில்லை.

ஃபையஸ் எழுந்து நின்றான். நேராக ரகுவின் முகத்தில் குத்தினான். ரகுவின் வாயிலிருந்து ரத்தம் கொட்டியது, அவனுடைய கண்ணாடி தரையில் விழுந்தது.

ரகு பேசாமல் இருந்தான். கண்ணாடியை எடுக்க மெதுவாகக் குனிந்தான். மறுபடியும் அவனைத்தாக்க ஃபையஸ் முயற்சி செய்தபோது நிறுத்தும்படியாக ரகு அவனுக்கு சமிக்ஞை செய்தான்.

‘இது ஒன்றும் எனக்கு வலிக்கவில்லை. நான் அடி வாங்கிக்கிறேன். பணம் கொடுத்து ஆட்களை செட்டப் பண்ணி கையை முறித்துக் கொண்டிருக்கிறேனே, நினைவில்லையா?’ என்றான் ரகு.

கோமா நிலையிலிருந்து வெளியே வந்தவர் மாதிரி அப்போது ஸஃப்தர் எழுந்து நின்றார்; அடங்கிய குரலில், ‘உன்னை அவள் ரொம்ப காதலித்தாள்,’ என்றார்.

ரகு பதில் சொல்லவில்லை.

‘ஏன், என்னோட செல்லப் பெண்ணைக் கொலை செய்தாய்?’ காரணத்தைப் புரிந்து கொள்வதற்காக மட்டும் கேட்பது போல் தாழ்ந்த குரலில் கேட்டார்.

ரகு ஏளனமாகச் சிரித்தான்.

‘ஏனென்றால் அவள் செய்தது என்னைச் சாகடித்தது.’

# அத்தியாயம் 32

ரகு பேசுகிறான் - 2.

‘நாம், தூங்கலாம், ஸரா!’

‘ஐந்து நிமிஷங்கள், நான் பிராமிஸ் பண்றேன்,’ என்றாள்.

அவள் போனிலிருந்து வரும் வெளிச்சத்தைத் தவிர்ப்பதற்காக நான் திரும்பிப் படுத்துக் கொண்டேன். ஆபீஸில் காலையில் இருக்கும் மீட்டிங்கிற்காக நான் சீக்கிரம் விழிக்க வேண்டும். நான்கு நாட்கள் பயணமாக ஸரா ஹைதராபாதுக்கு வந்திருந்தாள். என் கம்பெனியில் அவளை பார்ட்னராகச் சேர்த்துக் கொண்டதைக் கொண்டாடுவதற்காகக் கலந்து கொண்ட தாஜ் ஃபலக்லுமா பேலஸிலிருந்து அப்போது தான் திரும்பியிருந்தோம். என் கைகளில் அவளை அணைத்துக் கொள்ள விரும்பினேன்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவளைப் பார்த்தேன்.

‘ஐந்து நிமிஷங்கள் முடிந்து விட்டன.’

‘ஓ,’ கண்களை போனிலிருந்து எடுக்காமலேயே; அவள் முகத்தில் ஒரு புன்முறுவல் தெரிந்தது.

‘சரி, வா.’

‘வரேன்!,’ என்றாள். இடது கையால் என் தலையைத் தடவிக் கொண்டே வலது கையால் டைப் செய்து கொண்டிருந்தாள்.

‘யாருக்குத் தகவல் அனுப்புகிறாய்?’

‘இன்ஸ்டாவில் இருக்கும் ஒருவருக்கு. என் பதிலை அவள் படித்தாள், ஆனால் அதை ஏற்க மறுக்கிறாள். அவளுடன் சற்று விவாதம் செய்கிறேன்.’

‘நிஜமாகவா, ஸரா?’ என்றேன்.

எனக்கு அவள் வேண்டும். என் அருகில் கிடக்கும் அவள் உடலைத் தொடாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன்.

‘உன் கண்களை மூடிக்கொள்!’ என்று சொல்லித் தலையில் லேசாகத் தட்டினாள்.

திரும்பவும் அவளிடமிருந்து விலகினேன். சுவர் கடிகாரத்தை வெறித்துப் பார்த்தேன். பத்து நிமிஷங்களுக்குப் பிறகு தலையைத் திருப்பி ஓரக்கண்ணால் அவளை நோட்டம் விட்டேன். ஒரு செய்தியை டைப் செய்து கொண்டே சிரித்தாள். இன்டர்நெட்டில் முகம் தெரியாத ஆளுடன் பேசும்போது யார் அப்படிச் சிரிப்பார்கள்?'

பத்து நிமிஷங்களுக்குப் பிறகு போனை அணைத்தாள். பிறகு படுக்கையில் படுத்தாள். நான் அவளிடமிருந்து திரும்பிப் படுத்தேன். பின்னாலிலிருந்து அவள் என்னைத் தொட்டாள்.

'நீ பின்னாலிருந்து என்னைக் தழுவினால். வசதியாக இருக்கும்,' என்றாள். நான் தூங்குவதாகப் பாசாங்கு செய்தேன்.

'என்ன மன்னித்து விடு, பேபி,' என்றாள் ஸரா. நான் திரும்பினேன். நான் பின்னாலிருந்து அணைத்துக்கொள்ள வசதியாக நகர்ந்து படுத்தாள்.

'இதுதான் உலகிலேயே எனக்கு மிகச் சிறந்த இடம்,' என்றாள் ஸரா. என் கையை அவள் முதுகில் வைத்து மெதுவாகக் கீழே இறக்கினேன். அவள் மார்பைத் தொடாமல் இருப்பதற்கு அவள் என் கையைத் தடுத்தாள். மீண்டும் முயற்சித்தேன். மீண்டும் தடுத்தாள்.

'இன்று இரவு நாம் இருவரும் சும்மா கட்டிக் கொண்டிருப்போமா?' திரும்பிப் பார்த்துக் கேட்டாள்.

அவளுடைய அழகான பாதாம் பருப்பு போன்ற கண்கள் பளபளத்தன. அவளுக்கு எப்படி என்னால் முடியாது என்று சொல்லமுடியும்?

'சரி,' என்றேன்.

'குட்நைட், கண்ணா,' என்று சொல்லி லேசாகக் கன்னத்தில் முத்தமிட்டாள்.

சில நிமிஷங்களில் அவள் தூங்கிவிட்டாள், என்னை மட்டும் விழித்துக் கொண்டு கவலைப்படும்படியாகச் செய்துவிட்டு. சில வாரங்களாக அவளுடைய நடவடிக்கை விசித்திரமாக இருக்கிறது. ஒரே சீராக அவள் மூச்சுவிடத் தொடங்கியதும் மேஜையின் மீது இருந்த போனை எம்பி எடுத்தேன். அவள் அசையவில்லை. அவள் போனை கைக்கருகில் கொண்டு போனேன். அவள் கட்டை விரலை ஐபோனின் அடையாள இடத்தில் அழுத்தினேன். நொடியில் போன் திறந்தது. கட்டிலை விட்டு இறங்கி பாத்ரூமுக்குள் போனேன்.

❖

பாத்ரூமில் ஸராவின் வாட்ஸ்ஆப்பைத் திறந்தேன். மேலாக ஸராவும் கேப்டன் ஃபையஸம் அனுப்பிக் கொண்ட தகவல்கள் இருந்தன. மூன்று நாட்களுக்கு முன்னால் வந்த செய்திகளைப் படித்தேன்.

‘கவலையாக இருக்கிறாயா?’ ஃபையஸ் கேட்டான்.

‘ஓரளவுக்கு. முழு பயத்திற்கு இன்னும் போகவில்லை.’

‘கவலைப்படாதே, இது ஒன்றுமில்லை.’

‘எனக்கு மாதம் தவறாமல் வருவது இவ்வளவு தள்ளிப் போனதேயில்லை.’

‘நான் வெளியேறினேன், நீ கேலண்டரைக் கூட கவனமாகப் பார்த்தாயே.’

‘எனக்குத் தெரியும். இருந்தாலும் கவலையாக இருக்கு.’

‘என் கண்ணே. நீ சரியாக இருக்கே!’

‘நான் பரிசோதனை செய்து கொள்ளணுமா? ப்ரெகா ந்யூஸ் அல்லது அது போல் வேறு ஏதாவது?’

‘அதிகமாகக் கற்பனை செய்து பயப்படாதே, டார்லிங்!’

‘ஏன்? ஏற்கெனவே இரண்டு வாரங்கள் தள்ளிவிட்டது!’

‘இன்னும் சில நாட்கள் போகட்டுமே, ஒரு வாரம்?’

‘நான் ஹைதராபாதிலிருந்து திரும்பிய பிறகு பரிசோதனை செய்யலாமா?’

‘நிச்சயமாக.’

‘ஸாரி, உன்னை இக்கட்டில் மாட்டிவிட்டதற்கு,’ என்றாள் ஸரா.

‘என் தப்பும் தான்.’

‘இல்லை, பாதுகாப்பு உறை வேண்டாமென்று நான் தான் வற்புறுத்தினேன். உன்னை முழுவதுமாக உணர்ந்து கொள்ள விரும்பினேன்.’

கால்கள் நடுங்க நான் பலவீனமாக உணர்ந்தேன். என் கையிலிருந்த போன் நழுவி விடுமோ என்று அதை அழுத்திப் பிடித்துக் கொண்டேன்.

தகவல்களைக் கீழே தள்ளி இன்று இரவு அனுப்பியவற்றைப் படிக்க ஆரம்பித்தேன். இணையப்பதிவைப் படிக்கும் யாருடனோ வாதம் செய்வதாக ஸரா சொன்னபோது உண்மையில் அவள் இதைத்தான் செய்திருக்கிறாள்.

‘ஹைதராபாத் எப்படி இருக்கு?’ ஃபையஸ் அனுப்பினான்.

‘நன்றாக இருக்கு. ரகுவுடன் நல்ல டின்னர் சாப்பிட்டேன். சீரமைக்கப்பட்ட ஒரு அரண்மனையில்.’

‘உம்...ம்...’

‘என்ன?’

‘நான் பொறாமைப்படுகிறேன் என்று சொல்ல எனக்கு அனுமதி உண்டா?’

‘கிடையாது!’

‘சரி, சொல்லவில்லை.’

‘நாம் தீர்மானித்து விட்டோம். அது முடிந்துவிட்டது.’

‘எனக்குப் புரிகிறது.’

‘உனக்கு ஒரு குடும்பம், குழந்தைகள் இருக்கிறார்கள்.’

‘தெரியும். ஆனால் உனக்காக நான் அவற்றை மாற்றுகிறேன்.’

‘தயவு செய்து அந்த மாதிரி நாம் பேசவேண்டாமே?’

‘உன்னை ரொம்ப மிஸ் பண்ணுகிறேன், பேபி!’

‘நீ இன்று என்ன செய்தாய்?’

‘கார்ன்மார்ட்கெட் போனேன். ப்ரெகா ந்யூஸ் வாங்கினேன்.’

‘நிஜமாகவா?’

‘ஆமாம். பத்து பாக்கெட்டுகள்.’

‘பத்தா?’

‘ஆமாம். நான் ஏதோ பெரிய அந்தப்புரம் வைத்திருக்கிறேனோ என்பது போல் மருந்துக் கடைக்காரன் பார்த்தான்.’

‘லோல், பத்து வாங்கியிருக்கிறாய் என்று நம்பமுடியவில்லை!’

‘நீ உறுதியாகப் பரிசோதிக்க வேண்டும். நிம்மதியாக இருக்க வேண்டும் என்பதற்காக!’

‘பத்து என்பதால் டெக்கா-செக் என்பது போல.’

‘சீக்கிரமாக வா. டெஸ்டு பண்ணிவிடலாம்!’

‘சரி, தேங்க்ஸ். ரொம்ப நல்ல வேலை செய்திருக்கே.’

‘நான் எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறேன்.’

‘பயப்படும்படியாக ஒன்றும் இருக்காது.’

‘ஆமாம். நானும் அப்படித்தான் நம்புகிறேன். ஆனால்

கேள்...!’

‘சொல், ஃபையஸ்.’

‘ஒருவேளை ஏதாவது இருந்தால் அப்போ என்ன சொல்வே?’

‘தயவு செய்து அப்படிச் சொல்லாதே!’

‘சும்மா கற்பனை செய்து பார். நம் குழந்தை எவ்வளவு அழகாக இருக்குமென்று? இவ்வளவு அழகான பெற்றோர்கள்!’

‘ஹஹ்ஹஹ்ஹா!’

ஸரா, இந்த நாட்களில் உனக்கு எது வேடிக்கையாக இருக்கிறது என்பதை அறிய சந்தோஷம் என்று நினைத்துக் கொண்டேன்.

‘இரண்டு அழகான காஷ்மீரிகள். ஒரு அழகான காஷ்மீர் தேவதையைப் பெற்றெடுக்கப் போகிறவர்கள்!’ என்றான் ஃபையஸ்.

‘ஃபையஸ்.’

‘உஷ். ஸரா, சும்மா என்னுடன் சற்று நேரம் கனவு காணுகிறாயா? எனக்கு அந்தக் கொடையைக் கொடுக்கிறாயா?’

‘உனக்குப் பைத்தியம் தான்!’

‘ஆம் நான் பைத்தியம் தான். சரி, சொல், ஆணா, பெண்ணா?’

‘பெண். நிச்சயமாக. என் மூளையுடன், உன்னுடையதல்ல!’

‘வாயை மூடு.’

‘ஹஹ்ஹஹ்ஹா?’

‘பார்ப்பதற்கு யார் போல?’

‘பார்ப்பதறர்கு அப்பாவைப் போல் இருந்தால் எனக்கு சரிதான். அவன் ரொம்பவே அழகானவன்.’

‘ஆ, தேங்க்யூ.’

‘சரி. போகவேண்டும். நேரமாகிறது. ரகு என்னைக் கூப்பிடுகிறான்!’

‘இரு, அப்புறம் போகலாம்.’

‘என்ன?’

‘என் குழந்தையைப் பெற்றுக் கொள்.’

‘என்ன?’

‘நீ ரகுவுடன் இருந்தாலும். குறைந்தபட்சம் நம் குழந்தை மிக அழகாக இருக்கும். அவனுக்கு பிறந்தால் எப்படி இருக்கும் என்று சொல்ல முடியாது!’

‘என்ன? ஃபையஸ், வாயை மூடு!’

அவள் ஃபையஸை வாயை மூடச் சொன்னாள். தவிர, சிரிக்கும் போது வரும் கண்ணீர் இமோஜிக்களை சேர்த்திருக்கிறாள். சே, ரொம்ப மோசம். இந்த இமோஜிக்கள். அவை எல்லாவற்றையும் மாற்றுகின்றன. இல்லையா?

‘சரி, பார்ப்பதற்கு ரகுவைப் போல் உன் குழந்தைகள் இருக்க வேண்டாம் தானே? எல்லாம் கறுப்புக் கறுப்பா, அசிங்கம் அசிங்கமா?’

‘வாயை மூடு. இனவாத கேப்டன் சாஹிப்.’

‘அதனால், ஒரு நல்ல காஷ்மீரி மரபணு சேமிப்பை வைத்துக் கொள்!’

‘எத்தனை பெக் அடிச்சே, ஃபையஸ்?’

‘எதுவும் இல்லை, சத்தியமாக!’

‘குட்நைட். அடுத்தமுறை நாம் சந்திக்கும்போது அந்தப் பரிசோதனை சாதனங்களைக் கொண்டுவா!’

‘இரு...’

‘குட்நைட்.’

இதற்குப் பிறகு தகவல் பரிமாற்றம் எதுவுமில்லை.

பாத்ரூம் கண்ணாடியில் என்னைப் பார்த்துக் கொண்டேன். நிச்சயமாக எனக்குக் கறுப்புத் தோல் தான். அல்லது எல்லாம் கறுப்புக் கறுப்பான குழந்தைகள் என்று என் வருங்காலக் குழந்தைகளை ஃபையஸ் சொல்வது போல். எல்லாம் கறுப்புக் கறுப்பாக அசிங்க அசிங்கமாக, என்றானே. வேடிக்கை ஆக இல்லை? எனக்குத் தெரியவில்லை. எனக்கு எந்த வேடிக்கையும் அதில் தெரியவில்லை. ஆனால் ஸராவுக்குத் தெரிந்திருக்கிறது.

தோற்றுப் போனவன் இப்படித்தான் இருப்பானா? முன்னாளில் ஐஐடியில் எல்லோரும் என்னை முட்டாள் என்று கூப்பிடுவார்களே, அதற்கு மிகவும் பொருத்தமான உதாரணம் நான் தானா? என்னுடைய காதலிக்கு அடுத்தபக்கத்தில் ஒரு ராணுவ வீரனோடு விவகாரம் இருக்கும், பாதுகாப்பு உறை பயன்படுத்தமாட்டாள், அவனால் கர்ப்பமாகியிருப்பாள், தவிர என் குழந்தைகள் கறுப்பு கறுப்பாக, அசிங்க அசிங்கமாக இருக்கும் என்று சொல்லும் போது தாங்க முடியாமல் சிரித்து, அதனால் வரும் கண்ணீர் இமோஜிக்களைப் போடுவாள்!

நான் இதைப்பற்றி என்ன செய்து கொண்டிருக்கிறேன்? கண்ணாடியில் தெரிந்த ஆளிடம் கேட்டேன். சே, மோசம்,

ஒன்றும் செய்யவில்லை. சொல்லப்போனால், நான் பயப்படுகிறேன். அவள் போனைத் திறந்து நான் பார்த்துவிட்டேன் என்பதைத் தூங்கிக் கொண்டிருக்கும் ஸரா எழுந்து வந்து கண்டுபிடித்து விடுவாளோ என்று கவலைப்படுகிறேன். அவள் என்னை ஏமாற்றியதைப் பற்றி அவளிடம் கேட்டால் என்ன நடக்கும்? அவள் என்னை விட்டு விலகிவிட்டால்? என்னைப் போன்ற தோற்றுப்போகும் ஒரு முட்டாளுக்கு ஸரா போன்ற ஒரு பெண் மீண்டும் கிடைப்பாளா? அவள் மீது வரும் கோபத்திற்கும் மேலாக, அவளை இழந்து விடுவேனோ என்று இப்பவும் பயப்படுகிறேன், அவள் செய்திருப்பது என்ன என்பதைத் தெரிந்து கொண்ட பிறகும். பாடப்புத்தகத்தில் தோற்பவன் என்பதற்குக் கொடுக்கும் விளக்கத்திற்கு உதாரணம், இல்லையா?

❖

நான் படுக்கையறைக்குப் போனேன். ஸராவுக்கு அருகில் இருந்த மேஜையில் போனை வைத்தேன். நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த ஸரா சற்றும் அசையவில்லை.

படுக்கையில் படுத்தேன். சுவர் கடிகாரத்தை வெறித்தேன். இரவு முழுவதும் ஃபையஸ் மற்றும் ஸரா, ஸரா மற்றும் ஃபையஸ் பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன்.'

❖

'சூடான இட்லிகள், காபி,' என்றாள் ஸரா, 'உனக்குப் பிடித்தமாதிரி.'

'நீ எழுந்திருந்திருக்க வேண்டாம்,' பில்டர் காபியைக் குடிக்கத் தொடங்கினேன். என் அம்மா போடுவதில் முக்கால் திட்டம் சரியான வகையில் ஸராவும் காபி தயார் பண்ணக் கற்றுக் கொண்டிருக்கிறாள்.

'நேற்று இரவுக்காக ஸாரி சொல்ல விரும்புகிறேன், நான் ரொம்ப மன உளைச்சலில் இருந்தேன்.' என்றாள் ஸரா.

'ஏன்?'

'உன்னிடம் சொல்ல வேண்டும். எனக்குத் தள்ளிப் போகிறது!'

ஆமாம், டார்லிங். எனக்குத் தெரியும், என்று சொல்ல நினைத்தேன், ஆனால் சொல்லவில்லை.

'ஓ, அப்படியா? உறுதியாக வாய்ப்பு உள்ளதா?' என்றேன்.

‘போன மாதம் நீ டெல்லி வந்தாயே, அப்போ இருக்கலாம்,’ என்றாள்.

‘ஆனால் நான் எச்சரிக்கையாகத்தான் இருந்தேன். நான் எப்பவுமே அப்படித்தான்.’

‘பின்னே, வேறு எப்படி? ஹார்மோன் சுரக்கும் விதத்தில் ஏதாவது மாறுதல் இருப்பதைத் தவிர? வேறு எப்படி இருக்க முடியும்?’

ஒருவேளை ஒரு ராணுவ வீரனின் துப்பாக்கி மீது நீ சவாரி செய்திருந்தால், என்று கேட்க நினைத்தேன். பதிலாக இட்லியைப் பிட்டு வாயில் போட்டுக் கொண்டேன்.

‘நாம் இப்போ என்ன செய்யலாம்? என்னால் ஏதாவது செய்ய முடியுமா?’ என்றேன்.

‘நான் யோசித்துத் தீர்மானம் செய்கிறேன். இப்போதைக்கு இது உனக்குத் தெரிந்திருக்கட்டும் என்று நினைக்கிறேன்,’ என்று சொல்லி, ஸரா என் டம்ளரில் காபியை மீண்டும் ஊற்றினாள்.

‘உனக்கு ஏதாவது வேண்டுமானால் என்னிடம் சொல்,’ என்றேன்.

‘நிச்சயம்!’

ஆபீஸ் போவதற்கு எழுந்தேன்.

பின்னாலிருந்து, ‘ரகு,’ என்று கூப்பிட்டாள். வேகமாகத் திரும்பினேன். என்னிடம் உண்மையைச் சொல்லப் போகிறாளோ என்று தோன்றியது.

‘என்ன?’ என்றேன்.

‘அடுத்தது என்ன என்று திட்டம் போட்டு, செட்டில் ஆவதைப் பற்றி நீ எப்போதும் பேசுவாயே, நினைவிருக்கிறதா?’

‘ஆமாம்.’

‘நாம் நிச்சயதார்த்தம் செய்து கொள்ளலாம். நான் தயார்!’ என்றாள் ஸரா. சிரித்துக் கொண்டே என்னைக் கட்டிக் கொண்டாள்.

ஆமாம். கண்ணே, ஆமாம். நீ தயார் தான் என்று நினைத்துக் கொண்டே அவளைக் கட்டிப் பிடித்தேன்.

❖

தன் ஒரே பெண்ணின் நிச்சயதார்த்தத்தை ஒரு குறைவும் இல்லாமல் ஸஃப்தர் நடத்தினார். வீடு முழுவதும் பூக்களாலும்

விளக்குகளாலும் அலங்காரம் செய்திருந்தது. டஜன் உறவினர்களுடன் என்னுடைய அம்மா, அப்பா ஹைதராபாத்திலிருந்து வந்திருந்தார்கள். ஸரா ஒரு முஸ்லிம் என்பதற்கு அவர்கள் ஒரு மறுப்பும் சொல்லவில்லை. அவர்களுடைய பிரியத்திற்குரிய மகனுக்கு அவர்களால் எப்படி மறுப்பு சொல்ல முடியும்? நான் என்னவெல்லாம் சாதிக்க வேண்டுமென்று அவர்கள் நினைத்தார்களோ அதெல்லாவற்றையும் நான் செய்திருக்கிறேனே? மூன்று கேரட் எடையுள்ள ஒரே வைரக்கல் பதித்த மோதிரத்தை அவளுடைய மென்மையான விரலில் போட்டேன். ஒரு பச்சை நிற லெஹங்காவில் அவள் மிகத் தூய்மையானவளாகத் தெரிந்தாள். என்னுடைய கறுப்புக் கறுப்பான, அசிங்க அசிங்கமான விரலில் அவளும் ஒரு மோதிரம் போட்டாள்.

'எப்போது நிக்கா?' என்று ஸராவின் ஒரு ஆன்ட்டி ஸஃப்தரிடம் கேட்டாள்.

'அவர்கள் தான் முடிவு செய்ய வேண்டும்,' என்றார்.

ஒரு விடையைத் தேடுவது போல் என் கண்களுக்குள் உற்றுப் பார்த்தாள். அவளால் முடியவில்லை. என் மனதில் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்பது சிறிது கூட அவளுக்குத் தெரியாது. இப்படித் தான் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஸரா நீ ஏன் என்னுடன் நிச்சயம் செய்து கொள்கிறாய்? ஏனென்றால் நீ கர்ப்பமாக இருந்தால் என்னைக் கல்யாணம் செய்து கொண்டு, ஃபையஸின் குழந்தையை நான் வளர்க்கும்படியாக உன்னால் செய்யமுடியும்? இது தானே உன் திட்டம்? அது என்னை என்னவாக ஆக்கும்? ஒரு நடத்தை கெட்ட பெண்ணின் கணவன்?

'ஸரா என்ன சொல்கிறாளோ அது தான், அங்கிள்,' என்றேன்.

'அங்கிள், இல்லை அபா,' என்று ஒரு ஆன்ட்டி எனக்கு ஞாபகப்படுத்திவிட்டுச் சிரித்தாள். நான் தலையை அசைத்துவிட்டுச் சிரித்தேன். நான் என் மதத்தை மாற்றிக் கொள்வேன். என்னுடைய ஈக்விடி பங்குகளில் பாதியை அவளுக்குக் கொடுப்பேன். நான் இரவு பகலாகக் கடுமையாக உழைப்பேன். அவளுடைய அப்பாவை 'அபா' என்று கூப்பிடுவேன்.

அவள் மகிழ்ச்சியடைவதற்காக நான் இவற்றையெல்லாம் செய்வேன். பதிலுக்கு அவள் என்ன செய்வாள்? பதிலுக்கு ஒரு தே... பெற்ற பிள்ளையை வளர்க்கச் செய்வாள்.

'அடுத்த மாதம்?' என்றாள் ஸரா. ஆச்சரியத்தோடு நான்

அவளைப் பார்த்தேன்.

'நிஜமாகவா?' அவ்வளவு சீக்கிரமாகவா?

'அல்லது எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அப்போ. நான் இதை எல்லாவற்றையும் விட்டு விலக வேண்டும். இந்தியாவில் இருந்தது போதும், ஸஃப்தர்வுடன் என்னால் மல்லுக்கட்ட முடியவில்லை. தவிர இந்த உறவினர்கள், இரைச்சல், காற்றில் மாசு இவை எல்லாம் போதும்.'

'சரி,' என்றேன்.

என் மனது சுழன்று கொண்டே இருந்தது. நான் அவளுடன் உறவை முறித்துக் கொண்ட பிறகு அவள் பங்குகளைத் திருப்பித் தர மறுத்தால், என்ன செய்வது? அவளுக்குப் பிறகு அவை என்னைச் சேரும், ஆனால் அவள் உயிருடன் இருந்தால் அவை அவளுக்கு உரியதுதான். சே, இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?

'நாம் புதிதாகத் தொடங்குவோம்,' என்று ஸரா என் காதில் கிசுகிசுத்தாள்.

'ஆமாம். இவை எல்லாம் சீக்கிரமே முடிந்துவிடும்,' என்று சொல்லி, அவள் கையைத் தட்டினேன்.

# அத்தியாயம் 33

ரகுவையும் ஃபையஸையும் பார்த்து ஸஃப்தர் அசந்து போய்விட்டார். தண்ணீர் குடிக்க ரகு தன் கதையை நிறுத்தினான், நானும் ஸௌரபும் காத்திருந்தோம். முழு கிளாஸ் தண்ணீரையும் ஒரேயடியாகக் குடித்துவிட்டுப் பேசத் தொடங்கினான்.

‘இந்த நேரத்தில் நீங்கள் எல்லோரும் உணர்ச்சிவசப்பட்டிருப்பீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் காரணரீதியாக என் தரப்பு நியாயப்படி பார்த்தால் வேறு வகையான வழி எதுவும் இல்லை.’

எல்லோரும் ரகுவை அதிர்ச்சியோடு பார்த்தோம். அவன் தொடர்ந்தான்.

‘இவை தான் என் முன்னால் இருந்த முடிவுகள். ஒன்று. நான் ஒரு முட்டாள். ஒரு நடத்தை கெட்டவளின் பிள்ளையை வளர்ப்பவன். இரண்டு, அவளைப் பிரிவது, பிரிந்து அவள் இழப்பை நினைத்து நான் துன்பப்படும்போது அவள் என் பாதி கம்பெனியை எடுத்துக் கொண்டு காதலனுடன் போவது. இரண்டுமே என் வாழ்க்கையை நாசமாக்கும்.’

ஃபையஸ் தன் தொண்டையைக் கனைத்துக்கொண்டார் - ஏதோ சொல்ல விரும்பியதைப் போல. ஆனால் ரகு தொடர்ந்து பேசினான்.

‘அதனால் மூன்றாவதாக எனக்கு முன் இருந்தது ஒன்றுதான் - ஸராவை ஒழிப்பது. நான் அதைச் சரியாகச் செய்தால் என்னைக் கண்டுபிடிக்கவே முடியாது. நான் ஸராவை இழப்பேன், ஆனால் நான் ஏற்கனவே அவளை இழந்துவிட்டேன். அவளுக்கான தண்டனை அவளுக்குக் கிடைக்கும். ஃபையஸுக்கும் துக்கம் இருக்கும். என் கம்பெனி எனக்குத் திரும்பக் கிடைக்கும். இந்தத் திட்டம் சரியாக நிறைவேறினால் இந்த முட்டாள் கேஷவ் கொலை நடந்த இடத்தில் கண்டுபிடிக்கப்படுவான், பல குழப்பங்களை உண்டாக்குவான், அவை என்னைப் பாதுகாப்பாக வைக்கும். பாவி, ஃபையஸை ஜெயிலுக்கு அனுப்புவதற்கு அவன் முக்கால் வாசி

ஏற்பாடுகளைச் செய்துவிட்டான். இனிமையான தீர்ப்பாக அது இருந்திருக்கும், அந்த மாதிரியான முடிவு நடந்தே இருக்கும், ஆனால் அதற்குள்...'

'ஆனால், நான் உன்னைப் பிடித்துவிட்டேன்,' என்றேன். 'நேற்று இரவு நான் டெல்லியை அடைந்தபோது, ஹைதராபாத் விமான நிலையத்திலிருந்து சிசிடிவி பதிவுகள் வந்துவிட்டன என்று ரானா சொன்னார். கையில் கட்டுடன் முதுகில் பையை மாட்டிக் கொண்டிருக்கும் உன்னைப் போல் ஒருவனைக் கண்டுபிடிக்க சிறிது நேரமே போதுமானதாக இருந்தது அவர்களுக்கு.'

'நன்றாகச் செய்திருக்கிறாய். நான் அப்போதே உன்னிடம் சொன்னேனே. நான் கைகளைக் கூட தட்டினேன். உனக்கு வேறு என்ன வேண்டும்? நோபல் பரிசா?' என்றான் ரகு எரிச்சலோடு. '

'அவள் கர்ப்பமாக இல்லை,' என்றான் ஃபையஸ் உறுதியான குரலில், மேஜையைப் பார்த்தவாறு.

'எல்லோரும் அவனைத் திரும்பிப் பார்த்தோம்.'

'என்ன?' என்றான் ரகு.

'இல்லை. அது ரொம்ப பயமுறுத்தலாக இருந்தது, ஆனால் அவள் கர்ப்பமாக இல்லை. மேலும் என் குழந்தையை நீ வளர்க்க வேண்டுமென்பதற்காக விரைவில் உன்னைத் திருமணம் செய்ய அவள் நினைக்கவில்லை.'

ஃபையஸ் உள்ளங்கைகளால் முகத்தை மூடிக்கொண்டு உடைந்து போய் கதறினான்.

'நாங்கள் ஏன் அவ்வளவு நெருக்கமாக இருந்தோம் என்று உங்களுக்கெல்லாம் தெரிய வேண்டும். இல்லையா?' அழுது கொண்டே அவன் கேட்டான்.

அவன் போனை எடுத்து ஸராவும் ஸிக்கந்தரும் மெஷின்கன்னோடு இருந்த ஸெல்ஃபியைக் காட்டினான்.

'இதே போட்டோவைத்தான் ஸராவின் பாகிஸ்தான் போனில் நாங்களும் பார்த்தோம்,' என்று ஸௌரப் என்னிடம் தாழ்ந்த குரலில் முணுமுணுத்தான்.

'இந்த போட்டோவை எடுத்துக் கொண்டு ஸரா என்னிடம் வந்தாள்,' என்றான் ஃபையஸ்.

'ஏன்?' என்றார் ஸஃப்தர்.

'ஸிக்கந்தரை மாற்றுவதற்கு அவள் முயற்சி செய்தாள், தீவிரவாத செயல்பாடுகளிலிருந்து அவன் விலகவேண்டும் என்று

விரும்பினாள்; ஆனால் அவள் சொன்னதை அவன் கேட்கவில்லை. ஓல்டு டெல்லியில் ஒரு ஹோட்டல் அறையில் சிகந்தர் நிறைய துப்பாக்கிகளை அடுக்கி வைத்திருப்பதைப் பார்த்ததாக அவள் சொன்னாள், தலைநகரில் ஒரு தீவிரவாத சதித்திட்டத்தை நடத்துவதற்காக!'

'அவள் எப்படி அதைக் கண்டுபிடித்தாள்?' என்றேன்.

'ஸிக்கந்தரின் நம்பிக்கைக்கு உரியவளாக ஆனாள்; அவன் செய்வதைப் பற்றி தன் மனதை மாற்றிக் கொண்டு விட்டதாக அவன் நம்பும்படி சொன்னாள். தலைநகரைத் தகர்ப்பதான பெரியதிட்டத்தைப் பற்றி அவளிடம் சொல்லியிருக்கிறான். துப்பாக்கிகள் வைக்கப்பட்டிருந்த இடத்திற்கு அவளைக் கூட்டிக் கொண்டு போயிருக்கிறான். அங்கு அவள் அந்த போட்டோவை எடுத்திருக்கிறாள்!'

'ஸரா ஏதோ ஒரு காரணத்துக்காகச் சிரித்துக்கொண்டு காணப்படுகிறாள் என்று இந்த போட்டோவைப் பார்த்த போது நானும் நினைத்தேன்!' என்று ஸௌரப் சொன்னான்.

'அதற்குப் பிறகு என்னவாயிற்று?' என்று கேட்டார் ஸஃப்தர்.

'நான் அதிகாரிகளிடம் இதைப் பற்றி அறிவித்து விட நினைத்தேன். ஆனால் ஸரா ஒரு நிபந்தனையைச் சொன்னாள். நான் அந்தத் திட்டத்தை முறியடிக்க வேண்டுமென்றும் அதே நேரம் ஸிக்கந்தரை விட்டு விடவேண்டும் என்று சொன்னாள்.'

'என்ன செய்தாய்?' என்றேன்.

'என் முதல் தப்பு, அதை ஒத்துக் கொண்டேன். ஆனால் என்னால் வேற என்ன செய்திருக்க முடியும்? அதற்குள் நான் அவளைக் காதலிக்க ஆரம்பித்தேன்,' யார் கண்களையும் பார்ப்பதைத் தவிர்ப்பதற்காகக் கீழே பார்த்துக் கொண்டிருந்தான்.

'காதலா? படுபாவி, ஸல்மா, குழந்தைகளைப் பற்றி நினைக்கவில்லையா? கேட்டார் ஸஃப்தர்.'

'எனக்குத் தெரியவில்லை. ஸல்மாவுக்கு முன்பே ரொம்ப நாட்களாகவே நான் அவளை விரும்பினேன். ஆனால் அவள் கேஷவுடன் பழகிக் கொண்டிருந்தாள். அப்போது அவள் என்னைக் கவனிக்கவே இல்லை. இப்போதுதான், அவள் பலவீனமாக இருந்த நேரத்தில் என்னால் அவளை அடைய முடிந்தது!'

'பலவீனமான நேரமா?' என்றேன்.

'நீங்கள் இருவரும் பிரிந்துவிட்டீர்கள், இருந்தாலும்

குடித்துவிட்டு அவளிடம் போனில் பேசுவாய், எல்லாம் சோகமாக இருந்தது. அதற்கிடையில் ஒரு திடமான ஆளாக எண்ணி ரகுவை அவள் தேர்ந்தெடுத்தாள். அது தான் அவளுக்குத் தேவையாக இருந்ததாக அவள் சொன்னாள். இருந்தாலும் அவ்வப்போது, குறிப்பாக நீ போனில் அவளுடன் பேசிய பிறகு உன்னிடத்தில் அவளுக்கு இருந்த பைத்தியக்காரத்தனமான காதலை நினைத்து அவள் ஏங்கினாள். நான் அதை அவளுக்குக் கொடுத்தேன். அதனால் சிறிது நாட்களாவது அவளுடன் இருக்க முடிந்தது.'

'நீ செய்தது அவமானகரமானது,' என்றார் ஸஃப்தர்.

ஃபையஸ் பதில் பேசவில்லை.

'சிகந்தர் மற்றும் அவனுடைய துப்பாக்கிகளைப் பற்றி சொல்லவந்ததை முடித்து விடு,' என்றேன்.

'ஒரு இரவு என்னுடன் ராணுவ வீரர்கள் ஐந்து பேரை அழைத்துக் கொண்டேன். பதுக்கி வைத்திருந்தவற்றைக் காவல்காத்த இருவரை நாங்கள் சுட்டுக் கொன்றோம். இருந்தாலும் நான் ஸிக்கந்தரைப் போக அனுமதித்தேன்!'

'பிறகு என்ன நடந்தது?' என்றேன்.

'போலீஸிடம் துப்பாக்கிகளையும் தோட்டாக்களையும் ஒப்படைத்தோம். தாங்களே கண்டுபிடித்ததாக அவர்கள் பெருமையடைந்தார்கள். மறுநாள், ஒரு செய்தியாக அந்தக் கண்டுபிடிப்பு நாளிதழ்களில் வந்தது.'

'இவை சட்டத்துக்குப் புறம்பானதாக இருந்தாலும் இந்த சாகசச் செயல்களை நீ செய்ததை அவள் விரும்பியதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை,' என்று ரகு ஃபையஸைப் பார்க்காமலே சொன்னான்.

'நான் அவள் மீது அக்கறை எடுத்துக் கொண்டேன். அவளுக்குக் கிடைக்காத ஆனால் அவள் விரும்பிய அன்பையும் ஆதரவையும் நான் அவளுக்குக் கொடுத்தேன்,' என்றான் ஃபையஸ்.

'உனக்குக் கல்யாணம் ஆனபிறகும்,' என்றான் ரகு.

ஃபையஸ் பதில் சொல்லவில்லை.

'வேறு ஏதாவது உண்டா, ஃபையஸ்!' என்றேன்.

'நான் பணமும் எடுத்துக் கொண்டேன். இரண்டாவது தப்பு! என்றான் ஃபையஸ். கண்களை மூடிக் கொண்டு அவற்றைக் கசக்கினான். தவறை ஏற்றுக்கொண்டு வெளிப்படையாகச் சொல்வதற்கு ரொம்ப சங்கடப்படுவது போல் இருந்தது.'

‘சிகந்தர் எனக்குப் பரிசு அனுப்பினான். தங்கக்கட்டிக்கள், நான் வைத்துக் கொண்டேன். ராணுவ அதிகாரியாக ரொம்பப் பணம் சேர்க்க முடியாது. எனக்கு விவாகரத்து கிடைத்தால் என்னிடம் இருப்பதில் நிறைய பணத்தை ஸல்மாவுக்கு கொடுக்க வேண்டியிருக்கும் என்று நினைத்தேன். ஸிக்கந்தரிடமிருந்து வந்த தங்கம் எனக்கும் ஸராவுக்கும் நல்ல வாழ்க்கையைக் கொடுக்கும் என்று நினைத்தேன்.’

‘துரோகி. என் குடும்பத்திற்கு மட்டும் இல்லை, நாட்டிற்கும் துரோகம் செய்திருக்கிறாய்,’ என்றார் ஸஃப்தர்.

‘நான் துரோகி இல்லை,’ என்று ஃபையஸ் கத்தினான். நான் ஒரு பெரிய தாக்குதலிலிருந்து என் நாட்டைக் காப்பாற்றியிருக்கிறேன். ஸல்மாவிடமிருந்து விலகி, ஸராவை மணந்து கொண்டிருப்பேன். சரியான செயலைச் செய்திருப்பேன்,’ ஃபையஸின் முழு உடம்பும் நடுங்கியது. ‘இப்போ எல்லாவற்றையும் நான் இழந்துவிட்டேன்.’

‘யாரிடமிருந்தும் அனுதாபத்தை எதிர்பார்க்காதே,’ என்றார் ஸஃப்தர்.

‘நான் பேராசைப்பட்டேன். நான் தங்கக் கட்டிகளை போலீஸிடம் ஒப்படைக்கிறேன்,’ என்றான் ஃபையஸ்.

ஸௌரப் தன் பையிலிருந்து அந்தக் கட்டிகள் இருந்த பிளாஸ்டிக் பையை எடுத்தான்.

‘இதைத்தான் சொல்கிறீர்களா?’ என்று கேட்டான்.

‘என்ன இது...?’ என்று கேட்டபோது ஃபையஸின் ரோஸ் நிற முகம் மாதுளை சிவப்பாயிற்று.

‘பெரிய கதை!’ என்றேன். ‘வோலீஸிடம் ஒப்படைக்க வேண்டாம். ராணுவ மேலதிகாரிகளிடம் அவை போய்ச் சேருவதை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்.’

‘ஆனால்...’ ஃபையஸ் தொடங்குவதற்குள் ரகு குறுக்கிட்டுப் பேசினான்.

‘நீ அவளைப் பயன்படுத்திக் கொண்டாய். தன் சகோதரனின் விஷயம் என்றால் அவள் பலவீனமடைவாள்; நீ அதை உனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டாய்,’ என்றான் ரகு.

‘இல்லை. ஸராவுக்கும் எனக்கும் இடையே உண்மையான காதல் இருந்தது!’

‘ஸரா என்னைத்தான் காதலித்தாள், உன்னை இல்லை.’

‘ஆனால் அவளுக்கு ஒதுக்க உனக்கு நேரமேயில்லை. உன்

கம்பெனியை அவளுக்காகத்தான் கட்டிப் பாதுகாத்தேன் என்கிறாய். ஆனால் உன் நேரத்தை நீ அவளுக்குக் கொடுக்கவில்லை,’ என்றான்.

‘எனக்கிருந்தது என் கம்பெனி மட்டும்தான். அது எங்களுக்கானது. அவள் அதைப் புரிந்து கொண்டிருக்கவேண்டும்...’ என்று ரகு சொன்னபோது அவன் குரல் மங்கிப் போனது.

‘அவள் புரிந்து கொண்டிருந்தாள். தவிர எங்களிடையே நடந்தவற்றிற்காக அவள் வருத்தப்பட்டாள். எங்கள் தொடர்பை அவள் முறித்துக் கொண்டாள். என் மனைவியை நான் விவாகரத்து செய்வதை அவள் விரும்பவில்லை. உன்னுடன் புதிதாக வாழ்க்கையைத் தொடங்க விரும்பினாள்,’ என்றான் ஃபையஸ்.

‘ஆனால் உங்களிடையே தொடர்பு இருந்திருக்கிறதே!’

‘ஆமாம். அது தவறுதான். ஆனால் மனிதர்களை அதற்காக யாரும் கொல்லமாட்டார்கள்.’

‘அது எத்தகைய உணர்வை ஏற்படுத்தும் என்பதை உன்னால் புரிந்து கொள்ள முடியாது’ - ரகுவின் பேச்சை ஸைரன் ஒலி குறுக்கிட்டது.

‘இன்ஸ்பெக்டர் ரானாவும் அவர் ஆட்களும் வருகிறார்கள் என்று நினைக்கிறேன்,’ என்றேன்.

‘நிஜமாகத்தான் சொல்கிறாயா?’ ரகு கேட்டான். நான் தோளைக் குலுக்கிக் கொண்டேன்.

‘நீ குற்றம் செய்தாய். அதற்கான விலையை நீ கொடுக்க வேண்டும்.’

ரகு என்னையும் சௌரபையும் பார்த்தான்.

‘நீங்கள் வாழ்க்கை பூராவும் சம்பாதிக்கக் கூடிய பணத்தை விட அதிகமாக நான் கொடுத்தால் வாங்கிக் கொள்வீர்களா?’ ரகு கேட்டான்.

‘என்ன?’ என்றேன்.

‘ஃபையஸைக் கூட்டிக் கொண்டு போங்கள் என்று மட்டும் நீ சொல், போதும். அவன் ஒரு ரௌடி. அவன் ஜெயிலில் கிடந்து தவிக்கட்டும்.’

உறுமிக் கொண்டு ‘ஃபையஸ் எழுந்து நின்றான்.

‘பத்து மில்லியன் டாலர்கள். ஐந்து உன் நண்பனுக்கு. சரியா?’

ரொம்பக் கவலையோடு ரகு என்னிடம் கேட்டான்.

‘அவள் என்னை விட்டுப் போனாள், உன்னைப் போன்ற மோசமான ஒருவனுக்காக. தே... மகனே!’ என்றேன்.

இரண்டு போலீஸ்காரர்களோடு இன்ஸ்பெக்டர் ராணா அந்த நேரம் உள்ளே வந்தார்.

‘இங்கு என்ன நடக்கிறது?’ ராணா கேட்டார்.

‘இன்ஸ்பெக்டர் ஸார். வாட்ச்மேனை விடுதலை செய்து அந்த இடத்தில் ஒரு கோடீஸ்வரனை அடைப்பதற்கான நேரம் இது,’ என்றேன்.

❖

போலீஸ் ஜீப்பின் பின் ஸீட்டிலிருந்து எங்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த வேனைப் பார்ப்பதற்காகத் திரும்பினேன்.

‘கவலைப்படாதே. அவனால் தப்பி ஓடமுடியாது. அதெல்லாம் சினிமாக்களில் மட்டும் தான் நடக்கும்,’ என்றார் ராணா.

இன்ஸ்பெக்டருடைய ஜிப்ஸி வேனில் நானும் ஸௌரபும் ஹௌஸ்காஸ் போலீஸ் நிலையத்திற்கு அவருடன் போய்க் கொண்டிருந்தோம். முன் ஸீட்டில் உட்கார்ந்கிருந்த ராணா முகத்தில் நிரந்தரமாக ஒரு புன்னகை காணப்பட்டது.

‘கேஷவ்,’ என்றார் ராணா.

‘ஸார்?’ என்றேன்.

‘நீங்கள் இருவரும் நன்றாக வேலை செய்தீர்கள். செய்ய முடியாது என்று நீங்கள் எதையும் பாதியில் விடவில்லை. பிரமாதம்,’ என்றார்.

‘தேங்க்ஸ், ஸார்!’ என்றேன். ஸௌரபும், ராணாவும் சிரித்தார்கள்.

‘போக்குவரத்து அதிகமில்லை. நீங்கள் காரை வேகமாக ஓட்டலாம்,’ என்று மாட்டுவண்டியைப் போல் மெதுவாக ஓட்டிக் கொண்டிருந்த டிரைவரிடம் சொன்னேன்.

‘பரவாயில்லை நான் தான் மெதுவாகப் போகச் சொன்னேன்,’ என்றார் ராணா.

கார் கண்ணாடியில் எங்களைப் பார்த்து அவர் கண்ணடித்தார்.

‘ஊடக நண்பர்கள் வருவதற்குப் போதுமான நேரம் கொடுக்க வேண்டும்! ’ என்றார்.

‘ஆமாம், நிச்சயமாக!’ என்றான் ஸௌரப்.

நாளைக் காலையில் டெல்லியின் நட்சத்திரப் போலீஸாக, முக்கியமானவராக ரானா பேசப்படுவார். ஒரு வாட்ச்மேனை விடுதலை செய்து ஒரு கோடீஸ்வரனை ஜெயிலுக்குள் தள்ள எந்த இன்ஸ்பெக்டருக்குத் தைரியம் இருக்கும்?

‘எனக்கு டபுள் பிரமோஷன் கிடைக்கும் என்று நினைக்கிறேன்,’ என்று முன்னால் உட்கார்ந்தபடி ரானா சொன்னார்.

‘ட்ரிபிள் இல்லையா?’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’ என்றார் ரானா. அவன் குரலில் தொனித்த ஏளனத்தைப் புரிந்து கொள்வதற்குள் அவருடைய போன் ஒலித்தது. ஒட்டு மொத்த டெல்லி ஊடகத்தாரும் வந்து கொண்டிருப்பதாக டிபார்ட்மென்டில் இருந்து அவரைக் கூப்பிட்டுச் சொன்னார்கள்.

ரானா போனில் பேசிக் கொண்டிருந்தபோது நிலாவை ஜன்னல் வழியாக வெறித்துக் கொண்டிருந்தேன்.

‘மச்சி!’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’

‘வாழ்த்துக்கள்!’

‘ஆமாம். உனக்கும்தான்!’ என்று நிதானமாகச் சொன்னேன்.

‘உனக்குச் சந்தோஷமா?’

‘ஆமாம்!’

‘ஆனால், அது உன் குரலில் வெளிப்படவில்லைய? யார் கொலையாளி என்பதை நீ கண்டுபிடித்திருக்கிறாய்?’

‘வேறு ஒன்றையும் நான் கண்டுபிடித்தேன்!’

‘என்ன?’

‘அவளுடைய கடைசி நாளில் அவள் என்னை நினைத்து ஏங்கவில்லை. அந்தத் தகவல்களெல்லாம் அவளிடமிருந்து வரவில்லை. அதற்குள்ளாகவே அவள் இறந்திருக்கிறாள்.’

‘ஆமாம், அவற்றை ரகு தான் அனுப்பியிருக்கிறான்,’ என்றான்.

‘அதை நான் கண்டுபிடித்திருக்க வேண்டாமே என்று ஆசைப்படுகிறேன்.’

கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. அதை மறைப்பதற்காக ஜன்னலில் என் முகத்தை வைத்து வெறித்துப் பார்த்துக்

கொண்டிருந்தேன்.

❖

போலீஸ் ஸ்டேஷனில் நிறைய இரைச்சலும் பளிச்சிடும் கேமராக்களும் எங்களை வரவேற்றன.

'ரானா ஸார், இடது பக்கம் பாருங்கள்!' என்றார் போட்டோ எடுப்பவர்.

மற்றொருவர், 'ஸார், வலது பக்கம்!' என்றார்.

'ரானா ஸார், முதலில் ஏபிபி ந்யூசுக்கு பேட்டி கொடுங்கள்,' என்றார் மற்றவர்.

ஊடகத்தாரின் இரைச்சல், கேமராக்களில் படம் எடுக்கும் 'க்ளிக்' சத்தம் தவிர நூற்றுக்கணக்கான பல்புகளின் பிரகாசமான ஒளி ஆகியவை எங்களுக்குத் திகைப்பை ஊட்டின. நாங்கள் ஜிப்ஸி காரிலிருந்து இறங்கியபோது போலீஸ் நிலைய நுழைவாயிலில் செய்தியாளர் ஒருவரிடம் ரானா பேசியது என் காதில் விழுந்தது.

'ஸரா லோனின் கொலை வழக்கில் தீர்வு கண்டுபிடித்ததில் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். கொலையாளி, ஸராவுக்கு நிச்சயம் செய்யப்பட்டிருந்த ரகு வெங்கடேஷ். அவர் ஹைதராபாத்தில் ஒரு தொழில் நுட்பக் கம்பெனிக்குச் சொந்தக்காரர். நீங்கள் பார்த்துக் கொண்டிருப்பதைப் போல், பணக்காரர்களைக் கைது செய்வதற்கு டெல்லி போலீஸ் ஒருநாளும் அஞ்சுவதில்லை. ரகு வெங்கடேஷ் கைது செய்யப்பட்டுவிட்டார். வாட்ச்மேன் லக்ஷ்மண் ரெட்டி உடனடியாக விடுதலை செய்யப்படுவான்.'

❖

காலை 4 மணிக்கு நான் எழுந்து 5 மணிக்குள் கல்லறையை அடைய விரும்பினேன், அந்த நேரத்தில் யாரும் பார்க்கமுடியாது என்பதால்.

ஒரு வெள்ளை ரோஜாவை - அவளுக்கு மிகவும் பிடித்தமானது - அங்கு வைத்தேன்.

'எனக்கு நீ எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்கு நான் உனக்கு முக்கியமா என்பது எனக்குத் தெரியாது,' என்றேன். முட்டி போட்டு தரையில் நெற்றிபட வணங்கினேன்.

'உன்னை நான் காதலித்தேன், ஸரா,' என்றேன். 'ஒருவேளை ரொம்ப அதிகமாக இருக்கலாம். ஆனால் காதல் என்பது என்ன

என்று எனக்குக் காண்பித்ததற்கு நன்றி, ஸரா. தவிர எவரையும் ரொம்ப காதலிக்கக் கூடாது என்பதை எனக்குக் கற்றுக் கொடுத்ததற்கும் ரொம்ப ரொம்ப நன்றி,' என்றேன்.

அந்த இடத்தை விட்டுக் கிளம்புவதற்காக எழுந்தேன்.

'விடை பெறுகிறேன், ஸரா' நான் உன்னைக் காதலிக்கவில்லை!'

# அத்தியாயம் 34

மூன்று மாதங்களுக்குப் பிறகு.

‘இன்னும் சற்று மேலே,’ என்றேன்.

கடைக்கு ஆறு அங்குல உயரத்திற்கு மேல் கார்பென்டரும் அவர் உதவியாளரும் பிடித்திருந்த பெயர்ப் பலகையை உயர்த்தச் சொன்னேன். சத்தமாக அதைப் படித்தேன்.

‘நூ டிடெக்டிவ்ஸ்!’

எங்களுடைய புது ஏஜென்சிக்கு அந்தப் பெயரை வைக்கலாம் என்று ஸௌரப் சொன்னான். மாளவியா நகரில் நூறு சதுர அடி உள்ள ஒரு சிறிய கடையை நாங்கள் வாடகைக்கு எடுத்திருந்தோம். நூ டிடெக்டிவ்ஸ் பெயரில் ஒரு வலைதளப் பக்கத்தையும் சமூக ஊடகக் கணக்கையும் நாங்கள் உருவாக்கி இருந்தோம்.

‘அந்தப் பெயருக்குப் பின்னால் இருக்கும் நியாயத்தை நீ மறுபடியும் சொல்’ என்றேன். ஏஜென்ஸி உள்ளே இருந்த இரு மர நாற்காலிகளில் ஒன்றில் நான் உட்கார்ந்திருந்தேன்.

‘ஆங்கில எழுத்து வரிசையில் இஸட் கடைசி எழுத்து. மிகப்பிரபலங்களுக்கு இஸட் வகுப்பு பாதுகாப்பு கொடுப்பது என்பது உச்ச கட்ட பாதுகாப்பு. கேட்பதற்கு ரொம்ப இயல்பாக அமைதியாக இருக்கு!’ என்றான்.

‘அதனால் தான் அதை இஸட் என்றாயா?’ ஒரு புருவத்தை நெறித்தபடி நான் கேட்டேன்.

‘நீ ஒரு துப்பறிவாளன் கூட, கண்டுபிடியேன்,’ சொன்னான் ஸௌரப்.

நான் சிரித்தேன்.

‘நமக்கு ஒரு நல்ல வழியை அவள் தானே காண்பித்திருக்கிறாள். இந்தச் சிறிய பாராட்டு அவளுக்குத் தேவையானதே,’ என்றேன்.

‘தேங்க்யூ,’ என்று சொல்லி அவன் தலையைக் கலைத்தேன்.

‘சரி, ஒரு ஸ்வீட் இல்லாமல் எப்படி கடை திறப்பு விழாவை நடத்துவது? பொறு, இந்தப் புதிய மித்தாய் கடைக்காரனைக் கூப்பிடுகிறேன். அவர்களுடைய ஜிலேபியை நீ சாப்பிட்டுப் பார்க்க வேண்டும்.’

❖

‘அப்படியானால் உங்களிடம் ஒரு துப்பறியும் ஏஜென்சி, ஒரு பக்கத்தில் இருக்கிறதா?’ என்று சைபர் செ’க்கின் ஸீனியர் விபி கார்ல் ஜோன்ஸ் என்னைக் கேட்டார். குர்காமில் அவருடைய ஆபிஸ் அறையிலிருந்து மாசுபடிந்த மெட்ரோ ரயில் தண்டவாளம் தெரிந்தது.

‘ஆமாம். நானும் என் நண்பன் ஸௌரபும் இணைந்து இதைத் தொடங்கியிருக்கிறோம். ஸரா லோன் வழக்கில் நாங்கள் போலீஸுக்கு உதவினோம். சும்மா ஒரு பொழுது போக்காக, சந்தோஷமாகச் செய்தோம். அவன் கூட இப்போது உங்களை பேட்டி காணப் போகிறான்.’

‘ஸரா வழக்கு பற்றி, நாங்களும் கேள்விப்பட்டோம். அந்த ஐஐடி பெண், சரிதானே? எப்படியானாலும் எங்களுடையது சைபர் செக்யூரிட்டியைக் கவனிக்கும் கம்பெனி. துப்பறியும் திறமை மட்டுமே எங்களுக்கு உதவக்கூடும்.’

‘துப்பறிவதில் முறையான பயிற்சி எதுவும் எங்களுக்கு இல்லை!’

‘அப்படியானால், அந்த வழக்கைப் புலன் ஆய்வு செய்தற்கு எது உங்களுக்கு உதவியாக இருந்தது என்று நினைக்கிறீர்கள்?’

‘எந்த விதமான பாரபட்சமும் இல்லாமல், சும்மா ஆவலும், திறந்த மனமும் மட்டும்தான். தவிர எதையும் பாதியில் விடக்கூடாது என்ற எண்ணமும்.’

‘இந்தத் தகுதிகள் மட்டுமே உங்களைத் தொலை தூரத்துக்கு இட்டுச் செல்லும். வழக்கிற்கு மட்டுமில்லை, வாழ்க்கைக்கும் கூட,’ என்று கார்ல் சொன்னார்.

‘தேங்க் யூ ஸார். நான் அதையும் கற்றுக் கொண்டிருக்கிறேன்.’

‘இருந்தாலும் நீ என்ன முறையில் நினைக்கிறாய் என்பது எனக்குத் தெரிய வேண்டும். இந்த வழக்கை எப்படிச் சரியான முறையில் துப்புத் துலக்கினீர்கள் என்பதைச் சொல்!’

❖

‘சரி, சொல்!’ என்றார் சந்தன்.

அவர் ஆபிஸில் அவர் எதிரில் நானும் ஸௌரபும் உட்கார்ந்திருந்தோம். கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தார். எங்களை நிமிர்ந்து பார்க்கவில்லை.

‘உங்களிடம் நாங்கள் பேசவேண்டும்!’ என்றான் ஸௌரப்.

‘எனக்கு நேரமில்லை தவிர, இங்கு என்ன செய்து கொண்டு இருக்கிறீர்கள், வகுப்புக்குப் போய் கற்றுக் கொடுங்கள்.’

‘நாங்கள் வேலையை விட்டுப் போகிறோம்,’ என்றேன். ‘எங்களுக்கு வேறு ஒரு இடத்தில் வேலை கிடைக்கும் போல் உள்ளது. புகழ்பெற்ற ஒரு சைபர் செக்யூரிட்டி கம்பெனியில்!’

‘இடையில் புலனாய்வு செய்வதற்கும் வாய்ப்புக் கிடைக்கும்!’ என்றான் ஸௌரப்.

‘என்ன?’ என்றார் சந்தன். எங்களை நிமிர்ந்து அவர் பார்த்தபோது அவர் வாய் திறந்து அதில் குட்கா இருப்பது தெரிந்தது.

‘நீங்கள் ரொம்ப வெறுப்பேற்றினீர்கள், ஒரு கோழை!’ என்றான் ஸௌரப்.

‘அவன் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை!’ என்றேன்.

‘இல்லை மோசமான அந்த அர்த்தத்தில் தான் நான் சொன்னேன்,’ என்றான் அவன்.

‘பரவாயில்லை. ஒருவேளை அவன் அப்படியே சொல்லி இருக்கலாம். களவாணிப் பயலே, பை, சந்தன்,’ என்றேன்.

❖

என் பெட்ரூமில் பாதி இரவு நேரத்தில் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். ஸௌரப் அவன் போனில் இருந்தான். ஆறு பேக் டின்னர் சாப்பிட்டிருந்தோம். அதன் பெயருக்கு முரண்பட்ட வகையில் - உடல்நலத்தைச் சீராக வைக்கக் கூடியது - ஆறு பேக் மேகி நூடுல்களால் சமைக்கப்பட்டிருந்தது.

போனிலிருந்து தலை நிமிர்ந்து ஸௌரப் பார்த்தான். பெரிதாக இளித்தான்.

‘ஏன் ரொம்ப சந்தோஷமாக இருக்கே?’ என்றேன்.

‘டிண்டரில் புது ஜோடி.’

‘உண்மையானதா?’

‘ஆமாம். ஸாஃப்டுவேர் இன்ஜினீயர். நாம் துப்பறிபவர்கள்

என்பது அவளுக்குப் பிடித்திருக்கிறது.’

‘நாமா?’

‘உன்னைப் பற்றியும் நான் அவளிடம் சொன்னேன்!’

‘அப்புறம்?’

‘ஹௌஸ் காஸ் வில்லேஜில் டிரிங்க்ஸ் குடிக்க இன்னும் ஒரு மணி நேரத்தில் நாம் சந்திக்கப் போகிறோம். அவளுடைய உயிர்த் தோழியைக் கூட்டிக் கொண்டு வருகிறாள். தயாராகுங்கள் மிஸ்டர் டிடெக்டிவ்!’